இலங்குடி

அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் கோயில்

# திருக்குட நன்னீராட்டு விழா மலர்



2012




Dr. Alagappa Chettiar Educational Trust

Dr. Umayal Ramanathan College for Women

Alagappa Matriculation Higher Secondary School

Alagappa Preparatory Nursery and Primary School

Alagappa Montessori School

Alagappa Primary School

Alagappa Montessori School Hostel

Alagappa Institute of Information Technology, Karaikudi

Alagappa Infotech, Kandanur

and

Alagappa Schools

(Preparatory, Matriculation and Higher Secondary)

Alagappa Information Technology

Purasawalkam, Chennai

உ
சிவமயம்

2012 ஜனவரி 29 உ ❀ கர - தை - 15 உ நிகழ்ந்த

# இலங்குடி
# அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் கோயில்
# திருக்குட நன்னீராட்டு விழா மலர்

14-3-2012
கர ஆண்டு பங்குனி மாதம் 1 உ

கோவிலூர் ஆதீனகர்த்தர்
**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள்**
வெளியிட்டு ஆசி அருளினார்கள்

தொகுப்பாசிரியர் :
**கம்பன் அடிசூடி பழ பழனியப்பன்**

அச்சிட்டோர் :
**ஸ்ரீ லெட்சுமி பிரிண்டர்ஸ்,**
காரைக்குடி.



வண்ணக்கலை எழில் அழகொழுகிச் சொட்டும்
செப்பமிகு சேமங்குதிரை

விண்வெளியே விமானமாய் மேடை மேவி, வேண்டுவோர் வேண்டும் அருளை ஓடையாய்
அள்ளிப் பொழியும் மேடைக் காளியும், காவல் கருப்பரும்

## இலங்குடி

## அருள்மிகு பூரணை புட்கலா உடனாய பகச்சாலமூர்த்தி ஐயனார்



"..................................................யாம் இரப்பவை

பொருளும், பொன்னும், போகமும் அல்ல - நின்பால்

அருளும், அன்பும், அறமும்......................................"

உ
சிவமயம்
ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனார் துணை







## இலங்குடி
## ஸ்ரீ பூரணை புட்கலாம்பா சமேத ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனார் கோயில்
## புனராவர்த்தன ஜீர்ணோத்தாரண அஷ்ட பந்தன

# மஹா கும்பாபிஷேக பத்திரிகை

பகற்சால மூர்த்தி பதிகம்

தூசியான முன்னோடி பாலைஅடி யான்மிகும்
    சூரசின் னக்க ருப்பன்
துலங்குமுன் பாசப்பெ ரியகருப் பண்ணன்வளர்
    சொல்மேடை தங்கு காளி
கடிதான றொண்டிக் கருப்பனொடு பேச்சியும்
    கனவீர னான அனுமான்
கல்மனக் காரிராக் காயிமுனி அய்யன்
    கணேசனொடு சுப்பிரமணியன்
வடிவான வயிரவன் மேடைக் கருப்பனொடு
    மகிழநிதம் அரசு புரியும்
வல்லமை யுடன்இந்த உலகெலாம் புகழ்பெற்ற
    மாணிக்க மேடை யர்ந்த
படிமிசையி லேபெருந் தனவணிகர் குலதெய்வ
    பாக்யமே அன்பர் திருவே!
பாலனென வேவந்(து) இலங்குடி நகரில்வளர்
    பகற்சால மூர்த்தி அருளே

### பூமகள் நலந்திகழ் பூவுலகின் கண்

சகலலோக நாயகராகிய சிவபெருமான், மோகினி அவதாரம் கொண்ட திருமால் இவ்விருவருக்கும் திருஅவதாரம் செய்தருளி எல்லா உலகங்களையும், இராப்பகல் காவல் காக்கும் அரிகரபுத்திரராகிய ஐயனார் எழுந்தருளியிருக்கும் தெய்வத்தலங்கள் பல உள்ளன.

அவற்றுள் "பாண்டி நாடே பழம்பதியாக" என்று மாணிக்கவாசகரால் பாராட்டப்பெற்ற பெருமை வாய்ந்த பாண்டிநாட்டின் கண்ணே, கிழக்கே காரைக்குடியும், தெற்கே காளையார்கோயிலும், மேற்கே திருப்பத்தூரும், வடக்கே குன்றக்குடியும் பக்கத்தலங்களாய் விளங்க நடுநாயகமாய் வீற்றிருப்பது நலங்களெலாம் நிறை இலங்குடியாகும்.

இப்பெருமை வாய்ந்த இலங்குடியில் புராதன ஐயனார் ஆலயம் ஒன்று உள்ளது. இவ்வாலயத்தில் உள்ள ஐயனார் திருமாலுக்கும் சிவனுக்கும் பாலமரத்தின் அடியில் அவதரித்தமையினால் பகற்சாலமூர்த்தி எனப் பெயர் பெற்றார். இவ்வையனார் ஆலயம் மன்னர் பின்னோர் என அழைக்கப்பெறும் தன்னலங்கருதா தெய்வத்தமிழ் பற்றாளர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்களால் திருப்பணிகள் செய்யப்பெற்று, புதிதாக மண்டபங்கள் கட்ட பெற்றிருக்கின்றன.

ஸ்ரீ பூரணை புட்கலாம்பா சமேத ஸ்ரீ பகற்சாலமூர்த்தி ஐயனாருக்கும், பரிவார தேவதைகளுக்கும் நிகழும் கர வருடம் தை மாதம் 15ஆம் தேதி (29.01.2012) ஞாயிற்றுக்கிழமை வளர்பிறை சஷ்டி திதியும் ரேவதி நட்சத்திரமும், அமிர்தயோகமும் கூடிய சுபதினத்தில் காலை மணி 8.05க்கு மேல் 9.30க்குள் நிஷ்பஞ்சக கும்ப லக்னத்தில் **புனராவர்த்தன ஜீர்ணோத்தாரண அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேகம்** நடைபெறுகிறது. மெய்யன்பர்கள் அனைவரும் வந்து தரிசித்துப் பேரானந்தப் பெருவாழ்வு வாழவேண்டுமாய் பிரார்த்திக்கிறோம்.

### நிகழ்ச்சி நிரல்

| ஆங்கில தேதி | தமிழ் தேதி | கிழமை | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|---|
| 26.01.2012 | தை 12 | வியாழன் | காலை 5.00 மணி | அனுக்ஞை, விநாயகர் பூஜை, தன பூஜை, கணபதி ஹோமம், நவக்கிரஹ ஹோமம் |
| | | | மாலை 4.00 மணி | வாஸ்து சாந்தி |
| | | | மாலை 5.00 மணி | மிருத்சங்கிரஹணம், அங்குரார்ப்பணம் |
| | | | மாலை 6.45 மணி | கலாகர்ஷணம், கடஸ்தாபனம் |
| | | | இரவு 8.00 மணி | முதற்கால யாக பூஜை, பூர்ணாஹுதி |
| 27.01.2012 | தை 13 | வெள்ளி | பகல் 11.00 மணி | இரண்டாம் கால யாக பூஜை, பூர்ணாஹுதி |
| | | | இரவு 8.00 மணி | மூன்றாம் கால யாக பூஜை, பூர்ணாஹுதி |
| 28.01.2012 | தை 14 | சனி | காலை 11.00 மணி | நான்காம் கால யாக பூஜை, பூர்ணாஹுதி |
| | | | இரவு 8.00 மணி | ஐந்தாம் கால யாக பூஜை, பூர்ணாஹுதி |
| 29.01.2012 | தை 15 | ஞாயிறு | காலை 7.00 மணி | ஆறாம் கால யாக பூஜை, பூர்ணாஹுதி |
| | | | காலை 8.05-9.30 மணி | **மஹா கும்பாபிஷேகம்** |
| | | | பகல் 11.00 மணி | மஹாபிஷேகம் |
| | | | இரவு 8.00 மணி | சுவாமி திருவீதி உலா |

வேதபாராயணம், திருமுறை பாராயணம் நடைபெறும்.

வேதவிற்பன்னர், சொல்லின் செல்வர், சங்கீத வித்வான்,
பிரம்மஸ்ரீ P. கிருஷ்ணமூர்த்தி சிவாச்சாரியார்
P. ஹரிஹர சிவாச்சாரியார்
பொன. புதுப்பட்டி

இங்ஙனம்
நகரத்தார்,
நாலுகரை வேளார்,
இலங்குடி ஊரார்.

கர வருடம்
கார்த்திகை மாதம் 11ஆம் தேதி

# திருக்குட நன்னீராட்டுத் திகட்டாக் காட்சி திகழ் வண்ணங்கள்:



அருள்மிகு ஐயனாரின், புதுப்பிக்கப்பெற்ற கலை எழிலார் கவின், சந்நதி மண்டபத்தே, குவலயத்தில் கோடிக் குடமுழுக்குத் தேடி வரும் சிவத்திரு கே பிச்சைக் குருக்களுடன் நாலுகரை வேளார்களும், திருப்பணிக் குழு நகரத்தாரும்

35/3



யாகசாலைக்கு எழுந்தருளும் புனித நீர்க் கும்பங்கள் தாங்கிய ஆச்சாரிய வேளார்ப் பெருமக்களுடன், ஆசியருள வந்தருளிய குன்றக்குடி குருமகா சந்நிதானம் தவத்திரு பொன்னம்பல சுவாமிகள்



யாகசாலையை யக்ஞப் பெரு வேள்வியாய் வழி நடத்திய பொன்புதுப்பட்டி வேத விற்பன்னர் கிருஷ்ணமூர்த்தி சிவாச்சாரியார் பூர்ணாகுதியில் அவி சொரியும் புனிதக் காட்சி.



யாகசாலைப் பூஜையைக் கண்ணாரக் கண்டு கைகூப்பி வணங்கி மகிழும் பெண்ணின் நல்லாரும், அருள் வேண்டும் ஆடவரும்



யாகசாலை முதற் கால பூஜைப் பூர்ணாகுதி நிறைவுற்று, உபயதாரரும், திருப்பணிக் குழுவினரும் காளாஞ்சி வழங்கப் பெறும் கவின் மரபு.



யாகவேள்வி நிறை கண்டு வணங்கி, குறைவற ஆசி வழங்கி வரும் கோவிலூர் ஆதீனகர்த்தர் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்



யாகவேள்வியைத் துணைவியாருடன் கண்டு வணங்கி மகிழும் சத்குரு சாயி பாதம் நித்தம் பணியும், உச்ச நீதிமன்றத்திலும் உயர் நீதியை வேள்வியாய் நிகழ்த்திய நீதிபதி அரு. இலட்சுமணனார்



சொற்கண்டு பிறர் வெஃகும் கற்கண்டுத் தமிழ் வல்ல நீதிபதி எம் சொக்கலிங்கனார் சதிபதிகளாய் யாகசாலைப் பிரசாதம் பெற்று மகிழ்தல்



தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத் தலைவராய் முத்தமிழும் போற்றிய, எத்தனை என்று எண்ண இயலா திரைக் காவியங்களின் இயக்குனர் இராம நாராயணனை எழிலார் யாகசாலையில் இனிதாய் வரவேற்றல்



சீரிய நடையில் கூரிய எழுத்து வல்ல சிந்தனைச் சிற்பி, குடி நீருக்காய் சமராடிய, சட்ட மன்ற உறுப்பினர் பழ.கருப்பையா பாங்காய் வணங்குதல்



யாகசாலை கண்டு மகிழும் குருபீடங்கள் - துளாவூர் & பாதரக்குடி ஆதீனங்கள்



வண்ண விளக்குகளால் இரவில் ஜொலிக்கும் ஐயனார் கோயிலும் குளமும், குடமுழுக்கு யாகசாலையும்



யாகசாலை வேள்வியில் கோபூஜை செய்து கும்பிடுதல்



பிம்பத்திலிருந்து கும்பத்தில் ஆவாகித்து யாகவேள்வியில் உருவேறி கோபுரங்களில் குடமுழுக்காட்ட கடங்கள் புறப்படும் கவினார் காட்சி



திருக்குட நன்னீராட்டுக் காணத் திருக்குளக் கரையெங்கும் திரண்டிருந்த மக்கள் வெள்ளம்



திருக்கோயிலுள்ளும் திருமுழுக்காட்டுக் காணத் திரண்டு காளியையும் கருப்பரையும் சுற்றி நிற்போர்



குழலொலி, யாழொலி, ஏத்தொலி விண்ணதிர மக்கள் விழவொலியுடன் விமானங்களில் சிவாச்சாரியார்கள் புனித நீர் சொரியும் கண்கொள்ளாப் புண்ணியக் காட்சி



செகச்சாலம் தோற்கச் செம்மை அறம் வெல்லப் பகச்சாலமூர்த்தியாய், அஞ்சேல் என்று அருகிருந்து அருள் பொழி பூரணை புட்கலா உடனாய ஐயன் ஐயனார் பாதம் பாங்காய்ப் பணிவோர் துலங்கிடவே இலங்குடியில் அவதரித்த பாலையடி அருள் பாலையடியான்

## 2012 திருக்குட நன்னீராட்டு விழாவை ஒட்டி செப்பனிட்டு சீரமைக்கப் பெற்றவையும், புதுப்பிக்கப் பெற்றவையுமான திருப்பணிகள்:



முன் கண்டால் முழுதிழக்கச் செய்யும் முன் வாயில் காக்கும்
வண்ணக் கலை முன்னிய பூதம் இரண்டு



மாற்றிடங்கொண்ட பைரவர், சந்நிதி கொண்டருளும், முற்றிலும் கிராணைட் பதிக்கப் பெற்று தளம் உயர்த்தப் பெற்ற சுப்பிரமணியர் சந்நிதி மண்டபம்



முற்றிலும் கிரானைட் பதிக்கப் பெற்று தளம் உயர்த்தப் பெற்ற, கருப்பர் சந்நிதி மண்டபத்தையும் ஐயனார் சந்நிதி மண்டபத்தையும் இணைக்கும் புத்தம் புதிய மண்டபம்



இப்புதிய மண்டபத்தின் மேற்குப்புறத் தோற்றம்



தளம் புதுப்பிக்கப் பெற்று சீரமைக்கப் பெற்று புதிய ஸ்துபிகளும் எழுப்பப் பெற்றுத் திகழும் கற்பக விநாயகர், கன்னிமூலை கணபதி, நாச்சாத்தாள், அடைக்காத்தாள், மெய்யாத்தாள், திருமாத்தாள் திருவருளும் சுற்றுப் பிராகாரக் கோயில்கள்



சுற்றுப் பிராகாரம் விரிவாக்கப் பெற்று புதிய மதில் சுவர் தள்ளிக் கட்டப் பெற்ற மேடைக் காளி கருப்பர் குடி கொண்டருளும் விசாலமான வெளி.

35/3

உ

சிவமயம்

# அருள்மிகு இலங்குடி பகச்சாலமூர்த்தி ஐயனார் கோயில்

## திருப்பணிக்குழு

## (2010-2012)

### தலைவர்



லெ. சபாரெத்னம் செட்டியார்

ஓ. சிறுவயல்

### துணைத் தலைவர்கள்



SML.வெள்ளையன் செட்டியார்

தேவகோட்டை



நா. மெய்யப்ப செட்டியார்

காரைக்குடி



RMS.சதாசிவம் செட்டியார்

பொன். புதுப்பட்டி

## துணைத் தலைவர்கள்

மெ.செ. ராம. மெய்யப்ப செட்டியார்
காரைக்குடி

ரெ. திருநாவுக்கரசு செட்டியார்
மதகுபட்டி

AL.S.அழகப்ப செட்டியார்
கண்டவிராயன்பட்டி

## செயலாளர்கள்

முரு.பழ. சிதம்பரம் செட்டியார்
காரைக்குடி

மெ.நா.சித. நாகப்ப செட்டியார்
காரைக்குடி

## பொருளாளர்கள்

AV.M.PL.சந்துரு செட்டியார்
காரைக்குடி

கி.கரு.ராம.கரு. பழனியப்ப செட்டியார்
தேவகோட்டை

உ
சிவமயம்

# திருக்குடி நன்னீராட்டு விழா மலர்க்குழு

## (2010-2012)

### தலைவர்



கம்பன் அடிசூடி பழ. பழனியப்பன் காரைக்குடி

துணைத் தலைவர்



SML.வெள்ளையன் செட்டியார்
தேவகோட்டை

செயலாளர்



SLNS.பெரியணன்
காரைக்குடி

பொருளாளர்



AVMPL.சந்துரு
காரைக்குடி

### உறுப்பினர்கள்



ரெ. திருநாவுக்கரசு செட்டியார்
மதகுபட்டி [ திருச்சிராப்பள்ளி ]



NSS.சிவசுப்பிரமணியன் செட்டியார்
கண்டவிராயன்பட்டி [ ஈரோடு ]



ALS. அழகப்ப செட்டியார்
கண்டவிராயன்பட்டி [ கோயம்புத்தூர் ]



CT.சாத்தப்பன்
ஓ.சிறுவயல்
[ தஞ்சாவூர் ]



PL.முருகப்பன்
காரைக்குடி
[ திருநெல்வேலி ]



P.நாகப்பன்
காரைக்குடி
[ சென்னை ]



VR.ராமநாதன் (எ) மோகன்
காரைக்குடி
[ மதுரை ]



மயில் M.அண்ணாமலை செட்டியார்
காரைக்குடி
[ தஞ்சாவூர் ]



AR.மாயாண்டி
தேவகோட்டை
[ சென்னை ]



S. சுந்தரேசன்
கோனாபட்டு
[ கோயம்புத்தூர் ]



AT.சொக்கலிங்கம் செட்டியார்
காரைக்குடி
[ பெங்களூரு ]



PL.மீனாட்சி சுந்தரம்
காரைக்குடி
[ கோயம்புத்தூர் ]



SP. வள்ளியப்பன்
தேவகோட்டை
( கோயம்புத்தூர் )



MR.நாராயணன்
காரைக்குடி
( சேலம் )



M.ராமசாமி (எ) கண்ணன்
கோனாபட்டு
( கும்பகோணம் )



SL.மகாலிங்கம்
தேவகோட்டை
( சென்னை )



L.ஐயப்பன்
தேவகோட்டை
( கோயம்புத்தூர் )



S.செந்தில்
கோனாபட்டு
( சென்னை )

M.தியாகராஜன் செட்டியார் தேவகோட்டை ( திருப்பூர் )

M. நாச்சியப்பன் வலையபட்டி ( மதுரை )

M.வெங்கடாசலம் தேவகோட்டை ( கோயம்புத்தூர் )

மயில் A.சொக்கலிங்கம் காரைக்குடி ( பட்டுக்கோட்டை )

MKS.சேவுகன் செட்டி தேவகோட்டை ( சென்னை )

# நன்றே வாழ்வார், நாயகன் அருள்கவே !

- கோவிலூர் ஆதீனகர்த்தர் சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்



அறம்தன்னை உயிராய் மூச்சாய்
அகம் மகிழ்ந்து செய்யும் மக்கள்
நிரந்தரமாய் நிற்கும் கோயில்
நிலை வளர்க்கும் கல்விச் செல்வம்
வரம்பெற்ற தமிழின் பணிகள்
வாழ்வளிக்கும் அன்ன தானம்
அரவணைக்கும் அன்பின் செயல்கள்
அனைத்தும் இனத்தின் அடையாளம்

முன்னோர்கள் செய்தநல் அறங்கள்
முன்னின்று காக்கும் அதனால்
பின்னோர்கள் உலகம் எங்கும்
முன்னிற்கும் தலைமைகொண்டார்
இருக்கின்ற துறைகள் எல்லாம்
இருக்கின்றார் எங்கள் மக்கள்
பிறக்கின்ற புதுமைஎனினும்
பிடிக்கின்றார் முதலாம் இடத்தை

அறவழியில் ஈட்டும் பொருளில்
அறத்திற்குப் பங்கும் வைத்தார்
அறவாணர் சுற்றம் மக்கள்
அரசோடு இறைவன் என்றே
முறையாகச் செலவைச் செய்தார்
முதலாக என்றும் நின்றார்
மறவாது செய்வீர் அறங்கள்
வருவோரும் வாழ்வார் உயர்ந்தே.

## வாழ்த்து

ஆணோ பெண்ணோ அனைவரும் சமந்தான்
நானா நீயா வேண்டாமேகர்வந்தான்
தேனாய்ச் சர்க்கரையாய் சேர்ந்தே வாழ்வீரே !
வாழ்(ழ்)நாள் முழுதும் மகிழ்வாய் வாழ்வீரே !

ஒத்த மனம்பெற்று எப்போதும் அனுசரித்து
மெத்தநாள் வாழ்வீரே ! மெச்சிடவே வாழ்வீரே !
விடிகாலைக் காற்றாக முழுநிலவு ஒளியாக
அடிவானச் சிவப்பாக இதமாக வாழ்வீரே !



L. Sabaretnam




# 2, Appar Street, Kalakshetra Colony,
Besant Nagar,
Chennai - 600 090
Ph : 044 2446 9595
E-mail : sabaretnam@gmail.com

தேதி : 10-02-2012

## "அன்ன இவர்க்கே சரண்... (திருப்பணிக்குழுத்) தலைவர்"

ஒரு பொது காரியத்தைச் செய்து முடிப்பது என்பது அவ்வளவு மிக எளிதான காரியம் இல்லை. அதுவும் திருக்குட நன்னீராட்டு விழா போன்ற பொது விழாக்களைச் செய்வது என்பது மிகவும் சிரமப்பட்டு செய்யக்கூடிய ஒரு காரியம் ஆகும். பல இடங்களுக்கு சென்று பலபேர்களை சந்தித்து, திட்டமிட்டு கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய அனைத்து வேலைகளையும் இராப்பகல் பாராது இக்காரியத்தை செவ்வனே முடிக்க வேண்டும்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்"

என்ற வள்ளுவர் வாக்குக்கு இணங்க அருள்மிகு இலங்குடி பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்குட நன்னீராட்டு திருப்பணிக்குழு உப தலைவர்கள், செயலாளர், பொருளாளர் மற்றும் நிர்வாகக்குழு அங்கத்தினர்கள் மற்றும் உறுப்பினர்கள் அனைவருக்கும் இவ்விழாவினை மிக சிறப்பாக நடத்திக்கொடுத்தமைக்கு என் மனமார்ந்த நன்றியினையும் பாராட்டுதல்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

30 ஊர், அதைச் சார்ந்த நாலாயிரத்திற்கும் மேற்பட்ட நகரத்தார் புள்ளிகள் மற்றும் இவ்வூர் மக்கள் மற்ற மக்களுக்கு குல தெய்வமாக விளங்குகின்ற இந்த இலங்குடி அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் இங்கு மிக அழகாக காட்சிதந்து அருள்பாலித்துக் கொண்டிருப்பதில் ஒவ்வொருவரின் பங்கு உள்ளது.

செயலாளர் திரு. PL. சிதம்பரம் அவர்கள் இவ் ஆலய குடமுழுக்கு விழாவிற்காக அயராது, சிரமம் பாராமல் எல்லோரையும் தொடர்பு கொண்டு, கண்துஞ்சாமல் கும்பாபிஷேக வேலைகளை மிகவும் சிறந்த முறையில் செய்ததற்காக எனது மனப்பூர்வமான நன்றியினையும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

திரு SLNS. பெரியண்ணன் அவர்கள் கோயில் கட்டுமான வேலைகள் அனைத்தையும் தானே முன் நின்று பொறுப்பெடுத்துக்கொண்டு அவர்களுடைய சொந்த வேலைகளையெல்லாம் விட்டு விட்டு கோயில் கும்பாபிஷேகத்திற்காகவே தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டு, நாள் முழுவதும் கோயிலிலேயே இருந்து எல்லா வேலைகளையும் பார்த்துக்கொண்டு கும்பாபிஷேகத்தை மிக சிறந்த முறையில் நடத்திக் கொடுத்ததற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பொருளாளர் திரு. AVM PL. சந்துரு திறமையாக எல்லா நேரங்களிலும் இருந்து பொறுப்பாக எல்லா வேலைகளையும் பார்த்துக் கொண்டதற்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. N.மெய்யப்பச் செட்டியார், குடமுழுக்கிற்கு வேண்டிய அனைத்து வேலைகளையும் பார்த்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் அவ்வப்பொழுது சிறந்த அறிவுரைகளையும் கூறியதற்கு என்னுடைய நன்றியினை தெரிவித்துக்கொள்கிறனே்.

திருப்பணி வேலைகள் நன்கு நடைபெற உதவியாக இருந்த திரு.RM.S.சதாசிவம் செட்டியார், திரு. AL.S. அழகப்பச் செட்டியார், திரு. SML. வெள்ளையன் செட்டியார், திரு.M.S.RM. மெய்யப்ப செட்டியார் திரு.R.திருநாவுக்கரசு செட்டியார் அவர்களுக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்களையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேடைக்காளிக்கு அருகில் புதிய சுவர் எடுத்து கோவிலை விரிவுபடுத்தி எப்பொழுதும் எங்களுடன் இருந்து நல்ல ஆலோசனைகளைக் கூறி எல்லா உதவிகளையும் செய்த திரு.SLNS.நாராயணன் செட்டியார் அவர்களுக்கு எனது அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

யாகசாலையை அமைத்துக் கொடுத்த தேவகோட்டை வைரம் சின்ன வடிவேல் செட்டியார் குடும்பத்தினருக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

குடமுழுக்கு மிக சிறப்பாக நடைபெற பெரும் உதவியாக இருந்த திரு. MNST.நாகப்ப செட்டியார், தேவகோட்டை திரு. KK.RM. பழனியப்ப செட்டியார் அவர்களுக்கு மிக்க நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

Engineer திரு. ரத்தினசாமி, திரு. வெங்கடேஷ், ஸ்தபதி பழனிவேல், நாலுகரை வேளார்கள், நாட்டார்கள், மற்றும் கிராம மக்கள் அனைவருக்கும் என் நன்றியினை தெரிவித்துக்கொள்ள கடமைப் பட்டிருக்கிறேன்.

குடமுழுக்கு விழாவினைக் காண வந்த அனைத்து மக்களுக்கும் நகரவிருந்து அளித்து அனைவரும் பசியார உணவளித்த காரைக்குடி AVP.MR.PL. குடும்பத்தினருக்கும் AVM குடும்பத்தினருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நகரவிருந்து சிறப்பாக நடைபெற பெரும் உதவிபுரிந்த கோனாபட்டு இலுப்பக்குடி கு.மெ. வகை நகரத்தார்களுக்கு என் நன்றியைக் கூற கடமைப்பட்டுள்ளேன்.

மேலும் இக் கமிட்டிக்கு மிக உதவியாக இருந்த திரு. SP. பழனியப்பன், திரு.CT. பழனியப்பன் ஆகியோருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் பதிகங்களையும், குறுந்தகட்டையும் வெளியிட்ட தேவகோட்டை டால்ஃபின் திரு.அரு.ராம.அரு.ராமனாதன் அவர்களுக்கு என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன்.

திருக்குட நன்னீராட்டு விழா மலரை வெளியிடுவதற்கு மிகவும் பேருதவியாக இருந்த மலர்க்குழு தலைவர் கம்பனடிசூடி திரு.பழ.பழனியப்பன் மற்றும் மலர் குழு உறுப்பினர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

விளம்பரங்கள் தந்துதவிய அனைத்து அன்பர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்விழாவினை மிக சிறந்த முறையில் நடத்திக் கொடுத்த மாவட்ட கலைக்டர் திரு.ராஜாராமன் அவர்களுக்கும், இவ்விழாவின் போது மிக சிறந்த முறையில் பணியாற்றிய காவல் துறையினருக்கும் அதன் தலைவர் திரு பன்னீர்செல்வம் அவர்களுக்கும் மற்றும் SMS பள்ளி மாணவர்கள் அனைவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எல்லாவிதமான பொருள் உதவி செய்த அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைச் சொல்ல இத்தருணத்தில் நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்.

**மக்கள் அனைவரும் வாழ்வில் எல்லா வளமும் பெற்று பெருவாழ்வு வாழ எல்லாம் வல்ல இறைவன் பகச்சாலமூர்த்தி ஐயனார் திருவடி பணிந்து வணங்கி வாழ்த்துகின்றேன்.**

என்றும் அன்புடன்,

லெ.சபாரெத்னம்

லெ.சபாரெத்னம்



PL.Chidambaram

உ

சிவமயம்

அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனார் துணை

# நன்றியுரை செயலர் செயல் உரை

சிவபெருமானை முழுமுதற் கடவுளாக வணங்கும் சிறப்புடைய நகரத்தார்கள் குலதெய்வ வழிபாடு செய்த பின்னரே எந்த ஒரு நற்செயலையும் துவங்கும் மரபுடையவர்கள். இலங்குடி கிராமத்தில் அருளாட்சி செய்யும் பாலையடியான் பகற்சால மூர்த்தி ஐயனாரை வணங்கும் நகரத்தார்கள் சுமார் 30 ஊர்களில் சற்று ஏறக்குறைய 4000 புள்ளிகள் உள்ளனர்.

தேவகோட்டை அரு.லெ.குடும்பத்தினரால் திருக்குட நன்னீராட்டு செய்யப்பட்டு இருக்கிறது. ஆனால் அதற்கான தேதி முதலிய விபரங்கள் நமக்கு தெரியவில்லை.

பிரமோதூத ஆண்டு வைகாசி திங்கள் 26ம் தேதி ஞாயிற்றுக்கிழமை 08-06-1930ம் தேதி முதல் திருக்குட நீராட்டு விழா நடைபெற்று இருக்கிறது. காரைக்குடி திரு.ஆவி.ப.முரு.மு.முருகப்ப செட்டியார் அவர்கள் முன்னிலையில் கோயில் திருப்பணிகள் செய்து அஷ்டபந்தன மருந்து சாத்தி திருக்குட நீராட்டுவிழா சிறப்பாக நடைபெற்றது. அதுசமயம் நகரத்தார்கள் வசதிக்காக ஐயா அவர்கள் நகர விடுதி ஒன்றும் கட்டி இருக்கிறார்கள். அவர்களுக்கு பிறகு எங்கள் அப்பத்தா தெய்வானை ஆச்சி அவர்களால் பலமுறை விடுதி பழுது பார்க்கப்பட்டு நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

துந்துபி ஆண்டு ஆனித்திங்கள் 17ம் தேதி 01-07-1982 வியாழக்கிழமை காரைக்குடி திரு.மெ.நா.சித.சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் இரண்டாவது திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்று இருக்கிறது.

வெகுதான்ய வருடம் ஆனி மாதம் 22ம் தேதி 06-07-1998 திங்கட்கிழமை காரைக்குடி திரு.மெ.செ.ச.மு.மெ.முத்துராமன் செட்டியார் தலைவராகவும் காரைக்குடி திரு.மெ.மெய்யப்ப செட்டியார், தேவகோட்டை திரு.SM.L.வெள்ளையன் செட்டியார், ஓ.சிறுவயல் திரு.லெ.சபாரத்தினம் செட்டியார் உபதலைவர்களாகவும் அடியேன் செயலாளராகவும் காரைக்குடி திரு.சா.நா.நாராயணன் செட்டியார் பொருளாளராகவும், காரைக்குடி திரு.மெ.நா.சித.நாகப்ப செட்டியார், தேவகோட்டை திரு.கரு.பழனியப்ப செட்டியார் இணை செயலாளராகவும் உள்ள நிர்வாக குழு முயற்சியால் மூன்றாவது திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்றது.

திருக்குட நீராட்டு விழா நடைபெற்று 12 ஆண்டுகள் ஆகிவிட்டபடியால் வேளார்கள் நகரத்தார்களிடம் குடமுழுக்கு நடத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டதற்கு இணங்க இலங்குடி நகர விடுதியில் விக்ருதி வருடம் ஆனி மாதம் 22ம் தேதி 06-07-2010

செவ்வாய்கிழமை அன்று நகரத்தார்கள் கூடி கோபுரங்கள் பழுதுபார்த்து புதிதாக வர்ணம் பூசி மற்றும் கருப்பர் மண்டபம், சுப்பிரமணியர் மண்டபம், இராஜகோபுரத்தின் முன் மண்டபம் புதிதாக கட்டி குடமுழுக்கு நடத்துவது என்று தீர்மானித்து நிர்வாக குழு ஒன்று அமைத்தார்கள்.

| | | |
|---|---|---|
| தலைவர் | : | திரு.லெ.சபாரெத்தினம் செட்டியார் |
| துணைத்தலைவர்கள் | : | திரு.சோம.லெ.வெள்ளையன் செட்டியார் |
| | | திரு நா.மெய்யப்ப செட்டியார் |
| | | திரு.RM.S. சதாசிவம் செட்டியார் |
| | | திரு.மெ.செ.ராம.மெய்யப்ப செட்டியார் |
| | | திரு.R.திருநாவுக்கரசு செட்டியார் |
| | | திரு.அழ.சி.அழகப்ப செட்டியார் |
| செயலாளர்கள் | : | திரு. முரு.பழ.சிதம்பரம் செட்டியார் |
| | | திரு.மெ.நா.சித.நாகப்ப செட்டியார் |
| பொருளாளர்கள் | : | திரு. AVM.PL. சந்துரு செட்டியார் |
| | | திரு.கரு. பழனியப்ப செட்டியார் |

மேற்கண்ட நிர்வாக குழுவினருடன் 70 உறுப்பினர்கள் கொண்ட குழுவும் அமைக்கப்பட்டது.

விக்ருதி வருடம் ஐப்பசி மாதம் 4ம் தேதி 21-10-2010ல் பாலாலயம் செய்யப்பட்டு திருப்பணி வேலைகள் துவக்கப்பட்டு புதிய மண்டபங்கள் கட்டப்பட்டு கோபுர சுதை வேலைகள் பழுது பார்க்கப்பட்டு கோயில் முழுவதும் கிரணைட் கற்களால் தளம் அமைக்கப்பட்டு கர்ப்பக்கிரஹ சுவர்களுக்கும் டைல்ஸ் பதிக்கப்பட்டு புதிதாக மின் வேலைகள் பார்க்கப்பட்டு, மேல்நிலை நீர்தேக்கத் தொட்டி அமைத்து மேடைகாளிக்கு அருகில் உள்ள பழைய தடுப்புச் சுவர் இடித்து இடத்தை விரிவுபடுத்தி புதிதாக மதில் சுவர் கட்டப்பட்டு இருக்கிறது. முன்னோடியான் (முனீஸ்வரர்) சிலை ஒன்று புதிதாக செய்யப்பட்டு சன்னதி ஒன்றும் மதில்சுவர் அருகில் கட்டப்பட்டு இருக்கிறது. இராஜகோபுரத்தில் இருந்த பைரவர் சன்னதியும் சுப்பிரமணியர் மண்டபத்தில் தெற்கு பார்க்க புதிதாக அமைக்கப்பட்டு இருக்கிறது. பழைய மடப்பள்ளி இடிக்கப்பட்டு புதிதாக கட்டப்பட்டு இருக்கிறது. மர யானை வாகனம் ஒன்றும் புதிதாக செய்யப்பட்டு அதை பாதுகாப்பதற்காக மடப்பள்ளியை ஒட்டி மண்டபம் ஒன்றும் கட்டப்பட்டுள்ளது. ஐயனார் கர்ப்பக்கிரஹமும் முன் கல் மண்டபமும் வாட்டர் வாஷ் செய்யப்பட்டு ஆயில் பாலீஸ் செய்யப்பட்டு உள்ளது. ஊரணியைச் சுற்றி முள் வேலி அமைத்து தென்னை மரங்கள் புதிதாக வைக்கப்பட்டுள்ளது.

பெரிய அளவில் இரண்டு யாகசாலைகள் அமைக்கப்பெற்று இருக்கிறது. ஐயனாருக்கு கமல வேதிகை அமைத்து பஞ்ச குண்டங்களும், பரிவார தேவதைகளுக்கு 10 வேதிகையும், 10 குண்டங்களும் அமைக்கப்பட்டு யாக பூஜை 26-01-2012

வியாழக்கிழமை மாலை 6.45 மணி அளவில் தொடங்கி ஆறு கால பூஜையாக சிறப்பாக நடைபெற்றது.

பொன்புதுப்பட்டி பிரமஸ்ரீ T கிருஷ்ணமூர்த்தி சிவாச்சாரியார், ஹரிஹர சிவாச்சாரியார் சர்வ சாதகமாக இருக்க வேளார் சமூகத்தைச் சேர்ந்த உள்ளூர், வெளியூர் சிவாச்சாரியார்களைக் கொண்டு கர வருடம் தை மாதம் 15ம் தேதி ஞாயிற்றுக்கிழமை 29-01-2012 காலை 08.05 மணி முதல் 09.30 மணிக்குள் திருக்குட நன்னீராட்டு பெருவிழா இனிதே நடைபெற்றது. அன்று இரவு புதிதாக செய்த யானை வாகனத்தில் சுவாமி புறப்பாடும் சிறப்பாக நடைபெற்றது.

யாகசாலை துவங்கி திருக்குட நீராட்டு விழா வரை நகர விருந்தும், பொது விருந்தும் கோனாபட்டு கு.மெ.வகை பங்காளிகள் மேற்பார்வையில் சிறப்பாக நடைபெற்றது. அவர்களுக்கு எங்களுடைய நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

திருக்குட நன்னீராட்டு விழாவுக்கு மிக சிறப்பாக காரைக்குடி நகராட்சி மூலம் குடிநீர் வசதி செய்து கொடுத்து சிறப்பு பேருந்து வசதியும் செய்து கொடுத்த காரைக்குடி திரு.முத்துப்பழனியப்பன், திரு.சா.லெ.நா.சா.பெரியண்ணன், திரு.ஆவி.பழ.சித.பழனியப்பன் அவர்களையும் பாராட்டி எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தண்ணீர் பந்தல் அமைத்து சமையலுக்கும், குடிப்பதற்கும் தண்ணீர் கொடுத்த ஆத்தங்குடி வீமாஸ் சபாரெத்தினம் செட்டியார் அவர்களுக்கும், குடமுழுக்கு அன்று 4500 குடிநீர் பாட்டில் கொடுத்த காரைக்குடி திரு.ராம.சிதம்பரம் செட்டியார் மகன் நேரு இராமநாதன் அவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இக்குட நன்னீராட்டு விழா இவ்வளவு சிறப்பாக நடைபெற உதவிய திருப்பணி குழுவினரைக் குறிப்பிட்டு பாராட்டி சொல்வதற்கு கடமைப்பட்டிருக்கிறோம்.

தலைவர் ஒ.சிறுவயல் திரு.லெ.சபாரெத்தினம் செட்டியார் அவர்கள் எல்லா வகையிலும் உதவியாக இருந்து ஆலோசனை வழங்கி திருப்பணி வேலைகளுக்கு மிகுந்த அளவு பொருளுதவி செய்தும், மாவட்ட ஆட்சியர் SP, DSP, திருப்புத்தூர் போலிஸ் மற்றும் அரசு நிர்வாகத்துடன் தொடர்பு கொண்டு விழா சிறப்பாக நடைபெற பல வழிகளில் உதவியாக இருந்தார்கள். அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

உதவி தலைவர் காரைக்குடி திரு.நா.மெய்யப்ப செட்டியார் அவர்களுடைய அனுபவமும், வழிகாட்டுதலும் எங்களுக்கு மிகவும் உதவியாக இருந்தது. அவர்கள் மூன்று முறை திருப்பணி குழுவில் பணியாற்றி இருக்கிறார்கள். திருப்பணி துவங்கிய நாள் முதல் எங்களுடன் பல முறை இலங்குடிக்கு வந்து அவர்கள் வழங்கிய ஆலோசனைகள் மிகவும் உதவியாக இருந்தன. உப தலைவர் புதுப்பட்டி திரு. RM.S. சதாசிவம் செட்டியார் அவர்கள் மிகுந்த பொருளுதவி செய்ததுடன் தனக்கு அறிந்தவர்கள், தெரிந்தவர்களிடம் சொல்லி நமக்கு பணம் தேவைப்படும் போதெல்லாம் வாங்கி கொடுத்தது பேருதவியாக

இருந்தது குறிப்பிடத்தக்கது. உப தலைவர்கள் தேவகோட்டை SM.L. வெள்ளையன் செட்டியார், கண்டவராயன்பட்டி திரு.AL.S. அழகப்ப செட்டியார், மதகுபட்டி திரு.திருநாவுக்கரசு செட்டியார், காரைக்குடி திரு. M.S.RM. மெய்யப்ப செட்டியார் அவர்களும் மிகுந்த அளவில் பொருளுதவி செய்ததுடன் தகுந்த ஆலோசனைகள் கூறி திருப்பணிக்கு மிகவும் உறுதுணையாக இருந்தார்கள். அவர்களுக்கும் எங்களுடைய பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

காரைக்குடி திரு.MN.ST. நாகப்ப செட்டியார் அவர்கள் ஆன்மிக சம்மந்தமாக விபரங்களும் நன்கு தெரிந்தவர்கள். அவர்கள் உதவியுடன் யாகசாலை பூஜைகளும், திருக்குட நன்னீராட்டு விழாவும் சிறப்பாக நடைபெற்றது. அவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தேவகோட்டை திரு.K.K.RM.KR. பழனியப்ப செட்டியார் அவர்கள் யாகசாலை பொறுப்பு எடுத்துக்கொண்டு இலங்குடி மடப்பள்ளி கட்டிடத்தில் 4 நாட்கள் தங்கியிருந்து யாகசாலை, திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற உதவியதற்கு எங்கள் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

என் அன்பு தம்பியும், பொருளாளருமான காரைக்குடி திரு.AVM.PL. சந்துரு அவர்களின் பணி மிகவும் குறிப்பிட்டு சொல்ல வேண்டிய ஒன்று. எங்களுடன் கூட இருந்து பலவிதமான உதவி செய்ததுடன் திருப்பணிக்கு பெருமளவில் நன்கொடை வாங்கி கொடுத்தும், அன்றாடம் வந்த காசோலை, மற்றும் ரொக்க பணங்களை உடனடியாக அவ்வப்போது வங்கி கணக்கில் செலுத்தியும் அதற்குரிய ரசீதுகளையும் அவர்கள் சொந்த செலவிலேயே உடனடியாக அனுப்பி வைத்த பணி மிகவும் பாராட்டிற்குரியது. அவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

திருப்பணி வேலைகள் ஆரம்பம் முதல் எங்களுடன் கூட இருந்து அனைத்து கட்டிட வேலைகள் திருப்பணி வேலைகள் அனைத்திலும் நல்ல யோசனைகள் வழங்கி அவற்றை அவர்களே பலமுறை இலங்குடி சென்று மேற்பார்த்து நடைமுறைபடுத்தி பல வழிகளிலும் உதவியாக இருந்த திரு.சா.லெ.நா.சா பெரியண்ணன் அவர்கள் பணி மிகவும் சிறப்பான ஒன்று. அவர்களுக்கும் எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

கட்டிடம் கட்டிக் கொடுத்த பொறியாளர் திரு.ரெத்தினசாமி (பாண்டியன் கன்ஸ்ட்ரக்சன்) அவர்களுக்கும், ஸ்தபதி திரு.பழனிவேல் அவர்களுக்கும், கெமிக்கல் வாஷ் செய்த குமாரசாமி அவர்களுக்கும், மற்ற அனைத்து வேலை பார்த்த ஊழியர்கள் அனைவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். மின் விளக்கு, ஸ்பீக்கர், மைக்செட் சிறப்பாக அமைத்து தந்த தேவகோட்டை திரு. RMS.வள்ளியப்பன் குடும்பத்தார்க்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

குடமுழுக்கு நிகழ்ச்சியை நேரில் வர்ணணை செய்த தேவகோட்டை இலக்கிய மேகம் திரு.சீனிவாசன் அவர்களுக்கும் எங்கள் நன்றி. காரைக்குடி S.M.S. மேல்நிலைப்பள்ளி N.S.S. மாணவர்கள் செய்த பணிகள் மிகவும் உதவியாக இருந்தது. மேற்படி பள்ளி மாணவர்களை ஏற்பாடு செய்து கொடுத்த பள்ளி தலைமை ஆசிரியர் மற்றும் ஆசிரியர்கள், திரு.முத்துப்பழனியப்பன், S.L.N.S. பெரியண்ணன் அவர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

திருக்குட நன்னீராட்டு விழாவுக்கு உதவியாக இருந்த நாலுகரை வேளார்கள், இலங்குடி கிராமத்தார்கள், பின் பலமாக இருந்து உதவிய நகரத்தார் பெருமக்கள், அல்லும், பகலும் உழைத்த திருப்பணிக் குழுவினர் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

காரைக்குடி திரு.RM. சொக்கலிங்கம் அவர்கள் முன்னதாகவே வந்திருந்து திருக்குட நன்னீராட்டு விழாவின் போது பெட்டியடியைச் சிறப்பாக பார்த்துக் கொண்டதற்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். காரைக்குடி, SP. பழனியப்பன், முருகநரசிம்மன், தேவகோட்டை M.வெங்கடாசலம் ஆகியோர்பணியும் பாராட்டத்தக்கது.

பிள்ளையார்பட்டி கோயிலிலிருந்து திருக்குட நன்னீராட்டு விழாவிற்கு உதவி செய்வதற்கு வந்திருந்த காரைக்குடி திரு.ராம.லெட்சுமணன், ஓ.சிறுவயல் திரு.பழ.வயிரவன், தேவகோட்டை திரு.க.சுப்பிரமணியன், ஆத்தங்குடி திரு.நா.நாச்சியப்பன், ஆத்தங்குடி திரு.நா.முத்துக்குமார் ஆகியோர் பணியும் பாராட்டிற்குரியது. இவர்கள் ஐந்து பேரையும் பிள்ளையார்பட்டியிலிருந்து அனுப்பிவைத்த நடப்பு காரியக்காரர்கள் காரைக்குடி திரு.நா.லெட்சுமணன் செட்டியார், குருவிகொண்டான்பட்டி திரு.ச.சிதம்பரம் செட்டியார் அவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

சென்ற குடமுழுக்கின் போது நாங்கள் பல ஊர்களுக்கும் நேரில் சென்று நகரத்தார்களைச் சந்தித்து நிதி வசூல் செய்ய வேண்டியிருந்தது. ஆனால் இம்முறை திருப்பணி வேலைகளுக்கு நிதியுதவி தேவைப்பட்ட போதெல்லாம் அருள்மிகு பகற்சாலமூர்த்தி ஐயனார் கிருபையால் வேண்டிய அளவு நிதி வழங்கிய நகரத்தார் பெருமக்கள் அனைவருக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அனைவருக்கும் சகல செல்வங்களும், நீண்ட ஆயுளும் அருளுமாறு அருள்மிகு பகற்சாலமூர்த்தி ஐயனார் பாதம் பற்றி வேண்டுகிறேன்.

அன்புடன்

பழ.சிதம்பரம்

செயலர்

உ
சிவமயம்
அருள்மிகு பகச்சால மூர்த்தி ஐயனார் துணை

# நன்றி ! நன்றி ! நன்றி !

# இலங்குடி அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் திருப்பணி வேலைகள் செய்து கொடுத்த நன்கொடையாளர்கள்

| | | |
|---|---|---|
| 1. | சுப்பிரமணியர் மண்டபம் | வலையபட்டி M. திருப்பதி செட்டியார் |
| | | Dr. T.V. ராஜா செட்டியார் |
| | | Dr. T. பழனியப்பன் செட்டியார் |
| | | M. இராஜமாணிக்கம் செட்டியார் |
| | | மல்லிகா தியாகராஜன் |
| 2. | கருப்பர் மண்டபம் | ஓ.சிறுவயல் L. சபாரெத்தினம் செட்டியார் குடும்பத்தார் |
| 3. | இராஜகோபுரம் | விராமதி SP. அழகப்ப செட்டியார் |
| 4. | நகர விருந்து | காரைக்குடி ஆவி.ப.முரு.பழ. குடும்பத்தார் |
| | | AVM. குடும்பத்தார் |
| 5. | மடப்பள்ளி (வேளார்) | காரைக்குடி மெ.செ. குடும்பத்தார் |
| 6. | மடப்பள்ளி (வெளிபுறம்) | கண்டவராயன்பட்டி AL.S. அழகப்ப செட்டியார் |
| 7. | முன் மண்டபம் | காரைக்குடி குப.சு.மெ.மெ.மெய்யப்ப செட்டியார் குடும்பத்தார் |
| 8. | கிரானைட் டைல்ஸ் | காரைக்குடி P.S.RM.A. சுவாமிநாதன் செட்டியார் |
| | | புதுப்பட்டி S. மெய்யப்ப செட்டியார் |
| | | மிதிலைப்பட்டி மாத்தூர் கோயில் குளத்தூர் நகரத்தார் |
| | | சிங்கப்பூர் VR. அழகப்பசெட்டியார் |
| 9. | மேல்தளம் ஓடு | தேவகோட்டை மொ.முத்து.கரு. வகை |
| 10. | காம்பவுண்டு சுவர் | காரைக்குடி S.L.N.S. நாராயணன் செட்டியார் |
| | | காரைக்குடி M.S.M.M. மெய்யப்ப செட்டியார் |
| 11. | பெயிண்டிங் | கண்டவராயன்பட்டி AL.A. குடும்பத்தார் |
| 12. | எலக்ட்ரிக்கல்ஸ், பிட்டிங் | புதுப்பட்டி RM.S. சதாசிவம் செட்டியார் |
| 13. | கெமிக்கல் வாசிங் | கோனாபட்டு கு.மெ.கோயில் வீடு |
| 14. | நீர்தேக்க தொட்டி பிளம்பிங் லேவலைகள் | கண்டவராயன்பட்டி S. கண்ணன் செட்டியார் |
| 15. | மருந்து சாத்துதல் | தேவகோட்டை KM.KR.RM. சொக்கலிங்கம் செட்டியார் குடும்பத்தார் |
| 16. | ஒலி, ஒளி அமைப்பு | தேவகோட்டை RM.S. குடும்பத்தார் |
| 17. | மேடை காளி | காரைக்குடி S.L.N.S. பெரியண்ணன் செட்டியார் |
| 18. | கற்பக பிள்ளையார் கோபுரம் | காரைக்குடி வெள்ளகுண்டார் வீடு |
| 19. | கன்னிமூல விநாயகர் கோபுரம் | தேவகோட்டை K.AR.RM.MR. இராமநாதன் செட்டியார் |
| 20. | சுப்பிரமணியர் கோபுரம் | மதகுபட்டி வயிரவன் கோயில் பங்காளிகள் |
| 21. | தேனாண்டாள் கோபுரம் | காரைக்குடி இராம.நாராயணன் செட்டியார் குடும்பத்தார்கள் |

| | |
|---|---|
| 22. முனீஸ்வரர் கோபுரம் | கண்டவராயன்பட்டி C. சுப்பையா செட்டியார் |
| | C. அழகப்ப செட்டியார் C. இராமநாதன் செட்டியார் |
| | C. முத்தையா செட்டியார் |
| 23. முன்னோடியான் | அமராவதிபுதூர் காளி செட்டியார் குடும்பத்தார் |
| | சேதுராமன் செட்டியார் வளவு |
| | கண்டவராயன்பட்டி T. பழனியப்ப செட்டியார் |
| | (உண்ணாமலை டைல்ஸ், தஞ்சாவூர்) |
| | காரைக்குடி M.S.M.M.C. செந்தில் மெய்யப்பன் செட்டியார் |
| 24. சப்தகன்னிகள் கோபுரம் | ஒ.சிறுவயல் இளையாத்தங்குடி ஒக்கூர் நகரத்தார் |
| 25. சண்டிகேசுவரர் கோபுரம் | ஒ.சிறுவயல் AL. பழனியப்ப செட்டியார் |
| 26. திருமாத்தாள் கோபுரம் | காரைக்குடி படைப்பு பங்காளிகள் |
| 27. மெய்யாத்தாள் கோபுரம் | காரைக்குடி படைப்பு பங்காளிகள் |
| | N. மெய்யப்ப செட்டியார் |
| 28. அடைக்காத்தாள் கோபுரம் | தேவகோட்டை PL.S.KM. பாத்திரக்கடையார் வீடு |
| 29. அடைக்கலம் காத்தாள் கோபுரம் | ஒ.சிறுவயல் V.AL. மீனாட்சிசுந்தரம் செட்டியார் |
| 30. நாச்சாத்தாள் கோபுரம் | தேவகோட்டை N.AL. பெரியகருப்பன் செட்டியார் |
| | N.AL. நாச்சியப்ப செட்டியார் |
| 31. பகற்சால விநாயகர் (ஊரணி) | காரைக்குடி P.A.M. அண்ணாமலை செட்டியார் |
| | P.A.M. முத்தையா செட்டியார் |
| 32. ஐயனார் கோபுரம் | காரைக்குடி மயில் அண்ணாமலை செட்டியார் |
| 33. வயிரவர் கோபுரம் | தேவகோட்டை VR. லெட்சுமி நாராயணன் செட்டியார் |
| | விராமதி மு.கும.மு.சா. அழகப்ப செட்டியார் |
| 34. பத்ரகாளி, கருப்பர் கோபுரம் | தேவகோட்டை முத்து கரு.பழ.வெ.வெங்கடாசலம் செட்டியார் |
| 35. நொண்டி கருப்பர் கோபுரம் | காரைக்குடி ஆத்தங்குடி கொரட்டியார் வீடு |
| 36. பெரியகருப்பர் கோபுரம் | புதுப்பட்டி வலையபட்டி பங்காளிகள் |
| 37. சின்னகருப்பர் கோபுரம் முத்துக்கருப்பர் கோபுரம் | ஒ.சிறுவயல் சொ.லெ.அழகப்ப செட்டியார் |
| 38. சேமம் குதிரை | கண்டவராயன்பட்டி N.S.S. குடும்பத்தார் |
| 39. யாகசாலை | தேவகோட்டை S.L.SV. வைரம் சின்னா வடிவேல் செட்டியார், அரு.லெ.வீடு |
| 40. யானை வாகனம் | காரைக்குடி M. கிருஷ்ணன் செட்டியார் |
| | K. மெய்யப்ப செட்டியார் (U.S.A) |
| 41. பத்ரகாளி வெள்ளி கவசம் | தேவகோட்டை டால்பின் AR. இராமநாதன் செட்டியார் |
| 42. உள் பிள்ளையார் வெள்ளி கவசம் | தேவகோட்டை SM.L. வெள்ளையன் செட்டியார் |
| 43. முன் மண்டப இரும்பு கம்பி | காரைக்குடி LM. ரெங்கநாதன் செட்டியார் |
| 44. ஐயனார் கருவறை டைல்ஸ் | காரைக்குடி SP.S.RM.SP. ராமசாமி செட்டியார் |
| 45. கருப்பர் மண்டபம் விரிவுபடுத்தல், உற்சவர் ஊர்வலம் | ஆத்தங்குடி V.ST. சபாரெத்தினம் செட்டியார் |
| 46. பூத மண்டபம் | காரைக்குடி S.L.N.S. நாராயணன் செட்டியார் |

# திருப்பணி நிர்வாகக் குழு உறுப்பினர்கள்

**காரைக்குடி**

S.L.N.S. பெரியணன்

S.L.N.S. விஸ்வநாதன்

M.S.A.M. பழ.பழனியப்பன்

MR.PL. சாத்தப்பன்

சுப. பழனியப்பன்

சித. பழனியப்பன்

VR. ராமனாதன் (மோகன்)

RM. நாச்சியப்பன்

AT. சொக்கலிங்கம்

MR.L.MR. நாராயணன்

MR.L.MR. முத்தையா

MR.PL. முத்தையா

சொ. மீனாட்சிசுந்தரம்

முத்துப்பழனியப்பன்

பி.அ.மு. அண்ணாமலை

P.S.RM.A. சுவாமிநாதன்

சுப.மெ. சிதம்பரம்

மு.வி.பெ.குப்பாஞ்செட்டி (கண்ணன்)

S.N. சாத்தப்பன்

AV. ராமனாதன்

கரு.கும.மீ. மயில் அண்ணாமலை

**தேவகோட்டை**

Dr. AR. மோகன்

M. ராமனாதன்

M. வெங்கிடாசலம்

A. ராமனாதன்

RM. முருகப்பன்

AR.C. அருணாசலம்

RM.S. வள்ளியப்பன்

AR. கிருஷ்ணன்

AL. பெரியகருப்பன்

AR. மாயாண்டி

RM. சுப்பிரமணியன்

SV. வடிவேல் செட்டியார்

RM. பழனியப்பன்

C. சுப்பையா

AL. நாச்சியப்பன்

S.L. மகாலிங்கம்

RM. அண்ணாமலை

AR. வீரப்பன்

**விராமதி**

SP. அழகப்ப செட்டியார்

ந. அழகப்ப செட்டியார்

கதி.சோம. வேலாயுதம் செட்டியார்

பழ. பெரியகருப்பன் செட்டியார்

வெ. பழனியப்ப செட்டியார்

சா. அழகப்பன்

**ஓ. சிறுவயல்**

சொ.லெ. அழகப்ப செட்டியார்

MR. அழகப்பன்

AL. மீனாட்சிசுந்தரம்

M. பழனியப்பன்

AL. சுப்பிரமணியன்

AL. அழகப்பன்

**மதகுபட்டி**

AL. சீனிவாசன் செட்டியார்

**புதுப்பட்டி, வலையபட்டி**

S. மெய்யப்பன்

M. நாராயணன்

CM. நாச்சியப்பன்

SM. சொக்கலிங்கம்

**கோனாபட்டு**

மு.பெ.மு. பெருமாள் செட்டியார்

மெ.சித. மெய்யப்ப செட்டியார்

AL. லெக்ஷ்மணன்

M. ராமசாமி

OL. அருணாசலம்

O.SP. சீனிவாசன்

M. சுப்பிரமணியன்

CT. சொக்கலிங்கம்

AL. முத்து

**மிதிலைப்பட்டி**

RM. வள்ளியப்பன்

**கண்டவிராயன்பட்டி**

C. சுப்பையா

N.S.S. சிவசுப்பிரமணியன்

N.S.S. செந்தில்நாதன்

**அமராவதிபுதூர்**

கா.கும.வ. ராக்கப்ப செட்டியார்

சோம. காளியப்ப செட்டியார்

ராம. கிருஷ்ணன்

கும. அழகப்பன்



श्री श्री जगद्गुरु शङ्कराचार्य महासंस्थानम्, दक्षिणाम्नाय, श्री शारदापीठम्, शृङ्गेरी

**Sri Sri Jagadguru Shankaracharya Mahasamstanam**

**Dakshinamnaya, Sri Sharada Peetam, Sringeri.**

V.R. GOWRI SHANKAR, BE, DIISc, MIMA,
CEO & Administrator
Sri Sringeri Math and its Properties, Sringeri - 577 139 (Karnataka - India)

Ref: S-18/7471 Camp : Date :

January 30, 2012

Sri Kamban Adisoodi
Kamban Kazhagam
Kamban Manimandapam
Karaikudi 630001
Tamil Nadu

Dear Sir,

Received your letter of 26th arong with invitation for the Kumbabhishekam of the Sri Purana Pushkalamba Sametha Sri Pakarchalaimurthi Ayyanar Temple at Ilangudi conducted on 29th of this month and the souvenir to be brought out during March 2012 to commemorate the occasion. They were placed at the lotus feet of His Holiness with your pranams.

The gracious blessings of His Holiness are conveyed for the successful release of the souvenir, for the fulfillment of your aspirations to make it a treasure book of reference on Temples and to all the devotees for a long, healthy, happy and prosperous life.

Asirmantrakshatas and Sri Sharada Chandramouleeswara prasadams blessed by His Holiness are enclosed.

Yours sincerely

(V.R. GOWRISHANKAR)

Encl: Prasadams

Phone Off.: 08265 - 250123 Resi. 08265 - 250192 Fax : 08265 - 250792
Web Site : www.sringerisharadapeetham.org (or) www.sringeri.net E.mail : info@sringerisharadapeetham.org



சிவபெருமான் பேரருள்



தொலைபேசி : 0452 : 4377116
4381005

புனித மிக்க

**மதுரை ஆதீனம்**

**292 ஆவது குருமகாசன்னிதானம்**
**& ஆதீனகர்த்தர்**

## ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்




**தெற்காவணி மூல வீதி,**
**மதுரை - 625 001.**

**பரம்பரை அறங்காவலர்**

அருள்மிகு அக்னீசுவரசுவாமி திருக்கோயில்,
கஞ்சனூர்,
தஞ்சை மாவட்டம்.

அருள்மிகு சாட்சிநாதசுவாமி திருக்கோயில்,
திருப்புறம்பியம்,
தஞ்சை மாவட்டம்.

அருள்மிகு கைச்சின்னேசுவரசுவாமி திருக்கோயில்,
கச்சனம்,
தஞ்சை மாவட்டம்.

அருள்மிகு பன்னகாபரமேசுவரசுவாமி திருக்கோயில்,
பன்னத்தெரு,
தஞ்சை மாவட்டம்

"கம்பன் அடிசூடி"
திரு. பழ. பழனியப்பன்,
கம்பன் மணி மண்டபம்,
காரைக்குடி - 630 001.

ஆசீர்வாதம்!

தங்கள் 26/01/12 ஆம் நாளிட்ட மடலும் இலங்குடி பகச்சால மூர்த்தி ஐயனார் திருக்கோயில் குடமுழுக்கு விழா அழைப்பிதழும் கிடைத்து மகிழ் கொண்டோம். குடமுழுக்கு விழா ஏற்பாடுகள் சிறப்புற நடக்கட்டும். கும்பாபிஷேக மலர் அழகு அமைய் கருவூலமாய் வெளிவரட்டும். அதில் பங்குபெறுகின்ற பெருமக்கள் அனைவரும் எல்லாம் வல்ல இறையருளால் இன்றுபோல் என்றென்றும் மண்ணில் நல்ல வண்ணம் வாழட்டும்!!

எல்லோர்க்கும் ஆசீர்வாதம்!

28/01/12.  ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
23வது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக
பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்.
திருவாவடுதுறை - 609 803, நாகை மாவட்டம்,
தொலைபேசி எண் : 04364 - 232021.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்





# அருள் வாழ்த்துரை

நாள் - 4.3.2012

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. - அப்பர் தேவாரம்

சிவகங்கை மாவட்டம் காரைக்குடியைச் சார்ந்த இலங்குடி பூரணை, புஷ்பலாம்பாள் உடனாய பகச்சால மூர்த்தி ஐயனார் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா 29.1.2012 அன்று சிறப்புற நடைபெற்று அதன் தொடர்ச்சியாக வருகின்ற 14.3.2012 - புதன்கிழமை நடைபெறவுள்ள மண்டலாபிடேக விழாவில் விழா மலர் ஒன்று வெளியிட இருப்பது அறிந்து மகிழ்ந்தோம். அம்மலரில் அறிஞர் பெருமக்கள் வழங்கிய அரிய கட்டுரைகளின் தொகுப்பாக திருக்கோயில் மரபுகள் குறித்த செய்திகள் இடம்பெறுவது சிறப்புடையது. விழா மலர் எல்லா வகையிலும் சிறப்பாக மலர்ந்து மணம் வீச நமது வழிபடுகடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

பெறுநர் - விழாக் குழுவினர்,
பகச்சால மூர்த்தி ஐயனார் திருக்கோயில்,
இலங்குடி.



உ
Siva Siva

Phone No.0435-2456655.

"Kailaimaamunivar" Sri-La-Sri Kasivasi MUTHUKUMARASWAMI THAMBIRAN Swamigal,
Head of Sri Kasi Mutt, Thiruppanandal - 612 504, Thanjavur District, Tamil Nadu.

31-1-12

வாழ்த்துரை

இலங்குடி ஸ்ரீபூரணை புட்கலாம்பா சமேத ஸ்ரீபகற்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோயில்குடமுழுக்கு விழா 29-1-12 ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றமை அறிந்து மகிழ்கிறோம்.இவ்விழாவை ஒட்டி வெளியிட உள்ள குடமுழுக்கு விழா மலர் சிறப்பாக அமையவும், குடமுழுக்கு விழாவில் கலந்து கொண்ட மெய்யன்பர்கள் அனைவரும் எல்லா நலனும் வளனும் பெற்று வாழவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

ஜெ.

சுபம்

சிவசிவ

திரு.பழ.பழனியப்பன்
காரைக்குடி



உ
சிவ சிவ
"நன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
போன் : 04577 - 264227

நாள் : 27-02-2012

தவத்திரு
**குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

இலங்குடி அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோயில் குடமுழுக்கு விழா ஆன்றோரும். சான்றோரும், பக்தப்பேரன்பர்களும் இறையருள் இன்பத்தை எண்ணி மகிழும் வகையில் சீரும் சிறப்புமாக நிகழ்ந்தேறியது.

திருக்கோயில், திருப்பணியால் கண்டோர் வியக்கும் கவின்உறு ஆலயமாய் உருவெடுத்து, கம்பீரமாய் எழுந்து நிற்பது எண்ணி எண்ணி மகிழத்தக்கது. சீரும் சிறப்புமாகக் குடமுழுக்குவிழா நிறைவேறியதன் தொடர்ச்சியாகத் திருக்குட நன்னீராட்டு மலர் வெளியிடுவது மிகுந்த சிறப்புக்குரியது.

அப்பனாக, அம்மையாக, ஐயனாக அன்புடைய மாமனும் மாமியுமாக, ஒப்புடைய மாதருமாக, ஒண்பொருளாக ஒரு குலமாக, சுற்றமாக, ஓரூராக, எல்லா நிலைகளிலும் வாழ்த்துப் பொருளாக மட்டுமின்றி வாழ்வுப் பொருளாக வழிநடத்தும் பரம்பொருள்தான் நம் ஆன்மீக உலகில் வாழ்வுப் பொருளாக நம்மை உடன் நின்று தோன்றாத்துணையாக வழி நடத்துகின்றது!

ஸ்ரீ பூரணபுட்கலாம்பாள் உடனுறை ஸ்ரீ பகச்சாலமூர்த்தி ஐயனார் அம்மை அப்பனாய் அருள்ஓலக்கம் எழுந்தருளியிருக்கும் இனிய திருக்காட்சி பக்திசுவை ஊட்டி நம்மைப் பரவசம் அடையச் செய்கின்றது.

இத்திருப்பணிக்காக அல்லும் பகலும் அயராது உழைத்தவர்கள், மன்னர் பின்னோர் என்று அழைக்கப்பெறும் தன்னலங்கருதாத் தெய்வத்தமிழ்ப் பற்றாளர்களான நகரத்தார் பெருமக்கள்.

ஐயனுக்கு அருட்பணி ஆற்றிவரும் நாலுகரைவேளார் பெருமக்கள், ஐயனைத் தங்கள் காவல் தெய்வமாய் என்றும் துதித்து வழிபட்டு வரும் இலங்குடி ஊரார் என்று அனைத்து நல் உள்ளங்களும் ஆற்றிவரும் தெய்வீகப் பணிகள் பாராட்டுக்குரியவை.

கம்பன்அடிசூடி பழ.பழனியப்பன் அவர்களின் எண்ண ஓவியமாய், கலைநயம் மிளிரும் வண்ணச் சிற்பமாய், பக்திச் சுவை சொட்டும் ஞானமலராய் இந்த மலர் முகிழ்த்திருப்பது பெரும் சிறப்புக்குரியது.

"தினைத்தனை உள்ளதோர் பூவினில் தேன்உண்ணதே
நினைத்தொறும் காண்தொறும் பேசும்தொறும் எப்போதும்
அனைத்தெலும் உள்நெக ஆனந்தத்தேன் சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பி"

என்று மணிவாசகர் பாடி அருளினார். அதுபோல இறைவன் திருவடி மலர்களுக்கு சூட்டப்பெறம் இந்நன்னீராட்டு விழாமலரை, அரும்பெரும் பக்திக் களஞ்சியமாய் உருவாக்க உழைத்த கம்பன் அடிசூடி பழ.பழனியப்பன் உள்ளிட்ட அனைத்து நல் உள்ளங்களுக்கும் நல்வாழ்த்துக்கள்!

இலங்குடியில் கொலுவீற்றிருக்கும் ஸ்ரீபூரணபுட்கலா உடனாய பகச்சாலமூர்த்தி ஐயனார் அருள் அனைவருக்கும் கிடைக்க எல்லாம் வல்ல பகச்சாலமூர்த்தியைப் போற்றி இறைஞ்சுகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

பொன்னம்பல

(பொன்னம்பல அடிகளார்)



**KOVILOOR MADALAYAM**
KOVILOOR - 630 307
(Via-Managiri)
Sivagangai District.

☎ 04565-236846



Date 14.02.2012

*கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகளின் ஆசியுரை.*

செட்டிநாட்டுச் சீமையில் இலங்கும் இலங்குடி நகரில் கிராம மக்களையும், நகரத்தார் குடும்பங்களையும் காக்கும் காவல் தெய்வமாக அமர்ந்து அருள் பாலிக்கும் அருள்மிகு பூரணை புட்கலா உடனாகிய பகச்சால மூர்த்திக்கு அன்பர்கள் கூடி திருப்பணி செய்து திருக்குடமுழுக்கு செய்தமை பாராட்டுக்குரியது. மண்டபம், மதில்சுவர் எழுப்பித்தும் சிறப்பாக திருப்பணி செய்யப்பட்டுள்ளது. இதனை புனரமைத்த திருப்பணி குழுவினர்க்கும், விழாக்குழுவினர்க்கும் நம் பாராட்டுக்கள்.

அதைத் தொடர்ந்து ஒரு ஆன்மிக மலர் வெளியிடுவது அறிந்து மகிழ்ச்சி. கலைநயம் மலரும், பயன்தரும் பழமரமாகத் தோன்றிட நம் ஆசிகள்.

நகரத்தார் பெருமக்களும், இலங்குடி வாழ் பேரன்பர்களும் அருள்மிகு பகச்சால மூர்த்தியின் அருளால் எல்லா வளமும் நலமும் பெற்று சிறப்புற குரு முதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறேன்.

வேணும்.

ஸ்ரீ சற்குருநாதன் துணை

திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழிவழி
கயிலைக்குருமணி சீர்வளர்சீர்
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
பேரூராதீனம், பேரூர்,
கோயமுத்தூர்-641 010,தமிழ்நாடு
தொலைபேசி : 0422-2607995,,2608678, நகலி : 2607994
webpage: www.sivasiva.in,
peruratheenam.blogsopt.com

உ



சாந்தலிங்கர் தாள் மலர் வாழ்க





பெறுதல்
கம்பன் அடிசூடி பழ. பழனியப்பன் அவர்கள்
கம்பன் மணி மண்டபம், காரைக்குடி – 630 001

அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெருகுக
வாழ்த்து

பாண்டிநாட்டு இலங்குடியின் பகச்சாலை அய்யனார் அருளால்
தூண்டும் அன்பால் போற்றுகின்றார் துயர்கள் தீர்ந்து நல்வாழ்வு
ஈண்டுசெல்வம் நற்பேறு எய்தி வாழ்வில் வளங்கள் பெற
வேண்டும் என்று போற்றிடுவார் மேன்மையுறவே வாழ்த்துகின்றோம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் நாடும்இனிய தமிழிசைசேர்
பாட்டுவளர நிறுவனங்கள் பக்திதிறையும் திருக்கோயில்
வாட்டம் அகல அறச்சாலை வைத்துத் தேடும் பொருளாலே
ஈட்டும் பொருளால் திருக்கோயில் இனியபணி செய்தார் வாழி

வாழ்வும் வளமும் சமயநெறி வளர்த்தால் எய்தலாம் என்று
சூழ்ந்து சமயக்கருத்துகளைத் தொகுத்து மலராய் உருவாக்கி
ஆழ்ந்துநோக்கும் சிந்தனையால் அமைத்து தமிழின் பெருமையினை
ஊழ்வலிநீக்கும் வழிபாட்டின் உயர்வை விரிக்கும் பணிவாழி

பக்திக்குரிய பகச்சால அய்யனார் பக்கத்திலுறு
சக்திபூரண புட்கலா பொருந்தும் கோயில் நற்பணிகள்
சித்தத்து இருத்தி அன்பாலே செய்து திருக்குட நீராட்டுவிழா
எத்திக்கவரும் போற்றிடச் செய் இனிய பணியை வாழ்த்துகிறோம்.

அன்புகெழுமிய திரு பழ.பழனியப்பன் அவர்களுக்கு தங்கள் மடல் கிடைக்கப்பெற்று, அருள்மிகு பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோவில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா ஒட்டி வெளியிட இருக்கும் மலருக்கான வாழ்த்து வருகிறது. விழாவும், மலரும் சிறக்க அம்பலவாணப் பெருமான் தாண மலர் நினைந்து வாழ்த்துகின்றோம். இத்துடன் சாந்தலிங்கப்பெருமான் அருட்திருநீறு இணைத்துள்ளோம். அணிந்தின்புறுங்கள்.

அன்புள்ள,

[signature]

(தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகள்)
பேரூராதீனம்



ஸ்வாமீ தயாநந்த ஸரஸ்வதீ

ரிஷீகேஷ்

28-1-2012

திரு. பழ. பழனியப்பன் அவர்களுக்கு,

வணக்கம்!

இலங்குடி ஐயனார் கோவிலின் கும்பாபிஷேக பத்திரிகை கிடைத்தது. உங்களுடைய குலதேவதையான ஐயனாரின் அருளால் ஐயனார் கோவில் கம்பாபிஷேகம் நன்றாக நடைபெறும்.

நகரத்தார்களின் ஸமூஹம் வெவ்வேறு கோவில்களை மையமாக வைத்து அமைந்திருக்கிறது. இது ஒரு தெய்வீகமான விசேஷம். மனிதனுடைய சரீரத்திற்கு ஹ்ருதயம் எவ்வாறு மையமாக இருக்கிறதோ, அதுபோல ஒரு கோவில்தான் ஸமூஹத்திற்கு மையமாக இருக்கமுடியும். அந்த அடிப்படையில் நகரத்தாரின் வேறெங்கும் இல்லாத இந்த பழக்கம் மேன்மையானது. இந்த விசேஷமான பழக்கத்தை விடாமல் காப்பாற்றிக்கொண்டிருக்கும் நகரத்தார்கள் அந்தந்த கோவில் தேவதையின் அரளினால் அவரவர் மேன்மையை அடைந்து தெய்வ பக்தியுடன் வளரவேண்டும் என்று நான் பிரார்த்திது ஆசீர்வதிக்கிறேன்.

தயானந்த

ஸ்வாமீ தயாநந்த ஸரஸ்வதீ

Swami Dayananda Ashram, Purani Jhari, Rishikesh 249 201 Uttaranchal INDIA Ph & Fax 0135 430769
Arsha Vidya Gurukulam, Anaikatti (PO) Coimbatore 641 108 INDIA Ph : 0422 858269 / 857001 Fax : 857002
Arsha Vidya Gurukulam, P O Box 1059, Saylorsburg, Pa., 18353 - 1059 USA Ph : 570 992 2339 Fax : 570 992 7150 / 9617



# ஸ்ரீராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர், சென்னை-600 004
✆ : 24621110 (4 Lines). Fax: 24934589
email: mail@chennaimath.org
website: www.chennaimath.org

## வாழ்த்துரை

இலங்குடி பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோவில் மஹா கும்பாபிஷேகம் 29-01-2012 அன்று சிறப்பாக நடைபெற்றதையும், திருக்குட நன்னீராட்டு விழாவையொட்டி மண்டலாபிஷேகத்தில் ஆன்மிகம் ததும்பும் அருள் மலர் ஒன்றினை வெளியிட இருப்பதையும் அறிந்து பெருமகிழ்ச்சியடைகிறேன்.

வழக்கமான கும்பாபிஷேக மலர்கள் போலல்லாது, ஒரு ஆன்மிக நூலைப்போலவே உலகம் முழுதுமுள்ள ஆன்மிக அன்பர்கள், பக்தப் பெருமக்கள் என்றென்றும் போற்றிப் பாதுகாத்து வைத்துக் கொள்ளக்கூடிய வகையில் சமயக் களஞ்சியமாய், ஆலயக் கருவூலமாய், ஆண்டவன் அருள்நிதியமாய் தயாராகி வரும் இம்மலரினால் பக்தர்கள் பெரிதும் பயனடைவார்கள்.

மண்டலாபிஷேக விழா சிறப்பாக நடைபெறவும், விழாமலர் சிறப்பாக அமையவும் எல்லாம்வல்ல இறைவனை மனமார வேண்டுகிறேன்.

31.01.2012

சுவாமி கௌதமானந்த

(சுவாமி கௌதமானந்தர்)
தலைவர்.

கம்பன் அடிசூடி திரு. பழ. பழனியப்பன்
தலைவர்
இலங்குடி பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோவில்
திருக்குட நன்னீராட்டு மலர்க்குழு
கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி – 630 001.



## ஓங்கி உளமளக்கும்
## திருக்கோயில் மரபுகள் ... திருஓலக்கம்

பாரம்பரியமாக, வழி வழியாக, வாழையடி வாழையாக வருவதுவே மரபுகள்; அதிலும் கோயில் மரபுகள் தனித்துவம் நிரம்பியன; கொண்டாடத்தக்கன.

ஓங்கி உலகளந்த உத்தமத் தெய்வங்கள் திருஓலக்கம் பாலிக்கும் திருக்கோயில்களுக்கு என்று எத்தனை எத்தனையோ ஒழுங்குபடுத்தப் பெற்ற நடைமுறைகள், மரபுகள்... எல்லாமே சாந்நித்யம் வாய்ந்தவை; சரணம் சரணம் என்று அடைக்கலம் புகுந்தார்க்குப் பொருள் ஒரு அரணமன்று என மரணமிலாப் பெருவாழ்வுக்கு வழிகாட்டுவனவேயாம் !

மிகத் துல்லியமாகக் காரண காரியங்களாக வடிவமைக்கப்பெற்ற இவ்வொழுகுகள் இன்று முற்றிலுமாகப் பின் பற்றப்படுவது கேள்விக்குறியாய் ஒருபுறமிருக்க, வளரும் தலைமுறையினர் அவை என்ன என்றாவது தெரிந்து கொண்டுள்ளார்களா, தெரிந்து கொள்ளத்தான் ஆர்வமாவது காட்டுகின்றார்களா என்ற வினா எழுப்பிடுவது எளிது; விடையோ.....?

கற்றவர்க்குக் கையேடாய், கல்லாதார்க்கு ஒரு கைவிளக்காய் உலகிற்கே ஒளி ஊட்டின, பாரத மணித் திருநாட்டின் திருவடியாய் இலங்கும் திருவார் தெய்வத் தமிழ் திருக்கோயில் மரபுகள் என்று சென்ற காலத்தின் பழுது இலாத் திறமாய்த் தான் சொல்ல வேண்டியுள்ளதே தவிர, நிகழ் காலத்தின் நிதரிசனமாகச் சொல்லவே இயலாதபோது, எதிர்காலத்தின் சிறப்பு இனிய நலந்திகழ்வதாய்ச் சொல்லுமாறு எங்ஙனே ?

இந்த எண்ண ஓட்டத்தின் விளைவே உங்கள் கைகளில் மலர்ந்து மணம்பரப்பிக் கொண்டிருக்கும் இத் திருக்கோயில் கலைப் பெட்டகம். எங்கள் குல தெய்வக் கோயிலாம் இலங்குடி அருள்மிகு பூரணை, புட்கலா உடனாய பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா. இம் மலர்க் குழுத் தலைவராய் பொறுப்பேற்க வைத்த ஐயனார், நகரத்தார் பெருமக்கள், திருப்பணிக் குழுவினர் ஆகிய அனைவருக்கும் என் மனம் நிறைந்த நன்றி. அஃது இல்லையேல் இவ்வரிய களஞ்சியத்தை இவ்விதமாய்த் தயாரித்து ஐயனார் அடிமலர் இணையில் படைத்திருக்க முடியுமா ?

எப்போது இதனை ஒரு திருக்கோயில் கலைக் களஞ்சியமாகத் தயாரிப்பதென முடிவாகியதோ, அப்போதே பழம் பெரும் கருவூலங்களைப் பயன் கொள்வதே சாலச் சிறந்தது என்றும் முடிவானது. எனவே இதற்கென்று, இன்று அருளாட்சி புரியும் ஆன்மிக அருளாளப் பெருமக்கள், தமிழ்த் திருமடத்துக் குருமகாசந்நிதானங்களின் அருளாசியுரை தவிர்த்து, யாரிடமும் எழுதி வாங்கிப் பிரசுரிக்கவில்லை. இங்கே காணப்பெறும் பெரும்பாலான கட்டுரைகளையும், விஷயங்களையும்

எழுதியவர்கள் இன்று ஜீவியவந்தர்களாய் இல்லை. சிலவற்றின் ஆசிரியர் பெயர்கள் அறிய முடியாத அளவிற்கு மிகப் பழமையானவை. எனவே அம்மாதிரியானவற்றில் எழுதியவர் பெயர் குறிக்கப் பெற்றிருக்காது. சில, அவற்றின் கருத்து அருமை கருதி பல்லாண்டுகளுக்கு முன் வந்த திருக்கோயில் குடமுழுக்கு விழா மலர்களிலிருந்தும் நூல்களிலிருந்தும் சேகரிக்கப் பெற்றன. அவை பெயர் கொண்டு இலங்கிடும்.

நெஞ்சத்து அழுக்கையெல்லாம் அருட் புனலால் துடைக்க வல்ல இவ்வெழுத்துக்களை – 'எல்லோரும் எல்லாமும்' பெற்றுய்ய வேண்டும் என்ற 'இராமானுஜ' ஆசையாலேதான் – சம்பந்தரும், அப்பர் பெருமானும், கம்பனும், பாரதியும் எப்படி எல்லோருக்கும் பொதுவோ, அப்படியே இவ்வுரைச் செல்வங்களும் எல்லோருக்கும், எப்போதும், எங்கேயும் பொது என்ற உரிமையாலே, ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல் தித்திக்க திரட்டித் தந்துள்ளோம். நீங்களே சுவைத்து அனுபவியுங்கள் ! வழிகாட்டும் ஒளி விளக்காய் கைக்கொண்டு, வேண்டும் போதெல்லாம் வேண்ட முழுதும் தரும் இதனை வேண்டிப் பணி கொண்டு, வேண்டும் பரிசு கொண்டு மகிழுங்கள்!

கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி – 630 001
94450 22137
msampala@yahoo.com

ஆன்மிகப் பணியில் உங்கள்
பழ. பழனியப்பன்

---



## நன்றி பல சொன்னோம் நயந்து !

*இத்தெய்வீகத் திருக்கோயில் மலர்*
*பரிமள சுகந்த மணம் வீசி மலர*
*விளம்பரச் சத்துரமும் நீரும் வார்த்து*

*வளமாய்த் தாமுளவாக ஆக்கிய*
**வணிக நிறுவனங்கள், தொழிற்கூடங்கள்,**
*வள்ளியோரின் உவந்து வழங்கி*
*மகிழ்ந்த* **பேருள்ளங்கள்** *யாவற்றுக்கும்*

*என்றுமுள தென்தமிழில்*
***நன்றி…நன்றி…நன்றி***
*என்று இயம்பி இசைத்து மகிழ்கின்றோம்.*

*இவர்கட்கு எல்லாம்*
*அரிகர சுதன் ஐயன் ஐயனாரின்*
*கடைக் கண் திருவருட் கடாட்சம்*
*தனம் தரும், தளர்வறியா மனம் தரும்,*
*தெய்வ வடிவும் தரும், நல்லன எல்லாம் தரும்*

*என மன, மொழி, மெய்களால்*
*அவன் அருளாலே அவன்தாள்*
*வணங்கி வாழ்த்தி மகிழ்கின்றோம்.*

# நன்றி பல சொன்னோம் நயந்து !



இத்தெய்விகத் திருக்கோயில் மலர்
மலர்ந்து மணம் பரப்ப உதவிய

- ஆசி வழங்கி அருளிய ஆன்மிக ஆன்றோர்கள்
- மிக நேர்த்தியாக அச்சிட்ட காரைக்குடி ஸ்ரீ லெட்சுமி பிரிண்டர்ஸ், அதன்
  அதிபர் திரு. கண. சரவணன்,
- அலுவல் நண்பர்கள்
  திரு. சு. ஜெய்குமார்,
  திருமதி. மு. கோமதி,
  திருமதி. கு. மீனாள்,
  திருமதி. அழ.அழகு
- வண்ணக்கலை மிளிர் அட்டை, முகப்பு நிழற்படங்கள் உதவிய சுந்தரம் ஸ்டுடியோ
  அதிபர் திரு. மீ. சுப்பிரமணியன் (சுப்பு)
- கட்டுரைகள் உதவிய
  பேராசிரியர் சொ. சேதுபதி (புதுச்சேரி)
  சிந்தனைக் கவிஞர் சிவபாரதி (காரைக்குடி)
  கண்டவிராயன்பட்டி திரு. என்.எஸ்.எஸ். சிவசுப்பிரமணியன் (ஈரோடு),
  மங்கள மாலை கண்டனூர் திரு.வயி.ராமநாதன் (சென்னை).
- காரைக்குடி கம்பன் அறநிலை
  மேலாளர் திரு. என். இராமையா

ஆகியோருக்கு மனங்கனிய, நா இனிக்க, வாய் மணக்க நன்றி, நன்றி, நன்றி என்று சொல்வதன்றி வேறென் சொல்லினும் நிறையாகுமோ?

இவர்கட்கு அம்பலக் கூத்தன் – அரங்கத்து அச்சுதன் அருமைச்சுதன் ஐயன் ஐயனார் எல்லா நலங்களையும் அருள்வாராக!





# திருக்கோயில் உள்ளே...

## I. திருக்கோயில் – வழிவ மரபுகள்



## II. திருக்கோயில் – வழிபாட்டு மரபுகள்



## III. திருக்கோயில் – இசை மரபுகள்



## IV. திருக்கோயில் – சொல் மரபுகள்



# விநாயகர் முன்பு தோப்புக் கரணமும், தலையில் குட்டலும் ஏன் ?

*– தவத்திரு சாயிமாதா சிவ பிருந்தாதேவி*

*"மாற்றறிய பிறவியெனும் மறிகடலில் வீழ்ந்தவர்கள்*
*போற்றரிய திருவடியாம் புணைபற்றி நின்றவுடன்*
*சாற்றரிய முத்தியெனுந் தடங்கரையில் – உய்ப்பதற்குக்*
*காற்றெரியுந் தழை செவிய கடாக் களிற்றைப் பணிகுவமால்"*

கடந்து உள்நின்று உணர்த்துகின்ற ஒன்றை நமது மூதாதையர்கள் கடவுள் என்று கூறி வழிபாடு செய்தனர். சங்கத் தமிழன், தங்கத் தமிழில் அந்த இறைப் பொருளை, "நீலமணிமிடற் றொருவன்" என்றும், 'ஆலமர் செல்வன்" என்றும் ஏற்றிப் போற்றி வழிபாடு செய்தான். இறைவன் ஒருவனே! இதனை வேதம், "ஏகம் தேவா" எனச் சொல்லுகின்றது. "ஏகன் அநேகன் இறைவனடி வெல்க" என்று சிவபுராணமும், "ஏகனுமாகி அநேகனுமானவன் நாதனும் ஆனான் என்றுந்தீபற" எனத் திருவுந்தியாரும் கூறுவதால், இறைவன், எளி வந்த வான் கருணையோடு பல் உருவங்களையும் பல நாமங்களையும் தாங்கி நமக்காக இறங்கியும் இரங்கியும் வருகிறான்.

சிவபெருமான் நெருப்பு, அந்த நெருப்பிலே உள்ள சூடு, உமாதேவி. அந்த நெருப்பிலே உள்ள சிவப்பு, விநாயகம். அந்த நெருப்பிலே உள்ள ஒளி, சுப்ரமண்யம். இது தான் தத்துவம்.

வி, நாயகர் என்றால் சிறந்த தலைவர் என்பது பொருள். தனக்கு மேல் தலைவன் இல்லாதவன் விநாயகன்.

*தேகம் இல்லாதவன் விதேகன்*
*மலம் இல்லாதவன் விமலன்*

தந்து இல்லாதவன் விதந்து என்பது போல்,
தனக்கு மேல் நாயகன் இல்லாமையால்
விநாயகர் எனப் பெயர் பெற்றார்.

விநாயகருடைய திருவுருவ உண்மை விசித்திரமானது, வினோதமானது ; எண்ணி வழிபட வேண்டியதாகும்.

விநாயகர் ஒரு கொம்பு, இரு செவிகள், முக்கண்கள், நான்கு தோள்கள், ஐந்து கரங்கள், ஆறெழுத்துக்களையுடையவர். அவரை வழிபட்டோர், ஏழு பிறவிகளும் நீங்கி, எண்திசைகளும் புகழ, ஒன்பது மணிகளும் பெற்றுச் சம்பத்துடன் வாழ்வார்கள். விநாயருடைய திருமேனி இடையின் கீழே பூத உடம்பு, இடைக்கு மேல் கழுத்து வரை தேவ உடம்பு, தலை, மிருகத்தலை, ஒரு கொம்பு ஆண் தன்மை, கொம்பில்லாத பகுதி பெண் தன்மை, யானைத் தலை அஃறிணை, தெய்வ சரீரம் உயர்திணை, இவ்வாறு, எல்லாமாய திருவுருவம் விநாயகரது வடிவமாகும்.

பூதமாய்த், தேவராய், விலங்காய், ஆணாய், பெண்ணாய், உணர்திணையாய், அஃறிணையாய், எல்லாமாய் விளங்குபவர் விநாயகர்.

மாகத முனிவருக்கும் அசுரமாதுக்கும் பிறந்தவன் கஜமுகாசுரன். இவன் சிவனிடம் எண்ணற்ற வரங்களைப் பெற்று இந்திரன், பிரமன், திருமால் முதலியோருக்குப் பல இடுக்கண் இழைத்துக் கொண்டிருந்தான். இவர்கள், கஜமகாசுரன் முன் நின்று காதுகளைக் கரங்களால் பற்றிக்கொண்டு, காலை, உச்சி, மாலை மூன்று வேளைகளிலும், ஆயிரத்தெட்டுத் தோப்புக் கரணங்கள் போடவேண்டும் என்பது அசுரனது ஆணை. அவ்வாறு தோப்புக்கரணம் போட்டுப் போட்டு தேவர்களும், மூவர்களும் அயர்ந்து போனார்கள். ஒரு நாள், இவர்கள் திருக்கயிலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட்டு, இந்த வேதனையிலிருந்து தங்களை விடுவிக்க வேண்டுமென வேண்டிக் கொண்டார்கள்.

சிவபரம்பொருள், தமது மூத்த திருக் குமாரனாகிய விநாயகரை அழைத்து, கஜமகாசுரனைக் கொன்று வென்று வரப் பணித்தார். விநாயகரும் தமது பூத கணங்கள் புடைசூழவும், போர்ப்பறை முழங்கவும் சென்று, கஜமுகனுடன் போர் புரிந்தார். அவனுடைய சேனைகளைக் கொன்றார். ஆனால், கஜமுகன் மீது எக்கணைகளை ஏவினாலும், அவன் மாயாவரம் பெற்றவன் ஆதலால் அவனை வெல்லவும் கொல்லவும் முடியவில்லை. கடைசியில் தமது வலக் கொம்பை ஒடித்து, சிவமந்திரத்தை உச்சரித்து ஏவினார். அந்த ஞானமேயான தந்தம், கஜமுகனைப் பிளந்தது. அவன் மாயா வரம் பெற்றவனாதலினால், பெருச்சாளி வடிவுடன் எதிர்த்து வந்தான். விநாயகர் அவன் மீது கருணை மழை பொழிந்தார். அவன் அறியாமை அகன்று, மெய்யறிவு பெற்று விநாயகரை வழிபட்டு நின்றான்.

தேவர்கள் அனைவரும் மகிழ்ந்து விநாயகரை வழிபட்டுத் துதி செய்தார்கள். விநாயகர் மகிழ்ந்து, "மால் அயன் ஆதி தேவர்களே! உங்களுக்கு என்ன வரம் வேண்டும் ? கேளுங்கள்" என்றதும் தேவர்கள், "ஆனைமுக அண்ணலே ! நாங்கள் இத்தனை காலமாக கஜமுகாசுரன் முன், காலை, உச்சி, மாலை நேரங்களில் ஆயிரத்தெட்டுத் தோப்புக் கரணங்கள் போட்டோம். இனித் தேவரீராகிய தங்கள் முன் அதனைச் செய்ய அருளவேண்டும்" என்றார்கள்.

விநாயகர், "மூன்று முறை தோப்புக் கரணம் போட்டு வழிபட்டால் போதும்" என்று கூறிக் கருணையுடன் அருள் புரிந்தார். அன்று முதல், அமரர்களும், அடியார்களும் விநாயகருடைய திருமுன் தோப்புக் கரணமிட்டு வழிபாடு செய்து வருகின்றனர்.

தோப்புக் கரணமிட்டு, விநாயகரை வழிபாடு செய்தால், அறிவு வளர்ச்சியும், உடல் நலமும் உண்டாகும்.

முனிவர்களுள் முதல்வர் அகத்தியர். சிவபெருமானிடமிருந்த காவிரியை இவர், தமது கமண்டலத்தில் அடக்கிக்கொண்டு, தென் திசை நோக்கி வந்து, குடகுமலையில் சிவ பூசை செய்துகொண்டிருந்தார்.

அப்போது இந்திரன், சீர்காழிப் பதியில் சிவ பூசையில் ஈடுபட்டிருந்தான். மழையின்றி நந்தவனம் வாடியது. நாரத முனிவர் அது சமயம் இந்திரனைப் பார்த்து, " அகத்தியருடைய கமண்டலத்தில் உள்ள காவிரி நீர் பெருகுமேயானல், உன் பூங்கா பொலிவுறும்" என்றார்.

இந்திரன், விநாயகரை வழிபட்டான். விநாயகர், காக்கை வடிவுடன் சென்று, காவிரி அடங்கிய கமண்டலத்தின் மீது அமர்ந்தார். அகத்தியர் காகத்தைக் கரத்தால் ஓட்டினார். காகம் காலல் உந்திப் பறந்தது. கமண்டலம் கவிழ்ந்து, காவிரி பெருக்கெடுத்தோடியது.

அகத்தியர், காகத்தின் மீது சீறிப் பாய்ந்தார். அந்தக் காகம், அந்தணச் சிறுவனாகி நின்றது. அச்சிறுவனை, இரு கரங்களாலும் குட்டும் பொருட்டுக் குருமுனி ஓடினார். பிள்ளையார் அவருக்கு அகப்படாமலே அங்கும் இங்கும் எங்குமாக ஓடினார். அகத்தியர், அச்சிறுவனை அணுகிக் குட்டுதற்கு இருகரங்களையும் ஓங்கினார். ஐங்கரங்களுடன் விநாகர் காட்சி தந்தார். அகத்தியர் திகைத்து நடுநடுங்கினார். " ஓங்காரப் பொருளே! தேவ வித்தகனே! உன்னைச் சிறியேன் அறியாப் பிழையால் குட்டுதற்குக் கையை ஓங்கினேனே ! என்னே என் சிறுமதி ?" என்று கூறித் தன் தலையில் குட்டிக் கொண்டார். விநாயகர், அவருடைய கரங்களைப் பற்றிக் கருணை புரிந்தார்.

"இன்று முதல் நம்முன் பயபக்தியுடன் குட்டிக் கொண்டு வழிபாடு செய்பவர்கள் கூரிய மதியும், சீரிய நிதியும் பெறுவார்கள்" என்று வரமருளினார். இதனால் அடியார்கள், விநாயகர் முன் குட்டிக் கொண்டு வழிபாடு செய்யும் மரபு உண்டாகியது.

விநாயகரது ஐந்து கரங்களும் அதில் ஏந்திய பொருள்களும், உயிர்களாகிய நமக்கு அருளை அளிக்கின்றன. கும்பம் ஏந்திய திருக்கரம், ஆக்குந் தொழிலையும், மோதகம் ஏந்திய திருக்கரம் காத்தல் தொழிலையும், அங்குசம் ஏந்திய திருக்கரம் அழித்தல் தொழிலையும், பாசம் ஏந்திய திருக்கரம் மறைத்தல் தொழிலையும், தந்தம் ஏந்திய திருக்கரம் அருளல் என்ற தொழிலையும் புரிகின்றன. எனவே விநாயகர், சிருஷ்டி, திதி, சங்காரம், திரௌபவம், அனுக்கிரகம் என்ற ஐம்பெரும் தொழில்களையும் ஐந்து திருக்கரங்களால் புரிந்து, வழிபடும் அடியவர் இடர்களைக் களைந்து இன்னருள் பாலிக்கின்றார். அவரை வழிபட்டு வையத்துள் வாழ்வாங்கு வாழ்வோமாக !

# பிள்ளையார் சுழி

வளைசலும், நேர்க்கோடுமாக இருக்கிற பிள்ளையார் சுழியில் நிறைய தத்துவார்த்த மிருக்கிறது. சத்ராகாரமாக எந்த ஒன்று சுற்றினாலும் அதற்கு மத்தியில் ஆதாரமாக, அச்சாக (Axis) நேராக (Straight) ஒன்று இருந்தாக வேண்டும். விஷ்ணு தன் விரலையே நேராக நிமிர்த்திக்கொண்டு, அதிலேதான் சக்ராயுதத்தைக் கோர்த்துக்கொண்டு சுற்றுகிற தாகவே விக்கிரகங்களில் காட்டி இருக்கிறது. கார்த்திகை வாணமானாலும் சரி (ஒளி), விரலிலே மாட்டிக்கொண்டு சத்தம் எழுப்பச் சுற்றுகிற கிரிச்சட்டியானாலும் (ஒலி) இவைகளுக்கு வட்டமான சுழற்சிக்கு ஆதாரமாக நேர்கோடான குச்சியோ, கையோ ஏதோ ஒன்று தேவையாக இருக்கிறது. யூனிவர்ஸில் லோகங்களெல்லாம் ஸர்குலராகத்தான் சுற்றிக் கொண்டிருக்கிறது. இவற்றுக்குக்கூட நேர்கோடாக ஓர் ஆதார அச்சு, நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும், சக்தி ரூபத்தில் இருக்கத்தான் வேண்டும். வட்டமாகச் சுற்றுகிற சகலப் பிரபஞ்சத்தையும், அதற்கு ஆதாரமான சக்தியையும் (கோட்டையும்) சேர்த்துத்தான் பிள்ளையார் சுழியில் வட்டமாகவும், நேர்கோட்டுப் பாகமாகவும் போடுகிறோம்.

எங்கேயோ படித்த அல்லது கேட்ட ஞாபகம், "எனர்ஜி" உண்டாவதே பிள்ளையார் சுழி ரூபத்தில்தான் என்று. அருவி தாரை கொட்டி அதிலிருந்து "எலக்ட்ரிஸிட்டி" எடுக்கிறபோது "ரொடேஷன்"லிருந்து (வட்டத்திலிருந்து) நேர் கோடாகத்தான் மின்சாரம் புறப்படுகிறது என்று எடுத்துக் காட்டி இருந்தது. பிள்ளையார் சுழியில் கொம்புதான் "ரொடேஷன்". கோடு அதிலிருந்து சக்தி உத்பவம், இந்த இரண்டையும் சிவசக்தி சொரூபமான நாத பிந்துக்களாகக்கூடச் சொல்லிக் கொண்டு போகலாம். அதெல்லாம் சூட்சுமமான விஷயம்.

ஆரம்பித்த இடத்துக்கே வந்த முடிந்துவிடுகின்ற வட்டம் ஏகமான பிரம்மத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். வட்டத்தில் ஆரம்பித்து, அரை வட்டத்துக்கு அப்புறம் நேர்க்கோடாகிற பிள்ளையார் சுழி, ஏகமான பிரம்மத்ததை சங்கேதமாகக் காட்டிவிட்டு, அதிலிருந்து அநேகமான சிருஷ்டி தோன்றியதையும் சேர்த்துத் தெரிவிக்கிறது என்று சொல்லலாம். பிரம்மமும் பூர்ணம் ; பிரபஞ்சமும் பூர்ணம். பிரம்ம பூர்ணத்திலிருந்தே பிரபஞ்ச பூர்ணம் உண்டாயிற்று என்று உபநிஷத்தின் ஆரம்பத்தில் சொல்லுகிறோம். ஆரம்ப சுவாமியின் அடையாளமாக எதன் ஆரம்பத்திலும் போடும் பிள்ளையார் சுழி, பிரம்ம பூர்ணத்தை வளைசல் கொம்பாலும், பிரபஞ்ச பூர்ணத்தை நேர்கோட்டாறும் காட்டி, முதலில் கொம்பு, அப்புறம் கோடு என்பதால், பிரம்மத்திலிருந்துதான் பிரபஞ்சம் உண்டாயிற்று என்றும் தெரிவிக்கிறது.

## பஞ்ச பூத விநாயகர்

விநாயகர் வீற்றிருக்கும் தல விருட்சங்கள் ஐந்தும் ஐம்புதங்களைக் குறிக்கும்.

| | | |
|---|---|---|
| அரசமரம் | – | ஆகாயம் |
| வாத நாராயணமரம் | – | வாயு |
| வன்னிமரம் | – | தீ |
| நெல்லி மரம் | – | நீர் |
| ஆல மரம் | – | மண் |



# முருகன்

– திருமுருக கிருபானந்தவாரியார்

எம்மொழிக்கும் முதல்வனான செம்மொழியான தமிழுக்குச் சிறப்புடைய தலைவன் ஆவான். தமிழில் மூன்று இனம் உண்டு. அவை வல்லினம், மெல்லினம், இடையினம் எனப்படும். இவற்றுள் மெல்லினம் மென்மையும் இனிமையும் உடையது.

*மெல்லினத்தில் ஒரு எழுத்து மு*
*இடையினத்தில் ஒரு எழுத்து ரு*
*வல்லினத்தில் ஒரு எழுத்து கு*

என முருகு என்று மூவினத்தில் மூவெழுத்தைக் கொண்டு எந்தை கந்தவேளின் திருநாமம் அமைந்துள்ளது.

ஆண்டவன் ஆறு ஆதாரங்கட்கும், ஆறு சமயங்கட்கும், ஆறு அத்துவாக்களுக்கும், ஆறுபடை வீடுகட்கும் அதிபன்.

முருகா என்ற பெயரும் ஆறு பொருள்களைக் கொண்டது. தெய்வத்தன்மை, அழகு, இளமை, மகிழ்ச்சி, மணம், இனிமை என்ற ஆறு தன்மை களையும் உடைய சொல் முருகு.

*"முருகு கள் இளமை நாற்றம்*
*முருகவேள், விழா வனப்பாம்."*

என்று பிங்கல நிகண்டு கூறுகின்றது.

இதனைப் புலப்படுத்தவே அருணகிரிநாதர்,

"..................மெய்ம்மை குன்றா மொழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள்" என்று கூறுகின்றார்.

பல நாமங்களின் பொருள்களையுடையது முருகா என்ற நாமம் என்பதை இப்படி உணர்த்துகின்றார்.

இறைவன் பல்லாயிரம் நாமங்கள் கொண்டவன். அவற்றுள், சிறந்த நாமம் மூன்று. முருகன், குமரன், குகன் என்பவை. இம் மூன்றனுள்ளும் மிகச் சிறந்தது முருகன் என்ற நாமம்.

*"முருகன், குமரன், குகன் என்று மொழிந்*
*துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்."*

என்று கந்தரநுபூதியில் கூறுகின்றார்.

உலகமெல்லாம் அஞ்சுகின்ற முகமாகிய கூற்றுவனுடைய கோரமுகந் தோன்றுகின்ற போது முருகா என்றால் அப்பனுடைய ஈரமுகம் ஆறுந் தோன்றும்.

அக்கூற்றுவனுக்கும் நமக்கும் ஒருவேளை போர் நிகழுமாயின் அப்போது முருகா என்று ஓதினால் அஞ்சல் என அவனுடைய அயில்வேல் தோன்றும்.

ஒருகால் முருகா என நினைத்தாலும் போதும். அக்கருணாமூர்த்தியின் இருகாலும் தோன்றும்.

முருகா முருகா என்று ஓதினால் போதும். முருகா என்று கூறக்கூடாது. ஓதவேண்டும் ; கூறுவது வேறு; ஓதுவது வேறு; கூறுவது வாக்கு மட்டும் தொழில்படுவது. ஓதுவது உணர்வுடன் காதலாகி உள்ளங்கசிந்து கண்ணீர் மல்குவது.

*"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்"*

\- ஞானசம்பந்தர்

*"அஞ்சு முகந்தோன்றில் ஆறுமுகந் தோன்றும்*
*வெஞ்சமரந் தோன்றில் வேல்தோன்றும்-நெஞ்சில்*
*ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்*
*முருகாஎன் றோதுவார் முன்"*

ஓ என்ற பிரணவ எழுத்து அ உ ம என்ற மூன்று எழுத்துக்களின் சம்மேளனம். அகரத்தில் தொடங்கி உகரத்தில் மடங்கி, மகரத்திலே ஒடுங்குகின்றது.

அ – சிருஷ்டிக்கின்றது.
உ – இரட்சிக்கின்றது
ம – சங்கரிக்கின்றது

*(சம்ஹாரம், ஒடுக்கம்)*

இந்த மூன்றில் சிருஷ்டி எழுத்தைப் பார்க்கிலும் சங்கார எழுத்தாகிய மகரத்தைப் பார்க்கிலும், ரக்ஷ-எழுத்தாகிய உகரந்தான் உயர்ந்தது. நாம் கடவுளை நோக்கி, என்னை உண்டாக்குவாய், என்னை ஒடுக்கிக் கொள்வாய் என்றா வேண்டுகின்றோம் ? இல்லையே; "இறைவனே என்னைக் காப்பாற்று" என்று தானே வேண்டுகிறோம்.

எனவே காத்தலுக்கு உரிய எழுத்தாகிய உகரத்தையே பெரிதாகக் கொள்ளவேண்டும்.

குகையில் கற்கிமுகி என்ற பூதத்தால் அடைபட்ட ஆயிரம் பேரையும் காப்பாற்று என்று பாடிய நக்கீரர் ரட்சக எழுத்தாகிய உகரத்தை முதலில் அமைந்து

*"உலகம் உவப்ப வலனேர்பு திரி தரு"*

என்று தொடங்கினார்.

தனியடியார் அறுபத்து மூவர்களையும், தொகையாடியார் ஒன்பதின்மர்களையும் சிவபெருமான் காத்தருளிய வரலாற்றைக் கூறும் திருத்தொண்டர் புராணம் உகரத்தை முதலாகக் கொண்டே "உலகெலாம்" என்று தொடங்குகின்றது.

தேவர்களைக் காத்த திருமால் இராமாவதாரம் எடுத்த வரலாற்றைக் கூறவந்த கம்ப நாடரும் உகரத்தை முதலில் அமைத்தே "உலகம் யாவையும் தாமுள வாக்கலும்" என்று ஆரம்பிக்கின்றார். அ உ ம என்ற மூன்றில் ரக்ஷ எழுத்தை முதலில் வைத்துச் சொன்னால், உ ம அ – உமா என்று ஆகின்றது. இது அம்பிகையினுடைய உயர்ந்த திருநாமம்.

இதுகாறும் கூறியவற்றால் ஒருவாறு உகரத்தின் பெருமையை உணர்ந்திருப்பீர்கள்.

இனி, முருகு என்ற திருநாமத்தைச் சிந்தியுங்கள்.

மகர மெய்யில் உகர உயிர் ஏறி மு

ரகர மெய்யில் உகர உயிர் ஏறி ரு

ககர மெய்யில் உகர உயிர் ஏறி கு

முருகு என்ற மூன்றெழுத்துக்களிலும் காத்தற்குரிய உகரமே ஊடுருவி நின்று இம்முருக மந்திரமே அகில உலகங்களையும் காத்தருளும் திருநாமம் என உணர்த்துகின்றது.

இப்படி மூன்று உகர உயிர் அமைந்த வேறு மந்திரம் இல்லை என்பதும் ஒரு தலை. ஆதலால் முருகா என்று ஓதுவார் மும்மை நலன்களும் பெற்று உயர்வு பெறுவார்கள்.



## முருகப்பெருமானுக்குத் துணையாக வந்துதித்த நவ வீரர்கள்

1. வீரவாகு தேவர், 2. வீரகேசரி, 3. வீரமகேந்திரர், 4. வீரமகேஸ்வரர், 5. வீரபுரந்தரர்
6. வீரராக்கதர் 7. வீரமார்த்தாண்டர் 8. வீராந்தகர், 9. வீரதீரர்

## இறைவனின் ஐந்து முகங்களுக்குரிய பெயர்களும் அவற்றின் நிறங்களும்

அ) ஈசானம் – நடுவில் இருக்கும் முகம்

ஆ) தத்புருஷம் – கிழக்கில் இருக்கும் முகம் – பொன் நிறம்

இ) அகோரம் – தெற்கில் இருக்கும் முகம் – கருமை நிறம்

ஈ) வாமதேவம் – வடக்கில் இருக்கும் முகம் – சிவப்பு நிறம்

உ) சத்யோஜாதம் – மேற்கில் இருக்கும் முகம் – வெண்மை நிறம்

இந்த ஐந்து முகங்களாலும் இறைவன் 28 ஆகமங்களையும் அருளிச் செய்தார்.



# அர்த்த நாரீசர்

## (வாலிழை பாகத்தொருவன்)

– மு. அருணாசலம்

கடவுளைப்பற்றி மனிதன் கொண்டுள்ள கருத்துக்கள் காலப்போக்கில் வளர்ந்து வந்திருக்கின்றன. கடவுள் என்றும் உள்ளவர். ஆதி அந்தம் இல்லாமல் என்றும் இருந்தபடி இருந்து வருகிறார். ஆனால் அவரைப்பற்றி மனிதன் கொண்டுள்ள கருத்துக்களே அவன் வளர்ச்சியோடு உடன்மாறியும் வளர்ந்தும் வருகின்றன. கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதையே அறியாத நிலை ஆரம்பகால மனிதனது நிலை. பின்னர் மனிதன் வளர்ந்த அவர் என்றும் உள்ளவர், எல்லாம் அறிபவர், எல்லாம் செய்பவர், எல்லாம் தருபவர் என்று அறிந்துகொண்ட நிலை மிக்க வளர்ச்சிபெற்ற ஒரு நிலை. இந்த நிலையில்தான் பரம்பொருள் என்ற உணர்வு எழுந்தது.

கடவுள் ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லாதவர் என்று கண்டபோது, ஆன்றோர் அவரை அறிவு வடிவினராகக் கண்டனர். இந்த நிலையில், அவர் பிரபஞ்சத்தை இயக்கி வருவதை உணரவே, தம் உணர்வினுள் பதியும்பொருட்டு இதை ஒரு தன்மையால் குறிப்பிடவேண்டிய அவசியம் வந்தது. இதையே ஞான மயனான இறைவனுடைய சக்தி என்றனர். **அறிவு சிவம், ஆற்றல் சக்தி** என்று உணர்ந்தனர். அறிவையும் ஆற்றலையும் கண்டால்மட்டும் போதவில்லை. உயிர்களிடத்து இரக்கம் கொண்டு நன்மை புரியவேண்டும், மனிதன் தான் வேண்டியவற்றை இறைவனிடம் இரந்து பெறவேண்டும், இரந்தவற்றை அளிக்கும் தன்மையொன்று இறைவனிடம் இருக்கவேண்டும். இதையே அருள் என்று சொல்லத் தொடங்கினர். 'அருளே உலகெலாம் ஆள்விப்பது' என்று அம்மையார் பாடினார். இந்த அருளே உயிர்க்கூட்டங்கள் எல்லாம் உய்தி பெறவேண்டும் என்ற கருணை. இந்த நிலையில், இறைவனின் அருவத் தன்மையை ஆற்றல் என்றும், அருள் தன்மையாகிய சக்தியைக் கருணையென்றும் பெரியோர் கூறினர். சிவம், சக்தி என்ற இரு பெரும் கருத்துக்களை ஆற்றலின் நிறைவுக்கும் அருளாகிய கருணையின் நிறைவுக்கும் உருவங்களாகப் போற்றி வந்தனர்.

இவ்வாறு வளர்ந்த நிலையில், உலக மக்கள் வேண்டுவார் வேண்டுவதை ஈயவேண்டிச் சிவமும் சக்தியும் எத்தனையோ சந்தர்ப்பங்களில் எத்தனையோ விதமான உருவங்களாகத் தோன்றி அருள் செய்தபோது, இவைகளைப் பெருமானுடைய மூர்த்தி பேதங்களாகப் புராணங்கள் சொல்லின. ஒன்றாக இருந்த பரம்பொருள், ஞான மயமாக மட்டும் விளங்கிய பெரும் சச்சிதானந்தப் பொருள், மனிதனுடைய விவகார தசையில் சிவம், சக்தி என்ற இரண்டாக, அப்பனும் அம்மையுமாகக் காட்சியளித்தது. அவரவர் எந்தப் பக்குவத்திலிருந்து அந்தப் பொருளைக் கண்டார்களோ அந்தப் பக்குவத்துக்கு ஏற்றபடி, அது அம்மையப்பராகவோ, அப்பனும் அம்மையுமாகவோ வெளிப்பட்டது. அப்பனும் அம்மையுமாகிய கயிலைக் காட்சியாக, அப்பர் சுவாமிகள், கண்ணிற்பட்ட பிரபஞ்சம் எல்லாவற்றையும் கண்டார். ஒரே பொருள்தான், அதுவே இப்படிக் காட்சி தந்தது என்றும் கண்டார். 'அப்பன் நீ அம்மை நீ' என்றும் பாடினார். உலகெல்லாம் ஆட்டுவிக்கின்ற பரம்பொருளைத்தானே ஆடுகின்ற நடராசப் பெருமானாகக் கண்ட பெரியோர், அதே பொருள் அம்மையாகவும் அப்பனாகவும் விளங்குகின்றதோடு மனநிறைவு கொள்ளாமல், அம்மையப்பனாகவும், அருளும் ஆற்றலும் வெவ்வேறாக இல்லாமல் ஒன்றாகவே இணைந்திருக்கும் ஒரு நிலையையும் கண்டார்கள். இது அம்மை அப்பர் வடிவம் ; அர்த்தநாரீசுவரத் திருக்கோலம். இவ்வடிவம் கற்பனையாக உள்ளத்தில் மட்டும் நிற்பதல்லாமல், உருவ வழிபாட்டுக்கு என்று இதனைத் கல்லிலும் செம்பிலும் வடித்து வைத்துக்கொண்டார்கள்.

உள்ளது ஒரே பொருள். அது வாக்கு மனங் கடந்தது. அதை இரண்டாகக் காண விரும்பாமல் நம் முன்னோர் ஒன்றாகவே கருதினார்கள், கண்டார்கள். கருத்தால் ஒன்றாய்க் கண்டதை உருவத்தில் கண்ணால் காண எண்ணியபோது, அம்மையின் உருவத்தையும் அப்பனின் உருவத்தையும் ஒன்றாக்கி வைத்தார்கள். இடப்பால் அம்மையின் பாதி. இதயம் இயல்பாகவே இடப்பால் அமைந்துள்ளதல்லவா ! வலப்பால் சிவத்தின் பாதி. 'அம்மையே அப்பா' என்று அழைத்த மாணிக்கவாசகர், இந்த இருவரும் கலந்து ஒருவரான வடிவையே சென்று போற்றுகிறார்.

*"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்*
*பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்க வளையும்உடைத் தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ "*

என்ற பாடலில் வெளிப்படையாய்த் தெளிவாய்ச் சுருங்கச் சொல்லி அவர் துதிப்பது நன்கு தெரிந்தது. இப்பாடலில் கூறியது தனித்த ஒரு கூற்றல்ல. திருவம்மானைப் பதிகத்துள் ஆறு இடங்களில், மாதிருக்கும் பாதியன், மாதியலும் பாதியன், பெண் சுமந்த பாகத்தன் என்பன போன்ற சொற்களால் அம்மையப்பர் வடிவத்தைச் சொல்லிச் சொல்லி மகிழ்கிறார். 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து' என்றும், தாய்போல் தலையளித்திட்டு,' 'தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ' என்றும் அவர் பலமுறை கூறிப் போற்றுகிறார்.

*"காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்*
*கோதை குழலாட வண்டின் குழாமாடச்*
*சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி*
*வேதப் பொருள்பாடி அப்பொருள்ஆ மாபாடிச்*
*சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி*
*ஆதி திறம்பாடி அந்தம்ஆ மாபாடிப்*
*பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்*
*பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய் "*

என்ற பாடலில் எங்கும் எல்லோரும் அப்பனாகவே துதிக்கின்ற பொருளை மாணிக்கவாசகர் அபூர்வமாய் அம்மையாகவே துதிக்கின்றார். இது திருமுறைகளில் வேறெங்குமே காண்பதற்கரியதொரு நிலை. இதையும் கடந்த ஓர் ஈடுபாட்டு நிலையிலேதான் அவர் 'தோலும் துகிலும்' என்ற பாடலைப் பாடினார்.

இவ்வாறெழுந்த அர்த்தநாரீசுவர வடிவத்துக்கு ஒரு புராணக் கதை சொல்வதும் உண்டு. பிருங்கி என்ற முனிவர் சிவகணத் தலைவர்களில் ஒருவர். சிவ சந்நிதியில் நடனம் ஆடும் தொண்டு புரிபவர். இவர் நாள்தோறும் கயிலாயம் சென்று சிவபெருமானை வலம் வந்து செல்வதை நியமமாகக் கொண்டிருந்தார். வலம் வரும்போது சிவபெருமானை மட்டும் வலம்செய்வாரேயன்றி, உமாதேவியை வலம் செய்யமாட்டார். இதை ஒரு சமயம் எண்ணிய தேவியார், இவர் தம்மை வலம் வராத செயலுக்குக் கோபம் அடைந்து, இவர் உடலில் சக்திக் கூறாக உள்ள உதிரம் மாமிசம் முதலான பகுதிகளை எடுத்துவிட்டார். சிவபெருமான் ஒருவரே உள்ளவர் என்ற கருத்தைக் கொண்டிருந்த பிருங்கி முனிவர் அதன்மேல், எலும்புமட்டும் உள்ள வடிவினரானார். இதன்பின் அவர் சிறிதும் அடியெடுத்து நடக்கவும் ஆற்றலற்றவரானார். ஆற்றல் அளிப்பது சக்தியின் கூறு என்பதை அவர் உணரவில்ல. அவருடைய வைராக்கியத்தை உணர்ந்த பெருமான், இரண்டு காலால் மட்டும் அவ்வெலும்பு வடிவு நிற்கவும், நடக்கவும் கஷ்டப்படுவது கண்டு, மீண்டும் அதிகக் காலொன்றை அளித்தார். (ஊன்ற ஒரு தண்டு கொடுத்தார் என்று சொல்வதும் உண்டு. இவர் நிலைமை இவ்வாறாக, தம்மை விலக்கிச் சிவபெருமானை மட்டும் இவர் வழிபட்டுச் செல்ல இடம் இருக்கக்கூடாது என்று கருதிய அம்மையார் சிவபெருமானை வேண்டி இடப்பாகம் பெற்று, அதுமுதல் ஒரே உருவத்தில் தாம் இடப்பாலும் பெருமான் வலப்பாலுமாக இருக்கும் நிலை பெற்றார். இந்த நிலையே அர்த்தநாரீசுவர வடிவம் என்பது.

யமபயம் இல்லாது காக்கும் மூர்த்திகளுள் அர்த்தநாரீசுவர மூர்த்தியும் ஒருவர். "அர்த்தநாரீசுவரம் தேவம் பார்வதீப்ராண நாயகம்-நமாமி சிரசா தேவம் கிம்நோ ம்ருத்யுர் கரிஷ்யுதி" என்பது மார்க்கண்டேயர் செய்த மிருத்தியுஞ்சயத் தோத்திரங்களில் ஒன்று. காசியப சில்ப சாஸ்திரம், சரஸ்வதி சில்ப சாஸ்திரம், மயமதம், தத்துவ நிதி முதலான சில்ப சாஸ்திரங்கள், அர்த்தநாரீசுவர வடிவத்தை வருணிக்கின்றன. அவை கூறும் விவரங்களில் வேறுபாடு உண்டு.

சிறப்புப் பொருந்திய முருகன் தலமாகிய திருச்செங்கோட்டுச் சிவாலயத்தில், சிவபெருமான் அர்த்தநாரீசுவரக் கோலத்தில், மூல மூர்த்தியாகவே காட்சியளிக்கிறார் ; வேறு எத் தலத்திலும் இந்த நிலை இல்லை.

அர்த்தநாரீசுவரர் திருக்கோலம், வெறும் திருவுருவம் மட்டுமல்ல, ஒரு பெருந் தத்துவத்தின் உருவம் என்று குறிப்பிட்டோம். உருவங்கள் சமயந்தோறும் வேறுபடும். ஆனால் உருவத்துக்கு அடிப்படையாயுள்ள பெருந் தத்துவங்கள் எல்லாச் சமயங்களுக்கும் பொது என்பதை, எவ்வளவு மத வெறியராயிருந்தாலும், ஒப்புக்கொண்டேயாக வேண்டும். கடவுள் என்றும் உள்ளவர் ; அவர் அறிவுமயமானவர் ; அவர் எல்லாம் வல்லவர் ; அவர் உயிர்களுக்கு இன்பத்தையே தருகிறார். இவை சைவம் கூறும் கருத்துக்களிற் சில. சைவம் கூறியதனாலேயே, பிற மதங்கள் மறுக்க வேண்டும் என்பதில்லை. எல்லா மதங்களுக்கும் இவை பொதுவான கருத்துக்களே.



சிவம் என்ற சொல்லைச் சைவம் சொல்லுவதால், பிறர் இதை ஒதுக்கவேண்டுமென்பதில்லை. எல்லா உயிர்களுக்கும் நன்மை தருவது என்ற பொருளில் இதைச் சைனசமயம் அப்படியே எடுத்துக்கொள்ளுகிறது ; முடிவான முத்தியின்பத்தை எல்லாச் சைன நூல்களும் சிவகதி என்றே சொல்லக் காண்கிறோம்.

இது சொல்லாட்சி பொறுத்த வரையில் ; இப்படியே கருத்தின் ஆட்சியும் உண்டு. பண்டைய இலக்கண உரையாசிரியர் பலர் தாங்கள் கூறும் இலக்கணத்துக்கு உதாரணமாகச் சுவை மிகுந்த பாடல்களையே எடுத்துக் காட்டுவார்கள். பிற மதங்களில் சுவை கொண்ட பாடல்கள் பாடப்பட்டிருந்தால், அவற்றை எடுத்துக் காட்டத் தயங்குவதில்லை. வேறு மதத்தினர் பாடிய பாடல் என்பதற்காக அவர்கள் அப்படிப்பட்ட பாடல்களை ஒதுக்குவதில்லை.

யாப்பருங்கலம் செய்த அமித சாகரரும் அதன் விருத்தியுரைகாரரும் சைனரே. எனினும், உரைகாரர் இணைக்குறள் ஆசிரியத் துறைக்கு உதாரணம் காட்டும்போது ஓர் அழகான பாடலை எடுத்துத் தருகிறார் ; இப்பாடல் சிவபெருமானது அர்த்தநாரீசுவர வடிவத்தைப் போற்றுவது,

*"பாடகஞ்சேர் காலொரு பால், பைம்பொற்*
*கனைகழற்கால் ஒருபால் தோன்றும்;*
*நீடு குழல்ஒருபால், நீண்ட சடைஒரு பால்;*
*வீடிய மானின் அதள்ஒருபால்; மேகலை சேர்ந்து*
*ஆடு துகில்ஒருபால்; அவ்வுருவம் ஆண்பெண் என்று*
*அறிவார் யாரே !"*

இப்பாடலில் இறைவனுடைய அர்த்தநாரீசுவரக் கோலத்தில், ஒரு காலில் பாடகமும் ஒரு காலில் பைம் பொற்கனை கழலும், திருமுடியில் ஒருபால் நீண்ட குழலும், ஒருபால் நீண்ட சடையும், இடையில் மானின் தோலும், ஒருபால் மேகலை சேர்ந்து ஆடும் துகிலும் தோன்றுகின்ற ஒப்பற்ற ஒரு கலையழகைக் கவிஞர் கண்ணாரக் காண்கிறார். கண்டு, 'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாத இவ்வுருவை ஆண் என்று சொல்வதா, பெண் என்று சொல்வதா ? ' இதை அறிவார் யாரே ? என்று சைவப் புலவர் வியக்கிறார். அது பெரிதல்ல. ஒரு சைனப் புலவர் இந்த அழகை எடுத்து இலக்கணத்தில் கூறுகிறார். இதுவல்லவா பெரிது ! இந்தப் பாடல் நமக்குத் தெரிய வழியில்லை.

இவர் மாத்திரம் அன்றி, ஒரு பௌத்த ஆசிரியர் செய்த வீர சோழியம் என்ற இலக்கண நூலின் உரையாசிரியரும், இதே பாடலை எடுத்துத் தருவது அறிந்து மகிழத்தக்கது. இங்கு நாம் கருத்தில் கொள்ள வேண்டுவது, அர்த்தநாரீசுவர வடிவம், தான் உணர்த்துகின்ற பேருண்மை காரணமாகப் பிற மதப் புலவர்களின் உள்ளத்தையும் கவர்ந்திருக்கிறது என்பதே.

சிலப்பதிகார ஆசிரியரையும் எடுத்துக்காட்டாகச் சொல்லலாம். (இவர் சைனர் என்பது பொதுவாக வழங்கும் கருத்து ; அபிப்பிராய பேதமும் உண்டு). இவரும் பல இடங்களில் சிவ பெருமானுடைய அம்மையப்பர் கோலத்தைப் பக்திப் பெருக்கோடு குறிப்பிடக் காணலாம். கொற்றவை ஒருகாலிற் சிலம்பும் ஒரு காலில் வீரக் கழலும் அணிந்திருக்கிறாள் என்பார்; 'கண்ணுதல் பாகம் ஆளுடையாள்' என்பர்; 'கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து, மங்கையுருவாய் மறை ஏத்தவே நிற்பாய்' என்று ஓர் இடத்தில் துதிப்பார். 'உமையொரு பாகத்தொருவனை வணங்கி' என மற்றோரிடத்தில் கூறுவார். பெரும் புலவர்கள் நூல் முகப்பில் இறைவன் துதியாக ஒரு பாடல் அமைத்த காலத்தில் உமையொரு பாகனைத் துதிக்கிறார்கள். சங்க இலக்கியமாகிய ஐங்குறுநூற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல் குறிப்பிடத்தக்கது ;

*"நீலமேனி வாலிழை பாகத்து*
*ஒருவனது இருதாள் நிழற்கீழ்*
*மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே"*

*"பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று, அவ்வுருத்*
*தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் "*

என்பது புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து. தேவார திருவாசகங்களும் பிற திருமுறைப் பாடல்களும் எண்ணற்ற இடங்களில் இந்த அம்மையப்பர் கோலத்தை அழகுறச் சொல்லி மகிழ்கின்றன.

அனைத்திலும் சிறப்பானவை, பதினோராந் திருமுறையில் பட்டினத்தார் பாடியுள்ள பாடல்கள், திருவிடைமருதூர் மும்மணிக் கோவையின் முதல் பாடலிலேயே மிகவும் விரிவாக அர்த்தநாரீசுவரத் திருவுருவத்தை வருணித்தப் போற்றுகிறார். இங்குள்ள துதியானது, முறையாகப் பாதாதிகேசமாகவுள்ளது. இது 74 அடிகள் கொண்ட நீண்ட ஆசிரியப்பா. திருவடி, திருவிடை, ஆகம், திருக்கரம், திருநாட்டம், திருமுடி என்ற முறையில் இவரது போற்றுதல் அமைந்துள்ளது. கூறுகின்ற வருணனை, புராணக் கதைகளையும் இயல்பாகவே இவர் உள்ளத்துக் காணும் திருவுருவப் பொலிவையும் சொற் சித்திரமாகக் கொண்டு விளங்குகிறது.

பதினொராந் திருமுறைப் பிரபந்தங்கள் பாடிய பட்டினத்தார், 'தோலும் துகிலும்' என்ற பாடல் பாடிய மாணிக்கவாசகருக்கு அடுத்த நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் பாடிய பாடலின் பொருளைத் தாம் நன்கு உணர்ந்து சுவைத்த காரணத்தால் அதைப் பின்னும் பெருக்கிப் பாடியிருக்கிறார். திருவேகம்பமுடையார் திரு அந்தாதியில் 38 முதல் 41 வரை உள்ள பாடல்களில் தொடர்ச்சியாக மீண்டும் இவர அர்த்தநாரீசுவர வடிவத்தை அழகுபெறப் பாடியிருப்பதும் அறியத் தக்கது. திருவிடைமருதூரில் பாதாதிகேசமாகப் பாடியவர் இங்குக் கேசாதி பாதமாகப் பாடுகிறார். ஏழு பாடல்களிலும் திருமுடி, திருக்கண், திருக்காது, திருமார்பு, திருவயிறு, ஆடை, திருவடி என்ற முறையில் ஏழு பாடல்களிலும் பாடுகிறார். இவ்விரு வகையாலும் அவருக்கு அர்த்தநாரீசுவரர் வடிவத்தில் உள்ள ஈடுபாடு நன்கு புலப்படும்.

அம்மையப்பர் வடிவமானது, இயற்கையைப் படம் பிடித்துக் காட்டுவது போல அப்படியே ஒன்றை எடுத்து அமைத்ததல்ல ; காணும் பொருளின் உள்ளீடாய் உள்ள கருத்தையே ஆன்றோரும், புலவர்களும்,உருவமாகக் காட்டுகிறார்கள். வாக்கு மனங்கடந்த வான்கருணை யாளனை, வாக்காலும் கண்ணாலும் இவற்றின் வழி மனத்தாலும் உணர்வதற்குப் பெரியோர் எத்தனையோ முயற்சிகளைச் செய்திருக்கிறார்கள். அம்முயற்சியால் விளைந்தனவே இவ்வடிவ பேதங்கள். இவ்வடிவங்களிலே, மிகவும் ஆச்சரியமான படைப்புக்களில் நடராஜ வடிவமும், அர்த்தநாரீசுவர வடிவமும் பெருஞ் சிறப்புப் பொருந்தியவை. நடராச வடிவம் எல்லா உயிருக்கும் உயிராய் எல்லா உயிரினாலும் காணப்படாததாய் இருந்து ஐந்தொழில் நடத்துகின்ற ஒரு பெரும் நிலையை உணர்த்துவது ; பேராற்றலை உணர்த்துவது. அப்பெருமான் கூத்தின் பெருமையை எல்லா நூல்களும் மிக்க விரிவாய் எடுத்துரைக்கும். ஆனால் அர்த்தநாரீசுவர மூர்த்தி வடிவம் ஆன்ம கோடிகளுக்குப் புகலிடமாய் உள்ளது. இக் 'கோலமே நோக்கிக் குளிரிந்தூதாய்' என்று மாணிக்கவாசகர் குறிப்பிடும்போது, நோக்கி, குளிர்ந்து என்ற சொற்களால் உலகம் உய்வதற்கான ஒரு பெருந் தண்ணளியைச் சுட்டிக் காட்டுகின்றார். இதுவே இவ்வடிவத்தின் உட்பொருள்.

சீர்காழி வாவிக்ரையில் திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமக்கு ஞானப் பாலூட்டித் தம் உள்ளத்தைக் கவர்ந்த கள்வன் இன்னான் என்று தந்தைக்குச் சொல்லாலே சொல்லத் தொடங்கிய போது, அவர் சுட்டியது தோடுடைய செவியனாகிய அர்த்தநாரீசுவர வடிவமே. இடபாருடராகச் சிவ பெருமான் உமா தேவியாருடன் தோன்றியபோது ஞானப்பால் அளித்தது உமா தேவியே. சம்பந்தருக்கு அந்த நிலையில் அருள் செய்தவர் சிவபெருமான் ஆயினும், சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி உண்ணடிசில் என ஊட்டியது உமையம்மை. ஆனால் சம்பந்தர் உள்ளங்கவர் கள்வன் என்று பாடுவது பெருமானையே. மற்று, எடுத்தது, 'தோடுடைய செவியன்' என்று. இஃது அம்மையின் அடையாளம். எனவே, ஞானப் பாலுண்ட பிள்ளையார் அம்மையப்பரான வடிவையே நமக்குக் காட்டுகிறார் என்றே கருதவேண்டும். 'அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக' என்றே திருக்களிற்றுப்படியார் தொடங்குவதும் இங்குக் கருதற்பாலது.

இதுகாறும் நாம் கூறியவற்றால் அம்மையப்பர் திருக்கோலம் ஒரு லட்சிய வடிவம், இவ்வடிவமே இறைவனுடைய உண்மை நிலையை மக்களுக்கு உணர்த்தி ஆட்கொள்வது என்றும், சைவசமயப் பெரியோரும் பிறருங்கூட இவ்வடிவப் பொலிவிலும் இதன் பொருட் பொலிவிலும் மிகவும் ஈடுபட்டிருக்கிறார்கள் என்றும் அறியலாம்.







# லிங்க மகாத்மியம்

ப்ரணவத்தின் வடிவமாகவும், ஞானத்தின் சொரூபமாகவும் விளங்கி வரும் பரம்பொருளாகிய சிவபெருமானை லிங்கமூர்த்தியாக வணங்கி வழிபடுவது மிகவும் விசேஷமாகும்.

பெரும்பாலும் சிவாலயங்களில், சிவபெருமான் லிங்க மூர்த்தியாகவே காட்சி தருகிறார்.

அதற்குக் காரணம் சிவலிங்கத்தை தேவர்களும் முனிவர்களும் அண்ட சராசரங்களும் வழிபாடுபுரிந்தனர். லிங்கத்தின் பீடம் ஆவுடையர் எனப்படுவது. அதாவது அம்பாளின் சொரூபம் பீடத்தில் உள்ளது அமைந்துள்ளது.

மத்திய பாகத்தில் மாதவன் சொரூபம், மேலே ஈசனின் சான்னித்தியம்.

திருமால், பிரம்மன், இந்திரன் முதலிய தேவாதி தேவர்களும், முனிவர்களும் சிவபெருமானை லிங்க ரூபத்தில் வழிபட்டனர்.

அவர்கள் பூஜைக்கு ஏற்றபடி விசுவகர்மா லிங்கங்களைச் செய்து கொடுத்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

இந்திரன் பதுமராகலிங்கம்–குபேரன் சொர்ணலிங்கம், எமதர்மராஜன் கோமேதகலிங்கம்–– வருணன் நீலலிங்கம் – விஷ்ணு இந்திரலிங்கம் – ப்ரம்மன் – சுவர்ணலிங்கம் – விசுவதேவர்களும், அஷ்டவசுக்களும் வெள்ளிலிங்கம் – வாயுதேவன் பித்தளைலிங்கம் – சூரியன் ஸ்படிகலிங்கம் – சந்திரன் முத்துலிங்கம் – நாகர்கள் பவளலிங்கம் அசுவினிதேவர்கள் மண்ணாலானலிங்கம் – ருத்திரர்கள் திருவெண்ணீற்றுலிங்கம் பெற்றார்கள்.

மகாலக்ஷ்மி நெய்யினால் அமைந்த லிங்கத்தைப் பெற்றாள். ஸரஸ்வதி மாணிக்க லிங்கத்தைப் பெற்றாள். துர்க்கை சொர்ண லிங்த்தைப் பெற்றாள்.

இவ்வாறு லிங்கங்களைப் பெற்றவர்கள். விதிப்படி லிங்கத்தைப் பூஜித்து ஆனந்தம் கொண்டனர்.

இரத்தினத்தால் செய்யப்பட்ட லிங்கத்தை வழிபட்டால் லக்ஷ்மி கடாக்ஷம் என்றென்றும் கிட்டும் அர்ச்சித்து வழிபடுவோர்களைத் தருமங்கள் தானாகவே வந்தடையும்.

பவளத்தால் செய்யப்பட்ட லிங்கத்தை பூஜிப்போருக்கு நிலையான செல்வம் வந்து சேரும்.

மண்ணினால் செய்யப்பட்ட லிங்கத்தை வழிபடுவோர் வேண்டிய வரங்களைப் பெறுவர்.

கல்லினால் செய்யப்பட்ட சிவலிங்கத்தை ஆராதிப்பவர் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு அரும்பெரும் சக்திகளைப் பெறுவர்.

சிவலிங்க பூஜையால் வெள்ளையானையும், சிலந்தியும் முக்திநிலை பெற்றன.

வெள்ளையானைக்கு சிவபாதமும், சிலந்திக்கு அரசாளும் பாக்கியமும் கிட்டியது. பின்னர் அவைகள் முன்போல் சிவகணத் தலைவர்களாய் எம்பெருமானுக்குத் திருத் தொண்டுகள் புரியலாயின.

மயிலாபுரியில் பார்வதிதேவி மயிலாக எழுந்தருளி கபாலீச்வரரை லிங்கரூபத்தில் பூஜித்துத் திருமணம் செய்து கொண்டாள்.

காஞ்சியம்பதியில், மண்ணினால் லிங்கத்தை அமைத்து பூஜித்து ஏகாம்பரேச்வரரைத் திருக்கல்யாணம் செய்து மகிழ்ந்தனர். திருவானைக்காவலில், நீரினால் லிங்கம் அமைத்து அகிலாண்டநாயகி ஜம்புகேச்வரரை மணம் புரிந்தாள்.

சிவனும் சக்தியும் ஒன்றே. சக்தியில்லாமல் சிவன் இல்லை! சிவன் இல்லாமல் சக்தி இல்லை! உலகம் முழுவதும் சிவசக்தி மயம். சிவனும் சக்தியும் இல்லை என்றால் உலகமே இல்லை.

சிவனே தந்தை; சக்தியே தாய், சிவனே பரமாத்மா, சக்தியே மனோன்மனி, சிவனே மஹேச்வரன், சக்தியேமாயை. இவ்வாறு சக்தி சிவனுள் அடங்க, சிவமும் சக்தியுள் அடங்கி சிவசக்தி சொரூபமாக லிங்கவடிமாக எழுந்தருளி நம்மை இச்சாசக்தி, ஞான சக்தி, க்ரியா சக்திகளால் காத்தருளுகிறார்.

சிவலிங்கத்தை ஸ்தாபித்து அந்த சொரூபத்தில் ஈசனைத் தியானிப்பவர்களுக்கு சிவலோக ப்ராப்தி கண்டிப்பாக சித்தியாகும்.

சிவனே முப்போதும் நினைப்போர் பாவ கருமங்கள் நீங்கப் பெற்று அரிய பல யாகம் செய்த பேறு பெறுவர். முப்போதுமின்றி எப்போதும் சிவபூஜை செய்துவந்தால் முற்பிறப்பு பாவவினைகள் அற்றுப் போகும். இம்மையிலும் நல்ல மார்க்கம் கிட்டும்.

உருத்திராஷ மாலைகள் அணிந்து திருவெண்ணீற்றைப் பூசிக்கொண்டு நமச்சிவாய மந்திரத்தைச் சிந்தையிலே இருத்தி தியானிப்பவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் சகல மேன்மைகளும் கிட்டும்.

நம : சிவாய மந்திரத்தால் நம்மை நாம் சிவமயமாக்கிக்கொள்ள வேண்டும். இதயத்தில் அவன் சொரூபத்தை நிலைநிறுத்தி தியானிக்க வேண்டும்.

பஞ்சாக்ஷரமே, ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேயம், சத்யோஜாதம் என்னும் பஞ்சபிரமம். நூற்றிருபத்தைந்து பஞ்சாக்ஷர மந்திரங்களாக விரிந்துள்ளன.

நம : சிவாய மந்திரத்தைச் சொல்லி வில்வதளமும் தும்பை மலரும் சாத்தி சிவலிங்கத்தை வழிபடுவோர் எல்லா வழிகளிலும் க்ஷேமமுறுவர்.

சிவாலயங்களைக் கண்டால் கரமிரண்டையும் சென்னி மீது உயர்த்தி வணங்க வேண்டும். ஆலயத்துள் சென்று சிவனைத் தொழுது வணங்குவார் பெறுதற்கரிய பல பேறுகளைப் பெறுவர்.

சிவக்ஷேத்திரத்திலுள்ள புண்ணிய தீர்த்தங் களில் நீராடுவோர்க்கு ப்ரம்மஹத்தி தோஷம் விலகும். இகபர சௌபாக்யங்கள் கிட்டும்.

சிவாலயத்தை ப்ரதக்ஷிணம் செய்வோர் அசுவமே தயாகம் செய்த பலனைப் பெறுவர்.

அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாட்களில் சிவதரிசனம் மிக விசேஷம். மாதப் பிறப்பன்றும் உத்ராயண தக்ஷிணாயணக் காலங்களிலும் சிவனைத் தரிசிப்போர் சிவ பதவியைப் பெறுவர்.

நம : சிவாய : சிவாயை நம :

ப்ரதோஷ காலத்தில் சிவலிங்கத்திற்கும் நந்திதேவனுக்கும் நடக்கும் பூஜையைக்கண்டு களித்து, ரிஷபாரூட மூர்த்தியாக ஈசனை சேவிப்போர் அஷ்ட ஐச்வர்யங்களையும் பெற்று வாழ்வர்.

சக்திதரும் வீராட்டானத் தலங்களும் பஞ்ச பூதத் தலங்களும் :

பிரமன் சிரத்தைக் கொய்தது, மன்மதனை எரித்தது, தக்ஷனை அழித்தது, கஜாசுரனைச் சம்ஹரித்தது, ஜலந்தரனை ஒழித்தது, திரிபுரங் களையும் அவர்களோடு சாம்பலாக்கியது,

அந்தகாசுரன் ஆணவத்தை ஒடுக்கியது, காலனை மாய்த்தது ஆகிய ஈசனுடைய எட்டுச் செயல் களையும் வீரட்டானம் என்பர்.

தென்னாட்டிலே இறைவனை எட்டுத் தலங்களிலும் இவ்வகையில் கண்டு மகிழ்கின்றனர். இந்த எட்டுத் தலங்களிலும் இறைவன் திருநாமம் பொதுவாக வீரட்டானேச்வரர் என வழங்கப்படுகிறது.



**1. திருக்கண்டியூர் :**

தஞ்சாவூருக்கு வடமேற்கே ஐந்து மைலில் காவிரிக் கரையில் உள்ளது. சுவாமி பெயர் வீரட்டானேச்வரர். அம்மன் திருநாமம் மங்களநாயகி.

பிரமனுடைய ஐந்தாவது சிரத்தைக் கிள்ளி எறிந்த சிவன் சொருபத்தை வழிபடும் தலம் இது.

**2. திருக்கோயிலூர்**

தென்னாற்காடு மாவட்டத்தில் பெண்ணை யாற்றின் தென்கரையில் அமைந்திருக்கிறது.

அந்தகாசுரனுடைய ஆணவத்தை ஒடுக்க அவனை சூலத்திலே குத்தித் தூக்கிய ஈசன் சொருபத்தை இத்தலத்தில் வழிபடுகின்றனர்.

மேலூர் என்றும் கீழுர் என்றும் இவ்வூர் இருபிரிவாக அழைக்கப்படுகிறது. கீழூரே சிவஸ்தலம். மேலூரில்தான் பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் மூவருக்கும் தரிசனம் தந்த திரிவிக்கிரமப் பெருமாள் இடம் கொண்டுள்ளார்.

செப்பு வடிவில் உள்ள அந்தகாசுர சம்ஹாரமூர்த்தியின் உற்சவ வடிவம், அந்தனைக் காலின்கீழ் தள்ளி மிதித்துக்கொண்டு அவன்மீது சூலத்தைப் பாய்ச்சும் நிலையில் உள்ளது. அம்மன் சிவானந்தவல்லி என நாமம் கொண்டுள்ளார்.

**3. திருவதிகை**

தென்னாற்காடு மாவட்டத்தில் விழுப்புரம் கடலூர் இரயில் பிரிவில் பன்னுருட்டி ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஒரு மைலில் அமைந்திருக்கிறது.

பொன், வெள்ளி, இரும்பாலான கோட்டைகளை உடைய வித்யுன்மாலி, தாருகாக்ஷன், கமலாக்ஷன் ஆகிய அசரர்களை. தேவர்களால் அமைக்கப்பட்ட அழகிய அற்புத இரதத்தில் எழுந்தருளி அவர்களை சாம்பலாக்கிய ஈசன் மூர்த்தத்தை வழிபடும் க்ஷேத்திரம் இது. சிவபூஜை செய்தவர்களானபடியால் அசுரர் மூவரும் ஈசனால் கொல்லப்பட்டபின் கைலாயத்தில் கணங்களாகி இருவர் துவாரபாலகர்களாகவும், மூன்றாமவன் அபிஷேகம் செய்யும் பணியாள னாகவும் பேறு பெற்றனர்.

சைவ ஆசாரியர்களில் ஒருவரான நாவுக்கரசருக்கு சூலைநோய் நீக்கிய தலமும் இதுவே. அம்பிகை பிருஹந்நாயகி என அழைக்கப் படுகின்றாள்.

**4. திருப்பறியலூர்**

தஞ்சை மாவட்டத்தில் மாயூரம் தரங்கம்பாடி இரயில் பிரிவில் செம்பொன்னர் கோயில் ஸ்டேஷனிலிருந்து தெற்கே ஒன்றரை மைல் தொலைவில் இத்தலம் இருக்கிறது.

யாகத்தில் தமக்கு அவிர்ப்பாகம் கொடுக்காது, தம்மை அவமதிக்கும் நோக்கத்துடன் தக்ஷன் செய்த யாகத்தை அழித்து அவனையும் மற்றவர்களையும் வீரபத்திரைக் கொண்டு தண்டித்த இறைவனின் சொருபத்தை வழிபடும் தலம் இது.

அம்பிகை இளங்கொடி அம்மை எனக் கொண்டாடப் படுகிறாள்.

**5. திருவிற்குடி**

மாயூரம் திருவாரூர் இரயில் பிரிவில் நன்னிலத்துக்கு அடுத்த ஸ்டேஷன் இது.

தேவர்களை துன்புறுத்திய ஜலந்தராசுரனை, பூமியிலே கால் கட்டை விரலில் சக்கரம் கீறி அதை எடுக்குமாறு செய்த, அந்தச் சக்கரத்திலேயே சம்ஹரித்த ஈசன் சொருபத்தை ஆராதிக்கும் தலம் இது.

இங்குள்ள அம்பிகை ஏலவார்குழலி என அழைக்கப்படுகின்றாள்.

### 6. திருவழுவூர்

மாயூரம் திருவாரூர் இரயில் பிரிவில் இலந்தங்குடி என்ற ஸ்டேஷனிலிருந்து முக்கால மைல் தூரத்தில் அமைந்துள்ளது.

வேழமாக உருக்கொண்டு முனிவர்களையும் தேவர்களையும் வருத்தி வந்த கஜாசுரனை அடக்கி, அவன் தோலை உரித்துப் போர்த்துக் கொண்ட இறைவன் திருமூர்த்தியை வழிபடும் தலம் இது.

ப்ர கைலாசம், ஞான பூமி, அயதபுரி, பிப்பலாரண்யம் எனப் பல பெயர்களைக் கொண்டுள்ள இத் தலம் பிரளய காலத்தில் உலகெல்லாம் அழிந்த போதும் அழியாது வழுவின காரணத்தால் வழுவூர் எனப்பெயர் கொண்டிருப்பதாக ஸ்தல புராணம் கூறுகிறது.

சுவாமி கிருத்திவாசேசுவரர் என்றும் அம்பிகை பாலகுசாம்பிகை, அதாவது இளங்கிளை நாயகி என்றும் அழைக்கப்படுகின்றனர். மாசி மாதம் மகத்தன்று கஜசம்கார நடனம் மிகவும் கண்கொள்ளக் காட்சியாக இருக்குமாம்.

### 7. திருக்குறுகை

மாயூரத்துக்கு முந்திய ஸ்டேஷனான நீடுருக்கு மேற்கே மூன்று மைலில் அமைந்துள்ளது.

நிஷ்டையிலிருந்த தம்மீது மலர்க்கணைகளை எய்துயோகத்தைக் கலைத்தது யார் எனக் கோபத்துடன் நாற்புறத்திலும் பார்த்து மன்மதனைக் கோபாக்கினியால் எரித்த சம்ஹார மூர்த்தியின் திருமூர்த்தத்தை வழிபடும் தலம் இது.

இவ்வூரில் அம்மன் திருநாமம் ஞானாம்பிகை.

### 8. திருக்கடவூர்

மாயூரம் தரங்கம்பாடி இரயில் பிரிவில் உள்ள திருக்கடையூர் என்ற தலமே இவ்வூர் ஆகும்.

எமதர்மனிடம் தம்மைக்காத்துக்கொள்வதற் காக மார்க்கண்டேயன் தன்னை லிங்கத்தோடு கட்டிக் கொள்கிறான். யமதர்மன் அவன்மீது பாசம் வீசுகிறான். அது ஈசனையும் சேர்த்து இழுக்கின்றது. கோபம் கொண்ட இறைவன் லிங்கத்திலிருந்து வெடித்து எழுந்து காலால் உதைத்து மாய்க்கிறார். காலாந்தக மூர்த்தத்தை வழிபடும் தலம் அது.

ஈசனுக்கு அமுதகடேசுவரர் என்றொரு பெயரும் உண்டு. தேவர்களும் அசுரர்களும் பாற்கடலை அடையும் போது வெளிப்பட்ட அமுதகலசத்தை அவருக்குத் தெரியாது தேவர்கள் ஒளித்து எடுத்து வருகையில் இத்தலத்தில் கீழேவைத்துவிட்டு நீராடச் சென்றனர். திரும்பி வந்தபோது அவர்களால் அமுத கலசத்தை எடுக்க முடியவில்லையாம் அது வேரூன்றி இத்தலத்திலே நிலைத்துவிட்டதாம்.

ஆலயத்தின் உள்ளே கள்ளவாரணப் பிள்ளையார் இடம் கொண்டுள்ளார். அவரைத் தேவர்கள் வணங்காததால் அவருக்குக் கோபம் வந்துவிட்டதாம். அமுத கவசத்தைத் தேவர்களுக்குத் தெரியாமல் ஒளித்து விட்டாராம். தேவர்கள் தங்கள் தவறை உணர்ந்து அவரைத் தொழுது வேண்டினர். பிள்ளையார் அமுதத்தைக் கொடுத்தருளினார்.

கால தீர்த்தம். அமிர்த தீர்த்தம் இங்கு விசேஷம் அம்மன் பெயர் அபிராமி அம்மை.

அபிராமி பட்டர் அபிராமி அந்தாதி பாடியுள்ளார். கார்த்திகை மாதம் சோமவாரங்களில் வலம்புரி சங்குகள் கூடிய ஆயிரத்தெட்டு சங்குகளால் அபிஷேகம் நடக்கையில் இறைவன் திருமேனியில் பாசக் கயிற்றால் எமன் இழுத்தபோது ஏற்பட்ட தழும்பைக் காணலாம்.



# சிவநெறி

– திருமுருக கிருபானந்தவாரியார்

இறைவன் என்ற சொல் இறு என்று பகுதியடியாகப் பிறந்தது. எல்லா உயிர்களிலும் எல்லாப் பொருள்களிலும் இறைவன் நீக்கமற நிறைந்து நிற்கின்றான். இனி, எல்லாம் அவனிடத்திலே இருக்க, அவன் அவைகட்கு உறைவிடமாகவும் இருக்கின்றான். இஃது இறைவனுடைய விசுவரூபம்.

எல்லாப் பொருள்களிலும் தங்க வேண்டுதலின், சிறிய-மிகச் சிறிய பொருளாக இருக்கின்றான். மேரு கிரி முதலிய பொருள்கள் யாவும் அவனிடத்திலே தங்கும்படி அப்பெருமான் மிகப் பெரிய பொருளாக விளங்குகின்றான். இதனை உபநிடதம் "அணோரணியாந் மஹதோ மஹீயாநாத்மா" என்று கூறுகின்றது.

அனுவுக்கு அணுவாகவும், மகத்துக்கு மகத்தாகவும் விளங்குபவன் இறைவன். ஒரு பழங்கதை "பழம் கதை."

திருக்கயிலாய மலையில் உமாதேவியாருடன் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். விநாயகப் பெருமான், முருகப் பெருமானும் தாய் தந்தையரை வணங்கி வழிபடும் பொருட்டுச் சென்றார்கள்.

தினந்தோறும் பழங்காலத்தில் மைந்தர்கள் தந்தை தாயரை வழிபடுகின்ற வழக்கம் இருந்தது.

*"வைகறை யாமம் துயில்எழுந்த தான்செய்யும்*
*நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதின்*
*தந்தையுந் தாயும் தொழுதுஎழுக என்பதே*
*முந்தையோர் கண்ட முறை "*

என்று ஆசாரக்கோவை கூறுகின்றது.

ஆனைமுகனும் ஆறுமுகனும் அம்மையப்பரை வலம் வந்து வணங்கினார்கள். சிவமூர்த்தியின் திருக்கரத்தில் ஒரு தெய்வ மாதுளங்கனி இருந்தது. அதனை இருவரும் கேட்டார்கள்.

அரனார், "அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வருபவருக்கு இக்கனி தரப்படும் " என்று அருளிச் செய்தார்.

முருகப் பெருமான் மயிலின் மீது ஏறி அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வந்தார்.

*" ஆகமம் விளைத்தகில லோகமும்*
*நொடிப்பொழுதில்*
*ஆசையொடு சுற்று மதிவேகக்காரனும் "*

*" இலகுகனி கடலைபய றோடியல்பொரி*
*அமுதுசெயும்*
*இலகுவெகு கடலிகட தடபார மேருவுடன்*
*இகலி முது திகிரிகிரி நெரியவளை கடல்கதற*
*எழுபுவியை ஒரு நொடியில் வலமாக ஓடுவதும் "*

- திருவகுப்பு

"எல்லாம் சிவத்துக்குள் ஒடுக்கம் " என்று சிந்தித்து, ஆனைமுக அண்ணல் அம்மையப்பரை வலமாக வந்து கனி பெற்றார்.

இந்தப் பழங்கதை ஒரு பெரிய தத்தவத்தை உணர்த்துகின்றது :

1. தந்தைக்கு உபதேசித்த தயாபரனுக்குச் சிவத்துக்குள் எல்லாம் ஒடுக்கம் என்பது தெரியாதா? தெரியும்.

2. எல்லா உலகங்களையும் சருவ வல்லமையுடைய விநாயகரால் வலம் வர இயலாதா? இயலும்.

3. சிவபெருமானின் இரு மைந்தர்களும் கனி கேட்டபோது உள்ள கனியை உடைத்துப் பகிர்ந்து தரக் கூடாதா?

4. அல்லது ஒரு புதிய கனியை உண்டாக்கித் தரக்கூடாதா? வீதியில் விளையாடுகின்றவன் கூட ஏதேதோ பொருள்களைத் தருவிக்கின்றானே.

5. " தம்பிக்கே தந்துவிடுங்கள். எனக்கு வேண்டாம் " என்று விட்டுக்கொடுக்கின்ற குணம் விநாயகரிடம் இல்லையா?

6. "அப்பா ! அண்ணாவுக்கே கொடுங்கள். நான் பிறகு வாங்கிக்கொள்ளுவேன்" என்று ஒதுங்கிப் போகின்ற தியாக புத்தி வேலவன்பால் இல்லையயா?

7. ஒரு சிறிய கனி காரணமாக உலகத்தை வலம் வந்தால் கூலி கட்டுமா?

8. பழம் காரணமாகத் திருக்கயிலாய மலையில் முருகனும் விநாயகரும் போட்டியிடலாமா ?

9. பழத்தின்மீது ஞானமே வடிவாய விநாயகருக்கும், ஞானபண்டிதனுக்கும் அத்தனை ஆசையா ?

இந்த வினாக்கள் அடுக்கடுக்காக எழுகின்றன.

இத்தனை வினாக்களுக்கும் தக்க விடை பகர்கின்றேன் :

இறைவனைப்பற்றி நாம் முன் என்ன சிந்தித்தோம் ! "எல்லா இடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் அவன் தங்கி இருக்கின்றான் ", அவனிடம் எல்லாம் தங்கியிருக்கின்றன " என்று இருவிதமாக நினைத்தோம் அல்லவா ?

சிவத்துக்குள்ளே எல்லாவற்றையும் பார்த்தார் கணபதி.

எல்லாவற்றுக்குள்ளும் சிவத்தைப் பார்த்தார் முருகர்.

இந்த அரிய பெரிய உண்மையை உணர்த்துகின்றது அப்பழக்கதை.

இதனைத் தாயுமானவர் கூறுகின்றார் :

*"அங்கிங்கெ னாதபடி எங்கும் பிரகாசமாய்*
*ஆனந்த பூர்த்தியாகி*
*அருளொடு நிறைந்ததெது ? தன்னருள்*
*வெளிக்குளே*
*அகிலாண்ட கோடி எல்லாம்*
*தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்*
*தழைத்ததெது ! "*

இனி, "இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றானே? உலக மாயை அவனைப் பற்றாதோ !" என்ற வினா எழும்.

உப்பு விளைகின்ற இடம் கடல். உவர் நீரில் பிறந்து, உவர் நீரைப் பருகி, உவர் நீரில் வாழ்கின்ற மீனுக்கு உவர் ஏறுவதில்லை. மீன் உண்போர், கடல் மீனுக்கும் உப்பிட்டுத்தான் சமைத்து உண்பார்கள். அதுபோல் இறைவன் யாண்டும் உறைந்திடினும் உலகை மாயை அவனைப் பற்றாதென உணர்க.

எங்கும் நிறைந்த பொருள் இறைவன் என்றால், ஏன் அது நம் கண்ணுக்குத் தெரியவில்லை என்பாரும் உள். விறகிலே நெருப்பு இருக்கின்றது. பாலில் நெய் இருக்கின்றது. ஆனால் அவை கண்ணுக்குத் தெரிகின்றனவா ? இல்லை. விறகிலே தீயும், பாலில் நெய்யும், கண்ணுக்கத் தெரியாமையால், இல்லையென்றால் நமக்கு அறிவு இல்லை என்று உலகம் சிரிக்காதா ?

விறகைக் கடைந்தால் தீ வெளிப்படும். பாலைக் கடைந்தால் நெய் வெளிப்படும். அதுபோல, தியானம் புரிந்தால் இறைவன் வெளிப்பட்டுக் காட்சி தருவான். சாதனைகள் செய்தால் தேவரும் மூவரும் காணமாட்டாத சிவம் தானே வந்து வெளிப்பட்டுத் தோன்றும்.

*"விட்டேன் உலகம் விரும்பேன்*
*இருவினை வீணருடன்*
*கிட்டேன் அவருரை கேட்டுமி*
*ரேன்மெய் கெடாதநிலை*
*தொட்டேன் சுகதுக்கம் அற்றுவிட்*
*டேன்தொல்லை நான்மறைக்கும்*
*எட்டேன் எனும்பரம் என்னிடத்*
*தேவந்துஇங் கெய்தியதே"*

என்கின்றார் பட்டினத்தடிகளார்.

கற்றவர் விழுங்குங் கற்பக் கனியும், மற்றவர் அறியா மாணிக்கமலையும் ஆகிய இறைவன் சொரூப நிலையில் 'சிவம்' என்றும், உலகை நோக்கிய தடஸ்த நிலையில் 'பதி' யென்றும் பேர் பெறுகின்றான்.

இறைவனைப் பற்றியும், உயிர்களின் தன்மைகளைப் பற்றியும் உயிரின் இயற்கைக் குற்றமாகிய ஆணவத்தைப் பற்றியும், சைவ சித்தாந்த நூல்கள் தெளிவாகக் கூறுகின்றன. ஏனைய நூல்களில் ஆணவத்தின் பேர்தானும் கூறுமாறில்லை.

**அத்வைதம்** :- அத்வைதம் என்ற சொல்லக்குப் பலர் பலவாறு பொருள் கண்டார்கள். திருவருள் துணை செய்யாமையால் மற்ற மதாசிரியர்கள் மாறுபட்ட கருத்துக்களைக் கூறிக் குழப்பஞ் செய்தார்கள்.

"ஏகம் ஏவாத்விதீயம்" என்பது வேதவாக்கு. இதன் பொருள் "ஒன்றேதான் பொருள், இரண்டாவதில்லை" என்பது. இதை வைத்துக் கொண்டு சங்கரர் முதலியோர், பிரம்மத்தை யன்றி வேறு பொருள் இல்லையென்று முடிவு கட்டிவிட்டார்கள்.

பிரம்மத்தைத் தவிர வேறு பொருளே இல்லையானால், இதனை யார் யாருக்குக் கூறுவது? இந்த வார்த்தையினால், சொல்பவன் ஒருவன், கேட்பவன் ஒருவன் இருக்கவேண்டும் அன்றோ ? பிரமமே மயங்குகின்றதா ? பிரம்மத்தைத் தவிர வேறு பொருள் இருந்தால்தானே இந்த வசனம் உண்டாகும் ?

பிரம்மத்தைத் தவிரத் தலைமைப் பொருள் வேறு இல்லையென்பதே இந்த வேத வசனத்தின் உட்பொருள்.

ந-த்வைதம் என்ற சொற்கள் சேர்ந்து அத்வைதம் என்றாயின. ந என்ற சொல்லுக்கு 'சப்த கல்பத்ருமம்" என்ற நூல் ஆறு பொருள்கள் கூறியுள்ளது. அவற்றுள் மூன்று : அன்மை, இன்மை, மறுதலை என்பனவாம். இன்மை யென்ற பொருளில், அப்பிரகாசம் எனக்கொண்டு, ஒன்றேதான் என்கிறார் சங்கரர். மறுதலைப் பொருளில், அநீதி, அதர்மம் எனக்கொண்டு, இரு பொருள்கள் என்றார் மத்வர். மெய்கண்டார் அப்பிராமணன், பிராம்மண தருமம் கெட்டவன் என்று அண்மைப் பொருளில் கூறியருளினார். பொன்னும் பணியும் போல் உலகமும் இறைவனும் ஒன்றே என அபேதவாதங் கூறினார் சங்கரர். இதில் ஆபரணத்திற்கு வரும் குறைபாடுகள் யாவும் பொன்னுக்கு வரும். ஆதலால் இது பொருந்தாதென உணர்க.

இறைவனும் உலகமும் ஒளியும் இருளும் போல் வேறு வேறே என்றனர் மத்வர். இது பேதவாதம். இருளும் ஒளியும் பகைப் பொருள். ஆதலால் உலகமும் இறைவனும் தொடர்பில்லாமல் போவதால் இது பொருந்தாமை யறிக.

பாஞ்சராத்திரிகள், சொல்லும் பொருளும் போல் பேதாபேதம் என்பர். சொல்லும் பொருளும் வேறே யாதலால், இவர் கூற்றும் பொருந்துமாறில்லை.

சிவாத்வித சைவர்களும் மரமும் கிளையும் போல என, பேதாபேதமே கூறுவர். அபேத வாதம், பேதவாதம், பேதாபேதவாதம் என்ற மூன்றுமே பொருந்தா என்றால், உலகத்துக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்புதான் எவ்வகைப்பட்டது ?

மேலே கூறிய மூன்றனுள் ஒன்றையே கூறாது, மூன்று தன்மைகளும் தன்னுள் காணப்படும் அத்வைதத் தொடர்பே உலகிற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு என்கிறார் மெய்கண்ட சிவம்.

எண்ணுப் பெயர்முன் நகரம் அண்மைப் பொருளிலேயே வரும்.

ந ஏகம், அநேகம் என்பது போல நத்வைதம் அத்வைதம் என வந்தது.

அத்வைதம் என்பது இரண்டல்லாமை, பிரிவின்மை என உணர்க. பிரிவின்மை என்றதனால் பொருள் இரண்டுதான் : இரண்டாயினும் வேறு வேறாய் நில்லாது ஒன்றியே நிற்கும் என்பது கருத்து.

இறைவன் உலகத்தோடு கலப்பினால் ஒன்றாகியும், பொருள் தன்மையால் வேறாகியும், உலகத்துக்கு உதவும் பொருட்டு உடனாகியும் நிற்கின்றான்.

இறைவன், உலகு உயிர்களோடு, உடலும் உயிரும் போல் ஒன்றாகியும், கண்ணொளியும் கதிரொளியும் போல் வேறாகியும், கண்ணொளியும் உயிரறிவும் போல் உடனாகியும் நின்று அருள் புரிவான்.

இந்த நுணுக்கமான கருத்துக்களை மெய்கண்டார் சுருங்கிய சொற்களால், "அவையே தானேயாய்" என்று கூறியுணர்த்துகின்றார்.

அவையேயாய் – உயிரும் உடலும்போல் ஒன்றாகியும், தானேயாய் – பொருள் தன்மையால் கண்ணொளியும் கதிரொளியும் போல் வேறாகியும், அவையே தானேயாய் – கண்னொளியும் ஆன்ம அறிவும் போல் உடனாகியும், நின்று இறைவன் அருள் புரிகின்றான்.

*" ஈறாய்முதல் ஒன்றாயிரு பெண்ஆண் குணம் மூன்றாய்*
*மாறாமறை நான்காம்வரு பூதம்அவை ஐந்தாய்*
*ஆறார்சுவை ஏழோசையொடு எட்டுத்திசை தானாய்*
*வேறாய் உடன் ஆனான்இடம் வீழிம்மிழலையே "*

என்று திருஞானசம்பந்தர் இதனை விளக்கியுள்ளார்.

இறைவனுடைய பெருங்கருணையை நினைந்து நினைந்து நாம் உருகி வழிபாடு செய்தல் வேண்டும். இல்லையேல் நன்றி மறந்த பாவத்துக்கு ஆளாவோம்.

சித்தத்தில் தித்திக்கும் மந்திரம் பஞ்சாக்கரம். சித்திக்கும் முத்திக்கும் அதுவே காரணம்.

*" ஒன்று கண்டீர் உலகுக்கு ஒருதெய்வம்*
*ஒன்று கண்டீர் உலகுக்கு உயிராவது*
*நன்று கண்டீர் நமச்சிவாயப் பழம்*
*தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே. "*

- திருமந்திரம்

சிவபஞ்சாட்சரத்தை அன்புடன் ஓதும் உத்தமர்க்குத் தரித்திரம் உண்டாகாது. இம்மை, மறுமை, வீடு என்ற மும்மை நலங்களும் உண்டாகும்.

*" விச்வேச்வராய நாகார்ணவ தாரணாய*
*கர்ணாம்ருதாய சசிசேகர தாரணாய*
*கர்ப்பூர காந்தி தவளாய ஜடாதராய*
*தாரித்ர்ய துக்க தஹனாய நமச்சிவாய. "*

"நரகமாகிய கடலைத் தாண்டச் செய்கின்றவன் சிவன். தரித்திரமாகிய துக்கத்தைத் தகனஞ் செய்கின்றவன்" என்று வசிட்ட முனிவர் சிவபெருமானைத் துதிசெய்கின்றார்.

"ஆயிரம் எழுத்தல்ல, நூறு எழுத்தல்ல, பத்தெழுத்தல்ல, ஐந்து எழுத்துத்தானே, இதைக்கூட உச்சரிக்கக் கூடாதா ?" என்கின்றார் இராமலிங்க அடிகளார்.

*" ஆயிரமன் றேநூறு மன்றேஈ ரைந்தன்றே*
*ஆயிரம்பேர் எந்தைஎழுத் தைந்தேகாண்–நீயிரவும்*
*எல்லும் நினத்தியென ஏத்துகினும் ஏத்தாய் வீண்*
*செல்லுமன் என்செய்கேன் செப்பு. "*

ஆறு நாளில் கண்ணப்பர் முத்தி பெற்றார் என்று அறிகின்றோம். அதிதீவிரமாக இறை வனிடத்தில் அன்பு செலுத்தினால், கண்ணப்பர் பெற்ற பேற்றை நாமும் பெறலாம்.

திருச்சிராப்பள்ளிக்கு அருகில் ஆனை பூசித்த தலம் திருவானைக்காவும், எறும்பு பூசித்த தலம் திருஎறும்பூரும் காட்சி தருகின்றன. பெரிய பிராணி யானை, சிறிய பிராணி எறும்பு. எறும்பு முதல் யானை ஈறாக என்பார்கள். யானையும் இறைவனை வழிபட்டது. எறும்பும் இறைவனை வழிபட்டது. மனிதராகப் பிறந்த நாம் இறைவனை வழிபட வேண்டாமா ?

இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ? ஆதலால் ஒவ்வொருவரும் சிவபூசை செய்தல் வேண்டும். திருமுறைகளை ஓதுதல் வேண்டும். திருவெண்ணீறணிந்து கண்டிகை புனைந்து ஆலய வழிபாடு செய்தல் வேண்டும். இறைவனிடத்தில் இடையறாத அன்பு செய்யவேண்டும். மால் என்றால் அன்பு. மால் ஆனார்க்கு அவன் எளியவன். அன்பு செய்வார் நெஞ்சில் நீங்காது நிற்பன்.

*" அன்றுமா லானார்க் கரிதாகி நீயுலகில்*
*இன்றுமா லானார்க் கெளிதன்றோ –*
*கொன்றைசேர்*
*பொன்னார் சடா மகுடப் புண்ணியா*
*பொற்சபையின்*
*மன்னா சிதம்பரதே வா "*

*" தானவரு மாலும் சதுர்முகனும் மற்றுமுள்ள*
*வானவருந் தேடி மயங்கவே – ஞானமுடன்*
*நேயம் பெறுமடியார் நெஞ்சினுள்ளே நிற்பதென்ன*
*மாயம் சிதம்பர தேவா "*

என்கின்றார் குருநமச்சிவாயர்

இதுகாறும் கூறியவற்றால், இறைவன் எங்கும் உளன் என்பதும், முருகனும் கணபதியும் சிவனது அத்வைத நிலையைக் காட்டினார்கள் என்பதும், இறைவன் உலகமெங்கும் உறையினும் கடல் மீன் போல் உலக மாயை ஒட்டாதவன் என்பதும், தியானத்தால் அவனைக் காணலாம் என்பதும், அத்வைதம் என்ற சொல்லின் உண்மைப் பொருள் இறைவன் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று தண்ணருள் புரிவதே என்பதும், அப்பரமனை வழிபட்டு ஒவ்வொருவரும் உய்தல் வேண்டும் என்பதும் விளங்கும். இவை சிவ நெறியிற் காணும் உண்மைகள்.

## தட்சிணாமூர்த்தியின் வடிவச்சிறப்புகள்

கல்லால் மரத்தினடியில் யோக ஆசனத்தில் சனகாதி முனிவர்கள் நால்வருக்கும் உபதேசிக்கும் முறையில் வீற்றிருக்கிறார். அவருடைய ஒரு திருவடி முயலகன் மிதித்துக் கொண்டிருக்கிறது. மற்றொன்று வீராசனமாக வீற்றிருக்கிறது. நான்கு கைகளில் வலப்பக்கம் ஒரு கை சின்முத்திரை தாங்கியும் ஒரு கை உருத்திராக்ஷ மணிவடம் தாங்கியுள்ளது. இடப்புறம் உள்ள ஒரு கையில் அமுதகலசமும் மற்றொன்றில் வேதமும் உள்ளன. இவரை யோக தக்ஷிணாமூர்த்தி என்பர். (தும்புரு நாரதருக்கு வீணையின் இலக்கணத்தை உணர்த்திய திருமேனி வீணாதார தக்ஷிணாமூர்த்தி எனப்படும்.)







# யோக பைரவர்

– சிவபாரதி

பரமனை மதித்திடாப் பயங்காயாசனன்
ஒரு தலை கிள்ளியே ஒழிந்த வானவர்
குருதியும் அகந்தையும் கொண்டு தண்ட முன்
புரிதருவடுகளைப் போற்றிச் செய்குவாம்

– கச்சியப்ப சிவாச்சாரியார்

சிவபெருமானின் ஐந்து குமாரர்களில் பைரவரின் சிறப்பும் ஒன்றாகும். ஆதிசங்கரரின் அறுவகைச் சமயத்தினிலும் ஊடுருவி நிற்கும் பான்மை கொண்டது. புறச் சமயங்களாக விளங்கும் பௌத்தம், சமணம் போன்றவற்றுள்ளும் பைரவ வழிபாடு சிறப்பாக மிளிர்கிறது. எல்லா உலகுக்கும் அப்பாலோன், இப்பாலாய் நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கும் நிலையினையே பைரவம் (பைரவர்) என சிவாகமங்களும், வேதங்களும், திருமுறைகளும், சாத்திரங்களும், புராணங்களும் புகழ்ந்தேத்துகின்றன.

பைரவர் எனும் சொல்லின் எழுத்துக்களே மிக நுட்பமான ஆழ்ந்த பொருளைத் தருகிறது.

பைரவர் என்ற சொல்லின் ஒலிகள், அதன் வேர்ச்சொற்கள் பரவ – இவற்றுள் ப – என்பது பரணம், ர – என்பது ரணவம், வ – என்பது வமநம்.

பரணம் – நிலை நிறுத்தல், ரவணம் – உலகினை ஒடுக்கல் (அழித்தல்) வமநம் – படைத்தல் – எனும் முப்பொருளின் விளக்கமாக அது திகழ்கின்றது. ஆதிசங்கரரின் சௌந்தர்ய லஹரியில் 41 வது சுலோகத்தில் காலாக்னிருத்ரனால் மஹாப்ரளயத்தில் பஸ்பமாக்கப்பட்ட, உலகத்தை, மீண்டும் உண்டு பண்ணுகின்ற காரணத்திற்காக அம்பிகை ஆனந்த பைரவியாகவும் எம்பெருமான் ஆனந்த பைரவராகவும், தாண்டவமாடிக்கொண்டு, ஜெகத் சிருஷ்டியே பைரவரால் நடக்கிறது என்று கூறுகிறார். ஆனந்தபைரவர் – படைப்பு காலாக்கினி – ஒடுக்கம் (அழித்தல்), கால பைரவர் – காத்தல்.

ஆக்கல், அழித்தல் அளித்தல் (காத்தல்) இம்மூன்றிற்கும், பைரவரே என்பதை மூல நூல்கள் முன்னிறுத்துகின்றன.

**அவதாரம்**

பிரமனின் சிரச்சேதம் (அகந்தையை அழிப்பதற்கே) பைரவ அவதாரம் நிகழ்கிறது. ‘அறுத்தான் அயன் தன் சரம் ஐந்திலும் ஒன்றை” என்று ஞானசம்பந்தப் பெருமானும் ‘விளங்கமலர் அயன் சிரங்கள் ஐந்தில் ஒன்றைச் சேதியனை” என்று வாகீசரம் பாடுவதைக் காணலாம்.

அட்டவீரட்டத் தலங்களில் ஒன்றான திருக் கண்டியூரில் தான் பிரம்மனின் சிரம் ஒன்று கொய்யப்படுகிறது பைரவரால். அப்போது பிரம்ம கபாலம் பைரவரின் கரங்களிலேயே ஒட்டிக்கொள்கிறது. கபால பைரவர் காசிக்குச் சென்றவுடன் அந்தக் கபாலம் மறைந்துவிடுகிறது. பிரம்ம சிரச் சேத மூர்த்தியாக அவதாரம் எடுத்த பைரவர் காசியம்பதியில் கால பைரவராக அருள் பாலிக்கிறார்.

பைரவர் வழிபாட்டை யோக மார்க்கம் என்று புகழ்கிறது பைரவ கல்பம் என்று நூல். விஞ்ஞானத்தையும் நன்னெறியையும் காட்டுபவர் பைரவர் என விஞ்ஞான பைரவம் என்ற நூல் வர்ணிக்கின்றது. வீரம், கல்வி, ஞானம், தனம் என்பனவற்றிற்கு சிறந்த மார்க்கம் பைரவ வழிபாடுதான். சம்ஹாரமூர்த்தியாக இருந்தாலும் பைரவர் வழிபாட்டை யோக வழிபாடு என்று ஆன்றோர்கள் புகழ்கின்றனர். அனைத்து சிவாலயங்களிலும் பைரவர் திருவுருவம் இருக்கும். பைரவர் க்ஷேத்ர பாலகர் என்றும் அழைக்கப்படுகிறார். க்ஷேத்திரம் என்றால் ஊர். பாலகன் எனில் இளைஞன், ஊரையும் கோவிலையும் உலகையும் காக்கும் தெய்வம் அவரே. பைரவ மூர்த்தத்தில் 64 பைரவர்கள் உண்டு என்று ஆகமங்கள் கூறுகின்றன. அவற்றுள் எட்டு வகையான பைரவர்கள் சிறப்பாகப் பேசப்படுகின்றனர்.

1. அசிதாங்க பைரவர்
2. குரு பைரவர்
3. சண்டை பைரவர்
4. குரோதன பைரவர்
5. உன்மத்த பைரவர்
6. கபால பைரவர்
7. பீண பைரவர்
8. சம்ஹார பைரவர்

என்பவை ஆகும். இந்த அறுபத்து நான்கு பைரவ கோலங்களிலும், ஏன் எட்டு பைரவர்களிலும் மாறுபட்டு விளங்குபவரே, நம் திருப்புத்தூரில் உள்ள யோக பைரவர்.





பைரவர் எனும் தோற்றத்திற்கான நாய், கபாலம், சூலம் என்பவை இல்லை என்பதால், இவர் பைரவரே இல்லை என்று கூறமுடியாது. திருவாவடுதுறை ஆதீன வெளியீடான பைரவர் என்ற நூலில் நம் யோக பைரவர் ஆண்ட பிள்ளையார், உலகை ஆண்ட பிள்ளையார் என்றே அழைக்கப்பட்டிருக்கிறார்.

**யோக பைரவரின் சிறப்பு**

பூத கணங்களின் அதிபதியாக, பூதநாதனாக இருக்கும் பைரவர் காலச்சக்கரத்தை செவ்வனே காசியம்பதியில் சுழற்றிக் கொண்டிருந்தபோது ஞான நிலை காண எண்ணங் கொள்கிறார். எந்த ஓர் அவதாரமும், அதர்மத்தை அழித்து, தர்மத்தை நிலைநாட்டவே நிகழ்கிறது. அப்போது, அதர்மமான அந்த உயிர் அழிக்கப்படுவதால், (அது, தேவர்களையோ, அசுரர்களையோ) அழித்தல் தொழிலைச் செய்யும் அவதாரங் களுக்கும் பிரம்மஹத்தி தோஷம் (அவை - கடவுளின் அவதாரங்களே ஆயினும்) பிடிப்பதாக புராண, இதிகாசங்கள் தெரிவிக்கின்றன. (காசி காண்டம் - பைரவப் பிரபாவத்தில்) அந்த தோஷ நிவர்த்திக்காக, சிவ பூஜை செய்து தோஷங்களை நிவர்த்தி செய்தகொள்வதண்டு. பிரம்ம சிரச்சேதத்திற்குப் பிறகு சிவபூஜை செய்யவேண்டும் என்ற எண்ணம் கால பைரவரை ஆட்கொள்கிறது. பைர அரவம் சூடிய எம்பெருமான் கயிலை நாதன் 'கொன்றைவனமே நீ தவம்புரிய பூஜை செய்ய ஏற்ற இடம்' என்று தெரிவிக்க, காசியம் பதியில் இருந்து வில்வபத்ரம் (இன்றும்-இங்கே காசிவில்வம் என்று அழைக்கப்படுகிறது). கொணர்ந்து பூஜை செய்து, தன் கோர நிலையை விடுத்து, யோக நிலையில் அமர்ந்த யோக பைரவராக அருளாட்சி செய்கிறார்.

கௌரிக்காகத் தாண்டவமாடிய, கௌரி தாண்டவ, லெட்சுமி தாண்டவ, பெருமானின் வடபால் சர்வ சித்தி பூமி எனும் இடத்தில் மேற்கு முகமாக தனிச்சந்நிதி கொண்டுள்ளார். பாதம் இரண்டையும் பிணைத்து பெருவிரலால் பூமியில் ஊன்றிய கோலத்தில் இருகாற் குதிரையையும் சகனத்தில் வைத்துக்கொண்டு ஜடாமகுடம், நுதல் விழியில் (நெற்றிக்கண்) அக்னியை ஒடுக்கி, காதுகளில் சுருள் தோடும் உத்பலமும் உடையவராய் வக்கிர தந்தங்களும், புன்னகை ஒளிர்கின்ற முகமும் கொண்டு, வலக்கரத்தில் இடியை ஏந்தி இடக்கரத்தை வாம தொடையில் வைத்துக் கொண்டு, சுழுமனை வழியாக (கால்) அக்னியை எழுப்பி யோகநிலையில் வீற்றிருந்தருளிச் செய்யும், இந்தக் கோலமுடைய யோக பைரவரை உலகில் வேறு எங்கும் காணமுடியாது என்பதை அறுதியிட்டுக் கூறலாம். இதுதான் இத்தலத்திலே உள்ள மிக மிக சிறப்பான அம்சமாகும். மேலும், ஸ்ரீ யோக பைரவருக்கு எதிரே மூன்றாம் பிரகாரத்தில் உள்ள பைரவ எந்திரம் உடைய மேருபீடம் வேறு எங்கும் இல்லாதது. இவை இங்கு மட்டுமே காணக்கூடிய சிறப்பம்சம். மதுரைப் பகுதியில் இருந்து வருகிறேன் என்று காஞ்சி பரமாச்சாரியார் ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி சுவாமிகளிடம் தெரிவித்தால் திருப்புத்தூரில் பைரவர் மேருவை தரிசித்தாயா என்று கேட்பாராம்.

இந்த யோக வைரபரில் இருந்து தான் அஷ்ட பைரவர்களான அசிதாங்க பைரவர், உருபைரர், சண்ட பைரவர், குரோதன பைரவர், உன் மத்த பைரவர், கபால பைரவர், பீனா பைரவர், சம்ஹார பைரவர்கள் தோன்றி இருக்க வேண்டும் என்ற கருத்து நிலவுகிறது. இவரே ஆதி பைரவர் என்பதால் எந்த செயலும் சாந்தி (அமைதி) நிலையில் உருக்கொள்ளும் போதே நோக்கம் நிறைவுபெறும் என்பது உண்மை. ஆதிமுலத்தை அணுகி அருள் பெறுவோம்.

**சுவாமி பெயருக்கு அர்ச்சனை செய்யலாமா ?**

சிலர் கோயிலுக்கு வந்தால் தங்கள் பெயர், நட்சத்திரம், ராசி, கோத்திரம் சொல்லி அர்ச்சனை செய்கின்றனர்.

இவை தெரியாத சிலர், சுவாமி பெயருக்குச் செய்யுங்கள் என்கின்றனர். இதில் எது சரியான முறை ?

எந்தச் செயலைத் தொடங்கினாலும், இறைவன் திருவருளை முன்னிட்டு இன்ன நன்மைக்காக, இன்னாருடைய விருப்பத்தின் பொருட்டு, இதைத் தொடங்குகிறேன் என்று இறைவனிடம் விண்ணப்பிப்பதே அர்ச்சனையின் நோக்கம்.

இதையே சங்கற்பம் செய்துகொள்ளுதல் என்கிறார்கள்.

ஆகவே, நமது பெயருக்குத்தான் அருச்சனை செய்துகொள்ளவேண்டும். இதுதான் முறை என்கிறார்கள் பெரியோர்கள்.



# மந்திரங்கள் என்பவை யாவை?

*- அ.ச.ஞா*

மந்திரங்கள் என்று சொல்லப்படுபவை ஒலிக் கூட்டங்களாகும். ஒலிக் கூட்டங்கள் எப்படி மந்திரங்கள் என்ற சிறப்பைப் பெறுகின்றன என்பதைச் சிந்திக்க வேண்டும். எடுத்துக்காட்டாக 'நமச்சிவாய' என்று ஒரு சக்திவாய்ந்த மந்திரத்தை எடுத்துக்கொள்வோமேயானால், அந்தச் சொல்லின் பொருளைச் சிந்திக்க வேண்டும். 'சிவனை வணங்குகிறேன்' என்ற பொருளையுடையது நமச்சிவாய என்ற சொல். சாதாரண குழந்தைகூடப் புரிந்துகொள்ளக்கூடிய 'சிவனை வணங்குகிறேன்' என்ற இரண்டு சொற்கள் எப்படி சக்தி வாய்ந்த மந்திரமாக மாறின என்பதை ஆழ்ந்து பார்க்க வேண்டும்.

நம்மைப் போன்ற மக்கள் பேசும்போது, நாம் பேசுகின்ற மொழி – குறைமொழி என்று சொல்லப்பெறும். ஏன் குறை மொழி என்று சொல்லப்பெறுகின்றது என்றால் நம்முடைய மனத்திலுள்ள கருத்தை முழுவதுமாக வெளியிடுகின்ற ஆற்றல் பெற்ற சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பேச நம்மால் முடிவதில்லை. மிகத் துன்பப்பட்டு நல்ல சொற்களை எடுத்துக் கோத்து நம்முடைய கருத்தைத் தெரிவித்தால்கூட எதிரே இருக்கின்றவர்கள் அவற்றைப் புரிந்து கொள்கின்றனரா என்பது ஆராய்ச்சிக்குரியது. பல சமயங்களில் நாம் சொல்லிய கருத்தை எதிரே இருந்து கேட்பவர்கள் புரிந்துகொள்வதாகத் தெரிவதில்லை. இன்னும் சில சமயங்களில் நாமே கூடப் பேசி முடித்தபிறகு, 'இதை இப்படிச் சொல்லியிருக்கலாமே; அதை அப்படிச் சொல்லியிருக்கலாமே' என்று நினைக்கின்றோம். இதற்குக் காரணம் என்னவென்றால், நாம் பயன்படுத்திய சொற்கள் முழுவதுமாக ஆற்றல் பெற்ற சொற்களாக இல்லாமல்–நம்முடைய கருத்தை வெளியிடுகின்ற சக்திவாய்ந்தவையாக இல்லாமல் குறைமொழியாக இருப்பதுதான். இப்படிக் குறைமொழியாக இருக்கின்ற சொற்களைப் பேசுகின்ற நாம் மந்திரங்களைக் காண்பது இயலாத செயலாம்.

ஆயினும் நம்முடைய முன்னோர்கள், பெரியவர்கள், ஞானிகள், தபசிகள், ரிஷிகள் முதலானவர்கள் நிறைமொழி பேசுபவர்களாக இருந்தார்கள். தொல்காப்பியனார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மந்திரங்களைப் பற்றி ஆராய்ந்து மிகச்சிறந்த கருத்து ஒன்றை வெளியிடுகின்றார். 'நிறை மொழி மாந்தர்' என்று இந்தப் பெரியவர்களுக்குப் பெயர் வைக்கிறார்.

நிறைமொழி மாந்தர்கள் என்றால் என்ன? நாம் பேசுகின்ற குறைமொழிகளையே எடுத்துக்கொண்டு, அந்தக் குறை மொழிகளை நிறை மொழிகளாக மாற்றுகின்ற பேராற்றல் வாய்ந்தவர்கள் அவர்கள். அப்படியானால் இந்த ஆற்றல் எங்கே இருக்கிறது? இந்தச் சொற்களிலா? இல்லை.

சாதாரண சொற்களைத்தான் அவர்கள் எடுத்துக்கொள்கிறார்கள். ஆனால் அந்தச் சொற்களை எடுத்துக்கொண்டு அவர்கள் அவற்றைத் தம்முடைய ஆற்றல் காரணமாகத் தம்முடைய சக்தி முழுவதையும் அந்தச் சொற்களில் ஏற்றி, 'இவை மந்திரங்களாக ஆகக் கடவன' என்று ஆணையிடுவதன் மூலம் அவற்றை மந்திரங்களாக மாற்றுகிறார்கள். இதனைத்தான் தொல்காப்பியனார்.

> "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்று சொல்கிறார். இந்த ஆணையிடுதல் என்பது, குறை மொழியாக உள்ள எழுத்துக் கோவைகளைச், சொற்கோவைகளைச் சக்திபெற்ற மந்திரங்களாக மாற்றுவதுதான் ஆணையிடுவதாகும்.

அப்படியானால் இந்தச் சொற்கள் எப்படி இந்த ஆற்றலைப் பெறுகின்றன என்று சிந்திக்க வேண்டும். எல்லாச் சொற்களுக்கும் எழுத்துக்களுக்கும் Frequencies என்று சொல்லப்படுகிற அதிர்வுகள் உண்டு. இந்த அதிர்வுகள் ஒலி சக்திகளாகும். இந்த அதிர்வுகளை எல்லா எழுத்துகளும், சொற்களும் பெற்றிருந்தாலும் எந்த அதிர்வுகளோடு எந்த

அதிர்வுகளைச் சேர்த்தால் அவை பயன்படும் என்பதை ஆராய்ந்து அவர்கள் அறிந்திருந்தார்கள். அப்படி அறிந்திருந்த காரணத்தினாலேதான். இந்தப் பல்வேறு எழுத்துகளை ஒன்று சேர்ப்பதன் மூலம் பல்வேறு அதிர்வுகளை ஒன்று சேர்த்துப் புதியதொரு ஆற்றலை அவை பெறுமாறு செய்கின்றார்கள். அப்படி ஆற்றலைப் பெறுமாறு அவற்றைச் செய்துவிட்ட பிறகு அவை மந்திரங்களாக மாறிவிடுகின்றன.

பல சமயங்களில் பீஜ அக்ஷரங்கள் என்று சொல்லப்படுகின்ற மந்திரங்களுக்குப் பொருளே இருப்பதில்லை. ஐம், ஹ்ரீம், க்லீம் என்ற பீஜ அக்ஷரங்கள் எவ்விதமான பொருளையும் தருவதில்லை. பொருளில்லாமல் சொற்கள் உண்டா என்று சிந்திக்க வேண்டும். பொருளில்லாமலும் சொற்கள் இருக்கலாம். ஆனால் அவை குறைமொழி மாந்தர்களால் பேசப்படும்போது பொருளற்ற ஒலிக் கூட்டங்களாக மாறிவிடுகின்றன. ஆனால் நிறைமொழி மாந்தர்கள் வேண்டுமென்றே குறிப்பிட்ட அதிர்வுகளை ஒன்று சேர்க்க வேண்டுமென்று நினைக்கும்பொழுது அந்த அதிர்வுகளையுடைய எழுத்துக்களை ஒன்று சேர்க்கின்றார்கள். அப்படி ஒன்று சேர்த்த பிறகு – ஹ்ரீம் என்ற மந்திரத்தை உண்டாக்கிவிட்டபிறகு அது அன்னையின் பூரண சக்தியைப் பெற்ற மந்திரமாக இருக்கிறதே தவிர அதற்குமேல் பொருள் ஒன்றும் அதற்குத் தேவையில்லை.

இந்த ஆற்றலைப் பெற்ற அந்த மந்திரங்களை ஓயாமல் திருப்பித் திருப்பிச் சொல்கின்றவர்கள், ஜபிக்கின்றவர்கள் இந்த ஆற்றலைத் தம்முள் பெற்றுவிடுகின்றார்கள். ஆகவே பேரருட் பெரியோர்களாகிய நம் முன்னோர்கள் தம்முடைய பேராற்றலை இந்த ஒலிக்கூட்டங்களில் செலுத்திச் செல்லுமாறு ஆணையிட்டுப் பிறகு அவற்றை நமக்குத் தந்திருக்கிறார்கள். அவற்றைத்தான் 'மந்திரங்கள்' என்று சொல்லுகிறோம்.

இந்த மந்திரங்களைத் தொல்காப்பியனார் 'மறைமொழி' என்று சொல்லுகிறார். ஏன் மறைமொழி என்று சொல்ல வேண்டும்? சாதாரணமாகப் பார்க்கும்போது அவற்றிலுள்ள ஆற்றல் நமக்குத் தெரிவதேயில்லை. ஹ்ரீம் என்ற சொல்லை யாரும் ஒலிக்கலாம். ஆனால் அதன் உள்ளே இருக்கின்ற ஆற்றலை நாம் புரிந்துகொள்வதேயில்லை. ஆகையினால்தான் அது மறைமொழி. அப்படியானால் மறைமொழி என்றால் அதனைப் புரிந்துகொள்ளக்கூடிய தகுதியை நாம் பெறவேண்டும். புரிந்துகொள்ளக் கூடிய சக்தியைப் பெற வேண்டும். அப்பொழுது அந்த மந்திரங்கள் பேராற்றலைப் பெற்றவையாக நமக்குத் தெரியும். இப்படிப்பட்ட சொற்களை ஒன்று சேர்ப்பதன்மூலம் மந்திரங்களைக் காண்கிறார்கள். இப்படிக் கண்ட மந்திரங்களை அவர்கள் சொற்கோவைகளாக, அதிர்வுகளின் கோவைகளாக வெளிப்படுத்தி எங்கே எங்கே எப்போது எப்போது வேண்டற்பாலதோ அங்கே அங்கே அவ்வப்போது பயன்படுத்திக்கொள்ளுமாறு நமக்கு வழங்கி இருக்கிறார்கள்.

திருக்கோயில்களின் அடிப்படைத் தத்துவமும் இதுதான், கோயில்கள் அடிப்படையில் பார்ப்போமே யானால் கருங்கல்லினாலே செய்யப்பெற்ற விக்கிரகங்கள் கருவறையில் பதிக்கப்பெறுகின்றன. அவை சாதாரண கல்லினாலே செய்யப்பட்டதுதான் என்பதை மறந்துவிடக் வடாது. ஆகவே அந்த விக்கிரகங்களைப் பதிப்பதற்கு முன்னால் அவ்வவற்றுக்குரிய சக்கரங்கள் எழுதி அவற்றின் அடியிலே வைத்து மேலே விக்கிரகங்களைப் பதித்துவிடுகிறார்கள்.

நம் முன்னோர்கள் ஒவ்வொரு மூர்த்திக்கும் ஒவ்வொரு சக்கரத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது செப்புத் தகடுதான். அதில் அந்த அந்த மூர்த்திக்குரிய கோணங்களை எழுதி, கோணங்களுக்குள் அவ்வவற்றுக்குரிய சில எழுத்துகளை எழுதியபின் அவை சக்திவாய்ந்த சக்கரங்களாக மாறிவிடுகின்றன. இந்தச் சக்கரங்களை அடியில் வைத்து மேலே விக்கிரகங்கள் பதிக்கப்படும்போது அந்த விக்கிரகங்கள் சக்தி பெறுகின்றன. அந்தச் சக்தி முழுமைபெற்றுவிட்டு விளங்குவதற்காகத்தான்

குடமுழுக்கு – கும்பாபிஷேகம் என்று செய்கிறார்கள். குடமுழுக்கு செய்யும் போது வேள்விச்சாலை அமைத்து, அதில் ஒவ்வொரு மூர்த்திக்கும் ஒரு கடம் அதாவது குடம் வைத்துப் பூசிக்கப்படுகிறது. கடம் என்பது சாதாரணமான உலோகத்திலே செய்யப்பட்ட பாத்திரம்தான். அதன் புறத்தே முப்புரி நூலினால் சுற்றி, உள்ளே நீரை நிரப்பி மேலே மாவிலை, தருப்பை, தேங்காய் வைத்து மூர்த்தியை ஆவாஹனம் செய்து ஜபம் செய்வார்கள்.

குறிப்பிட்ட மூர்த்திக்குரிய மந்திரங்களை, ஆசாரியராக இருக்கின்றவர் எதிரே இருந்து ஐந்து நாள் அல்லது ஏழு நாள் அல்லது மூன்று நாள் என்ற முறையில் குறிப்பிட்ட ஆவர்த்திகள் மந்திர ஜபம் செய்வார்கள். இதனால் கடத்திலுள்ள நீர் சக்தி வாய்ந்து அந்த மூர்த்திக்குரிய எல்லா ஆற்றலையும் பெற்றதாக ஆகிவிடுகிறது. அந்தக் கடத்திலுள்ள நீரைக் குடமுழுக்கு அன்று கர்ப்ப கிருஹத்திலுள்ள மூலமூர்த்திக்கும், அந்த மூலமூர்த்தி அமர்ந்திருக்கும் கோபுர கலசத்திற்கும் அபிஷேகம் செய்வார்கள். அதன்பிறகு அந்த மூர்த்தியை யார் சென்று வணங்கினாலும் தன் அருள் சக்தியை அவர்களுக்கும் வழங்குகின்ற ஆற்றலை அந்த விக்கிரகம் பெற்றுவிடுகிறது.

இதுபோல இருக்கின்ற ஒன்றை நாம் புரிந்துகொள்ள வேண்டுமேயானால் – கார்களிலுள்ள பாட்டரி என்று சொல்கிறார்களே அவற்றைக் கொஞ்சம் மனத்தில் வாங்கிக்கொண்டு பார்க்க வேண்டும். உலோகத் தகடுகள், ஆசிட், தண்ணீர் இரண்டும் கலந்த கலவையிலே அமுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அப்படி அமுக்கி வைத்தவிட்டால் ஆற்றலைப் பெற்றுவிடுகிறதா? நிச்சயமாகவில்லை. இந்தப் பாட்டரியை டெட் பாட்டரியாக இருக்கிறது. அதை மின்சாரத்தில் வைத்து 48 மணிநேரம் மின்சாரத்தை அதில் ஏற்றிய பிறகு இந்த பாட்டரி முழு சக்தி வாய்ந்ததாக ஆகிவிடுகிறது. பிறகு அதன்மீது கையை வைத்தால் நிச்சயமாக மின்சாரம் பாய்ந்து ஊறு விளைவிக்கும்.

அதுபோலத்தான் கருங்கல்லினாலான சாதாரன விக்கிரகங்களாக இருந்த உருவங்கள், குடமுழுக்கு செய்யப்படும்போது, கடங்களில் இருந்த சக்தி ஏறிய தண்ணீரை அவற்றின் மீது ஊற்றிய பிறகே முழு சக்திவாய்ந்த தெய்வப் படிமங்களாக மாறிவிடுகின்றன.

இன்னும் சில கோயில்களைப் பொறுத்தமட்டில் இந்த ஆற்றல் நாளுக்குநாள் வளரவேண்டுமென்ற பேரருள் உள்ளத்தாலே புலிப்பாணி, போகர் போன்ற சித்தர்கள் அந்தத் திருக்கோயில்களிலேயே இருந்து தங்களுடைய ஆற்றலை அந்த விக்கிரகங்களுக்கு ஏற்றிக்கொண்டே இருக்கிறார்கள். அப்படி இருக்கின்ற காரணத்தினால்தான் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாயினும், கோடிக்கணக்கான அடியார்கள் சென்று வழிப்பட்டாலும், அந்த ஆற்றல் குறையாமல் இருந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆகக் குடமுழுக்கு செய்வது என்பது சாதாரணமாகக் கருங்கல்லிலே செய்யப்பட்ட படிமத்திற்கு ஆற்றலை வழங்கி அந்த ஆற்றலை மக்களுக்குப் பயன்படுமாறு செய்வதுதான் அடிப்படை நோக்கமாகும்.

கோபுரங்கள் இருக்கின்றன. கோபுரத்தின்மீது கலசங்கள் இருக்கின்றன. இந்தக் கலசங்களுக் குள்ளும் பலவகையான பொருள்களையிட்டு நிரப்பி, கலசங்களைக் கோபுரத்தின் மீது பதித்து விடுகிறார்கள். இந்தக் கலசங்களோடு கூடிய கோபுரம் ஸ்தூல வடிவமாக இறைவனைக் குறிக்கிற ஒன்று என்று பெரியவர்கள் சொல்வார்கள்.

ஆகப் பருப்பொருள் வடிவமாக இருக்கிற கோபுரங்களுக்கும், உள்ளே நுட்ப வடிவமாக இருக்கின்ற விக்கிரகங்களுக்கும் ஒருசேர ஆற்றலைத் தருவதுதான் குடமுழுக்கு விழாவின் அடிப்படை நோக்கமாகும்.

இந்தக் கோயில்களிலுள்ள படிமங்கள் நாளாவட்டத்தில் தங்களுடைய ஆற்றலை இழக்க முடியுமா என்றால் ஓரளவு இழக்கவும் கூடும். அது எப்படி என்றால் இந்தக் கோயிலுக்கு வருகிற ஆயிரக்கணக்கானவர்கள், பதினாயிரக் கணக்கானவர்கள், எத்தனையோ வகையான மாறுபாடுகள், கருத்து வேறுபாடுகள், எண்ணப் போராட்டங்கள் முதலிய பாவங்கள் நிறைந்து

உள்ளே செல்வதால் நாளாவட்டத்தில் விக்கிரகங்களின் ஆற்றல் ஓரளவு குறையவும் கூடும். அதற்காகத்தான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குடமுழுக்கு செய்ய வேண்டுமென்று சொல்கிறார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குடமுழுக்கு செய்வது என்பது கட்புலப்பரு, நுட்ப வடிவங்களுக்கு ஆற்றலை மறுபடியும் வழங்கவேண்டும் என்பதற்காகத்தான் என அறிந்துகொள்ளல் வேண்டும். ஆக திருக்கோயில்கள் குடமுழுக்கு அன்று முழு ஆற்றலைப் பெற்றுவிடுகின்றன. பருப்பொருளாக இருக்கிற கோபுரமும் நுட்பமாக இருக்கிற விக்கிரகங்களும் ஆற்றலைப் பெறுவதற்குரிய நாள்தான் குடமுழுக்கு நாளாகும். பலமுறைகள் ஜபிக்கப்பட்ட மந்திரங்கள் தங்கள் ஆற்றலை நீரின்மூலம் விக்கிரகங்களுக்கு ஏற்றுகின்றன என அறிந்துகொள்ள வேண்டும்.

நிறைமொழி மாந்தர்களால் உண்டுபண்ணப் பட்ட மந்திரங்களைத் தனியே வீட்டில் இருந்து ஜபித்தாலும், கோயில்களுக்குச் சென்று ஜபித்தாலும் அதன் ஆற்றலைப் பெறமுடியும். சாதாரணமாக மக்கள் இந்த மந்திரங்களை ஒருமுகப்பட்ட மனத்துடன் ஜபிக்க வேண்டுமென்று சொல்லுவார்கள். இது எல்லோருக்கும் இயலாத காரியம். ஒருமுகப்பட்ட மனத்துடன் ஜபிக்கும்போது அவை நிறைந்த ஆற்றலைத் தருகின்றன. பல சமயங்களில் ஒருமுகப்பட்ட மனத்துடன் ஜபிக்காவிட்டாலும் அவை பலன் தராமல் போவதில்லை. காரணம் ஒலி அதிர்வுகள் மந்திரங்களை ஜபிக்கிறபோது உண்டாவதால். வேண்டினாலும், வேண்டாவிட்டாலும்அந்த அதிர்வுகளின் பலன் இருந்தே தீரும்.

மந்திரங்களை ஓயாமல் சொல்வதன் மூலம் இந்த ஒலி அதிர்வுகளினால் ஏற்படுகின்ற பயனைப் பெறுகின்றோம். சில சமயங்களில் மந்திரங்களை முழுவதுமாக ஒலிக்கின்ற நிலைமாறி நம்மையும் அறியாமல் குறை, நிறைகள் ஏற்படக்கூடும். அப்படி எற்பட்டாலும் பலன் குறைவதில்லை என அறிந்துகொள்ள வேண்டும். அறிந்தோ அறியாமலோ மின்சாரத்தில் கைவைத்தால் எப்படி நமக்கு அதிர்ச்சியைத் தருகின்றதோ அதுபோல இந்த மந்திரங்களை அறிந்து கூறினாலும் அறியாமல் கூறினாலும் அந்த ஒலி அதிர்வுகள் நமக்கு ஆற்றலைத் தரத்தான் செய்கின்றன.

செப்புத் தகட்டிலே சக்திவாய்ந்த சக்கரங்களாக அமைவதும், கடத்திலே உள்ள நீரைச் சக்திவாய்ந்ததாக மாற்றுவதும் ஓயாமல் தன்னை ஜபிக்கின்றவர்களுக்குத் தன் முழு சக்தியைத் தருவதும் ஆக விளங்குவது மந்திரங்களாகும்.

இவை நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும் மறை மொழியாம் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

இங்குக் கூறப்பெற்றுள்ள கருத்துகள் சைவம் வைணவம் ஆகிய இரண்டனுக்கு மட்டுமே உரியவை போலும் என்று எவரும் நினைத்துவிட வேண்டா. இக்கட்டுரையின் சான்றாகக் காட்டியன சைவத்திற்குரியன என்பது தவிர, இக் கருத்துகள் அனைத்தும் மந்திரங்களைப் போற்றும் எல்லாச் சமயங்கட்கும் உரியன.

கடவுட் கொள்கை இல்லாத பௌத்த சமண சமயங்கட்கும் மந்திரங்கள் உள்ளன. ஆதலால் இக்கட்டுரையில் கூறப்பெறுவன எச்சமயங்கட்கும் பொருந்துவனவாகும்.



## மந்திரங்கள்

ஆலயங்களில் இறை உருவங்களுக்கு அர்ச்சனை, அபிஷேக ஆராதனைகள் செய்யும் போதும், சில சடங்குகள், வேள்விகள் செய்யும் போதும், குருமார்கள் நமக்குப் புரியாத மொழியில் ஏதோ சில சொற்களையும் வாக்கியங்களையும், ஏற்ற இறக்கங்களோடு உச்சரிக்கின்றனரல்லவா? அவைகளைத்தான் மந்திரங்கள் என்கிறார்கள்.

'மந்திரம்' என்றால் 'உச்சரிப்பவனையும், கேட்பவனையும் ரட்சிப்பது' என்பது பொருள்.

மந்திரங்களைச் சரியான சுருதியில் / சந்தங்களில் உச்சரிக்கும்போது தெய்வீகமான சில வகை ஒலி அலைகள் பரவுகின்றன. அந்த அதிர்வுகள் மக்களுக்கும் பொதுவாக அனைத்து ஜீவராசிகளுக்கம் சில பல நன்மைகளைச் செய்யக்கூடிய வல்லமை படைத்தவை என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

இறைவனே நாதவடிவானவன் என்றும் "ஓசை ஒலி எல்லாம் ஆனாய் நீயே" என்றும் போற்றப்படுகிறான் அல்லவா?

**இன்றைய குருமார் மந்திர உச்சரிப்பின் தரம் எவ்வாறு உள்ளது?**

மந்திரங்கள் தேவநாகரி அல்லது ஆதி கிரந்த லிபியில் உள்ளன. ஆனால் தற்கால குருமார்கள் மொழி தெரியாத காரணத்தினால் அவைகளைத் தமிழில் எழுதி வைத்துக்கொண்டு, வாய்ப்பாடுபோல மனனம் செய்து ஒப்புவிக்கின்றனர்.

மொழியும் தெரியாது, பொருளும் புரியாது, தப்பும் தவறுமாக, கீறல் விழுந்த இசைத் தட்டு போல திரும்பத் திரும்பச் சொல்லும் நம் குருமார்களின் மந்திர உச்சரிப்பில் உயிரோட்டமோ சுருதிலயமோ இருப்பது இல்லை.

சடங்குகளும் முறை தவறி, இயந்திர கதியில்தான் நடத்தப்படுகின்றன. அதனால் பக்தர்களுக்கும் மனம் ஒன்றுவது இல்லை.

கர்நாடக சங்கீதம், சரியான ராகத்தில் தாளக் கட்டுடன் இருந்தால்தானே ரசிக்க முடிகிறது?

சில குறிப்பிட்ட ராகங்களை இசைத்தால் பயிர்கள் நன்கு செழித்து வளர்கின்றன என்கிறார்களே, அப்படியானால், அபஸ்வரங்கள் பயிர்களை அழித்துவிடும் என்பதும் சரிதானே?

அதே போல் 'ருத்திரன் எனது தீமைகளை எல்லாம் அழித்துவிடட்டும்' என்ற ஒரு மந்திரத்தை – மொழி தெரியாத, பொருள் விளங்காத ஒருவர், 'ருத்திரன் எனது திறமைகளை எல்லாம் அழித்துவிடட்டும்' என்று மந்திர ஜபம் செய்தால் விபரீதமான பலன் அல்லவா கிட்டும்!

**மந்திரங்களைப் பற்றிய தொல்காப்பிய சூத்திரத்துக்கு விளக்கம்**

நிறை மொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தாமே மந்திரம் என்ப

தொல்காப்பியம்

தொல்காப்பியர், "மந்திரம் என்ப(து) நிறைமொழி மாந்தர் ஆணையில் தாமே கிளந்த மறைமொழி" என்கிறார்.

'நிறைமொழி மாந்தர்' அதாவது (நிறை நீர் குடம் என்பது போல) மொழி இயலில் முழுமை பெற்றவர் சங்கல்பத்தால் மந்திரம் என்ற மறைமொழி தாமே கிளர்ந்தன.

மந்திரங்கள் உருவாக்கப்பட்டவை அல்ல. தெய்வ சங்கல்பத்தால் ஞானிகளின் சித்தத்தில் தாமே எழுந்த இசையே மந்திரம் என்பதே பொருத்தமுடையது.

இதே கருத்தில்தான் வேத மந்திரங்களை "அபௌருஷேயம்" – மனிதரால் உருவாக்கப் பட்டவை அல்ல – என்று கூறப்படுகிறது.

நாம் மிக மகிழ்ச்சியாக இருக்கும்போது பாட்டு தானே வருகிறது. இசை ஞானம் இல்லாதவர் பாடல்களில் நயம் இருக்காது என்றாலும் இசை வல்லுனர்கள் மனதிலிருந்து, வாய்வழியே,

வெளிப்படும் எல்லா இசையிலும் நல்ல ராகமும் பாவமும் இருக்கும்.

அதிலும் சிறப்பாக நிறைமொழி மாந்தர் உள்ளத்திலிருந்து கிளர்ந்த இசையில் சொற்சுவையும், பொருட் சுவையும், தெய்வீக ஞானமும் மிளிர்ந்தன. அவையே பின்னர் மந்திரங்களாக மதிக்கப்பட்டன.

இறை இன்பத்திலிருந்து கிளர்ந்த அதே தெய்வீக இசையை மீண்டும் கிளர்த்தினால் இறை இன்பம் கிட்டும் என்று மந்திரங்களை மீண்டும் மீண்டும் உச்சரிக்கின்றோம்.

ஆகவேதான் மந்திரங்களில் உள்ள எழுத்துக்களைவிட சந்தத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது.

**மந்திரங்கள் ரகசியம் என்பது ஏன்?**

மந்திரங்கள் சிலவற்றை ரகசியம் என்று சொல்லி இருப்பது எல்லோரும் தெரிந்துகொண்டு பயன் பெற்றுவிடக்கூடாது என்பதால் அல்ல. அந்த சங்கேத மொழியின் உண்மைப் பொருள் தெரிந்தவர்களுக்குத்தான் பயன்படுமே தவிர சாதாரண மானவர்களுக்கு முயற்சி பூரண பலனளிக்காது என்பதுதான் கருத்து. உதாரணமாக ஐந்தெழுத்து மந்திரம் எனப்படும் 'சிவாய நம' எல்லோருக்கும் தெரிந்ததுதான். இதில் மறைவு ஏதும் இல்லை.

ஆனால் சாதாரண மனிதன் ஒருவன் இந்த மந்திரத்தை எத்தனை முறை ஜபம் செய்தாலும் முழுமையான பலன் கிட்டாது. ஏனெனில், இதில் உள்ளவை வெறும் எழுத்துக்கள்தானே தவிர, அவைகளில் சக்தி இல்லை, சக்தி ஊட்டப் பெறவில்லை.

ஆனால் இந்த மந்திரத்தை உண்மை குரு ஒருவரால் உபதேசிக்கப்பட்டு, ஒருவர் ஜபம் செய்வாரே யாகில் பூரண பலன் கிட்டும். அந்த குருவுக்கு அந்த சக்தி எப்படி வந்ததென்றால், அவர் குரு, சக்தியை ஊட்டி, அந்த மந்திரத்தை அவரிடம் கொடுத்துள்ளார்.

இப்படியே போனால், ஆதி குருவான இறைவன் தக்ஷிணாமூர்த்தி, ஞான முனிவர்களான நால்வருக்கு நேரடியாக உபதேசம் செய்து சொற்களுக்கு வல்லமை அளிக்கும் சக்தியைக் கொடுத்து இருக்கிறார்.

வேத மந்திரங்கள்கூட, முதன்முதலில் குரு சிஷ்ய உபதேச முறையில் இப்படித்தான் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கின்றன.

இதுதான் மந்திரங்கள் ரகசியம் என்பதன் கருத்து. பிழைப்புக்காக சிலவற்றை ரகசியம் என்பது வேறு விஷயம்.



**காயத்திரி மந்திரம் :**

ரிக் வேதத்தில் தான் மிகவும் சிறப்பு மிக்க, உயரிய சக்தி படைத்த 'காயத்திரி திருமந்திரம்' உள்ளது. இது தலைசிறந்த கடவுளான சூரியனை நோக்கி உச்சாடனம் செய்யப்படும் திருமந்திரம் ஆகும்.

காயத்ரி மந்திரம்
"ஓம் பூர்புவஸ்ஸுவ
தத் ஸவிதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோந; ப்ரசோதயாத்
ஓம், தத் ஸவீது; வரேண்யம்
பர்க; தேவஸ்ய தீமஹி
திய; ய; ந; ப்ரசோதயாத்"

"யார்நம் அறிவைத் தூண்டுகிறாரோ
அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியைத்
தியானிப்போமாக!"

"We bow to the divinine radiance. May that divinine radiance illuminate our minds"



# காயத்திரி மந்திரம்

– இராமநாத குருக்கள்

ஆதிகாலம் தொட்டு இறை வழிபாட்டில் முக்கியமாக வழிபடும் தெய்வத்தின் குணச்சிறப்புகளை வர்ணித்தும், அதன் ரூப பேதங்களை தெளிவுபடுத்தி அந்த தெய்வத்திற்கும் நமக்கும் உள்ள தொடர்புகளை அதற்குரிய அக்ஷரங்களைக் கொண்டு ஒலித்து சப்த மயமான அலைவரிசைகள் மூல்யம் ஆகர்ஷிக்கப்பட்டு ஐக்கியப்படுத்தி அருள்பாலிக்கச் செய்வதே மந்திரமாகும். இது வெறும் பிரார்த்தனை மட்டும் உடையது அல்ல. சில மந்திரங்களின் பொருளைக் காட்டிலும் அந்த சப்தத்திற்கே மஹிமை உண்டு. நாம் கூட அன்றாடம் செய்கின்ற அலுவல்களில் சப்தத்தினால் நமது உள்ளக் குறிப்பை, விருப்பு, வெறுப்பு, விளித்தல், மகிழ்தல், அளித்தல், மறுத்தல் என்பவற்றிற்கு உபயோகப் படுத்துகிறோம் அல்லவா? நான்கு வேதங்களிலும் புண்ய கர்மாக்களுக்கு உண்டான மார்க்கமும், கர்மாக்களும், தோத்திரங்களும் சொல்லப்படுகிறது. அதன் சாரமான உபநிடதங்களில் நாம் செய்ய வேண்டியவற்றையும் வரையறுத்து கட்டளை இடுகிறது. ஆகம சாத்திரங்களில் விதிமுறைகள், வழிகள் பிரித்தும் சொல்லப்படுகிறது. அனைத்து மந்திர சாஸ்திரங்களிலும் மிகவும் உத்கிருஷ்டமாகக் (உயர்வு) கூறி எளிய முறையில் இறைவன் திருவருளை அடைய கூறி உள்ளதே "காயத்திரி மந்திரம்" ஆகும். காயத்திரி மந்திரமானது மூவருணத்தார்க்கும் உரியதுதான். அனைவரும் செய்யக்கூடியது.

காயத்திரியானது எந்த தேவதையைக் குறித்து நாம் செய்கின்றோமோ, அந்தந்த தேவதைகளின் ஜீவ நாடியாய் விளங்கி, அந்த தேவதைக்கு உரிய சிறப்பு ஆக்ஷரங்களினாலே ப்ரீதிகொண்டு உபாசிப்பவர் ( சொல்பவர் – வழிபடுவோர்) உள்ளத்துக்கும் தொடர்புகொண்டு ஆகர்ஷிக்கப் படுகின்றது என்பர். 'மந்திராணாம் சிரேஷ்டம் காயத்திரீ' என்று கூறப்படுவதிலிருந்து மந்திரங்களில் தலைமையானது எனத் தெரிகிறது. காயத்தை சுத்திகரிக்க கூடியது என்றும், மூன்று சக்திகளில் வழிபாடு உடையது என்றும், காலத்தில் செய்யக் கூடியது என்றும், சொல்லப்படுகிறது. காம்யார்த்தமான விருப்பங்களை சுலபமாக அடையவே அனைத்து தேவதைகளுக்கும், தனித்தனி காயத்திரி உள்ளது. சிற்சில மாறுதல்கள் இருந்தாலும் சில முக்கிய பதங்கள் அனைத்திலும் இணைந்து இருப்பது குறிப்பிடத்தக்கது. 24 அக்ஷரங்கள் கொண்டு சொல்லப்படுகிற பிரம்ம காயத்திரி மிகவும் சிரேஷ்டமானது. வால்மீகி முனிவர் செய்த இராமாயணம் 24000 சுலோகங்களைக் கொண்டது. காயத்திரி மந்திரத்தின் ஒவ்வொரு ஆதி எழுத்தையும் ஒவ்வொரு ஆயிரம் சுலோகங்களுக்குப் பின், ஆதியாக வைத்து துவக்கி எழுதியிருப்பதும் மிகவும் முக்கியம் என்பது புலனாகிறது.

அன்னையைத்தான் காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி என்று மூன்று தேவியாக முறைப்படி கூறப்படுகிறது.

'மந்திரங்கள் என்று கூறும் காயத்திரி அவசியமானதுதானா?'

நாம் உட்கொள்ளும் காற்று பிராணவாயு எனப்படும். ஆன்மாவாகிய ஜீவன் நிலைத்து நிற்க இது முக்கியம். இவை சுத்தமாக இருக்க வேண்டும். இக்காற்றை உள்ளுக்கு இழுத்தல் (பூரகம்) உள்ளே அடைத்தல் (கும்பகம்) வெளியே விடுதல் (ரேசகம்) இவை மூன்றும் சமகால அளவில் முறைப்படி செய்தல் வேண்டும். இதனை பிராணாயாமம் என்பர்.

நாம் சுவாசிக்கும் காற்றை முறைப்படி மந்திர ஒலியோடு இழுத்து மந்திர ஒலியினாலேயே வயிற்றில் நிரப்பி, மந்திர ஒலியோடு வெளியே விடுதல். அப்போது சூழ்நிலையையும் சுத்தமாகிறது. உள்ளுக்கு இழுக்கும் காற்றை அதிக நேரம் உள்ளே நிறுத்தும் பழக்கத்தினாலேயே மூலாதாரம் முதல் பிரம்ம மந்திரம் வரை மந்திரமயமாகவே நிரப்பப்படுகிறது. அதிக நேரம் நிறுத்த பழக்கப் படுத்தியவனுக்கு புற இந்திரியங்களின் தன்னிச்சையான செயல்கள் தடைப்பட்டுவிடுகிறது. அப்போது இம் மந்திரங்களின் ஒலிமட்டுமே கேட்டு 'ஒளி' கிடைக்கிறது. அந்த ஒளியாலேயே பிரம்மத்தைப் பார்க்கமுடிகிறது.

காயத்திரி மந்திரங்களின் ஒவ்வொரு எழுத்துக்களின் (Letters) த்வனிக்கும் (Sound) சப்தத்திற்கும் (Vibration) இந்த சப்த அலை (Vibration) எந்த இடத்தில் (Place of origin) எந்த கரணத்தில் (Action of Organs in Pronouncing) எந்த பிரயத்தினத்தில் (Exertion in pronouncing the sound) எவ்வளவு மாத்திரை கால அளவு (Time) எந்த ஸ்வரத்தில் (Mode of pronouncing) எந்த தேவதைக்கு (Presiding deity) எந்த ஜாதியில் என்கின்ற எல்லாவற்றிற்கும் தேவ இலக்கணம் வரையறுக்கப் பட்டுள்ளது. இந்த சப்தம் மூலாதாரத்திலிருந்து த்வனியாத்மகமாக ஹ்ருதயத்தயைடைந்து பின் கண்டஸ்தானத்தையும் கடந்து ஸ்தூலமாகவே வெளிப்படுகிறது.

நாம் சுவாசிக்கும் காற்றும் சுற்றமும் சுத்தமான சப்த அலைகளாலே நிரப்பப்படுமேயானால் சித்தியானது சீக்கிரம் கிடைக்கும். ஒவ்வொரு குடும்பத்திலும் பலமுறை ஓதி வீகள் பூராவும் இந்த சப்த அலைகள் உள்ளதாக ஆக்கினால் வருகின்ற எல்லா இடையூறுகளும் மறையும். அனைத்து மந்திரங்களை முறைப்படி கற்கவோ தினசரி பாராயணம் செய்யவோ எல்லோராலும் முடியாது என்பதினாலேதான், மந்திரங்களின் உயர்வு என்பதாக காயத்திரியை முறைப்படி பலமுறை ஜபிக்கக் கூறப்படுகிறது.

இறைவனை நாத மயமாய் குறிப்பிட்டு பல்வேறு சக்திக்கும் தொடர்புக்கும் அதிகாரியாய்க் கூறி தொடர்பு ஏற்படுத்தியிருக்கிறது. சப்த அலைகளாய் அல்லது சப்த அலைகளால் அறியக் கூடியது எனக் கூறப்படுகிறது. இன்றைய விஞ்ஞான கண்டு பிடிப்பான தொலைதூர பேச்சைக் கேட்டல் (தூர சிரவணம்) (வானொலி) தொலை தூரத்தில் நடப்பதை பார்த்தல் (தூரதர்ஷன்) எல்லாவற்றிற்கும் மூலசக்தி சப்த அலை அதிர்வுதான் காரணம். சப்த அலையை வாங்கும் திறம் படைத்த கருவி உள்ள இடத்தில் பெற்று, மீண்டும் அந்த ஒலியை கொடுக்கக்கூடிய கருவி பொருத்தப்பட்ட துணைக் கருவி வழியாக நாம் கேட்கவும் பார்க்கவும் முடிகிறது. இதற்கு மிகவும் முக்கியம் சப்த அலை. இவை வரும் பாதையும் சுத்தமாக இருக்க வேண்டும். இப்போது கூட அந்த அலை கிடைக்காமல் தடங்கல் ஏற்பட்டது என்று சொல்லக் கேட்கிறோம். பேய் மழை, புயல் போன்ற இயற்கை உத்பாதங்களால் தடங்கல்படுகிறது. இதனை பல ஆண்டுகளுக்கு முன்பே கண்டு பிடித்து நம் சரீரத்திலேயே இருக்கும் கருவி செய்யும் காரியத்தை செய்யக்கூடிய திறம் படைத்த உறுப்புக்கள் இருக்கிறது என்று கண்டு அதனைக் கொண்டே கேட்டும் பார்த்தும் உள்ளார்கள். இதனை யாவரும் முறைப்படி இயக்கினால் கேட்கலாம் பார்க்கலாம் என்று சொல்லி உள்ளார்கள். நாம் தான் சிந்தித்து ஆராயவில்லை.

இது போன்ற காரியங்களுக்கு தகுதியாக அலைவரிசைகள் அடுக்கடுக்காக இருக்க வேண்டும். பாதை சுத்தமாக்கப்பட வேண்டும் என்பதற்குத் தான், பெரிய ஆலயங்கள் முதல் முக்கிய இடங்களில் அபிஷேக கால மந்திரங்கள், தீபாராதனை காலத்திலும், சுவாமி வீதி உலா வரும்போது வீதியிலும், வீடுகள்தோறும் மந்திரங்கள் ஒலிக்க வேண்டும் என்று கூறியுள்ளார்கள் போலும். சாந்திகள் என்பதாக பல மந்திரங்களை ஆலயத்திலும் வீடுகளிலும் ஓதிவருவதும், உடல் நலக்குறைவு உள்ளவர்கள் இது போன்ற இடங்களுக்குச் செல்ல வேண்டும் என்று கூறி நல்ல புனித அலைவரிசை ஒலிக்கும் இடத்தில் இதன் குறைபாடு தடங்கல் நீங்கும் எனக் கண்டார்கள். ஒரு சிலர் இது போன்ற க்ஷேத்திரங்களுக்குப் போய் மூன்று தினம் முப்பது தினம் தங்கினேன் பூரண குணமாகி உள்ளது என்று சொல்வதையும் கேட்டு உள்ளோம். திருவிழா நடத்தினால் இம்மந்திர ஒலியினால் சுத்தம் செய்யப்படுவதால் கிராமத்துக்கு க்ஷேமம் என நம்பப்படுகிறது.

காயத்திரி மந்திரம் என்பது அனைவருக்கும் உரியது. ஏதோ பிராமண வகுப்பார் மட்டும் செய்வது போல் நினைக்கப்படுகிறது. அவர்களும் செய்வதில்லை. இராமாயணத்தில் இராமர் லக்ஷ்மணர் இருவருக்கும், பசி, தாகம், சோர்வு இல்லாமல் வீரியத்தோடு இருக்க உத்தேசிக்கப்பட்ட "பலா" – "அதிபலா" என்ற இருமந்திரமும் காயத்திரி தொடர்புடையவைகளே. மகாராஜாவாக இருந்தவர், இராஜரிஷி என்ற பட்டம் பெற்று தவ சிரேஷ்டராக விளங்கியதற்கும், ஜமதக்கினி முனிவர் வாழ்ந்த ஆரண்யத்திற்கே வேத புருடன் காவல் காக்கும் திறம் படைத்தமைக்கும், காயத்திரியே காரணமாகும். சத்யவான் உயிரை மீட்டு கொணரவும் சாம்ராஜ்யத்தை மீண்டும் பெற சாவித்திரிதேவிக்கும், முனிவரின் சாபத்திற்கு எதிர் சாபமாக கால கதியையே ஸ்தம்பிக்க வைத்த நளாயினி வாக்கிற்கும், மும்மூர்த்திகளின் சோதனையை திறம்பட அறிந்த அனுசூயா தேவி மற்றும் பதிவிராத தெய்வமாய் விளங்கியவர்களையும் காத்ததும் காயத்திரி மந்திரமேயாகும்.

## சமயச் சடங்குகள்

– முரு.பழ. இரத்தினம் செட்டியார்

### கோயிலில் ஏன் தேங்காய் உடைத்து அர்ச்சனை செய்கிறோம்?

நம் சமயம் ஞானம் பெறுவதையே முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது. ஞானம் என்பது அறிவு; நம் அறிவை எப்பொழுதும் ஆணவ மலம் மறைத்துக்கொண்டிருக்கிறது. ஆணவ மலம் நீங்கினால்தான் அறிவு பிரகாசிக்கும். குடுமி, கண்கள் ஆகியவற்றைத் தேங்காய் உடையதாக இருப்பதால், அறிவு உணர்ச்சிக்கு இருப்பிடமான நம் தலையை அது குறிக்கிறது. தேங்காயைச் சுற்றியுள்ள ஓடு அறிவைச் சூழ்ந்துள்ள ஆணவ மலத்தைக் காட்டுகிறது. ஆணவ மலத்தை நீக்கி, அறிவைப் பிரகாசிக்க செய்யவேண்டும் என இறைவனைக் கேட்பதே தேங்காய் உடைப்பதன் கருத்தாகும். நம் அறிவினாலேயே இறைவனை அடைந்துவிடலாம் எனக் கருதுபவர்கள் உண்டு. நம் அறிவு ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டிருப்பதால் அதன் துணைகொண்டு இறைவனை அறிய முடியாது. அன்பினால் நெக்குருகி வழிபட்டால், இறைவன் ஆணவ மலத்தை நீக்கி நம் அறிவைப் பிரகாசிக்கச் செய்வான். நாமாக நம் அறிவைப் பிரகாசிக்கும்படி செய்ய முடியாது. தேங்காய் உடைப்பதன் வாயிலாக வெளிவரும் நீர், அன்பினால் அறிவுப்பிரகாசம் பெறுவதை உணர்த்துகிறது. ஆணவ மல நீக்கமே தேங்காய் உடைப்பதன் தத்துவமாகும்.

### வெற்றிலை, பாக்கு, பழம் வைத்து ஏன் அர்ச்சனை செய்கிறோம்?

வெற்றிலை நம் உடலைக் குறிக்கும்: தூல உடல், சூக்கும் உடல் இரண்டையும் குறிக்க இரண்டு வெற்றிலை வைப்பது வழக்கம். தூல உடல், சூக்கும உடல், காரண உடல் மூன்றையும் குறிக்க மூன்று வெற்றிலையும் வைக்கலாம். நோயில்லாமல் நம் உடல் ஆரோக்கியமாக இருக்க வேண்டும் என வேண்டுவதே இதன் குறிக்கோளாகும். பாக்கு ' செல்வத்தைக் குறிக்கும். இரண்டு வாழைப் பழங்களும் நாம் செய்யும் நல்வினை, தீவினை இரண்டையும் குறிக்கும். எனவே, ஆரோக்கியம், செல்வம், பாவ–புண்ணிய விடுதலை ஆகிய மூன்றையும் வேண்டியே வெற்றிலை, பாக்கு, பழம் வைத்து அர்ச்சனை செய்கிறோம். இது மாயா மலத்தையும், கன்ம மலத்தையும் நீக்குவதற்கு இறைவன் துணையை நாம் நாடுகிறோம் என்பதை உணர்த்தும். சுருக்கமாகத் தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம் ஆகியவை வைத்து அர்ச்சனை செய்வதன் நோக்கம் அறிவு, ஆரோக்கியம், செல்வம் பாவ–புண்ணிய விடுதலை ஆகிய பயன்களைத் தரவேண்டும் என்பதேயாகும்.

### திருநீறு என் பூசுகிறோம்?

திருநீறு நிலையாமையைக் காட்டுவதாகச் சிலர் கூறுவர்; இது தவறு. நித்தியத்துவத்தைக் காட்டுவதே திருநீறாகும். ஏனெனில் நெருப்பிலிட்டால் எல்லாப் பொருட்களும் அழியும். திருநீறு அழியாது. மூன்று விரல் அளவாகத் திருநீறு இடுவது ஆணவம். கன்மம், மாயை ஆகிய மும்மல நீக்கத்தில் வரும் சிவப்பேற்றையும் பரிபூரண ஞானத்தையும் உணர்த்தும். மனம், மொழி, மெய் மூன்றின் பரிசுத்தத்தையும் விபூதி குறிக்கும். பூசுநீறு போல் உள்ளும் புனிதர்கள் ' என்பது சேக்கிழார் வாக்கு. உத்தாளனமாக விபூதி பூசுவது சிவப்பேற்றையும் தூய்மையையும் காட்டும்.

### குங்குமம், சந்தனம், தீர்த்தம், மலர் ஆகியவை குறிப்பிடும் தத்துவம் என்ன?

குங்குமம் பராசக்தியின் அடையாளம், செந்நிறம் சக்தியின் செயலாற்றலைக் குறிக்கும் இறைவனின் திருவருளாகிய பராசக்தியின் துணை

கொண்டு செயல்புரிகிறோம் என்பதைக் குங்குமம் உணர்த்தும். மங்கலம், செல்வம், நன்மை ஆகியவற்றையும் குங்குமம் குறிக்கும். இதனாலேயே மாங்கல்ய தாராணத்தில் குங்குமம் முக்கிய இடம் பெறுகிறது. சைவர்கள் மாங்கல்யத்தில் விபூதி இட்டே குங்குமம் வைப்பர் விபூதியும் மங்கலப் பொருளாகும். அம்மையின் திருவருளைச் சிறப்பு வகையில் காட்டுவதற்கே குங்குமம் இடுகிறோம்.

சந்தனம் குளிர்ச்சிப் பொருள். சந்தனமும் மலரும் முறையே இறைவன் உலக சுக போகங்களையும் செல்வத்தையும் வழங்குகிறான் என்பதை குறிக்கும். இறைவனின் தண் கருணைக்கும் சந்தனம் அடையாளமாகும்.

தீர்த்தம் இறைவன் நம் வழிபாட்டை ஏற்றுப் புனிதமாகும் வண்ணம் அருள் பாலிக்கிறான் என்பதை உணர்த்தும்.

### அபிஷேகம், அலங்காரம் ஏன் செய்கிறோம்?

ஐந்தொழில் ஆற்றுபவன் இறைவன். பால் தயிர், தேன் முதலியவற்றை அபிஷேகம் செய்வதன் மூலம் நாட்டில் நில வளமும், நீர் வளமும், உணவு தானியங்களும் பசுச் செல்வமும் பெருகுமாறு செய்ய வேண்டும் என இறைவனை அன்பு நீராட்டி வேண்டிக் கொள்கிறோம். அலங்காரம் அவன் படைக்கின்ற பொருட்களைக் காத்து நிலைபெறச் செய்ய வேண்டும் என்பதைக் குறிக்கும். அக்கினி வளர்த்து, ஹோமம் செய்வது எல்லாப் பொருட்களையும் அவனே அழிக்கின்றான் என்பதை உணர்த்தும். சாம்பிராணி, ஊதுபத்தி முதலியன உலக போகங்களில் இறைவன் நம்மை அழுத்துவிக்கும் மறைத்தல் தொழிலைக் குறிக்கும். தீபாராதனை ஞானச் செல்வம் அருளுவதைக் காட்டும். சுருக்கமாக படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் முறையே அபிஷேகம். அலங்காரம் அக்கினிகாரியம், தூபம், தீபம் ஆகியவை உணர்த்துகின்றன எனக்கொள்ளல் வேண்டும்.

### சூடம் ஏற்றித் தீபாராதனை செய்வதன் நோக்கம் என்ன?

சூடம் கரைந்து தீபத்தோடு கலந்து நிற்கும். மீதம் எதுவும் இருக்காது இதுபோலவே, முத்தி நிலையில் ஆன்மா 'தற்போதம்' என்பது சிறிதுமின்றி, இறைவனுடன் கலந்து நிற்கும் என்பதையே தீபாராதனை காட்டுகிறது. ஞான ஒளியே தீபாராதனையாகும்.

### கோயிலில் ஏன் மூன்று முறை வலம் வருகிறோம்?

மனம், மொழி, மெய் மூன்றையும் இறைவனிடம் சரண் செய்கிறோம் என்பதையே மும்முறை வலம் வருதல் குறிக்கிறது. தூல, சூக்கும, காரண உடல் மூன்றையும் இறைவனிடம் ஒப்புவிப்பதையும் இது குறிக்கும்.

### மாவிலை கூந்தல் ஏன் கட்டுகிறோம்?

மாவிலையும் கூந்தலும் அழுகி நாற்றம் எடுக்காமல் முறையாக நின்று உலரும். நம் வாழ்க்கையும் இடையில் கெட்டுப் போகாமல், முறையாக நீண்ட காலம் நடைபெற்று முற்றுப் பெறவேண்டும் என்பதற்காகவே மங்கலம் பெருக மாவிலையும் கூந்தலும் கட்டுகிறோம்.

---

## இறைவனுக்கு பூஜையில் செய்யப்படுகின்ற பதினாறு வகையான உபசாரங்கள்

1. தியானம் 2. ஆவாஹனம் 3. ஆசனம் 4. அர்க்கியம் 5. ஆசமனம் 6. அபிஷேகம் 7.வஸ்திரம் 8. சந்தனம் 9. அலங்காரம் அர்ச்சனை 10. தூபம் 11. தீபம் 12. நிவேதனம் 13.ஆர்த்தி 14. புஷ்பாஞ்சலி 15. வலம் வரல் 16. பிழை பொறுக்க வேண்டுதல்





# பிரதோஷம்

**ஆதிசங்கராின் ஷன்மதங்கள்**

| | | |
|---|---|---|
| 1. | சைவம் சிவனை | வழிபடுவது |
| 2. | வைணவம் திருமாலை | வழிபடுவது |
| 3. | கணாபத்யம் கணபதிவை | வழிபடுவது |
| 4. | கௌமாரம் முருகனை | வழிபடுவது |
| 5. | சாக்தேயம் சக்தியை | வழிபடுவது |
| 6. | கௌரம் சூரியனை | வழிபடுவது |

இவைகளை சங்கரர் அருளினாலும் அவரது கருத்து, வழிபடு தெய்வங்கள் வெவ்வேறாயினும் எல்லாம் ஒன்று என்பதேயாகும்.

அறுவகை சமயங்களுள், மிகச் சிறப்புப்பெற்ற சமயங்கள் இரண்டு, இவைகள் சைவமும், வைணவமுமாகும். மற்ற நான்கும் இதனுள் அடங்கும். சைவ வைணவ தெய்வங்கள் சிவனும், திருமாலும்; திருவாதிரையான் சிவன், திருவோணத்தான் மால்

சிவனைவழிபடுவதற்கு மிக சிறப்புற்ற நாட்களாக, கார்த்திகை, மார்கழி மாதங்கள் திருவாதிரை நாட்கள். இதில் சைவசமய இறைவனான சிவபெருமானை நந்திகேசுவரை வணங்கி விடைபெற்று வழிபடவேண்டும். கருடாழ்வாரான பெரிய திருவடியை வணங்கி அவர் அனுமதி பெற்று திருமாலை வழிபட வேண்டும் என்பதே நியதி முறை. சிவகணங்களின் தலைவர் நந்தியம்பெருமான். ஈசுவரன் என்று சிறப்புப் பட்டம் பெற்ற எழுவரில் முதன்மையானவர். சிவன் கோயில் கொண்டுள்ள திருக்கைலாயத்தில் திருவாயிலில் உடைவாளும், பொற்பிரம்பும் ஏந்திக் காவல்புரிபவரிவர். பிரமாதி தேவர்களும் இவர் உத்தரவு பெற்ற பின்னரே உள்ளே சென்று சிவனை சக்தியுடன் (உமா மகேசுவராக) கண்டு வணங்கி வழிபட்டு அருள்பெற்றுக்கொள்ளுவார்கள். நந்திதேவர் ஒப்பற்ற பெருமை பெற்றவர். சிவனால் தருமமே உருக்கொண்டனர். சிவபெருமானுக்கு வாகனமாகும் நற்பேர்பெற்றவர். எல்லா தேவர்களாலும் போற்றப்படுபவர் ஊஞ்சலில் எழுந்தருளுவார். அப்போது ரிஷபதேவராகிய நந்திதேவரின் மூச்சுக்காற்றால் திருப் பொன்னூஞ்சல் அழகாக ஆடுமாம். இதனாலேயே சிவபெருமானின் முன் நந்திகேசுவரர் எழுந்தருளியிருக்கிறார். ஊழிக் காலமாகிய மகாப்பிரளய காலத்தில் எழுகடலும் ஒருகடலாகி இதில் பூமியும் அமிழ்ந்து பிரபஞ்சமே ஒன்றினுள் ஒன்று அடங்கி இறுதியில் எல்லாமே சிவனுள் அடக்கம் என்னும் நிலையிலும் கூட நந்திதேவர் மட்டும் சிவனுள் ஒடுங்காமல் எம்பெருமானின் கருணையினால் வாகனமாகிவிடுகிறார் என்றால் இவர் சிறப்பு கூறவும் எளிதோ? முன் கூறிய பிரளயகாலமே பிரதோஷகாலம். பரமேசுவரன் உலகசக்தி முழுமையும் தன்வசம் ஒடுக்கி திருநடனம் செய்யும் இவ்வேளையே பிரதோஷகாலமாகும். இச்சமயம் பதஞ்சலி பதம்பாட, வியாக்கிரபாதர் தாளமிட, கண்ணன் குழல்ஊத, நந்தி மத்தளம் கொட்ட, அன்னை உமை சிவகாமியாகி சிவன் நடராஜாவாகி (108) நூற்றி எட்டு தாள வகையான பிரதோஷகால ஆனந்த நடனமாடினார் என்பது வரலாறு.

### பிரதோஷகாலங்களாவது :

சூரிய அஸ்தமனத்திற்கு முன், பின் ஏழரை நாழிகை கொண்ட நேரமேயாகும். சூரிய உதய பிரபாதகாலத்தில் சிருஷ்டி. சூரிய அஸ்தமனத்தில் சம்ஹாரம். இரவு ஆரம்பத்தையே பிரதோஷகாலம் என்று கூறுவது. இதை நித்திய பிரளயகாலம் எனவும் தினப்பிரதோஷம் எனவும் கூறப்பட்டது. தினமும் உண்டாக்கப்படுவதும் அழிக்கப்படுவதும்

நடந்துவருகிறது. இவ்வித தினப்பிரதோஷ காலத்தில் பறவைகள் மாடுகள் முதற்கொண்டு எல்லா சீவ ராசிகளும் ஒடுங்கிக்கொள்ளுகின்றன. குழந்தைகள் கூட தங்கள் விளையாட்டுக்களை நிறுத்தி வீட்டினுள் ஒடுங்கிக்கொள்கின்றன. இச்சமயமே ஏகாந்தமாக இருப்பதற்கு தகுதியான காலமாகும். இச்சமயமே சிவன் நடராசராக தாண்டவ நடனமாடுகிறார். உலகம் எல்லாம் இதில் மயங்கி லயித்துவிடுகிறது. வெளிசஞ்சாரம் செய்யும் பூதபிரேத பைசாசங்களும் கூட நடனத்தில் லயித்து யாருக்கும் தீங்கு செய்ய சக்தியற்றுவிடுகிறது. இது ஒரு கண்கட்டு வித்தை போல நடக்கிறது தினமும்.

கண்கட்டு வித்தை செய்யும் கூத்தாடி யாருடைய கண்களையும் கட்டுவதில்லை, ஆனால் பார்த்துக்கொண்டிருக்கும் போதே நம் மனத்தையும் கண்களையும் ஒன்றில் மட்டும் லயிக்கச்செய்து தான் நினைத்தைச் செய்துவிடுகிறான். உஷத்காலமாகிய பிரபாதகாலத்தில் திருமாலையும். பிரதோஷ காலமாகிய மாலைப்பொழுது சிவபெருமானையும் வழிபடவேண்டும் என்றனர் ஆன்றோர்கள். இவ்விதம் மாலைப்பொழுது பிரதோஷமாகிறது.

### பிரதோஷகாலங்கள் ஐம்பிரிவினுள்ளடங்கும்

1. நித்தியப்பிரதோஷம்
   தினமும் சூரிய அஸ்தமனத்திற்கு முன் பின் ஏழரை நாழிகை காலம்
2. பக்ஷாப்பிரதோஷம்
   சுக்கிலபக்ஷ (வளர்பிறை) திரயோதசதிதியன்று மாலைமுன் கூறிய காலம்
3. மாதப்பிரதோஷம்
   கிருஷ்ணபக்ஷ திரயோதசதிதி முன் கூறிய காலம்
4. மகாப்பிரதோஷம்
   கிருஷ்ணபக்ஷ திரயோதசதிதி ஸ்திரவாரமாகிய சனிக்கிழமை ஆகும்,
5. பிரளயப்பிரதோஷம்
   மகாப்பிரளய காலத்தில் எல்லாம் சிவனுள் அடங்கியிருக்கும் காலம்.

இத்தகைய பிரதோஷ நாளில் சிவவழிபாடுகள் செய்தும் சிவதியானம் செய்தும், சிவன் கோயில் சென்று பிரதோஷ கால வழிபாடுகளை கண்டு வழிபட்டுக்கொள்வதும் சிறப்பு. சிவன் கோயில்களில் விசேடமாக அபிஷேக அலங்கார தீபாராதனை கண்டு இன்புற்று சிவப்பிரசாதம் (அருள்) பெற்றுக்கொண்டால், சகலபாவங்களும் விலகி புண்ணியம் தானே வந்தடைந்து இம்மையில் எல்லா நலங்களும் பெற்று உய்வார்கள் என்று ஆன்றோரும் சான்றோரும் புராண இதிகாச நூல்களும் நம்மை அறிவிக்கின்றன. பிரதோஷ கால வழிபாடாக, வில்வதளம், வெள்ளெருக்கம் பூ, தும்பை, அபிஷேகப் பொருட்கள். நைவேத்ய சாமான்ங்கள், நல்லெண்ணெய் முதலிய பொருட்களும் ஏதாவது இரண்டு கொண்டு செல்வது உத்தமம். இவ்விதம் சிறப்புப் பெற்ற பிரதோஷ காலம்பற்றிய கதைகள், கட்டுரைகள், புராண இதிகாச அறிவுறுத்தல்கள், பலவாறாக காணலாம்.

### மூலஸ்தானமும் முப்பொருளும் :

வேத ஆகம நூற்களும் பிற சாத்திர நூற்களும் பதி, பசு, பாசம் இம்மூன்றின் திறத்தினையே எடுத்துக் கூறுவன. இவற்றுள் பதியைச் சிவலிங்கமாகவும், பசுவைக் காளையாகவும், பாசத்தைப் பலிபீடமாகவும் அமைத்துக் காட்டுவன நம் சிவன் கோவில்கள்.

"ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெறிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே"

என்பது திருமந்திரம். பாசம் நீங்கினால் அல்லாமல் பசுவாகிய உயிர் பதியாகிய இறைவனைச் சேராது. பாசம் முன்னிற்கும் பொழுது பசு காண முடியாதபடி பதி விலகி நிற்பன் என்பதை பசுவாகிய மாக்களையும் அதன் முன்னிருக்கும் பலிபீடமும் நீண்ட இடைவெளியிட்டு மூலஸ்தானத்திலிருக்கும் சிவலிங்கமும் உணர்த்தும். பாசம் நீக்கிப் பின்னிடும் போது பசு பதியை அணையும் என்பதைப் பலிபீடமும் அதன் முன்னர் நீண்ட இடைவெளியிட்டு இருக்கும் பசுவாகிய சிறிய நந்தியும், அதனை அடுத்து மூலஸ்தானத்திலிருக்கும் சிவலிங்கமும் உணர்த்தும். இது கோவிலுக்குரிய தனிச்சிறப்பு.







# விபூதி

**மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு**
**சுந்தர மாவது நீறு துதிக்கப்படுவது நீறு**
**தந்திர மாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு**
**செந்துவர் வாயுமை பங்கன் திரு ஆலவாயான்**
**திருநீறே**
**வேதத்தில் உள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு**
**போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு**
**ஓதத் தருவது நீறு உண்மையில் உள்ளது நீறு**
**சீதப் புனல்வயல் சூழ்ந்த திரு ஆலவாயான்**
**திருநீறே**

- திருஞானசம்பந்தர்

விபூதியென்பது மேலான ஐஸ்வர்யமாம்.

அதாவது சிவஸ்வரூபமான பேரானந்த நிலையாம். இது பசுவாகிய ஜீவர்களின் மலமான, அஞ்ஞான கர்ம நாசத்திற் சித்திப்பதாம். கோமய பிண்டங்கள் ஜீவர்களாம். கோமயமென்பது ஜீவர்களின் மலமாம். இதை சிவஞான அக்னியில் இடுவது சோஹம்பாவனையாகிய யோக நிஷ்டையாம். இந்நிஷ்டையால் ஜீவனிடத்துள்ள உபாதிகள் நீங்கிப் பரமசிவத்தோடு இரண்டறக் கலத்தலாகிய பரமைஸ்வர்ய வடிவம் விபூதியாகிய நித்தியானந்த நிலை உண்டாகிறது. மாயாகாரிய பிரபஞ்ச வடிவ நாம ரூபங்களை அகண்டாகார விருத்தி வடிவத் தீயால் எரித்து மிஞ்சிய சுத்த சிவ வடிவ ஸ்வரூபமே விபூதியாம்.

சகல பிரபஞ்சங்களும் முடிவில் நீறும். சிவம் ஒன்று மட்டில் நீறாகாததாய் மிஞ்சுகின்றது. இங்ஙனம் மிஞ்சியதாயும், சுத்தமாயும், எல்லாவற்றின் முடிவான வீர்யமாயும், ஸ்வயம் பிரகாசமாயும் சகல ஜகத்துக்கும், அபின்ன நிமித்தோபாதன விவர்த்த, காரணமாயுள்ள பரமசிவத்தை குறிப்பா யுணர்த்துவதே திருநீறாகும்.

## திருநீறு நான்கு வகைப்படும்

(1) கல்பம் : வியாதியில்லாத கன்றுடன் கூடிய பசுவின் சாணம் பூமியில் விழாமல் தாமரை இலையில் வாங்கி உண்டையாக்கி பஞ்ச பிர்ம்ம, மந்திரங்களால் சிவர்க்னியில் எரித் எடுப்பது கல்பம் எனவும் ;

(2) அணுகல்பம் : காடுகளில் கிடைக்கும் பசும் சாணங்களைக் கொண்டு சிவாக்னியில் தகித்து தயாரிப்பது அணுகல்பம் எனவும் ;

(3) உபகல்பம் : மாட்டுத் தொழுவங்களிலும், மாடுகள் இருக்குமிடங்களிலுமிருந்தும் எடுத்து சாணத்தைக் காட்டுத் தீயில் எரித்து அதையே மறுபடியும் சிவாக்னியில் எரித்து எடுப்பது உபகல்பம் எனவும் ;

(4) அகல்பம் : மந்திரமில்லாமல் எல்லோராலும் சேகரித்த சாணத்தைக் கொண்டு சுள்ளிகளால் எரிக்கப்பட்டு எடுப்பது அகல்பம் எனவும் நான்கு வகைப்படும்.

## ஸ்லோகங்களின் சாரம்

(1) விபூதியில்லாத நெற்றியும், சிவாலய மில்லாத கிராமமும், சிவனை அர்ச்சிக்காத ஜன்மாவும் சிவனைக் கூறாத வித்தையும் பாழ்பாழே.

(2) மோதிர விரலால் அகாரத்தையும், மத்ய விரலால் உகாரத்தையும், ஆள்காட்டி விரலால் மகாரத்தையும், இந்தப்படி ரேகையும், அதன் அதன் தேவதையாக பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களையும், இவர்களின் தொழிலாகிய உற்பத்தி, காத்தல், அழித்தல் என வெளிப்படுத்தவதே த்ரிபுண்ட்ரதாரணம். அதுமுறையே, 32,16,8 இடங்களில் தரிப்பது உத்தம, மத்திம, அதம பக்ஷமாகும் என ஸ்காந்தம் கூறுகிறது.

(3) நெற்றி 1 கழுத்து 1 கைகள் 2 மார்பு 1 தொப்புள் 1 குறி 1 குதல் 1 ப்ருஷ்டங்கள் 2 பாதங்கள் 2 முழங்கால்கள் 2 விலாப் பக்கங்கள் 2 ஆக 16 இடங்களில் தரிப்பதால் அந்த அந்தப் பாவங்கள் போகின்றன எனவும், இதுவே அனுஷ்டானத்திலும் இருந்து வருகிறது.

(4) விபூதியை தூளிதமாக அணிபவனே ருத்ரன் என்பதில் சந்தேகமில்லை எனவும், அவனின் ஒவ்வொரு ரோம கால்களும் லிங்கமாக அந்த சரீரமே லிங்காகாரமாகின்றது என சிவதர்மம் கூறுகிறது.

(5) விபூதி அணிவதால் ஐஸ்வர்யமும், பரிசுத்தமாக்கியும், பாவங்களிலிருந்து விலக்கியும் சர்வோபத்ரவங்களை நசித்தும், சௌபாக்கியத்தை கொடுத்தும் சம்பத்துக்களை அளித்தும் பூத ப்ரேத பிசாச ராக்ஷஸ கண தோஷங்களின்றும் காப்பாற்றியும் மோக்ஷத்தை அளிப்பதும் விபூதியை எப்போதும் அணிவதால் உண்டாகிறது.

விபூதியை வைக்கும் பாத்திரத்தில் விபூதியுடன் தாழம்பூ, சம்பகம், பாடலி, துளசி, மல்லிகை, கதிர்பச்சை இவைகளைக் கலந்து (இட்டு) பரிமள விபூதியாக அணிவதால் சகல சௌகர்யங்களும் உண்டாகும் என சிவசம்ஹிதை கூறுகிறது

**முத்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு**
**சத்தியாமாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு**
**பக்தி தருவது நீறு பரவ இனியது நீறு**
**சித்தி தருவது நீறு திரு ஆலவாயான் திருநீறே.**

இங்ஙனம் சுத்த சைதன்ய ஸ்வரூபமாய் எங்கும் இடைவிடா நிறைவுடைய சர்வதயா பரனான பரமசிவமே விபூதியில், அபேதமாய் பாவிக்கப்பட்டி ருப்பதால் இதுவே. பஞ்ச பூதங்களும், தசேந்தியங்களும் பஞ்ச விஷயங்களும் சர்வ ஜீவர்களுமாக இருக்கின்றது. பரமசிவமாம் விபூதியைத் தவிர அணுவும் வேறாகவில்லையெனப் பாவித்து, அப்பரமசிவம் அகண்டமாதலால் காற்கட்டைவிரல் முதற் சிரசு வரை, சரீரத்தில் வியாபித்திருப்பதாகப் பாவித்து, உத்தூளஞ் செய்து, அகண்ட பரமசிவத்தில் முக்குணம், மும்மூர்த்தி, முச்சக்தி, மூன்றக்னி, முத்தொழில் முதல் திரிபுடி வடிவமாய்த் தோன்றி விளங்குவதால் ஆதேயமெனவும், முற்கூறிய பரமசிவமே ஆதாரம் எனவும், முடிவில் எல்லாம் பரமசிவமாம் அத்தகைய சிவ வடிவத் திரு விபூதியை உத்தூளத்தின் பேரில் த்ரிபுண்ட்ரமாக அணியவேண்டும்.



## நெற்றியில் விபூதி, குங்குமம் ஏன்?

நெற்றியில் திருநீறு, குங்குமம், திருமண், கோபி, சந்தனம் போன்ற சமய அடையாளங்களைத் தரிப்பவர்களை மூதேவி நெருங்க மாட்டாள். அதற்கு காரணம் ஒவ்வொருவருடைய கழுத்துக்கும் மேலேயும், சதுர திருத்தி என்ற தேவி, சுற்றிக் கொண்டிருக்கிறாள். அவளை மூதேவி என்று சொல்வார்கள். எவன் ஒருவன் தன் நெற்றியில் திருநீறு தரித்திருக்கிறானோ அவன் அருகில் மூதேவி செல்ல பயப்படுவாள் என்கிறது கிருஷ்ண யஜுர்வேதம்.

## விபூதி வாங்கும் முறை

கோவிலில் விபூதிப் பிரசாதம் வாங்கும்போது ஒற்றைக் கையை மாத்திரம் நீட்டி வாங்கக் கூடாது.

வலக்கையின் கீழே இடக்கையைச் சேர்த்து விபூதியை வாங்க வேண்டும்.

விபூதியை இடக்கையில் கொட்டி அதிலிருந்து மறுபடி எடுத்து தரித்தல் கூடாது. வலக்கையில் பெற்றுக்கொண்ட விபூதியை அப்படியே நெற்றியில் தரிப்பது நலம். அவ்விதம் செய்ய இயலாவிட்டால், ஒரு சிறுதாளில் விபூதியை இட்டு, அதிலிருந்து எடுத்து தரிக்கலாம்.

வயதில் நம்மைவிட இளையவர் கைகளிலிருந்து விபூதி எடுத்து தரிக்கக் கூடாது. விபூதியை நம் கையில் இடச் செய்து, அதிலிருந்துதான் எடுத்து தரித்துக்கொள்ள வேண்டும்.

குங்குமத்தை இளையவர் கைகளிலிருந்து எடுத்துத் தரிப்பதில் தவறில்லை.







# உருத்திராக்கம்

– கே.எம். வேங்கடராமையா

சைவர்கட்குரிய சிவ சின்னங்கள் மூன்றனுள் ஒன்று உருத்திராக்கம் ; மற்றவை திருநீறும் திருவைந்தெழுத்துமாம்.

**பெயர்க்காரணம் :** ஒருகால் முப்புரத்தவரால் அல்லலுற்ற மாலயன் முதலிய தேவர்கள் யாவரும், சிவபெருமானை நண்ணி முறையிட்டனர். 'அஞ்சேல் அஞ்சேல்' என்றருளிச் சிவபெருமான், கண் மூன்றினையும் அலர்த்தித்தான் அமர்ந்தருளினார். தேவர்யாண்டு ஆயிரம் கழிந்தது. நம்பனாருடைய கண்களினின்று நீர் உதித்தது. அந்நீரில் கண்டிமரம் தோன்றியது. சூரியனாகிய கண்ணினின்று கபிலை நிறமுடைய கண்டியும், மதிக்கண்ணில் வெண்ணிறமுடைய கண்டியும், நெருப்புக் கண்ணினின்று கரிய உருக் கண்டியும் தோன்றின. இங்ஙனம் 'உருத்திரன் கண்ணீரில் உதித்தலினால் உருத்திராக்கம்" என்று பெயர் உண்டாயிற்று.

**வகைகள் :**

ஒரு முகம் முதல் பதின்மூன்று முகம் வரையில் உருத்திராக்கங்கள் உண்டு. ஏகமுக உருத்திராக்கத்துக்கு இறைவன் பரமசிவன் ; இதனைப் பூணின் பிரமவதையானாய பாவம் நீங்கும்.

இரண்டு முக முடையதற்கு இறை மணிகண்டன் ; இதனைத் தரிக்கின் கொலைப்பாவம் போம்.

மூன்று முகக் கண்டிக்கு அனல் மூன்று *தெய்வம் ; இதனை அணியின் வினை தீரும் (*சுசி, பவமானன், மாவகன் என்பர்).

நான்கு முகக் கண்டிக்கு அதிதெய்வம் நான்முகன் ; இதனைத் தாங்கின் நரர்வதைப் பாவம் தீரும்.

ஐம்முகக் கண்டிக்கு இறை காலாங்கி ; இதனைத் தரிக்கின் உணவான் ஆய தீங்கு தீரும்.

ஆறுமுகக் கண்டிக்கு ஆறுமுகனே அதிபன் ; இதனைப் பூணின் பிரமவதை போகும்.

ஏழுமுகக் கண்டிக்கு ஈசன் நாகேசன் ; இதனைத் தரிக்கின் களவானாய குற்றம் தீரும்.

எட்டுமுகக் கண்டிக்கு ஈசன் விநாயகன் ; இதனைப் பூணின் பொற்காசு திருடிய பாவம் போம்.

ஒன்பதுமுகக் கண்டிக்குத் தெய்வம் வயிரவன் ; இதனைத் தரிக்கின் கொலைப்பாவங்கள் யாவும் போகும்.

பத்துமுகக் கண்டிக்கு பதி அரி ; இதனை அணியின் பேய் அஞ்சி நீங்கும்.

ஏகாதசமுகக் கண்டிக்கு இறை ஏகாதச உருத்திரர் ; இதனைப் பூண்டவர்க்கு விக்கினங்கள் நீங்கும்.

பன்னிருமுகக் கண்டிக்குத் தேவர் ஆதித்தர் ; காதில் கோத்தணிவார்க்கு ஊறுகள் போம் ; மனோபீஷ்டங்கள் நிறைவேறும்.

பதின்மூன்றுமுகக் கண்டிக்கு தெய்வம் பரமசிவன் ; இதனைச் சென்னியில் தரிக்கின் புத்தி முத்தியுண்டு.

ருத்ராக்ஷ ஜாபாலோப நிஷத்தில் 14 முக ருத்ராக்ஷம் பற்றியும் சொல்லியுள்ளது ; பதினான்கு முக ருத்ராக்ஷமானது ருத்ர நேத்திரத்தினின்று உண்டானது : இதைத் தரித்தால் எல்லா வியாதிகளும் போய் எப்பொழுதும் ஆரோக்யம் உண்டாம் ; அச் சுலோகம் வருமாறு :-

"சதுர் தசமுகம் சாக்ஷ ருத்ர நேத்ர ஸமுத்பவம்।

ஸ்ரவ வியாதிஹரம் சைவ ஸர்வதாரோக்ய மாப்னுயாத்||"

**மந்திரமும் எண்ணும் :** ஈசான மந்திரத்தால் சிகையில் நாற்பதும், சிரசில் ஆறும் தரிக்க ; தற்புருட மந்திரத்தால் செவியொன்றுக்கு ஆறுவீதம் தரிக்க ; கண்டத்தில் அகோர மந்திரத்தால் 32 தரிக்க ; உரத்தில் 49 அணிக ; தோள்களில் 16-ம் மதரத்து 12ம் அணிக ; பிரசாத மந்திரத்தால் முன்கைக்கு எட்டு அணிக ; மார்பில் மாலையாக 108 மணிகளை அணிந்திடுக ; இது செய்வார் கருவுட் புகார்.

**உண்டி நியமம் :** இங்ஙனம் கண்டி பூண்போர் உணவில் நியமம் உடையராதலும் இன்றி யமையாதது ; ஊண், மதுவை ஒழித்தலும் வேண்டும்.

**அக்கமணி அளவு :** பெரும்பாலும் இந்நாளில் பல்லோரும் மிகச் சிறிய அளவுள்ள மணிகளையே விரும்பிப் பூணுதல் காண்டும். எனினும் **"உருத்திராக்க விசிட்டம்"** என்னும் நூலில் எந்த அளவுடைய மணி சிறப்புடையது என்று கூறப் பெற்றுள்ளது. நெல்லிக்கனியளவுள்ள மணி உத்தமம் ; இலந்தைக் கனியளவினது மத்திமம்; கடலையளவுடையது அதமம்.

**செபமாலைக்குரிய மணி :** இரண்டு முகமுடையதும் மூன்று முகமுடையதும் செபமாலைக்கு உரியதன்று; பத்து முகமும் பதின்மூன்று முகமும் பழுதுடையது ; மற்றவை உத்தமம். இதனைக் கூறுவது பின்வரும் (50 ஆம்) பாடல் :-

இரண்டுமுகக் கண்டிசெப மாலைக் கிசையாது
இரண்டுடன் ஒன்றும் இசையாது-இரண்டுடனே
பத்துமுக மும்பதின் மூன்றும் பழுது ; மற்றனைத்தும்
உத்தம மாமென் றுணர்.

**செபத்துக்குரிய விரல் :** அங்குஷ்டத்தினால் மோக்ஷமும், தர்ச்சனியால் சத்துருநாசமும், மத்திமையால் பொருட்பேறும், அனாமிகையால் சாந்தியும், கனிஷ்டையால் இரக்ஷணையும் ஆம்.

**செபிக்கும் ஒலி :** செபிக்குங்கால் மானதம் மந்தம் ஒலி என மூன்று விதமுண்டு. மானதமாக உச்சரிப்பது உத்தமம் ; மானதம் முத்திக்கு ஏது ; மந்தம் புத்தி சித்திக்கும் ; இழிதொழிலரே ஒலித்து உச்சரிப்பர்.

**செபம் செயுங்கால் நியமம் :** மடிதுயில் வாதம் விடுக ; உடல் உறுப்புக்களைத் தொடற்க ; சோம்பல் முரித்தலும் கடுஞ்சொல் கூறுதலும் தவிர்க ; இடுப்பில் அணியும் ஆடையை தலையில் அணியற்க ; இருட்டில் இருத்தலும் நீக்குக ; ஒட்டகம் ஆடு நாய் எருமை பன்றி ஆகியன காணற்க ; மந்திரமல்லாது பிறிதோர் சொல் கூறற்க.

**1008 செபித்தல் உத்தமம் :** அதிற்பாதி மத்திமம் ; 108 செபித்தல் அதமம்.

வலக்கரத்தில் கொண்ட ஜபமாலையை வத்திரத்தால் மறைத்துக் கொள்க ; தனது குருவும் அதனைக் காண்டல் கூடாது.

ஜெபிக்குங்கால், மாலை கைதவறிக் கீழே வீழின், ஜபமாலையைக் கண்ணில் ஒற்றிக்கொண்டு, நன்னீரிலாட்டி, 108 முறை **காயத்திரியை** எண்ணுக ; ஜபமாலை அறுந்து வீழின், குறைவற முன்போற்கோவையாக்கி, முறையே நீராட்டி, அகோரம் ஒருநுறு உச்சரிக்க.

**ஜபம் செய்யும் இடம் :** மலையுச்சியிலும், வனத்திலும், நதிக்கரையிலும், அமலன் கோயிலிலும், சைவர் ஒருங்கு எழுந்தருளியுள்ள நல்லிடத்திலும், அழற்சாலை கோசாலை தன்னகம் ஆகிய இடங்களிலும் ஜபிக்கலாம்.

தன்மனையில் ஒரு முறை ஜபம் செயின் ஒன்று ஒன்றே யாம் ; சைவ நன் மக்களிடை ஒருமுறை செபித்தால் ஒன்று நூறாகும் ; ஆற்றங்கரையில் எனில் ஒன்று ஆயிரமாம் ; கடற்கரை யெனில் ஒன்று பதினாயிரமாம்; குன்றத்துச்சியிலும் தபோ வனத்திலும் எனில் ஒன்று நூறாயிரமாம்; சிவாலயத்தில் ஜெபம் செயின் ஒன்று ஒரு கோடியாகும். சிவசந்நிதி யிலாயின் குணிப்பரிய கோடியாகும்.



**ஆசனம் :** மானின் உரி மேலிருந்து ஜபிக்கின் ஞான விருத்தியாகும் ; வேங்கைத் தோல் மேலாயின் முத்தி வாய்க்கும் ; கம்பளமெனில் துன்பம் நீங்கும். கலிங்கத்தின் மேல் ஆயின் உடல் நோயினை வீட்டும்.

மரப்பலகையிலாயின் வறுமை யாக்கும் ; வன்கல்லாயின் பிணியால் வருத்தும்; நிலத்தினாயின் துன்பம் தரும்.

வீராசனம் அல்லது பதுமாசனத்திருந்து ஜபித்தலே முறை.

**பொது :** சிவபக்தருக்குக் கண்டி தானம் செய்வது சிறப்புடையது. கண்டியணிந்தார்தம்மைக் கண்டவுடனே பணிவதும் சிவபுண்ணியம் ஆகும்.

இது காறும் கூறியவை சிதம்பரம் ஸ்ரீ மறைஞான சம்பந்தர் பாடியருளிய **"உருத்திராக்க விசிட்டம்"** என்னும் வெண்பா நூலிற் கண்டனவாகும். இந்நூல் திருக்கயிலாய பரம்பரைத் **திருவாவடுதுறை ஆதீனத்தில்** 1954ம் ஆண்டு வெளியிட்ட "ஸ்ரீ மறை ஞான சம்பந்தர் அருளிச் செய்த சைவச் சிறு நூல்கள் " என்ற தொகுப்பில் காணலாம். விரிவான செய்திகளை உபதேச காண்டம். பிரமோத்தர காண்டம், சிவ ரகசிய காண்டம், கடம்பவன புராணம் ஆகிய நூல்களில் காணலாம்.

திருநாவுக்கரசர் பாடிய இலிங்க புராணத் திருக்குறுந்தொகையில் அடியார்கள் கண்டி பூணுதல் எதிர்மறை முகத்தான் கூறப்பெற்றுள்ளது.

"கண்டி பூண்டு கபாலங்களைக் கொண்டிலர் விண்ட வான்சங்கம் விம்மவாய் வைத்திலர்".

" விண்ணவர், ஒத்தவடத்து, கண்டியிற்பட்ட, வெண்டிரை" என்ற தேவாரங்களையும் ஓதுக ; அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஒருவர் மூர்த்தி நாயனார். அவரைச் சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் "மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்" என்று துதிப்பர். இதன்கண் **"மும்மை"** என்பது திருநீறு, உருத்திராக்கம், ஜடை என்பனவாம். இம்மூன்றையே உண்மைப் பொருளென மதித்து அரசோச்சியவர் மூர்த்தி நாயனார்.

பல்லவ அரசருட் பெரும்பாலோர் சைவ சமயச் சார்பும் பற்றும் உடையவர் என்பதை அவர்தம் இயற்பெயரானும் சிறப்புப் பெயர்களானும் அறியவரும். திருநாவுக்கரசரால் சைவம் சார்ந்தவனாகிய மகேந்திரனது மகன் வாதாபி கொண்ட முதலாம் நரசிம்மவர்மனின் பெயரனும், காஞ்சிக்கு அண்மையில் கூரம் என்ற ஊரில் வித்யாவிநீத பல்லவேசுவரக்கிருகம் என்ற சிவாலயத்தை எடுப்பித்தவனும், ஐயடிகள் காடவர் கோன் என்று ஆய்வாளர்களால் அறுதியிட்டுப் போற்றப்படுபவனும், காஞ்சிபுரத்தில் கைலாசநாதர் கோயிலை எடுப்பித்த இராச சிம்மன் என்னும் பல்லவ அரசனின் தகப்பனும் ஆகிய **பரமேசுவர வர்மன்** மகாபலிபுரத்தில் **கனேசர் கோவில்** என்ற சிவாலயத்தை அமைத்தவனாவன். இக்கோயிலில் பதினொரு வடமொழிச் சுலோகங்கள் நல்லெழுத்தாக வுள்ளன. அவை அரசனுக்கும் சிவனுக்கும் பொருள் பொருந்தும் வண்ணம் சிலேடையாக உள்ளன. அதிற்கண்ட இரண்டாவது-ஆறாவது சுலோகங் களினின்று அவ்வரசன் உருத்திராக்க மணிகளாலாய சிவலிங்கத்தைத் தலைமுடியாக அணிந்தவன் என்று அறியவருகிறது.

**உருத்திராக்க விதானம் :** கருவறையில் சிவலிங்கத் திருமேனிக்கு மேல் உச்சியில் மேற்கட்டி இருப்பதும் கண்கூடு ; பெரும்பாலான தலங்களில் பட்டாடையால் அமைக்கப் பெற்றிருக்கும். திருவாரூர்ப் பூங் கோயிலில் " அமுத்துவிதானம்" அமைத்திருந்ததாகத் திருநாவுக்கரசர் கூறுவார். இங்குக் கண்ட முத்து என்பது உருத்திராக்க மணியாகலாம். ஆகவே கருவறையில் சிவலிங்கத் திருமேனிக்கு **"உருத்திராக்க விதானம்"** ஆகும் என்பது திண்ணம். இங்ஙனம் ஆதலை உணர்ந்தவர்களும், திருப்பனந்தால் ஸ்ரீ காசி மடத்து இருபதாவது பட்டத்து அமர்ந்தருளியவர்களும், எண்ணிறந்த அறக்கட்டளைகளை நியமித்தவர் களுமாகிய **ஸ்ரீ காசி வாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் பல சிவத் தளிகளில் கருவறையில் உருத்திராக்க விதானத்தை அமைத்தருளினார்கள். அங்ஙனம் அமைத்தவற்றுள் ஒன்று திருவண்ணாமலையில் அருணாசலேசுவரர் ஆகிய சிவலிங்கப் பெருமான் எழுந்தருளப் பெற்றுள்ள கருவறையிலும் காணலாம்.

இங்ஙனம் சிவபாத சேகரர்களும் திருநீறு பேணியோரும் ஆகிய மன்னர்-குறுநில மன்னர் சைவ நன்மக்கள் போற்றியனுசரித்த சைவ சீலங்களை இனியும் மக்கள் போற்றியுய்க்க !

"நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொண் டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராய்த்தகு விப்பது
நக்க னாம நமச் சிவாயவே " – *சம்பந்தர்*

# திருவைந்தெழுத்து

– கு. சுந்தரமூர்த்தி

உயிர்கள் அனைத்தும் இன்பத்தையே விரும்புகின்றன. அவ்வின்பத்தை அருளாளர்கள் இரு வகைப்படுத்தியுள்ளனர். உலகியல் நுகர்வு கொண்டு ஒரு காலத்தில் அடைகின்ற இன்பம், பிறிதொரு காலத்தில் உவர்ப்பாக மாறி விடுகின்றது. எனவே இது அழியத் தக்கது என அறிய முடிகின்றது. இதனைச் சிற்றின்பம் என்பர். திருவருள் நுகர்வு கொண்டு அடைகின்ற இன்பம் எப்பொழுதும் இன்பமாய் விளங்குகின்றது. இது எக்காலத்தும் உவர்ப்பதில்லை. இதனைப் பேரின்பம் என்பர். "இன்பம் இடையறாது ஈண்டும்". "பேரா இயற்கை தரும்", " இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என வரும் திருவாக்குகள் எல்லாம் இவ்வின்பத்தையே குறிப்பனவாகும்.

இத்தகைய பேரின்பத்தைத் தருதற்குரிய ஒரே மருந்து திருவைந்தெழுத்தாகும். "வாயிலே வைக்கும் அளவில் மருந்தாகித் தீய பிறவி நோய் தீர்க்குமே" என நக்கீரர் குறிப்பர். இத்திருவைந்தெழுத்து இறைவனுடைய திருநாமம் ஆகும். ஒவ்வொரு திருக்கோயிலிலும் எழுந்தருளுவிக்கப் பெற்றிருக்கும் திருமேனிக்கு ஒவ்வொரு நாமம் உண்டு. அண்ணாமலையார் என்பர்; செஞ்சடையப்பர் என்பர்; வைத்தியநாதன் என்பர். இப்பெயர்கள் அவ்வம் மூர்த்திகளுக்குரிய சிறப்புப் பெயர்களாகும். இவ்வனைத்து உருவங்களுக்கும் மூல காரணமாய் நிற்கும் மூர்த்தியைக் குறிக்கும் திருப்பெயர் திருவைத்தெழுத்தாகும்.

**"திருநாமம் ஐந்தெழுத்தும் செப்பாராகில் "**

**"எண்ணிலேன் உன் திருநாமத்து எழுத்தஞ்சும் "**

என வரும் திருவாக்குகள் இவ்வுண்மையை விளக்கும். இறைவனுடைய திருநாமமாக விளங்கும் இத்திருவைந்தெழுத்து அப்பெருமானுடைய திருவுருவாகவும் விளங்குகின்றது எனக்கூறும் ஞானநூல்.

**"ஆடும்படிக் கேணல் லம்பலத்தா னையனே**
**நாடுந் திருவடியி லேநகரம் – கூடும்**
**மகர முதரம் வளர்தோள் சிகரம்**
**பகருமுகம் வாமுடியப் பார் "**

**"சேர்க்குந் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்**
**ஆர்க்கும் யகர மபயகரம் – பார்க்கிலிறைக்கு**
**அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்**
**தங்கு மகரமது தான் "**

எனவரும் உண்மை விளக்கத் திருப் பாடல்கள் இறைவனுடைய திருமேனியில் திருவைந்தெழுத்து அமைந்திருக்குமாற்றை விளக்கும்.

திருவைந்தெழுத்து ஓதுவார்தம் பக்குவத்திற் கேற்ப ஐந்து வகையாகப் பிரித்துப் பேசப்பட்டுள்ளது. அவை யாவன :-

| | |
|---|---|
| 1) ஸ்தூல பஞ்சாட்சரம் | நமசிவாய |
| 2) சூக்கும பஞ்சாட்சரம் | சிவாயநம |
| 3) காரண பஞ்சாட்சரம் | சிவாயசிவ |
| 4) மகா காரண பஞ்சாட்சரம் | சிவ |
| 5) மகா மனு | சி |

இவ்வகையில் முன்னைய இரண்டுமே திருமுறை களிலும், ஞானநூல்களிலும் மிகுதியாகப் பேசப் பெற்றுள்ளன. பின்னைய மூன்றும் மிகவும் பக்குவம் பெற்றவர்கள் குருவருள் வழிநின்று உணர்ந்து அனுபவிக்கத் தக்கனவாகும். முன்னையதான ஸ்தூல பஞ்சாட்சரம் இம்மை இன்பம் பெற வேண்டுவார் ஓதத்தக்கது என்றும் சூக்கும பஞ்சாட்சரம் வீடுபேறு வேண்டுவார் ஓதத்தக்கது என்றும் ஞானநூல்கள் வரையறை செய்கின்றன.

**"மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ**
**மேலாகி மீளா விடின் "**

**"சிவமுதலே யாமாறு சேருமேற் றீரும்**
**பவமிதுநீ யோதும் படி "**

எனவரும் திருவருட் பயன் காண்க. திருவைந்தெழுத்து ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளைக் குறித்து நிற்பதாகும். சிகரம் சிவத்தையும், வகரம் அருளையும், யகரம் உயிரையும், நகரம் மறைப்பையும் (திரோத மலம்), மகரம் ஆணவமலத்தையும் குறிக்கும். எனவே

இத்திருவைத் தெழுத்தில் உயிர் (ய) இடையில் நிற்கின்றது. ஒருமருங்கில் சிவமும், பிறிதொர மருங்கில் மலமும் நிற்க இவ்வுயிர், தான் சார்ந்ததன் வயப்பட்டு நிற்கும் தன்மை அறியத் தக்கதாகும்.

"ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம்
ஞான நடந் தானடுவே நாடு"

எனவரும் திருவருட்பயன் இவ்வுண்மையை அறிவுறுத்தி உயிர் சாரவேண்டிய பொருள் எது என்பதையும் குறிப்பாக அறிவுறுத்துகின்றது. குருவருள் வழிநின்று இவ்வுண்மையையுணர்ந்து ஓதுவார், தாம் ஓதியதின் பயனாகச் சிவமாம் பெருந்தன்மையையடைவர்.

"நாம் ஒழிந்து
சிவமான வா படித் தெள்ளேணம்
கொட்டாமோ"

என்னும் அருள் அனுபவமும் காண்க.

திருவைந் தெழுத்தை வாயால் ஒலித்தலினும் மனத்தால் உன்னுதலே தக்கதாகும்.

"சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள்ளார்கள்
சிவசிவ வாகுந் திருவருளாமே"

என வரும் திருமந்திரம் இவ்வுண்மையை விளக்கும்.

திருமுறைகளும், சாத்திரங்களும் போற்றிக் கூறுவதெல்லாம் திருவைந்தெழுத்தின் பெருமையே யாகும். திருஞானசம்பந்தர் இரு பதிகங்களிலும், திருநாவுக்கரசரும் சுந்தரரும் ஒவ்வொரு பதிகங்களிலும் திருவைந்தெழுத்தின் பெருமையை அருளியுள்ளார்கள். மாணிக்கவாசகர் சிவபுராணத்துள் இத் திருவைந்தெழுத்தை முன் வைத்து வாழ்த்தி, இதுவே உயிர்க்கு ஊதியம் எனத் திருக்கோவையாரின் இறுதிப் பாடலில் உணர்த்தியிருப்பது இதயத்தில் எண்ணுதற் குரியதாகும். மணிவாசகர் இத்திருவைந் தெழுத்தை ஓதுதற்குத் தாம் செய்திருக்கும் தவத்தையும், இத்திருவைந்தெழுத்தை ஓதப்பெற்றதால் தாம் பெற்ற பயனையும் நெகிழ்ந்தும், குழைந்தும் கூறியருளிய திருவாக்குப் பன்முறையும் நினைந்து நினைந்து இன்புறத் தக்கதாகும்.

நானேயோ தவஞ்செய்தேன்
சிவாய நம எனப்பெற்றேன்
தேனாய்இன் னமதமுதாய்த்
தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனது உள்ளம்
புகுந்து அடியேற் கருள்செய்தான்
ஊனாரு முயிர்வாழ்க்கை
ஒறுத்தன்றே வெறுத்திடவே.

இத்திருப்பாடலைப் படிக்கும்தோறும் ஒரு பேரின்பம் உள்ளத்து ஊறிக்கொண்டயிருக்கும். கருவூர்த்தேவர் திருவைந்தெழுத்தின் சொற்பதத்தை உள் வைத்து உள்ளம் அள்ளூறும் தொண்டருக்கு எண்திசைக் கனகம், பற்பதக்குவை, பைம் பொன் மாளிகை, பவளவாயவர் இன்பம், கற்பகப் பொழில் ஆகிய அனைத்தும் கிடைக்கும் என்பர். பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்துள் 137 பாடல்களால் இதன் பெருமை விரித்துரைக்கப்பட்டுள்ளது. பதினோராம் திருமுறையுள் பட்டினத்தடிகள் "நித்தம் நித்தம் தேறும் பொருள் திருவைந் தெழுத்தும், திருநீறும், கண்டிகையும்" என்பர். பன்னிரண்டாம் திருமுறையுள் சேக்கிழார் திருவைந் தெழுத்தைக் கருத்தின் பயனாகக் கொள்ளவேண்டும் என்றும், 'ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம்' என்றும், ஆதி மந்திரம் அஞ்செழுத்து' என்றும் அருளிச் சிறப்பிப்பார்.

"அஞ்செழுத்தே ஆகமமும்
அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா
ணம் அனைத்தும் - அஞ்செழுத்தே
மானந்த தாண்டவமும்
யாவைக்கும் அப்பாலா
மோனந்தா மாமுத்தி யும்"

எனச் சிறப்பிக்கும் சாத்திரம்.

இத்தகைய திருவைந்தெழுத்தை ஓதி உணர்ந்து இன்புறுதற்கு அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சுவோமாக !

# நித்திய பூஜையும் அதன் தத்துவமும்

– சிவத்திரு. எஸ். சுவாமிநாத சிவாசாரியார்

அன்பர்கள் செய்யும் சிவபூசையானது ஆன்மார்த்த பூசை, பரார்த்த பூசை என இருவகைப்படும்.

ஆசாரியர் தீக்ஷை செய்து அருள்சுரந்து சீடனைப் பார்த்து நீ இறக்கும் வரையும் கைவிடாது இவரை நாடோறும் பூசி என்று அனுமதி செய்து 'அடியேன் இச்சரிரமுள்ள வரையுஞ் சிவார்ச்சனை செய்தன்றி ஒன்றுமுண்ணேன்' என்று சம்மதி செய்வித்துக்கொண்டு ஆசாரியரால் கொடுக்கப்பட்ட இஷ்டலிங்கத்தை வாங்கிப் பூசிப்பது ஆன்மார்த்த பூசையாகும். எல்லா ஆன்மாக்களுக்கும் அனுக்ரஹஞ் செய்யுங் காரணமாகக் கோயில்களிற் பிரதிஷ்டை செய்து பூசிப்பது பரார்த்த லிங்க பூசையாகும்.

இவ்வாறு ஆன்மார்த்த, பரார்த்த பூசையின் வாயிலாகச் சிவபெருமானை உபாசிக்கும் கிரமங்களை அறிவுறுத்துவன முதனூல்களாகிய இருபத்தெட்டுச் சிவாகமங்கள்.

இத்தகையச் சிவாகமங்களால் சிவாலயங்களில் விதிக்கப்படும் பூசைகள் நித்தியம், நைமித்திகம், காமியம் என மூன்று வகையின். தினந்தோறும் செய்யப்படும் பூசை நித்தியம். உற்சவம், பிரதிஷ்டை, முதலியன நைமித் திகம். பேறுபேற்றினை அவாவிச் செய்யப்படும் கிரியை காமியமாகும்.

எல்லாக் காரியங்களையும் நிறைவு படுத்துவதாலும் ஆன்ம ஞானத்தை உண்டு பண்ணுவதாலும் பூஜை எனப் பெயர் பெற்றது. உத்தமோத்தமமாகக் கூறப்படும் எட்டுக்கால பூசை முதல், அதமத்தில் மத்தியமமான ஒரு கால பூசை வரையில் பரார்த்தலாயங்களில் செய்யுமுறை, ஆகமங்களால் கூறப்பட்டு விளங்குகின்றன. விடியற் பூசை முதல் அர்த்தயாமம் முதலிய பூசாகாலங்களில் தொடக்கம் முடிவு இவைகளில் சில மாறுதல்கள் காணப்படினும் அபிஷேகம் முதலிய உபசாரங்களில் விசேஷ மாறுதல் இல்லை. பொதுவாக உபசாரங்கள் யாவும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து பூதங்களில் அடங்கும் எனச் சித்தாந்த சாராவளியால் அறியப்படுகிறது. சந்தனம், கிழங்கு, பழம், வேர், புஷ்பம், அன்னம் இவைகளாற் செய்யப்பெறுவன பார்த்திவ உபசாரம். தீர்த்தம், பால், வேஷ்டி, பட்டு, தயிர் இவைகளாற் செய்யப்பெறுவன அப்பின் உபசாரம். நவரத்தினம், தீபம், பூஷணம் முலானவற்றால் செய்யப்பெறுவன ஆக்னேய உபசாரம். தூபம், சாமரம், இவை வாயவ்ய உபசாரம். மணி, கானம் முதலியன ஆகாய சம்பந்தமான உபசாரம். எனவே இறைவனுக்குச் செய்யப்படும் எல்லா உபசாரங்களும் ஐம்பூத ஆக்கமாம்.

*'செய்ய மேனியின் தேனொடு பால்தயிர்*
*நெய்ய தாடிய நீலக் குடியரன்*
*மையலாய் மறவா மனத்தார்க் கெலாம்*
*கையி லாமல கக்கனி யொக்குமே'*

– திருநாவுக்கரசர்

'சிவந்த திருமேனியனாய்த் தேனும், பாலும், தயிரும், நெய்யும் கொண்டு திருமுழுக்காட்டி நீலக்குடி அரன்மேல்காதல் கொண்டு மறவாத மனத்தினர்க்கெல்லாம் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் அப்பெருமான் புலப்பட்டு அருள்புரிவான்.'

கர்ப்பூரம் வெண்மை நிறத்தைப் பொருந்தி அக்னி பற்றிய விடத்தே அதன் வடிவமாக விளங்கி, ஓர் பற்றுமில்லாமல் முற்றுங்கெட்டு ஆகாயத்துடன் கலந்து அத்துவிதமாய் விளங்கல் போல் ஆன்மா வெண்மை நிறமான சாத்விகுணத்தைப் பொருந்தி ஞானாக்னி பற்றிய விடத்தே பசுத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை விளங்கப் பெற்று ஸ்தூல சூக்ஷம சரீரங்கள் நீங்கப்பெற்று எல்லாப்பற்றுங்கழன்று சிவபெருமானோடு கலந்து அத்துவிதமாய்ப் பேரானந்தப் பெருவாழ்வு அடைதல் வேண்டும் என்னும் குறிப்பை உணர்த்தவதற்காகக் கர்ப்பூர ஆராதனை செய்யப்படுகிறது.



# பஞ்ச புராணம்

– மு.அருணாசலம்

ஏழாம் நூற்றாண்டு தொடங்கித் தமிழில் எழுந்த அருட்பாசுரங்கள் பின்னர் ஒழுங்குபடுத்தித் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டன. சம்பந்தர் பாடிய தேவாரப் பதிகங்கள்–திருமுறை 1, 2, 3; அப்பர் பாடிய தேவாரப் பதிகங்கள் 4, 5, 6; சுந்தரர் தேவாரம் 7; மாணிக்கவாசகர் பாடிய திருவாசகமும், அவர் பாடியதாகக் கருதப்பெறுகிற திருக்கோவையாரும் 8; திருமாளிகைத் தேவர் முதலான ஒன்பதுபேர் பாடியவை 9; திருமூலர் அருளிய திருமந்திரம் 10; இறையனார் திருமுகப்பாசுரம் முதல் நம்பியாண்டார் நம்பியின் பிரபந்தங்கள் முடிய உள்ள 40 பிரபந்தங்களும் 11; சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணம் 12; இந்த தொகுப்புக்கள் திருமுறை எனப் பெயர்பெறும். இவற்றுள் திருமுருகாற்றுப்படை, திருமந்திரம், காரைக்காலம்மையார் பாடல்கள் போன்றவை, ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பு செய்யப் பெற்றிருந்தன.

தேவாரப்பதிகங்கள் பாடப்பெற்ற காலம் முதல், அந்தந்தச் சிவாலயங்களில் உரிய தேவாரங்களைப் பாடுவது வழக்கமாயிருந்திருக்கிறது. இப்படிப் பாடுவோருக்கு ஆதரவாகச் சோழமன்னர்கள் மானியம் அளித்தார்கள். திருமுறை கண்ட சோழனாகிய முதல் ராஜராஜசோழன் (985–1014) தான் எடுப்பித்த தஞ்சை ராஜ ராஜேச்சரத்தில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய 48 ஓதுவார்களையும் அவர்களுக்குத் துணையாக உடுக்கை வாசிப்போர் மத்தளம் முழுக்குவோர் இருவரையும் ஏற்படுத்தி, இவ்வைம்பது பேருக்கும் நிபந்தங்கள் அளித்திருந்த செய்தியைக் கல்வெட்டால் அறியலாம். அப்படியே திருஆமாத்தூரில் 16 குருடர்கள் நாள்தோறும் திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய நிபந்தம் ஏற்படுத்திய செய்தி அவ்வூர்க் கல்வெட்டில் காணலாம். நூற்றுக்கணக்கான திருக்கோயில் களில் தேவாரம் பாடுவதற்குப் பல திட்டங்கள் இருந்தனவென்று கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இராசராசசோழன் ஆட்சிக்கு முன்னரே திருஎறும்பியூர், பழுவூர், திருவாவடுதுறை, திருநல்லம், முதலான பல தலங்களில் திருப்பதிகம் பாட நிபந்தங்கள் ஏற்படுத்தப் பெற்றிருந்தன. தேவாரம் பாடுவதைக் கல்வெட்டுகள் "திருப்பதிகம் விண்ணப்பித்தல்" என்றே குறிப்பிடுகின்றன.

இனி தேவார காலம் கடந்து திருமுறை வகுப்பு ஏற்பட்டுத் திருத்தொண்டர் புராணமும் 12ஆம் திருமுறை என்ற திருமுறை அடைவு ஏற்பட்டபிறகு, தேவாரப்பாடல் மட்டுமின்றி, பன்னிரு திருமுறைகளும் திருக்கோயிலில் பாடப்பெற்று வந்திருக்கின்றன. யாவும் திருப்பதிகம் விண்ணப்பித்தல் என்ற பெயராலேயே நிகழ்ந்திருக்கின்றன.

பன்னிரு திருமுறைகளில் திருமுறைக்கு ஒரு பாடல் வீதம் பாடிவந்தார்கள் போலும். எனினும் 8ஆம் திருமறையில் திருவாசகம், திருக்கோவையார் என்ற இரண்டில் ஒவ்வொன்றிற்கு ஒரு பாடல் வீதமும், 9ஆம் திருமுறையில் திருவிசைப்பா திருப்பல்லாண்டுக்கு ஒவ்வொரு பாடல் வீதமும் பாடி வந்தார்கள் என்றும் யூகிக்க இடமுண்டு.

ஆனால், பின்னர் ஒரு காலத்தில், பன்னிரு திருமுறைப் பாடல்களையும் பாடுவதற்கு அதிககாலம் பிடிக்கிறது என்று கருதி, இவற்றைச் சுருக்கிப்பாடி நேரத்தைக் குறைக்க வேண்டுமென்ற உணர்வு எழுந்தது என்பது தெரிகிறது. இவ்வுணர்வின் விளைவே திருப்பதிகம் விண்ணப்பித்தல் என்பது பஞ்சபுராணம் பாடுதல் என்று மாறியதாகும்.

பஞ்சபுராணம் என்பது தேவாரம் (ஏழு திருமுறைகள்), திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் ஆகிய ஐந்தில் ஒவ்வொரு பாடல் பாடுவது என்று இன்று வழக்காற்றில் உள்ளது. இவ்வழக்கு யார் ஏற்படுத்தினார் எக்காலத்தில், புராணம் என்ற சொல் இங்கு எவ்வாறு பொருந்தும் என்ற விவரம் எதுவும் தெரியவில்லை. ஓதுவார்கள் பெருமான் சந்நிதியில் திருப்பதிகம் ஓதுகிறார்கள்; இந்த மரபை ஒட்டியே

ஓதுகிறார்கள். ஆனால், இதற்கு விளக்கம் அவர்களுக்குத் தெரியாது. மிகவும் வயது முதிர்ந்த ஓதுவார்களும் இது மரபு என்று சொல்லுகிறார்களே யன்றி, இதற்கு ஆதாரம் எதுவும் குறிப்பிடுவதில்லை. வேறு யாருக்குமே தெரிவதாயுமில்லை.

பஞ்சபுராணத்துக்கு ஒரு தோற்றுவாயைத் திருக்கோவையாருண்மை என்ற நூலில் காண்கிறோம். இவ்வுண்மை எழுதினார் யாரென்பது விளங்கவில்லை. சுந்தரதேசிகர் என்பவர் எனச்சிலர் கூறக்காண்கிறோம். இக்கூற்றுக்கு ஆதாரம் யாது என்று விளங்க வில்லை. இவ்வுண்மையை 1885–இல் சுவாமிநாத பண்டிதர் என்று பின்னர் பெயர் வழங்கிய சி.தம்பையா பிள்ளை அச்சிட்டார். "திருக்கோவை யாரின் துறைகளுக்கு ஆகமார்த்த மாகிய குறிப்புப் பொருளைத் திருச்சிற்றம்பலக் கோவையாருண்மை எனப் பெயர் தந்து எழுதிவைத்த அருந்தவக் கொள்கை அறிஞர் பெருமானார் இன்னார் என்பது தெரியவில்லை" என்பது அவர் குறிப்பு. இவ் அறிஞர் காலமும் அறிதற்கியலவில்லை.

இந்நூலின் தொடக்கத்திலுள்ள ஒரு பகுதி இங்கு ஆராயத் தக்கது. – சந்தானாசாரியார் திருவாக்குக்கள் சாத்திரமாயிருக்கும்; சமயாசாரியார் திருவாக்குக்கள் அதன் அனுபவப் பயனாகிய தோத்திரங்களாயிருக்கும். அந்தத் தோத்திரங்களாகிய மெய்ஞ்ஞானத் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு, திருத்தொண்டர் புராணம் என்னும் இவைகள் சைவத்துக்கும், சிவபூஜைக்கும், சிவாலயநித்திய நைமித்திகத்துக்கும் அடியவர் பூஜைக்கும், நியம மந்திரங்களாயிருக்கும்" என்ற பகுதி காண்க. இங்கு இவர் கூறியுள்ள திருமுறைகளே பின்னர்ப் பஞ்சபுராணம் என ஐந்தாக வருவதற்குத் தோற்றுவாய் என நாம் கருதலாம். இவர் கூறும் திருவாசகம் திருக்கோவையார் என்ற இரண்டும் எட்டாம் திருமுறை. இவ்விரண்டையும் ஒருவரே பாடியமையால் ஒன்றாகவே நாம் கொண்டு எண்ணினால் ஐந்து நூல்கள் கிடைக்கின்றன. சம்பந்தர் பாடல் திருக்கடைக்காப்பு என்றும், அப்பர் பாடல் தேவாரம் என்றும், சுந்தரர் தேவாரம் திருப்பாட்டென்றும் வழங்கின. எனினும் மூவர் பாடலும் தேவாரம் என்ற ஒரே பெயருள் அடங்குகின்றன. திருவிசைப்பா, திருப்பல்லாண்டு பலர் பாடியிருப்பினும் திருப்பல்லாண்டு பாடியர், அவருள் ஒருவர் மட்டுமே ; மேலும் சைவத்தில் பல்லாண்டு கூறும் நூல் வேறு இல்லாமையாலும், வைணவர் நித்தியானுசந்தானத்தில் பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு சேர்ந்திருத்தலாலும், இந்தப் பல்லாண்டும் சைவப் பதிகம் பாடும் நியமத்தில் தனியான இடம் பெறுதற்குரியது என்று நம் முன்னோர் கருதினர் போலும். எனவே திருக்கோவையாருண்மையாசிரியர் கூறியுள்ள நூல்களைப் பின்வருமாறு எண்ணி ஐந்தாகக் காட்டலாம்;

1. தேவாரம்
2. திருவாசகம் – திருக்கோவையார்
3. திருவிசைப்பா
4. திருப்பல்லாண்டு
5. திருத்தொண்டர்புராணம்.

இவை ஐந்தாகின்றன. இவ்வகுப்பே பின்னால் வழங்கிய பஞ்சபுராணம்.

இவை ஐந்தாகின்றன. இவ்வகுப்பே பின்னால் வழங்கிய பஞ்சபுராணம். இப்பெயரின் ஈற்றில் வழங்கும் புராணம் என்பதுகூட இவ்வைந்து நூல்களுள் இறுதியிலுள்ளது புராணம் என்று முடிவதால் அப்படியே அமைத்துக் கொள்ளப்பெற்ற தென்று நாம் யூகிக்கலாம்.

இனி இவர் கூற்றில் மற்றொரு பகுதி இங்குக் கருதத்தக்கது. இத்தோத்திரங்கள் – சைவத்துக்கும் சிவபூசைக்கும் சிவாலய நித்திய நைமித்திகத்துக்கும் அடியவர் பூசைக்கும் நியமமந்திரங்களாயிருக்கும்– என்று கூறுகிறார். இதன் பொருளாவது, சிவாலயத்தில் சிவாசாரியர் சிவபூசை செய்துமுடித்து வேதமந்திரங்களை ஓதுவது போல, இத்தோத்திரங்கள் தமிழில் ஓதத்தக்க மந்திரங்களாகும் என்பதே ; வேத மந்திரங்களை வடமொழியில் வேதியர் ஓதிவர, இத்திருமுறை மந்திரங்களை ஓதுவார்கள் தமிழில் ஓதி வந்தார்கள்.

இந்த நூலில் இவ்வாசிரியர் இவ்வாறு குறிப்பிட்டிருப்பது இன்றுள்ள நடைமுறைக்குப் பொருத்தமாயிருக்கிறது. ஆனால் முன்னிருந்த

நடைமுறையை மனத்துட்கொண்டு இவர் இவ்வாறு எழுதினாரா, அல்லது இவர் இவ்வாறு எழுதியதே பின்னர் நடைமுறையாக வழக்கத்துக்கு வந்துவிட்டதா என்பது விளங்கவில்லை. அன்றியும் பஞ்சபுராணம் பாடுவது பற்றிய குறிப்பெதுவும் வேறெங்கும் காணப்பட வில்லை. சித்தாந்த சாத்திரம் செய்த உமாபதியார் காலம் 14ஆம் நூற்றாண்டின் தொடக்கம். திருக்கோவை யாருண்மை ஆசிரியர் சந்தான குரவர் எனக்குறிப்பிடுவதால், அவர் இதற்குப் பிற்பட்டவராவது தெளிவு. இந்நூல் செய்த காலம் 15-16 நூற்றாண்டு ஆகலாம் எனக் கருத இடமுண்டு.

திருக்கோவையாருண்மையாசிரியர் கூறியுள்ள கருத்துக்களையும் அவர் காட்டும் பேரின்பப் பொருளையும் திருவாசக உரைசெய்த காழித்தாண்டவராயர் அப்படியே ஏற்றுக்கொண்டு அவற்றை இடைப்பெய்து தம் உரையை எழுதியிருக்கிறார். இவர்காலம் 19ம் நூற்றாண்டின் தொடக்கம்.

சைவப் பாதிரியாராகச் சென்ற நூற்றாண்டில் விளங்கியவர் ஆறுமுக நாவலர். அவர் இராமலிங்க சுவாமிகள் பாடிய பாடல்களைத் திருவருட்பா என்று வழங்குவது தவறு என்றும், தேவாரம் முதலிய அருட்பாக்களை மட்டுமே அருட்பா என்று வழங்க வேண்டும் என்றும் கூறி, இது பற்றிய பல கண்டன நூல்கள் எழுதி வெளியிட்டார். இக்கண்டனங்களில் அக்காலத்திலிருந்த சைவ அறிஞர் பலர் பங்கு கொண்டு இருந்தனர். இக்கண்டன நூல்களிலிருந்து ஒரு குறிப்புக் கிடைக்கிறது. ஆறுமுக நாவலர் எழுதிய கண்டன நூலொன்று, போலி அருட்பா மறுப்பு என்ற பெயரால் 1866-இல் வெளிவந்தது. இது மாவண்டூர் தியாகேசமுதலியார் பெயரில் அச்சிடப் பெற்றது. இதனுள் திருவாவடுதுறை ஆதீன மாணாக்கரான இராமசுவாமிப் பிள்ளை நாவலருக்கு எழுதிய நீண்ட கடிதம் ஒன்று வெளியாகி இருக்கிறது. அதனுள் காணும் பின்வரும் பகுதி இங்கு கருதத்தக்கது!

"தேவாரம் முதலிய பன்னிரண்டு திருமுறைகளும் திருவருளினாலே பாடப்பட்டனவே. அவற்றுள் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம் துதிரூபம் அல்லாமையாலும், பதினோராம் திருமுறைப் பிரபந்தங்கள் பெரும்பாலும் பண்ணுக்கு இசையாத பாவினங்களாகியும் விநாயகக் கடவுள், முருகக் கடவுள், நாயன்மார் இவர்கள் பரமாக விரவியும் இருத்தல் முதலிய காரணம் பற்றியும், அவ்விரண்டு திருமுறைகளல்லாத தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகிய ஐந்தும் சிறப்பாக எடுத்துச் சிவாலயம் முதலிய இடங்களிலே நித்திய நைமித்திகங்களிலே பண்டைக் காலந் தொடங்கி ஓதப்பட்டு வருகின்றன. இவை யோகரூடியாக அருட்பா என்று ஆன்றோராலே தொன்று தொட்டு வழங்கப் படுகின்றன. அருட்பா வென்னும் பெயர்காரணம் கருதாவழி இடுகுறி மாத்திரையாகத் தேவாரம் முதலிய ஐந்திற்கே சென்றும், காரணம் கருதியவழி ஏனைய அருள் பெற்றோரால் பாடப்பட்ட பாவுக்குச் சென்றும் வருகிறது. (காரணங் கருதிய வழி என்பது, சிவஞான தேசிகர் பாடிய துண்டி விநாயகர் திரு அருட்பா, கதிர் காம வேலவர் திருஅருட்பா, தக்ஷிணாமூர்த்தி திரு அருட்பா முதலியன.) பின்னரும் இக்கடிதத்தில் "சிவாலயம் ஆதீனமடாலயம் முதலியவற்றிலெல்லாம் தேவாரம் முதலிய ஐந்திற்கும் அருட்பா என்றும் திருநாமம் வழங்கிவருவதை ஓதுவார் முதலானவர்களைக் கொண்டு நேரே ஒப்புவித்து, இன்னும் ஆதீன முதலியவற்றில் விசாரித்தால் ஐயந்தீர்ந்துய்யலாம் என்றும்.... கூறினேன்" என்று காணப்படுகிறது.

இங்கு ஆன்றோராலே ஆலயத்தில் பண்டைக் காலந் தொடங்கி ஓதப்பட்டு வருகின்ற பாடல்கள் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்ற ஐந்து எனவும் சொல்லப் பட்டுள்ளது. இவரும் பண்டைக் காலந் தொடங்கி இவை சிவாலயங்களிலே ஓதப்பட்டு வருகின்றன என்று கூறினாரேயன்றி இவற்றை மட்டும் தொகுத்தது யார், எக்காலம் என்று கூறவில்லை ; இவற்றிற்குப் பஞ்ச புராணம் என்பது பெயர் என்பதையும் கூறவில்லை.

அருட்பா மருட்பா கண்டனமும் வழக்கும் ஏற்பட்ட காலத்தில், ஆறுமுக நாவலர் அருட்பா என்று மேற்குறிப்பிட்ட ஐந்து நூலையும் ஒரே புத்தகமாக அச்சிட்டார். தேவாரம் என்பது நல் பெயராகியும் கூட அது மிகவும் விரிந்ததானபடியால் சிறுநூலாக்கக்

கருதிய ஆறுமுக நாவலர், அகத்தியர் திரட்டிய தேவாரத்திரட்டை மட்டுமே தம் தொகுப்பினுள் சேர்த்தார். அவர் அச்சிட்ட அருட்பாத் தொகுப்பு பின்வரும் ஐந்து நூல்களைக் கொண்டது.

1. அகத்தியர் தேவாரத்திரட்டு
2. திருவாசகம் முழுமையும்
3. திருவிசைப்பா முழுமையும்
4. திருப்பல்லாண்டு முழுமையும்
5. பெரியபுராணச் செய்யுள் திரட்டு (37 பாட்டு)

இவைகளே பஞ்சபுராணம் பாடுவதற்கான ஆதார நூல் என்ற கருத்தோடு பாடுகின்ற ஓதுவார்களுக்கு உதவியாக இருக்கவல்ல அடக்கமான கைப்புத்தகமாய் இருக்கும்படி வெளியிடப்பட்டன என்று நாம் கருதலாம். இப் பெரியபுராணச் செய்யுள் திரட்டு என்பது, ஆறுமுக நாவலர் காலத்துக்கு நெடுநாள் முன்னதாகவே வழக்கில் இருந்தது என்றும் அறிகிறோம். பாட்டு வழக்கிலும் இத்திரட்டு பயின்று வந்தது ; ஓலைச்சுவடியாகிய ஏட்டு வழக்கிலும் இருந்திருக்கிறது. நாலாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் கொண்ட திருத்தொண்டர் புராணத்தில் பொருத்தமான பாடல்களைத் தேர்ந்து எடுத்துப் பாடுதல் ஓதுவார்களுக்கு எளிதன்று என்ற நினைவால் அவர்களுக்குப் பயன்படும் பொருட்டு இத்திரட்டு நம் முன்னோரால் தொகுக்கப் பெற்றிருத்தல் வேண்டும். ஆறுமுக நாவலர் இதை எடுத்து அச்சேற்றினார் என்றே தெரிகிறது.

பஞ்சபுராணம் பாடிய ஓதுவார்கள் அந்தந்தத் தலத்திற்குரிய தேவாரங்கள் சிலவற்றை மனப்பாடம் செய்து பாடினார்கள். தலப் பாசுரங்கள் தெரியாதபோது, அகத்தியர் தேவாரத்திரட்டில் உள்ள பாசுரத்தைப் பாடுவது வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. பாசுரம் இல்லாத தலங்களுக்கும் இதிலிருந்து பாடல்களைப் பாடிவந்தார்கள்.

இங்ஙனமாக இப்புத்தகம் தேவாரம் கற்று நன்றாகப் பாட வேண்டும் என்ற கருத்துடைய ஓதுவார்களுக்கும், தேவாரம் கற்க விரும்பினோர்க்கும், பேருதவியாக இருந்தது. திருப்திகம் விண்ணப்பித்தல் என்பது பஞ்சபுராணம் பாடுதலே ; இவ்வருட்பாவே பஞ்சபுராணம் என்ற கருத்தும் நிலைபெறுவதாயிற்று. பன்னிரு திருமுறைகளும் பாடுகின்ற சந்தர்ப்பங்களில் திருமுறைகக்கு ஒரு பாடல் வீதம் பாடுவார்கள். திருக்கோவையாரும், திருப்பல்லாண்டும் சேர 14 பாடல்களும் ஆகும் ; திருப்பல்லாண்டு பஞ்சபுராணத்தில் ஒன்று ; அவசியம் பாடியே ஆகவேண்டும். ஆனால் திருக்கோவையார் மட்டும் அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது. எனினும் ஒன்பதாம் திருமுறை பாடும்போது, ஒரு பாடல் பாடினால் போதும். திருவிசைப்பா பாடினால் திருப்பல்லாண்டு பாட வேண்டுவதில்லை. திருப்பல்லாண்டு பாடினால் திருவிசைப்பா பாடவேண்டியதில்லை என்று வயது முதிர்ந்த ஓதுவார்கள் கூறக்கேட்டு இருக்கிறோம்.

திருமுறை வரிசையிலேயே பாடல்களைப் பாடவேண்டும் என்பது மரபு. ஆனால் திருவாரூரில் மட்டும், திருக்கோவையாரைப் பெரியபுராணத்தின் பிறகே பாடுவது வழக்கமாயுள்ளதென்று சொல்வர்.

பழைய சம்பிரதாயங்களை நன்கு கேட்டறிந்து மகாவித்துவான் மீனாட்சிசந்தரம் பிள்ளையவர்கள் தாம் தலபுராணம் பாடுங்காலங்களில் உரியனவற்றை ஆங்காங்கு அமைத்துப் பாடும் பழக்க முடையவர்கள். அவர்கள் பாடிய மாயூரப் புராணம் 1869 இல் அச்சாயிற்று சிவாலய தரிசனவிதி, ஆறாம் பாடலில், சிவபிரான் முன் நின்று என்ன அருட்பாடல்களைப் பாட வேண்டுமென்பதைக் கூறுகிறார்கள்:

"நிறையருட் பாடலாகி நிரம்புதே வாரம் யாரும்
அறைதிரு வாச கம்சீர் அமைஇசைப் பாபல்
லாண்டு குறைதவிர் புராணம் இன்ன கொண்டுறத்
துதித்தல் செய்து
மறைபுகல் விபூதி மேனி வளைந்திரு கையால் ஏற்று"

இங்குப் பஞ்சபுராணம் என்ற பெயர் சொல்லாமல், ஐந்து அருள் நூல்களையும் பாடவேண்டும் என்று அவர்கள் குறிப்பிட்டிருப்பதும், இம்மரபின் பழைமையை நன்குணர்த்தும்.



**பிரகாரத்திலே, அறுபத்து மூவர் மூர்த்தங்கள் உள்ளன. இந்த அறுபத்து மூவரும் மனிதர்களாகத் தோன்றியவர்கள்தாம். அப்படியிருக்கும்போது, அவர்களையும் நாம் வழிபாடு செய்ய வேண்டுமென்று திருக்கோயிலில் வைத்திருக்கின்றோமே – இது சரியா ?**

அடியார்களுக்குச் செய்த வழிபாடு ஆண்டவனுக்குச் செய்ததாக ஆகும். ஆகவே, அறுபத்து மூன்று நாயன்மார்களையும் ஆலயத்தில் சிலா உருவில் வைத்திருப்பது அவர்கள் செய்த அற்புதங்களையெல்லாம் நாம் நினைவு கூர்ந்து அவர்கள் போன வழியிலே நாமும் போக வேண்டும் என்பதற்காகத்தான்.

1. **தனேஷணை** : செல்வத்தின் மேல் வைக்கும் ஆசை
2. **தாரேஷணை** : மனைவியின் மேல் வைக்கும் ஆசை
3. **புத்ரேஷணை** : பிள்ளைகளின் மேல் வைக்கும் ஆசை

பிறவி நீக்கம் பெற இவ்வாசைகளை விட்டுவிடவேண்டும் என்பதை அடியார்கள் வரலாறு நமக்குப் புலப்படுத்துகிறது.

அமர்நீதி நாயனார், இறைவனுடைய கோவணத்துக்காக தராசில் தம் பொன்பொருள் அனைத்தையும் வைத்தார் என்றால், பொருளாசையை விட்டார் என்று பொருள் (இது தனேஷணை).

திருநீலகண்ட நாயனார், தம் மனைவியைத் தீண்டினால் திருநீலகண்டமென்று ஒதுங்கி வாழ்ந்தார் என்றால், பெண்ணாசையை விட்டார் என்று பொருள் (இது தாரேஷணை).

சிறுத்தொண்ட நாயனார் மகனை அரிந்து கறி சமைத்தார் என்றால், பிள்ளைப் பாசத்தை விட்டார் என்று பொருள் (இது புத்ரேஷணை)

ஆகவே, ஆசாபாசங்களை அறவே நீக்கிய அறுபத்து மூன்று நாயன்மார்களை ஆலயத்திலே வைத்து வழிபடுவது அவர்கள் போன வழியில் நாமும் போக வேண்டும் என்பதைக் குறிக்கத்தான்.

அடுத்து, திருக்கோயிலில் காரைக்கால் அம்மையார் மட்டும் இருந்த கோலத்தில் (அமர்ந்த கோலத்தில்) இருப்பார். இறைவனாலேயே 'நம்மைப் பேணும் அம்மை' என்று சிறப்பிக்கப் பெற்றவர் இவர். தாயார் இருக்க, பிள்ளைகள் எல்லாம் நிற்கும். எவ்வளவு உயர்ந்த நிலையில் உள்ள பிள்ளைகளானாலும் தாய்க்கு மரியாதை செய்யவேண்டும் என்ற உன்னத நெறியை நமக்குள் ஏற்படுத்தும் அறுபத்து மூவர் வழிபாடு மிகமிக இன்றியமையாதது.



## வடிவச் சிறப்பு

| | | |
|---|---|---|
| சாந்த வடிவம் | – | தக்ஷிணாமூர்த்தி |
| ஆனந்த வடிவம் | – | நடராசர் |
| கவர்ச்சி வடிவம் | – | பிக்ஷாடனர் |
| கருணை வடிவம் | – | சோமாஸ்கந்தர் |
| வேக வடிவம் | – | பைரவர் |
| இனிமை வடிவம் | – | கல்யாணசுந்தரர் |
| அனுக்கிரக வடிவம் | – | சண்டேசுவரர் |

## முப்பது கோடி தேவர்கள்

ஆதித்தர் 12, உருத்திரர் 11, அஸ்வினி தேவர் 2, வசுக்கள் 8 இவர்கள் மொத்தம் 33 பேர்கள். அவர்கள் அனைவரும் ஒருவொருக்கொருவர் கோடிவகைப் பரிவாரங்களுடன் இருந்ததால் இப்பெயர் பெற்றனர்.

# அஷ்டாங்க விமானங்கள்

– இரா. நாகசாமி

தமிழ்நாட்டில் கோயில்களைக் கட்டுவதற்கு உரிய விதிகளை, ஆகம நூல்களும், வாஸ்து சாஸ்திரங்களும் எடுத்துரைக்கின்றன. இவற்றின் அடிப்படையில்தான் கோயில் கட்டுவதற்கு மனை தேர்ந்தெடுப்பது, நிலத்தை சமன் செய்வது, கட்டிடங்கள் எழுப்புவதற்கு கீழே கோடுகள் வரைவது முதலிய அனைத்தும் இந்த நூல்களில் குறிக்கப்பட்டு இருக்கின்றன. இந்த அமைப்புகளுக்குப் பயன்படுத்தும் அளவுகோல் முதலியனவும் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதையும் இந்த நூல்கள் கூறுகின்றன. இந்த கட்டிட அமைப்புகள் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, அவற்றை விமானம், மண்டபம், பிரகாரம், மாளிகை, கோபுரம் என்றெல்லாம் பல்வேறு பகுதிகளுக்குப் பல்வேறு பெயர்கள் உண்டு. ஒவ்வொரு பகுதியும் அமைப்பில் பல அங்கங்களைக் கொண்டு விளங்குகின்றது. இவற்றை அடிப்படை அங்கங்களாக நூல்கள் குறிக்கின்றன. அடியிலிருந்து முடி வரையில் இந்த அங்கங்கள் பெயர் பெறுகின்றன. இந்த அங்கங்களைத் தமிழ்ப் பெயராலும் அறிந்து கொள்ளலாம். சமஸ்கிருதப் பெயரே பெரும்பாலும் நூல்களில் இடம்பெற்றுள்ளது. அடி, கால், தோள், கழுத்து, தலை, முடி என்று மனித அங்கங்களுக்கு நிகராக இவை குறிக்கின்றன. இதையே கரணம், பாதம், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்று சமஸ்கிருதத்தில் அழைப்பர். பெரும்பாலான கோயில்களில் இந்த ஆறு அங்கங்களும் இடம் பெற்றிருக்கும் ஆதலின், அக்கோயில் அமைப்பு ஆறு அங்க அமைப்பு ஷடங்க விமானம் என்று கூறுவார்கள். ஒரு சில விமானங்களில் நான்கு அங்கங்கள் மட்டும் உண்டு. இந்த அமைப்பில் பிரஸ்தரம், கிரீவம் இரண்டும் இருக்காது. உதாரணமாக, மாமல்லபுரத்தில் திரௌபதி ரதம் என்ற ஒரு கோயில் இருக்கிறது. இக்கோயில் ஒரு குடிசை வடிவில் அமைந்துள்ளது. இதில் கிரீவமும், பிரஸ்தரமும் இல்லை. ஆதலால், இதை 'நான்கு அங்க விமானம்' அல்லது சதுரங்க விமானம்' என்று கூறுவார்கள்.

எனவே, அங்கம் என்பது, கட்டிட அமைப்பின் பகுதி 4.6.8 என அவைகளின் எண்ணிக்கைகளைக் கொண்டு, விமானங்களை, சதுரங்கம், ஷடங்கம், அஷ்டாங்கம் என்றும் பிரிப்பது உண்டு. 4.6 அங்கங் களையுடைய விமானங்களை நமக்கு நூல்கள் எடுத்துரைக்கின்றன. ஆனால் அஷ்டாங்க விமானம் என்ற சொல்லும் பயன்படுத்தப்படுகின்றன. ஆயினும், அந்த எட்டு அங்கங்கள் எவை என்று தெளிவாக நமக்குத் தெரியவில்லை. நூல்கள் இது குறித்து வெளிப்படையாக ஏதும் கூறியதாகத் தெரியவில்லை.

விமான அமைப்பில் இப்போது மேலும் ஒரு கருத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும். விமானம் என்பது கர்ப்பகிருஹத்தைக்கொண்டு மேலே உயரமான அமைப்பாகும். பெரும்பாலான கோயில்களில், விமானங்களில் ஒரே ஒரு கர்ப்பக்கிருஹம் தான் காணப்படும். ஆனால் இதில் சில வேறுபாடுடைய கோயில்களும் உண்டு. உதாரணமாக, கர்ப்பகிருஹம் கீழே இல்லாமல், மேலே அமைக்கப்பட்ட விமானங்களும் உண்டு. இந்த அமைப்பை மாடக்கோயில் என்று கூறுவார்கள். சில கோயில்களில் கீழே ஒரு கர்ப்பகிருஹமும், முதல் மாடியில் ஒரு கர்ப்பகிருஹமும் என்று மூன்று கர்ப்பகிருஹங்களையுடைய விமானங்கள் ஒன்றின்மீது ஒன்றாக எடுக்கப்படுவதும் உண்டு.

இவ்வாறு அமைக்கப்படும் மூன்று கர்ப்பகிருஹங் களையுடைய விமானத்தின் தத்துவம் என்னவென்று எண்ணும் போது ஒரு உண்மை புலப்படும். பண்டைய இந்திய மரபில், மூன்று உலகங்களைக் குறிக்கும் மரபு உண்டு. கீழ் உலகு, நில உலகு, மேல் உலகு என இவை மூன்று உலகங்களாகப் பிரிக்கப்படும். இதையே பூ, புவஸ்,புவஹ என்றும் கூறுவர். பரம்பொருள் மூன்று உலகங்களிலும் பரவி நிறைந்து இருக்கிறது என்பதை எடுத்துரைக்கும் தத்துவமாக இது அமைகிறது. இந்த மூன்று கர்ப்பகிருஹங்களை அமைப்பதின் தத்துவம் இதுவே. இது சிவாலயங்களிலும், விஷ்ணு ஆலயங்களிலும் காணப்படும் மகத்தான தத்துவமாகும்.





இவ்வாறு எழுப்பப்பட்டுள்ள கோயில்களில் மிகவும் தொன்மையானதாக எஞ்சியுள்ளது மாமல்ல புரத்திலுள்ள தர்மராஜரதம் என்னும் கற்கோயிலாகும். இது சிவபெருமானுக்காக எடுக்கப்பட்ட கோயில். இந்தக் கோயில் அத்தியந்தராமன் என்று பெயர் கொண்ட பல்லவமன்னன் ராஜசிம்மனால் கி.பி.8-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எடுக்கப்பட்டது. இதை ஈஸ்வர கிரஹம் என்று கல்வெட்டு கூறுகிறது. மூன்றாவது நிலையிலுள்ள கர்ப்ப கிருஹத்தில் சோமாஸ்கந்தருடைய உருவம் காணப்படுகிறது. ஆனால் இந்த கோயில் முற்றுப் பெறவில்லை. இடைநிலையில் கர்ப்பகிருஹம் செதுக்கி முடிக்கப்படவில்லை. இதுவே நமக்கு கிடைத்துள்ள விமானங்களில் மிகவும் தொன்மையான விமானமாகும். இதற்கு அடுத்து காஞ்சிபுரத்தில் வைகுந்தநாதர் கோயில் என்று வழங்கப்படும் விஷ்ணுகிரஹம் இருக்கிறது. இதில் மூன்று கர்ப்பகிருஹங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக இருக்கின்றன. திருமாலுக்காக எடுக்கப்பட்ட கோயில் இது கி.பி.8-ஆம் நூற்றாண்டில் நந்திவர்மன் என்று பெயர் பெற்ற பல்லவ மன்னனால் எடுக்கப்பட்டது. இதற்கு பரமேச்வர விண்ணகரம் என்று பெயர் உண்டு. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்டது. பெருமாளுக்கு எடுக்கப்படும் மூன்று கர்ப்பகிருஹங்களையுடைய கோயில்களில், கீழே 'நின்றார்' ஆகவும், இடையிலே, 'இருந்தார்' ஆகவும், மூன்றாவது நிலையில், 'கிடந்தார்' (பள்ளிகொண்ட பெருமாள்) ஆகவும், அமைக்கப்படுவது மரபு. இது கட்டிட அமைப்பிற்கு மிகவும் எளிமையாகவும், அழகாகவும் இருக்கும். முதல் நிலையிலுள்ள கர்ப்பகிருஹம், நின்ற பெருமாளைக் கொண்டு விளங்குவதால் சற்று உயரமாக இருக்கும். அமர்ந்த நிலையில் இருக்கின்ற இரண்டாவது நிலையிலுள்ள கர்ப்ப கிருஹம் சற்று உயரம் குறைவாக இருக்கும். மூன்றாவது நிலையிலுள்ள படுத்தவரைக்கொண்டு விளங்கம் கர்ப்பிருஹம் மேலும் சற்று உயரம் குறைவாக இருக்கும். ஆதலால் மேலே செல்லச் செல்ல உயரத்தைக் குறைத்து கட்டிடத்தை எழுப்புவது, கட்டிடம் வலுவாகவும், அழகாகவும் அமைய உதவும்

காஞ்சிபுரத்திலுள்ள பரமேச்வர விண்ணகரத்தில் மூன்று கர்ப்பகிருஹங்கள் இருந்தபோதிலும், அவற்றிலுள்ள திரு உருவங்கள் நின்றார், இருந்தார், கிடந்தார் என்ற வரிசைப்படி இல்லை. இது ஏன் என்ற சரியாகத் தெரியவில்லை. திருமாலுக்கு எடுக்கப்படும் இதுபோன்ற வேறு சில கோயில்களும் இருக்கின்றன. ஒன்றின்மேல் ஒன்றாக மூன்று கர்ப்பகிருஹங்களைக் கொண்டு விளங்கு வதோடல்லமல், கீழ்நிலையிலும், இரண்டாவது நிலையிலும் ஒவ்வொரு திசைக்கும் ஒன்றாக கர்ப்பகிருஹம் அமைக்கப்படுவதும் உண்டு. மூன்றாவது நிலையில் மட்டும் ஒரே கர்ப்பகிருஹம் இருக்கும். ஆக, கீழ்நிலையில் நான்கு, இரண்டாவது நிலையில் நான்கு, மூன்றாவது நிலையில் ஒன்று என மொத்தம் ஒன்பது கர்ப்பகிருஹங்கள் இருக்கும். இவற்றில் கீழ்நிலையில் புருஷன், அச்சுதன், அநிருத்தன், பிரத்யுமன் என நான்கு வியூகங்களைக் குறிக்கும் மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்படும். மேல்நிலையில், மூலஸ்தானத்தில் அமர்ந்த நிலையில் விஷ்ணுவும், தெற்குப் பக்கத்தில் நாராயணன் உருவமும், மேற்குப் புறத்தில் நரசிம்மர் உருவமும், வடக்குப் பக்கத்தில் வராக மூர்த்தியும்காணப்படுகின்றன. இதுபோன்ற அமைப்பு மிகவும் தொன்மையான கோயிலான உத்தரமேரூரில் பல்லவர் காலத்தில் கட்டப்பட்டது. இன்றும் வழிபாட்டில் இருக்கிறது. இந்த அமைப்பு மரீசி சம்ஹிதை என்ற வைகானச ஆகமத்தில் குறிக்கப்பட்டு இருக்கிறது. இந்த உத்தமேரூர் கோயில், வைகானச மரீக்சீரசம்ஹிதைப்படி கட்டப்பட்டதாகும். பல்லவ மன்னன் நந்திவர்மன் காலத்தில் 8ம் நூற்றாண்டின் இறுதியில் கட்டப்பட்ட கோயில் இது. இதை காஞ்சிபுரத்து பரமேச்வரப் பெரும் தச்சன் என்னும் சிற்பி கட்டினான் என்று கல்வெட்டு கூறுகிறது.

இந்த அமைப்பையே தற்காலத்தில் அஷ்டாங்க விமானம் என்று பலர் கூறுகின்றனர். பக்கங்களில் உள்ள கர்ப்பகிருஹம் இல்லாமல் ஒன்றின்மேல் ஒன்றாக மூன்று கர்ப்பகிருஹங்களையுடையதாகக் கட்டப்பட்ட விமானங்கள், மதுரை, திருக்கோஷ்டியூர் ஆகிய இடங்களிலும் இருக்கின்றன. மதுரையிலுள்ள கூடல் அழகர் கோயில் 15-16ம் நூற்றாண்டில் கட்டப்பட்ட திருமால் கோயிலாகும்.

விஜயநகர மன்னர் கலைக்கு இது ஒரு எடுத்துக்காட்டு. திருக்கோஷ்டியூரில் உள்ள கோயிலும், சற்றேறக்குறைய அதே காலத்தில் திருப்பணி பெற்றிருக்க வேண்டும். 8-ம் நூற்றாண்டு தொடங்கி 16-ம் நூற்றாண்டு வரையில் இங்குமங்குமாக இவ்வாறு திருமாலுக்கு மூன்று அடுக்கு கர்ப்பகிருஹம் உள்ள கோயில்கள் எடுக்கப்பட்டு இருக்கின்றன. இவை அனைத்துமே பொதுப்படையாக, அஷ்டாங்க விமானம் என்று கூறுகிறார்கள். குறிப்பாக உத்தரமேரூர் சுந்தரவரதர் கோயிலை அஷ்டாங்க விமானம் என்றும் கூறுவர். இதை மாதிரியாகக் கொண்டுதான் பெசன்ட் நகர் மகாலக்ஷ்மி கோயில் கட்டப்பட்டுள்ளது. கடந்த 300 ஆண்டுகளுக்கு உள்ளாக இதுபோன்ற விமான அமைப்பு எங்கும் கட்டப்படவில்லை. மிகவும் அழகாக, அமைக்கப்பட்டுள்ள பெசன்ட் நகர் மஹாலக்ஷ்மி கோயில், இந்த 300 ஆண்டுக்குள் எடுக்கப்பட்ட ஒரு சிறந்த கட்டிட அமைப்பு எனலாம்.

முன்னர் கூறியபடி, அஷ்டாங்க விமானம் என்றால் என்ன என்பது நூல்களினால் தெளிவு பெறாத பொருளாகும். பல கர்ப்பகிருஹங்களின் எண்ணிக்கை கொண்டு, கீழ்நிலையில், நான்கு, இடைநிலையில் நான்கு, ஆக எட்டு கர்ப்பகிரஹங்கள் இருப்பதால் இதை அஷ்டாங்க விமானம் என்று கூறுகிறார்கள். உண்மையில் மூன்றாவது மாடியிலுள்ள கர்ப்பகிருஹத்தையும் சேர்த்து ஒன்பது கர்ப்பகிருஹங்கள் இருக்கின்றன. ஆதலால் அதன் அடிப்படையில், அஷ்டாங்க விமானம் என்று குறிப்பது பொருத்தமல்ல. கட்டுரையின் தொடக்கத்தில் கட்டிட அமைப்பின் அங்கங்கள் யாவை என்பதை குறித்துள்ளேன். பீடம், பாதம், பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபி என்று ஆறு அங்கங்களை, முக்கிய அங்கங்களாகக் குறித்தேன். இவற்றில் கோயிலின் உயரத்தையும், அழகையும் சிறப்பிப்பதற்காக பீடத்திற்கு அடியில் உபபீடம் என்ற ஒரு அங்கமும், கிரீவத்தின் அடியில் உபகிரீவம் என்ற அங்கமும் அமைக்கப்படும் மரபும் உண்டு. ஆறு முக்கிய அங்கங்களுடன் இந்த இரு அங்கங்களையும் உடைய விமான அமைப்பே 'அஷ்டாங்க விமானம்' என்று பெயர் பெறும் என்பது, கட்டிட அமைப்பிலிருந்து விளங்கும் உண்மையாகும்.



## ஆலய விமானங்களின் வகைகள்

ஆலய விமானங்களின் அமைப்பு மூன்று வகைப்படும்.

1. நாநகரம் – பீடம் முதல் அனைத்தும் சதுரமாக உள்ள விமானம். (வட இந்தியாவில்)
2. திராவிடம் – கண்டம் முதல் எண்கோணமாக உள்ள விமானம் (தென் இந்தியாவில்)
3. வேவசரம் – கண்டம் முதல் வட்டமாக உள்ள விமானம்.

(மத்திய இந்தியாவில்)

நாநகரத்தை ஆணாகவும், திராவிடத்தைப் பெண் விமானமாகவும், வேவசரத்தை அலி விமானமாகவும் கூறுவர். விமானத்தின் கீழ்ப்புறம் முருகனையும், தென்புறம் தக்ஷிணாமூர்த்தியையும், மேற்புறம் விஷ்ணுவையும், வடப்புறம் பிரம்மனையும் சுதையால் அமைப்பர். விமானத்தின் மேல்பாகத்தில் இடபத்தையாவது பூதத்தையாவது அமைப்பது மரபு.

## ஆலய உள்ளமைப்பு உணர்த்தும் பொருள்

ஆலயத்தின்
1. கர்ப்பக்கிரகம் – மூலாதாரம்
2. அர்த்த மண்டபம் – சுவாதிஷ்டானம்
3. மஹா மண்டபம் – மணிபூரகம்
4. ஸ்நான மண்டபம் – அனாகதம்
5. அலங்கார மண்டபம் – விசுத்தி
6. சபா மண்டபம் – ஆஞ்ஞை

என்பவற்றை உணர்த்துகின்றன.

# வழிபாட்டின் அவசியம்

(மதுரை ஆதீனகர்த்தர்
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசார்ய சுவாமிகள்)

"கடவுளை நோக்கிச் செய்கின்ற பிரார்த்தனை அல்லது வேண்டுகோள் பயனுடையதாக இருக்குமா? அப்படி ஒரு கடவுள் இருக்கிறா? அப்படி இருப்பாரென்றால், நமக்கும் அவருக்கும் எவ்விதத் தொடர்பும் இருக்கிறதாகத் தெரியவில்லையே? அவ்வித மூட நம்பிக்கை நமது நாட்டை விட்டுப் போனாலன்றி, நம் நாடு முன்னேற முடியாது" என்று சொல்லுகின்ற பலர் ஆலய வழிபாட்டிலும் வீட்டு வழிபாட்டிலும் தலைசிறந்த நமது தமிழகத்திலேயே உற்பத்தியாகி இருக்கிறார்கள். இவை வெளிநாடுகளிலிருந்து விதைத்த விதைகளால் ஏற்பட்டவை. இப்படிப்பட்ட கேள்விகளையும், இதற்குமேல் அதிகமான கேள்விகளையும் பல்லாயிர வருஷங்களுக்கு முன்பே கேட்டு, அவர்களுக்கெல்லாம் பல நியாயங்களும் நிரூபணங்களும் கொடுத்து, ஒப்புக்கொள்ளுமாறு நம் அருளாளர்களும், ரிஷிகளும் செய்து, அவற்றைப் பின் சந்ததியார் களான யாவரும் உணர்ந்துகொள்ளுமாறு ஏடுகளில் எழுதியும் உதவியிருக்கிறார்கள். அந்த உண்மைகளை நாம் திருவருளால் கண்டுணர்ந்து இன்று வெற்றி முரசு கொட்டிக் கையாண்டு வருகின்றோம். அவ்வாறு கேட்கின்ற ஒருவரிடம் நாம் முதலாவதாக ஒரு கேள்வி கேட்கிறோம்.

"நீ இந்த உலகத்தில் பிறந்து, நன்றாக உண்டு வளர்ந்து, இவ்வாறு பேசுவதற்கு மூல காரணம் உன்னுடைய தந்தையும் தாயுமே என்பதை ஒப்புக்கொள்கிறாயா ?" என்பதே அந்தக் கேள்வி. "ஆம்" என்று ஒப்புக்கொண்டால் மட்டும் மேற்கொண்டு பேசுவோம்; மனிதனான எவனும் ஒப்புக்கொள்ளாதிருக்க முடியாது. "உன்னை உன்னுடைய அம்மாதானே பத்து மாதம் சுமந்து பெற்றெடுத்து, பாலூட்டித் தாலாட்டி, உணவு கொடுத்து வளர்த்து வந்தாள்? அப்படியிருக்க, நீ யாருடைய குழந்தை என்று கேட்டால், நீ ஏன் அம்மாவின் பெயரைச் சொல்லாமல், அப்பாவின் பெயரைச் சொல்லி, அவருடைய மகன் என்று சொல்லுகிறாய்?" என்று பின் கேட்போம்.

உன்னைப் பெற்றெடுத்தது உன் தாய்தான் என்பதே அவள் சொல்லத்தான் தெரியுமே தவிர நீ அறியாதிருக்க, தகப்பனார் பெயரை உன் தாயார் சொன்னதைக் கேட்டுத்தானே ஒப்புக்கொண்டு சொல்லி வருகிறாய்? என்போம். "ஆமாம்" என்று சொல்லாமல் தீராது. தாய்க்கே தான் பெற்ற பிள்ளையின் தகப்பனார் யார் என்று தெரியாத நிலை இருந்தால், தாயின் விலாசத்தைப் போட வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. தாயின் பெயரைச் சொல்லாததும், தகப்பனார் பெயரையே சொல்லி வருவதும் உலக முழுவதிலும் நடைபெறும் வழக்கம் ஆகும். அதற்கு மூல காரணம் ஒன்று உண்டு. அதாவது, ஒரு விளை நிலம் ஒருவனுக்குச் சொந்தமாக இருக்க, அதில் உழவு செய்து வித்திட்ட அவனுக்குத்தான் அந்த நிலத்தில் விளைந்து வந்த பயிர் சொந்தமாகும். அதுபோல், மனைவி கணவனுடைய உடைமை. வித்திட்டவனும் கணவன். ஆகவே, கணவனுடைய உடைமையான மனைவியிடத்தில் உற்பத்தியான குழந்தைகள் தந்தையின் சொந்தக் குழந்தைகளாகின்றன. அதனாலேயே பெண்களெல்லாம் கற்புடைய வர்களாக இருக்கவேண்டுமென்பது உலக நீதி ஆயிற்று.

பின்வரும் கேள்வி, "உனக்குக் கல்யாணமாகி யிருக்கிறதா?" என்பதாகும். "ஆம்" என்பான்.

"பிள்ளைகள் இருக்கின்றனவா?"

"ஆம் ; இருக்கின்றனர்."

"நீயும் உன் மனைவியும் விரும்பியவண்ணம் குழந்தைகள் பிறந்தனவா?"

"இல்லவே இல்லை" என்பான்.

ஆறாம் ஜார்ஜ் மன்னருக்கும், நேருஜிக்கும் எவ்வளவோ வசதிகள் இருந்தும் ஆண் குழந்தைகள் இல்லை என்பதும், பல பெரிய பணக்காரர் களுக்கும் பதவியில் உள்ளவர்களுக்கும்

சில வைத்திய நிபுணர்களுக்கும், விஞ்ஞானி களுக்கும் குழந்தையே இல்லை என்பதும் யாவரும் அறிந்த உண்மையாகும். அதற்கும் உண்மையான ஒரு காரணம் உண்டு.

அது எந்த மனிதனும் தன் விருப்பம் போல் ஆண் மகவுக்குரிய விந்தையோ, பெண் மகவுக்குரிய விந்தையோ உற்பத்தி செய்து உண்டாக்கிக்கொள்ள முடியாததே ஆகும். அந்த விந்தை எல்லாம் வல்ல கடவுள் கொடுத்துத்தான் எந்தத் தந்தையும் பெறவேண்டியிருக்கிறது. கடவுள் கொடுக்க, தந்தை பெற்று, பின் தாய் அதனைப் பெற்றதன் காரணத்தினாலேயே தாய், தந்தையரைப் பெற்றவர்கள் அல்லது பெற்றோர்கள் என்று சொல்லுகிறோம்.

இந்த உண்மையை உணர்ந்த அருளாளர்கள் தந்தையை இரண்டு மாதம் தங்குகின்ற நாற்றங்காலாகவும், தாயாரைப் பத்து மாதம் வளர்க்கின்ற விளைநிலமாகவும், இரண்டையும் உடையவர் கடவுளே என்றும் அவற்றில் வித்திட்டவரும் கடவுளே என்றும் கண்டு, ஆண்டவனே உலகத்தில் பிறந்திருக்கிற எல்லா மனிதர்களுக்கும் எல்லாப் பிறவிகளுக்கும் உண்மையான அம்மையப்பன் ஆகின்றான் என்றும் அருளியுள்ளனர். இந்துக்கள் கடவுளை, "அம்மையே அப்பா" என்றும், "எந்தையாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும், தந்தை தாய் தம்பிரான்" என்றும், கிறிஸ்தவர்கள், "நாமெல்லாம் பரமண்டலத்திருக்கின்ற பிதாவின் குழந்தைகளே" என்றும், இஸ்லாமியர்கள்,"கடவுளே மனிதர்களைப் படைத்தார்" என்றும் கூறி வருகிறார்கள். யாரும் உயிர்களைக் கடவுள் படைத்ததாகச் சொல்லவில்லை.

மூன்றாவது கேள்வி ; "உனக்கு ஒரு பெயரிடப் பெற்றிருக்கிறதல்லவா? அந்தப் பெயர் கண்ணுக்குத் தெரியாத உயிருக்கு இடப்பட்டதா? கண்ணுக்குத் தெரிகின்ற பாரமுள்ள உடலுக்கு இடப்பட்டதா? இரண்டும் சேர்ந்ததற்கு இடப்பட்டதா? அல்லது வேறொரு பாரமில்லாத உள் உடலுக்கு இடப்பட்டதா? எப்பொழுது இடப்பட்டது ?" என்று கேட்போம்.

"நான் பிறந்த பின்தான் பெயரிட்டிருக் கிறார்கள். ஆணா பெண்ணா என்று பார்த்து, என் பெற்றோர்களே பெயரிட்டிருக்கிறார்கள்" என்றும், இந்தப் பாரமுள்ள உடலுக்குத்தான் பெயரிட்டி ருக்கிறார்கள் என்றும் (நாம் எழுதியிருக்கிற புத்தகத்தைப் படித்தறியாத) எவரும் சொல்லுவர். ஆனால், உண்மையில் மனிதராகப் பிறந்திருக்கிற எவர்க்கும் பெயரிட்டவர் கடவுளேயாவர்.

ஒருவரை ஆணாகவோ, பெண்ணாகவோ பிறக்கச் செய்யவேண்டிய தகப்பனாருடைய உடலில் அதற்குரிய அணுப்பிரமாணமுள்ள அதிசூக்குமமான வித்தைச் செலுத்தும் முன்னரேயே அவருடைய வினைகளுக்குத் தகுந்த தலையெழுத்தை ஆணுக்கு வலது உள்ளங் கையிலும், பெண்ணுக்கு இடது உள்ளங்கையிலும் சுருக்கெழுத்துப் போன்ற இரேகைகளாகப் பொறித்து, இன்ன ஊரில், இன்ன சாதியில், இன்ன பெற்றோருக்கு, இன்ன பெயரோடு, இன்ன விநாடியில், இன்ன இன்ன கிரக நிலையில் பிறக்க வேண்டுமென்று கடவுளே தீர்மானித்து, அதன்படி பிறக்கச் செய்து, அவர் இட்ட பெயரையே இடும்படியாகவும், அவரவர் செய்த புண்ணய பாவத்திற்கேற்ப இன்ன இன்ன இன்பம், இன்ன இன்ன துன்பம் அநுபவித்து வருமாறும் ஆட்சிபுரிந்து வருகிறார். அந்தப் பெயரும் சொப்பனத்தில் பாரமுள்ள உடலின் உதவியின்றி, இன்ப துன்பம் அநுபவிக்கின்ற பாரமில்லாத உள்ளுடலுக்கே இட்டிருக்கிறார்.

இந்த அரிய பெரிய பேருண்மையை முதல் முறையாகக் கேட்கின்ற அனைவரும் ஆச்சரியப்படாமல் இருக்க முடியாது. ஒரு வேளை நமக்கு மூளைக் கோளாறாக இருக்கலாமோ என்றுகூடச் சில ஆத்திரக்காரர்கள் நினைக்கக் கூடும். நாம் இதனுடைய உண்மையைச் சோதித்து உணருவதற்காக ரூபாய் ஒரு லக்ஷத்திற்கு மேல் செலவு செய்த பின் இவ்விதம் கூறுகின்றோம் ; திருவள்ளுவர்,

*"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்-அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு"*

*"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் - அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்பது அறிவு "*

என்று கூறியிருப்பதனால், நாம் கூறும் இந்த உண்மையைச் சோதித்துப் பார்த்த பின் அதைப் பற்றி ஏதாவது சொல்லவேண்டுமே தவிர, கேட்ட மாத்திரத்தில் யாரும் எதையும் மறுத்தால், அது அறிவுடைமையாகாது.

பெயர்களைக் குறித்து, கிறிஸ்துவ வேத நூலில், பிரசங்கி ஆகமம்–அதிகாரம் 6–வசனம் 10–ல் "இருக்கின்றவன் எவனும் தோன்று முன்னமே பெயரிடப் பெற்றிருக்கிறான்.

அவன் மனுஷன் என்பது தெரிந்திருக்கிறது" என்றும், இரேகை சாஸ்திரத்தைக் குறித்து யோபு ஆகமம்–அதிகாரம் 37–வசனம் 7–இல், "தாம் உண்டாக்கின சகல மனுஷரும், தம்மை அறியும்படிக்கு, அவர் சகல மனுஷருடைய கையையும் முத்திரித்துப் போடுகிறார்" என்றும் கூறியிருக்கிறது. உதாரணமாக நாகர்கோவில் ஸ்ரீ ஆறுமுக நாவலரது நாடி சாஸ்திர ஏட்டில் அவருடைய பெயரை, "ஐந்தும் ஒன்றாம் வதனமெனப் பெயரும் சூட்டி" என்று கண்டிருந்தது. ஐந்து + ஒன்று = ஆறு ; வதனம் என்றால் முகம். ஆறுமுகம் என்பது ஆண்டவன் இட்ட பெயர். ஸ்ரீவைகுண்டத்திலுள்ள ஒரு கத்தோலிக்கக் கிறிஸ்துவ அன்பருக்கு, "சாவில் ஆறும் சாவில் ஒன்பதும் இவன்தன் நாமம்" என்று கண்டிருந்தது. 'ச' என்ற எழுத்து வரிசையில் ஆறாவது எழுத்து 'சூ' ; ஒன்பதாவது எழுத்து 'சை' ; அவரது தந்தை இட்ட பெயரும், ஆண்டவன் கொடுத்த பெயரும் சூசை என்பதாகும். ஓர் இந்துவைப் போல மாறுவேஷம் போட்டுக்கொண்டு சென்ற மதுரையிலுள்ள இஸ்லாமியருக்கு, "அப்துல் ரஹ்மான்" என்று பெயர் கூறப்பட்டிருக்கிறது. ஓர் ஆங்கிலேயர் பார்த்தபொழுது, "முழத்தில் பாதி இவன்தன் நாமம்" என்றிருந்தது. அவரது பெயர் "ஜான்" என்பதாகும். கோவையில் கௌமார மடத்தை நிறுவிய தலைவருக்கு, "இராமக்குட்டி" என்றும், பின் துறவு பூண்டு இராமானந்தர் ஆவார் என்றும் கண்டிருந்தது.

இவற்றின் உண்மைகளை, சென்னை அரசாங்கத்தார் கை இரேகைகள் சம்பந்தமாகச் சப்த ரிஷி நாடியின் பழைய ஏட்டுப் பிரதிகளிலிருந்து பல புத்தகங்கள் வெளியிட்டு இருக்கிறார்கள். தமிழ்நாட்டில் கந்தர் நாடி, காக்கையர் நாடி, கௌசிகர் நாடி, சிந்தாமணி, அநாகத வேதம் முதலிய பிற இரேகை சாஸ்திரங்களும் இருக்கின்றன. கடவுள் கொடுத்திருக்கும் அவ்விதத் தீர்ப்புகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாக இருப்பதற்குக் காரணம் அவரவர் சுய அறிவு கொண்டு முன் பிறவிகளில் செய்த நல் வினை, தீவினைகளில் ஏற்பட்ட வேற்றுமைகளே தவிரக் கடவுளது பக்ஷபாதமுள்ள செயலால் அல்ல என்பதற்குரிய நிரூபணங்களும் இரேகை சாஸ்திர ஏடுகளில் காணப்பெறுகின்றன. கடவுள் கொடுக்கிற நியாயத் தீர்ப்பில் தவறு ஏதும் இருக்க முடியாது. ஏனெனில் அவரே நாம் செய்கின்ற செயலைப் பார்த்துப் பதிவு செய்துகொண்டிருக்கிறார். அது எப்படி முடியும் என்று சிலர் கேட்கலாம்.

சிற்றறிவும் சிறு ஆற்றலும் உடைய மனிதர்களே ஒருவர் பேசுகின்ற பேச்சுக்களையும் பாடுகின்ற பாட்டுக்களையும் ரேடியோ (Radio)க் கருவிமூலம் எங்கும் கேட்கவும், அவற்றை ஒலிப்பதிவு செய்து பின்னால் எப்பொழுது வேண்டுமென்றாலும் எந்த இடத்திலும், பிறர் கேட்கும்படி 'டேப் ரிக்கார்டர்' கருவி மூலம் செய்யவும் முடிகின்றதென்ற உண்மையை யாவரும் அறிவர். அதேபோல, ஒருவருடைய உடலின் உருவத்தையும், அசைவையும், தொழிற்பாட்டையும் தொலைக்காட்சி (Television)க் கருவிமூலம் தொலைவிலுள்ளவர்கள் கண்டுகொள்ளுமாறு செய்யவும் முடிகிறதென்ற உண்மையையும் யாவரும் அறிவர். ஆனால் முற்றறிவும் முடிவில்லாத ஆற்றலும் உடைய கடவுள் நமக்கு டேப் ரிக்கார்டர்' கருவியையும், டெலிவிஷன் கருவியையும் ஒன்று சேர்த்து ஒவ்வொருவரது நெற்றியிலும் அபூர்வமாக அமைத்திருக்கிறார் என்பதைப் பலரும் சிந்தியாதிருக்கிறார்கள். அதனாலேயே ஏதாவது ஒன்றை நினைவிற்குக் கொண்டுவர வேண்டுமானால் புருவங்களை உயர்த்தி நெற்றியை அழுத்துகிறோம். அவ்வித அபூர்வமான கருவியைக் கருணையுள்ள கடவுள் நமக்குத் தந்து உதவியிருப்பதனாலேயே நாம் 5–ஆவது பிராயத்திலிருந்து படித்தவற்றையும் பார்த்த வற்றையும் நினைவுபடுத்திப் பிறருக்குச் சொல்லக்கூடிய பாக்கியம் பெற்றவர்களாக இருக்கிறோம்.

மனிதர்களுக்கு அவ்வித அபூர்வமான கருவிகளைக் கொடுத்திருக்கும் கடவுளுக்கு நாம் எண்ணுவதையும், பிரார்த்திப்பதையும், பேசுவதையும், செய்வதையும் பதிக்கக்கூடிய ஆற்றல் நிச்சயமாக உண்டு என்பதை யாவரும் ஊகித்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

நான்காவது கேள்வி : "உன்னுடைய தாய் தந்தையர் இறந்து போனதாகச் சொன்னாயே ; நீ இவ்வுலகில் செய்கின்ற காரியங்களையும், பேசுவதையும், நினைப்பதையும் அறிய முடியா தென்றுதானே நினைத்துக் கொண்டிருக்கிறாய் ?" என்பதாகும். "அவர்களைத்தான் சுட்டு எரித்துவிட்டோமே ; அவர்கள் எப்படி அறிய முடியும்?" என்று கேட்கலாம். "உனக்குப் பெயரிடப் பெற்றிருக்கிறதே, அந்தப் பெயர் பாரமுள்ள உடலுக்குமல்ல, உயிருக்குமல்ல. சொப்பனத்தில் தொழிற்படுகின்ற பாரமில்லாத உள்ளுடலுக்கே" என்று முன்னரேயே கூறியிருக்கிறோமல்லவா? அந்த உடலையே "ஆவி உடல்," "நுண்ணுடல்," "புகழுடல்" என்று தமிழிலும், சூக்கும சரீரம், யாதனா சரீரம், பிராணமய கோசம் என்று வடமொழியிலும், கோஸ்ட் (Ghost), ஸ்பிரிட் (Spirit), ஆஸ்ட்ரல் பாடி (Astral Body), எதிரியல் பாடி (Etherial Body), என்று ஆங்கிலத்திலும் கூறுவர். அந்த உடல் எந்த அணுக்குண்டாலும், ஐம்பூதங்களாலும், எந்தக் கூரிய கருவியினாலும் அழிக்க முடியாதது. அதற்கு இரவு பகல் கிடையாது. உணவு வேண்டியதில்லை. அந்த ஆவி உடல் நான்கு பேர் தூக்கவேண்டிய கட்டை போன்ற உடலிலிருந்து விடுதலை பெற்று, அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ப அருளுலகிலும், இருள் உலகிலும் தொடர்ந்து வாழவேண்டியதாகக் கடவுள் அமைத்திருக்கிறார். அதனாலேயே,

*"அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை பொருளில் லார்க்கு இவ்வுலக மில்லாகி யாங்கு"*

*"அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த இன்னா உலகம் புகல் "*

என்று திருவள்ளுவர் அருளியிருக்கிறார். இக் குறள்களில் நம்பிக்கையில்லாதவர்கள் இறந்தவர்களோடு நேரில் தொடர்புகொண்டு அறிந்துகொள்ளலாம். அந்த ஆவி உடல் அங்கு அழிக்கப்பெற்று அதிலுள்ள உயிரின் தன்மைகளுக் கேற்ப பிறவி எடுக்கவோ, பிறவியற்ற மேல்நிலை எய்தவோ செய்யும் காலம் வரை இறந்த உற்றார், உறவினரோடு பேசி, அவர்களுடைய புத்திமதிகளையும் அங்குள்ள உண்மையான நிலைகளையும், புரிந்து, திருந்தி நடந்து கொள்ளலாம். நாம் வெளியிட்டிருக்கிற 'இறந்தவர்கள் வாழும் நிலையும் பேசும் முறையும்' என்ற நூலில் இதற்கு ஆதாரமாக நம் சொந்த 21 அநுபவங்களையும், மேல்நாட்டு மேற்கோள் களையும், மகாபாரதம், இராமாயணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், சிலப்பதிகாரம், திருக்குறள், திருமந்திரம், சித்தாந்த சாஸ்திரம், பைபிள், திருக்குரான் முதலியவற்றிலுள்ள சான்றுகளையும் யாரும் மறுக்கமுடியாத முறையில் கொடுத்திருக்கிறோம்.

நம்முடன் இப்பூவுலகில் வாழ்ந்து வந்து இறந்துபோன மனிதர்களுக்கே நாம் பேசுவதையும், நினைப்பதையும், செய்வதையும் அறியக் கூடுமானால் அவர்களுக்கு அந்த ஆற்றலைக் கொடுத்த ஆண்டவனுக்கு நாம் மனத்தினாலும் வாக்காலும் செய்கின்ற பிரார்த்தனைகளைக் கேட்கவும் அதற்கு வேண்டிய உபகாரங்களைச் செய்யவும் முடியும் என்பதில் பகுத்தறிவு படைத்த எந்த மனிதர்க்கும் எள்ளளவும் சந்தேகம் இருக்க முடியாது. தமிழகத்தில் பிறந்திருக்கிற பெரும்பான்மையோருக்கு நம்மை ஆண்டு வருகிற அதி தெய்வங்களின் பெயர்களையே கடவுள் இட்டிருக்கிறார். மேலை நாடுகளில் ஒயிட் (White), பிரவுன் (Brown), பிளாக் (Black), ஸ்டோன் (Stone) என்ற பெயர்கள் கூட இருக்கின்றன. முருகனை வழிபட்டால் முருகன் பெயர் தாங்கினவர்களைக் கொண்டும், விநாயகரை வழிபட்டால் அவரது பெயர் தாங்கியவர்களைக் கொண்டும், விநாயகரை வழிபட்டால் அவரது பெயர் தாங்கியவர்களைக் கொண்டும் அந்த அந்தத் தெய்வம் உதவி செய்து வருகிறது என்பதே யாவரும் அநுபவத்தில் உணர்ந்து ஆனந்திக்க வேண்டிய அரிய பெரிய மறுக்க முடியாத உண்மையாகும். தனி மனிதன் கொடுக்கிற மனுவைவிட, பொது மக்கள் கொடுக்கிற மகஜருக்கு விசேஷ மதிப்பை அரசாங்கம் கொடுத்து வருவது போல, தனி வழிபாட்டைவிடக் கூட்டு வழிபாட்டிற்கு ஆண்டவன் விசேஷமாகவும், விரைவாகவும் அருள் புரிகிறவராக இருக்கிறார் ஆனதால் பகுத்தறிவுடைய மக்கள் யாவரும் வீடுகளிலும், ஆலயங்களிலும் தனி வழிபாடும், கூட்டு வழிபாடும் செய்து நல்வாழ்வு வாழ்வதற்குப் பாத்திரர்களாவார்களாக.

# வழிபாட்டில் படியேற்றம்!

– கி.வா.ஜ.

இறைவனுடைய திருவுருவத்தைக் கோயிலில் நாம் தரிசித்து இன்புறுகிறோம். கண்ணினால் கண்டு இன்புறுவதோடு நின்றால் போதாது. அவனுடைய திருவுருவத்தை உள்ளத்தே வைத்து வழிபட வேண்டும். இறைவனை வழிபடும் முறைகள் படிப்படியாக உயரவேண்டும். அந்தப் படிகள் நான்கு. அவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று கூறுவார்கள். அவனடைய திருக்கோயிலைத் தரிசித்தல், வலம்வருதல், பூசையைக் கண்டு மகிழ்தல் முதலியவை சரியையின்பாற்படும். நாமே பூசித்து வழிபடல் கிரியை ஆகும். உண் முகத்தே அவனைத் தியானித்து இன்புறல் யோகமாகும். மெய் இது என்றும் பொய் இது என்றும் தேறித் தெளிதல் ஞானமாகும்.

ஒருபடியிலிருந்து அடுத்த படிக்குப் போகவேண்டும். ஒரு படியிலேயே நின்றுகொண்டிருப்பதால் பயன் இல்லை.

மேலே சொன்ன நான்கு படிகளில் புறத்தே அமைவன சரியையும் கிரியையும், அகத்தே அமைவன யோகமும் ஞானமும், புறத்தே செய்யும் வழிபாட்டோடு நின்று விட்டால் இலைகள் தழைத்த மரம், பூக்காமல் இருப்பது போல இருக்கும்; அல்லது அரும்பாகிப் பிறகு பூவாகி உதிர்ந்து போவது போன்றது என்றும் சொல்லலாம். மேலே காயாகிக் கனிந்தால்தான் முழுப் பயனும் உண்டாகும். இந்த நான்கையும் அரும்பு, மலர், காய், கனி என்றே தாயுமானவர் கூறுவார்.

*"விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்*
*அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே"*

என்பது அவர் திருவாக்கு. கனிமரத்தில் அரும்பும் பூவும் வந்தால் போதுமா ? மாமரம் அரும்புகிறது ; மலர்கிறது ; அந்த மலருக்கு ஒருவகை மணம் இருக்கிறது. வண்டுகள் அந்த மலர்த்தேன் உண்ணுகின்றன. மாமரம் வைத்து வளர்ப்பதற்குப் பயன் மாம்பூவைப் பெறுவதுதானா? பூக்கள் உதிர்ந்து வடு உண்டாகும் ; வடு முதிர்ந்து காய் ஆகும். காய் முதிர்ந்து கனியாகும். தேமாமரமானால் நல்ல நல்ல இனிய பழம் பழுக்கும். தேமாங் கனி பெறுவதுதான் அம்மரத்தை வளர்ப்பதற்குப் பயன்.

இந்த உடம்பை இறைவன் தந்திருக்கிறான். உள்ளத்தையும் தந்திருக்கிறான்.

*"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்*
*தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவன் "*

அவன். உள்ளத் தடுமாற்றத்தை, அலையுந் தன்மையை, மாற்றினால்தான் இன்பம் உண்டாகும். அதை மாற்ற இறைவனைத் தியானிக்க வேண்டும். அதுவே யோகம்.

*"யோகா; சித்த விருத்தி நிரோத!"*

என்பது பதஞ்சலி யோக சூத்திரம், சித்தத்தின் விருத்தியை இல்லாமற் செய்வதே யோகம். அதற்குச் சித்தத்தில் இறைவனை அமர்த்த வேண்டும். அவன் உள்ளே ஆடத் தொடங்கினால் மனம் ஆடுவது அடங்கிவிடும்.

ஒரு மிட்டாய்க் கடைக்கு ஏழை ஒருவன் போகிறான். அங்கே பீரோக்களில் வகைவகையாக அடுக்கி வைத்திருக்கும் மிட்டாய்களைப் பார்க்கிறான். அவன் கையில் காசு இல்லை. அவன் நாவில் நீர் ஊறுகிறது. ஆனால் மிட்டாயை வாங்கி உண்ண முடியவில்லை. அங்கிருந்து வெளியே வரும்போது தன்நிலைக்கு இரங்கி அவன் கண்ணிலும் நீர் ஊறுகிறது.

அந்த மிட்டாய்களை அங்கே வைத்திருப்பது, கண்டுவிட்டுப் போய்விடுவதற்கன்று. கையில் பணம் உள்ளவன் அவற்றை வாங்கி உண்டு மகிழ்வான். அப்படிச் செய்வதற்காகவே மிட்டாய்க் கடைக்காரன் அவற்றை நாலுபேர் காணும்படி வைத்திருக்கிறான்.

திருக்கோயில்களில் உள்ள திருவுருவம் அந்த மிட்டாயைப் போன்றதே. இறைவனைப் புறக்கண்ணால் கண்டுவந்தால் போதாது ; உட்கொள்ள வேண்டும் ; அப்போதுதான் அதன் சுவை தெரியும். யோகிகளுக்குத்தான் இறைவனுடைய தேகவடிவம் தெரியும். முகக்கண்ணால் பார்ப்பது போதாது. அகக்கண்ணால் பார்க்க வேண்டும். அப்போது தான் ஆனந்தம் உண்டாகும்.

*"முகத்தில் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்கள் !*
*அகத்தில் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்"*

என்று திருமூலர் சொல்வார்.





உண் முக தரிசனத்தில் இறைவனுடைய அருளநுபவம் கிடைக்கும். நல்ல தெளிவும் இன்பமும் உண்டாகும். புலன் நுகர்ச்சியால் உண்டாகும் இன்பங்களைப் போல அன்றி என்றும் மாறாத இன்பம் உண்டாகும். 'மாறிலா மகிழ்ச்சியில் மலர' முடியும்.

அப்பர் சுவாமிகள் இத்தகைய உண்முக வழிபாட்டைப் புரிந்தவர். உயிராவணம் இருந்து உற்றுநோக்கி, உள்ளக் கிழியில், இறைவன் உருவை எழுதியவர். அதனால் விளைந்த தெளிவான இன்பத்தை உணர்ந்தவர். இறைவனை உண்முகத்தே கண்டு இன்புற்றவர். அவன் தேனாய் அமுதமாய் நின்று தித்திக்க, அந்த அநுபவத்திலே தோய்ந்தவர். அந்த அநுபவ முதிர்ச்சியிலே அவர் பாடுகிறார்.

அவன் தெளிந்த தேனாக இருக்கிறானாம். குழம்பிய தேனில் கசடு இருக்கும்; மெழுகு கலந்திருக்கும். அவ்வாறு இன்றித் தெளிவாக இருக்கும் தேனைத் தேறல் என்பார்கள். இறைவனைத் தேறல் என்றே சொல்கிறார் திருநாவுக்கரசர்.

தேன், நாவுக்கு இனிமை தருவது. நாவிலே தேனை விட்டுச் சுவைக்கிறோம். இறைவனாகிய தேறலை உள்ளத்திலே கொண்டவர் அப்பர் ; உட்கொண்டவர். அது உள்ளத்தே தித்திக்கும் தேறல்.

**உள்ளத் தேறல்**

அதன் சுவை என்ன? மலர்த்தேன் தித்திக்கும். இந்தத் தேறலும் தித்திப்பதுதான். உள்ளத்திலே இனிமையை உண்டாக்குவது. மனத்தில் எந்தவிதமான மாசும் இன்றி, கவலை இன்றி, அந்த இன்பத்திலே தோய்ந்து நிற்கும் நிலையையே தித்திக்கும் நிலை என்று சொல்கிறார்.

**தித்திப்பது ஓர் உள்ளத் தேறல்**

இந்தத் தேறல் உண்ட பிறகு தெளிவு பிறக்கிறது. யோகத்தின் பின் உண்டாகும் ஞானமே அந்தத் தெளிவு எளிதிலே உண்டாகாது. குழம்பிக் குழம்பிப் பிறகு அமைதியாக வைத்தால் தேன் தெளியும். மனமும் ஆய்ந்து ஆய்ந்து தெளிய வேண்டும். தெளிவுபோல முதலில் தோன்றும். பிறகு கலங்கும். அந்தக் கலக்கமே இல்லாமல் மிகமிகத் தெளியவேண்டும் ; தெள்ளத் தெளிய வேண்டும்.

தெள்ளுதல் என்பது எல்லாம் கலந்திருப்பதைக் கலக்கித் தெளிவுண்டாக்கும் முயற்சி. அதில் தேர்ந்து தெளிவுபெற வேண்டும். தெள்ளத் தேறும் நிலை அப்போது வரும். அந்தத் தேற்றம் நிலையாக நின்று தெளிவாக இருக்கவேண்டும். தெள்ளத் தேறித் தெளியும் நிலை அது. அதுதான் அநுபவம் உண்டாகும் நிலை. முதலில் தெள்ளப் பார்ப்பதும், அப்பால் தேறுவதும், பிறகு முடிந்த முடிவாகத் தெளிவதும் உண்டானால் அப்போது இன்ப அநுபவம் உண்டாகும் ; இறைவன் உள்ளத்தே தேறலாக நின்று தித்திப்பான்.

*தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்*
*உள்ளத் தேறல்*

இன்ப அநுபவத்தைத் தரும் பொருளாதலின் தேறல் – தெளிந்த தேன் என்கிறார். அதை எளிதிலே நுகர முடியுமா ? உள்ளத்தே தெள்ளிப் பார்க்க வேண்டும்.

கண்ணை மூடிக்கொண்டு இறைவனைத் தியானம் செய்யப் புகுந்தால் உடனே அவன் வடிவம் தெளிவாகத் தெரியாது. அடுத்தடுத்து முயன்று, மற்ற பொருள்கள் தோன்றினால் அவற்றை விலக்கிவிட்டுத் தெள்ளியெடுத்த நெஞ்சில் நிறுத்தவேண்டும். அப்படி நிறுத்தினால் மறுபடியும் பாசி மூடுவதுபோல் உலகியற் காட்சிகள் தலைப்படும். தெள்ளத் தேறிப் பலகாலும் பழகினால் உள்ளத்தே இறைவன் திருவுருவும் தெளிவாக நிற்கும். நெடுங்காலம் நிற்கும். மற்ற யாவும் ஒழிந்து விடும். "எல்லாம் அற என்னை இழந்த நலம்" என்று அருணகிரியார் கூறும் நிலை அது. அப்போதுதான் தித்திப்புத் தோன்றும். அந்த இனிமைக்கு ஈடு ஏது ?

*"பெரும்பைம் புனத்தினில் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை*
*விரும்பும் குமரனை மெய்யன்பி னால்மெல்ல மெல்லஉள்ள*
*அரும்பும் தனிப்பா மானந்தம் தித்தித்து அறிந்த அன்றே*
*கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்து அறக்கைத்துவே!"*

(கந்தர் அலங்காரம்)

தேறல் என்று இறைவனைச் சொன்ன அப்பர் அப்படிச் சொன்னதோடு திருப்தி அடையவில்லை. தித்திப்பு என்றால் போதுமா ? உடம்பின் மயிர்க்கால் தோறும் இன்பக் கிளுகிளுப்பு உண்டாயிற்று. அதைத் தேன் என்றா சொல்வது ? அமுதம் என்றுதான் சொல்லவேண்டும். அமுதம் என்றாலும் போதாது. அதுவும் நாவுக்கு இன்பம் தருவதுதானே?



இறைவனை உண்முகத்தே நுகரும்போது அவன் இனிக்கிறான். உள்ளே ஒரே ஒளிமயமாக இருக்கிறது. நாம் கண்ணை மூடினால் உள்ளே இருள்தான் தோன்றும். தெள்ளத் தேறித் தெறிந்தவர்க்கோ ஒரே ஒளிமயமாக இருக்கும். ஆகவே அவனை அமுதம் என்று சொல்லலாம். ஒளி என்றும் சொல்லலாம். இரண்டையும் சேர்த்து அமுத ஒளி என்றே சொல்லிவிடலாமே! இன்ப அநுபவத்தையும் ஞானத் தெளிவையும் உண்டாக்குவதால் அமுதமும் ஒளியும் இணைந்த ஒன்று என்று சொல்வது பொருத்தமாக இருக்கும்.

இந்த ஒளிக்கு எல்லையே இல்லை. உண்முகத்தே பார்க்கும்போது ஒரே ஒளிமயமாக இருப்பது மட்டும் அன்று. எல்லையிறந்த ஒளி அது. அகன்ற வானம் முழுதும் ஒளிமயமாய் இருப்பது போன்ற காட்சி அது. ஆம், ஒரே ஒளி நிறைந்த வெளியாகத் தோன்றும். தடை இல்லாத சூனியமாய், வேறு ஏதும் இல்லாத ஒளிப்பெரு வானமாய், அலை எழும்பாத அமுத ஒளிக்கடலாய், அமுத ஒளி வெளியாய் இறைவன் தோன்றுகிறான்; எல்லையற்ற விரிவாக நிற்கிறான்.

*"தெள்ளத் தேறித் தெளிந்துதித் திப்பதோர்*
*உள்ளத் தேறல்! அமுத ஒளி வெளி !"*

இத்தகையோர் அநுபவத்தை அபிராமி பட்டர் சொல்கிறார்.

*"அளியார் கமலத்தில் ஆரணங் கே அகிலாண்ட மும்நின்*
*ஒளியாக நின்ற ஒளிர்திரு மேனியை உள்ளுதொறும்*
*களியாகி அந்தக் கரணங்கள் விம்மிக் கரைபுரண்டு*
*வெளியாய் விடின் எங்ங னேமறப்பேன்நின் விரகினையே"*
(அபிராமி அந்தாதி : *82*)

இத்தகைய இன்ப அனுபவத்திலே தோய்ந்த அப்பர் சுவாமிகளுக்குச் சிறிதாவது தருக்கு இருக்கிறதா? பணிவே அவர் வடிவம். 'இத்தகைய பேரின்ப அநுபவம் பெறும் இவர் எவ்வளவு பெரியவர்!' என்று நாம் நினைக்கிறோம். "உங்களுடைய பக்குவம் மிக உயர்ந்தது. இந்த நிலையை அடைய நீங்கள் எவ்வளவோ பாடுபட்டிருக்கவேண்டும்" என்று நாம் அவரைப் பாராட்டுகிறோம். அவர் என்ன சொல்கிறார். தெரியுமா ?

"நான் மிகவும் தாழ்ந்தவன்" என்கிறார். "நான் மிகவும் கள்ள நெஞ்சுடையவன்; பொய்யான போக்குடையவன்; கடுமையான இயல்புடையவன் ; கவலையென்னும் கடல் வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தவன்" என்கிறார்.

*"கள்ளத் தேன், கடியேன், கவலைக்கடல்*
*வெள்ளத் தேன்."*

கள்ளமாவது உள் ஒன்று வைத்துப் புறத்தே ஒன்று செய்வது ; நல்லவனைப் போல நடிப்பது ; கடுமையாவது, பிறர் உள்ளம் புண்படப் பேசுவது ; பிறரிடம் கொடுமையாக நடந்து கொள்வது, கவலைக்கடல் வெள்ளம் என்றது, என்றும் ஓயாமல், இடையீடு குன்றிக் கவலையிலே ஆழ்ந்திருக்கும் நிலையைச் சுட்டியது.

"அப்படியானால் இந்த இன்ப அநுபவம் எவ்வாறு விளைந்தது ?" என்று நாம் கேட்கிறோம்.

"அதுதானே எனக்கும் தெரியவில்லை! இத்தகைய இழிந்தவனாகிய எனக்கு இது எவ்வாறு விளைந்தது?" என்று அவரும் கேட்கிறார்.

*"கள்ளத் தேன்கடி யேன்கவ லைக்கடல்*
*வெள்ளத் தேனுக்குவ் வாறு விளைந்ததே?*

தமக்கு எந்தத் தகுதியும் இல்லையானாலும் இறைவனுடைய பெருங்கருணையினால் இந்த அநுபவம் உண்டாயிற்று என்பதைக் குறிப்பினால் பெறவைத்தார். பெரியவர்கள் தம்மை இழிந்தவர் களாகச் சொல்லிக் கொள்வது இயல்பு.

*"பணியுமாம் என்றும் பெருமை"*

என்று திருவள்ளுவர் கூறவில்லையா ? இதை நைச்சியாநு சந்தானம் என்று கூறுவர். பாட்டு முழுவதையும் பார்க்கலாம்.

*"தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்ப தோர்*
*உள்ளத் தேறல், அமுத ஒளிவெளி,*
*கள்ளத் தேன், கடி யேன்,கவ லைக்கடல்*
*வெள்ளத் தேனுக்குஎவ் வாறு விளைந்ததே!"*

(நன்றாகத் தெள்ளுவதனால் மிகத் தெளிந்து இனிப்பதாகிய உள்ளம் நுகரும் தேன், அமுதமயமான ஒளிபரவிய எல்லையில்லாத பரவெளி, கள்ளமும் கடுமையும் உடையவனாகிக் கவலையாகிய கடல் வெள்ளத்தில் அமிழ்ந்தவனாகிய எனக்கு எவ்வாறு அநுபவிக்கும் பொருளாக வந்தது !)

தெள்ள-தெள்ளுதலைச்செய்ய, தேறி-தெளிந்து, தேறல்-தெளிந்த தேன், அமுதவெளி, ஒளிவெளி என்றும் கூட்டிப் பொருள்கொள்ளலாம். இன்ப அநுபவத்தால் தேறலென்றும், சாவாமையை நீக்குவதால் அமுதமென்றும், அறியாமையை அகற்றுவதால் ஒளியென்றும், எல்லையின்றி நிற்பதால் வெளியென்றும் சொன்னார். விளைதல்-அநுபவிக்கும் பொருளாதல்ங

ஐந்தாந் திருமுறையில் வரும் திருப்பாசுரம் இது; வழிபாட்டில் படிப்படியாக நாம் முன்னேறிச் செல்ல உதவும் படியேற்றப் பாடல் இது.

# ஆலய வழிபாடு

## ஸ்தலம் என்பது யாது ?

இயற்கை முழுதிலும் அழகு உண்டு. சில இடங்களில் அமைந்துள்ள அழகு நம் உள்ளத்தை அறவே கொள்ளைகொண்டு போகிறது. மனத்தகத்து மேலான எண்ணத்தை, ஊட்டுதற்கும் அத்தகைய அழகு பயன்படுகிறது. உயர்ந்த எண்ணங்களை எண்ணுதற்கு அழகிய இடங்கள் பெரிதும் பயன்பட்டு வந்திருக்கினறன. ஓர் இடத்தில் உதித்த உயர்ந்த எண்ணமானது பிறகு அந்த இடத்துக்கே புதிய அருள் சக்தியை நல்குகிறது. உயர்ந்த எண்ணம் அழிவற்றது என்பதும் ஆன்றோர்கள் துணிபு. அவர்கள் எண்ணிய உயர்ந்த எண்ணங்களும் இயற்கையின் பொலிவும் ஒன்று சேர்ந்து ஓர் இடத்தைப் புண்ணிய ஸ்தலமாக்கு கின்றன. புண்ணிய ஸ்லத்துக்கு மூல மகிமை இங்ஙனம் அமைகிறது.

தபஸ்விகளும் முனிவர்களும் பல காலங்களில் பல இடங்களில் வசித்து வந்துள்ளனர். அன்னவர்களின் உள்ளத்தில் உயர்ந்த எண்ணங்கள் ஓயாது உதித்து வந்தன. இந்த எண்ணங்களின் வலிவால் அவர்களுடைய வாசஸ்தலங்கள் புண்ணிய க்ஷேத்திரங்கள் ஆகிவிட்டன. நாளடைவில் அத்தகைய க்ஷேத்திரங்களில் பெரிய மாறுதல்கள் உண்டாகக் கூடும். அத்தகைய மாறுதல்களை முன்னிட்டு பழைய மகிமை மறைந்துபோய் விடுவதில்லை. மேலாம் கருத்துக்களைத் தங்கள் மனதிலே வளர்க்க முயலுகின்றவர்கள் அப்புண்ணிய ஸ்தலங்களை நன்கு பயன்படுத்திக்கொள்ளலாம். புண்ணிய ஸ்தலங்களுக்கு எதிரிடையாயுள்ள இடங்களையும் உலகில் காணலாம். எங்கு கீழான எண்ணங்கள் திரும்பத் திரும்ப எண்ணப்படு கின்றனவோ ஆங்குச் செல்லுகின்றவர்களுக்கு இயல்பாக மனது கீழ் நிலைக்குப் போய்விடுகிறது. கீழ்மையில் தாங்களும் சிறிது சிறிதாகக் கலந்துகொள்கின்றனர். ஆத்ம சாதகர்கள் அத்தகைய சூழ்நிலையில் வசிக்கலாகாது. புண்ணிய க்ஷேத்திரங்கள் என்பவை ஆத்ம சாதனத்தில் மேல் நிலைக்குப் போக முயலுகின்றவர்களுக்கு முற்றிலும் அனுகூலமான சூழ்நிலையாகின்றன. சாதகர்கள் எண்ணும் மேலான எண்ணங்களுக்கு ஸ்தலங்கள் என்னும் சூழ்நிலைகள் மேலும் உதவி புரிகின்றன. இந்தக் கோட்பாட்டை அடிப்படையாகக்கொண்டே நம் நாட்டில் புண்ணிய க்ஷேத்திரங்கள் பல உண்டாயிருக்கின்றன. பாடல் பெற்ற ஸ்தலங்களுக்கு என்றென்றும் மறையாத மகிமை இங்ஙனம் வந்தமைவதாயிற்று.

## ஊன் உடம்பே ஆலயம் !

இப்பொழுது நம் நாட்டில் தென்படும் பெரிய கோயில்கள் எல்லாம் இடைக்காலத்தில் வந்தவை, வேதகாலத்தில் இவை இருந்ததில்லை. இயற்கையின் சூழ்நிலையே வழிபாட்டுக்குரிய இடங்களாயின. வேள்வித் தீயின் மூலம் வழிபாடு பெரிதும் நிகழ்ந்து வந்தது. நதிக் கரைகளிலும் மரச் சோலைகளிலும் தெய்வ வணக்கம் நிகழ்ந்து வந்தது. அத்தகைய விருக்ஷங்கள் நாளடைவில் ஸ்தல விருக்ஷங்கள் ஆயின. பின்பு ஆகமத்தை அனுசரித்து ஆலயங்கள் கட்டுவிக்கப்பட்டன. மலையைக் குடைந்தும் ஆலயங்களை அமைத்து வைத்தார்கள். இப்படி அமைந்த ஆலயங்கள் மானுட சரீரம் என்னும் ஆலயத்தின்புறச் சின்னங்களாம். மானுட சரீரமே ஆலயங்களுள் மிகச் சிறந்தது என்று ஆன்றோர்களால் சர்வகாலமும் அங்கீகரிக்கப்ட்டிருக்கிறது. அண்டமெங்கும் குடிகொண்டிருக்கும் தெய்வம் சிறப்பாக மானுட சரீரத்தில் வீற்றிருக்கிறது. ஆனால் சரீரத்தினுள் கடவுள் எழுந்தருளியிருக்கிறார் என்னும் கோட்பாடைப் பாமரர்கள் எளிதில் அறிந்துகொள்ள முடியாது. பாமரர்களுக்குப் பயன்படுதற்பொருட்டே ஆலயங்கள் அமைக்கப்ப பெற்றன. உலகிலும் உடலிலும் உள்ள தத்துவங்களை விளக்குதற்கு ஆலயங்கள் வந்துள்ளன.

நமக்குத் தோன்றியவாறெல்லாம் ஆலயங் களைக் கட்டலாகாதென்பதும், ஆகமங்கள் விதித்துள்ள படியே அவைகளை அமைக்க வேண்டும் என்பதும் கோட்பாடு. அதற்குத் தக்க காரணமும் ஒன்று உண்டு. தேசப்படம் ஒன்றை நமக்குத் தோன்றியவாறு வரையலாகாது.







முறையாக அமைந்த படத்தின் நகலாக ஏனைய படங்களை அமைக்கலாம். முறையாக அமைந்த தேசப்படமோ இயல்பாக அமைந்துள்ள தேசத்தின் சின்னமாகும். மூல அமைப்பு ஆகிய தேசத்தின் வடிவைப் படம் முற்றும் ஒத்திருக்கின்றது. ஆகையினால் அது தேசப்படம் என்று அங்கீகரிக்கப்படுகின்றது.

ஆலயம் ஒன்று உடல் என்னும் ஆலயத்தின் புறச் சின்னமாகும். புறச்சின்னத்தை நமக்குத் தோன்றியவா றெல்லாம் அமைத்து விடலாகாது. மூல அமைப்பு ஆகிய சரீரத்திலுள்ள தத்துவங்களுக்கு அது ஒத்திருக்க வேண்டும். ஆகையினால்தான் ஆலயங்களை இன்னின்ன பாங்கில் கட்டவேண்டும் என்று ஆகமங்கள் ஆணையிடுகின்றன. அத்தகைய ஆலயங்களின் மூலம் நம் உடல் அமைப்பிலுள்ள மகிமைகளையே நாம் மேலும் அறிந்துகொள்ளவேண்டும். தேசப்படத்தின் துணைகொண்டு தேசத்தை நன்கு அறிந்து கொள்வது போன்று கட்டுவிக்கப்பட்டுள்ள ஆலயத்தின் துணைகொண்டு நமக்கு இயல்பாக அமைந்துள்ள சரீரம் என்னும் ஆலயத்தின் தத்துவங்களை நாம் நன்கு அறிந்துகொள்ள முடியும். அந்த அளவுக்கு ஏற்ப வாழ்க்கையைத் திருத்தியமைப்பதும் நம் கடமையாகும்.

### ராஜ கோபுரம்

பெரிய பிராகாரம் ஒன்று எடுத்து அதற்கு வாயில் ஒன்று வைக்கப்படுகிறது. அந்த வாயிலுக்கு உயர்ந்த கோபுரம் ஒன்று அமைகிறது. கோயிலின் உள்ளிருக்கும் கோபுரங்களையெல்லாம் விட இது உயர்ந்ததாக இருக்கும். நெடுந் துரத்துக்கு அப்பால் இருந்தும் இதைக் காணலாம். ஸ்தூலலிங்கம் என்று ராஜ கோபுரத்தை இயம்புவார்கள். கண்ணுக்கு அது தென்படும் பொழுது அதையே தெய்வ சொரூபமாக எண்ணி வணங்குவது முறை. எட்ட இருப்பவர்களுக்கும் கடவுளைப் பற்றிய ஞாபகமூட்டுதற்கே அது அமைந்திருக்கிறது.

ராஜ கோபுரத்தின் அருகில் வந்து அதன் அமைப்பைக் கவனித்துப் பார்த்தால் சில அதிசயங்கள் தோன்றும். கணக்கற்ற வடிவங்கள் அதன் கண் அமைக்கப் பெற்றிருக்கின்றன. அவைகளுள் மானுட வடிவங்களை ஏராளமாகக் காணலாம். அவர்களுடைய விதவிதமான வாழ்க்கை முறைகளும் ஆங்கு வடிவங்களில் விளக்கப் பெற்றிருக்கும். தேவர்களும் வேண்டியவாறு அதில் இடம் பெறுகின்றனர். தேவர்களின் செயல்களும் ராஜ கோபுரத்தில் விளக்கப் பெற்றிருக்கின்றன. விலங்குகளும் பறவைகளும் ஏனைய சிற்றுயிர்களும் அதில் இடம் பெறுகின்றன. பிரபஞ்ச அமைப்பில் இவை யாவுக்கும் இடமுண்டு என்பது கோட்பாடு. சிற்றுயிர்கள், பேருயிர்கள், விலங்கு இனம், மக்கள் இனம், தேவர் கூட்டம் ஆகிய எல்லோரும் பிரபஞ்சத்தில் இருக்கின்றார்கள். அண்டத்தினுள் இன்னதுதான் இருக்கிறது இன்னது இல்லை என்று பாகுபடுத்த முடியாது. எல்லாப் படித்தரங்களிலும் உள்ள அனைத்தும் ஆங்கு இடம் பெற்றிருக்கின்றன. இக் கோட்பாட்டை ராஜ கோபுரம் உருவகப்படுத்தி விளக்குகிறது.

ராஜ கோபுரத்தில் அசுசியான சில வடிவங்களையும் அமைத்திருப்பதைக் காணலாம். நாகரிகமான பண்புக்கு அவைகள் அறிகுறிகள் ஆகா. மனத்தகத்து மேலான கருத்துக்களை ஊட்டுதற்கும் அவைகள் உதவி புரிய மாட்டா. கீழான எண்ணங்களைத் தோற்றுவிப்பதற்கே அவை துணைபுரியும். ஆலய வழிபாட்டுக்குப் பொருந்தாத இத்தகைய புதுமைகளை ஆலயத்தின்கண் அமைப்பானேன் என்கின்ற ஆக்ஷேபம் பலரிடமிருந்து வருவதுண்டு. அப்படி ஆக்ஷேபங்கள் வந்தாலும் அத்தகைய வடிவங்கள் சிலவற்றை அமைத்தே ஆகவேண்டுமென்று சிற்பிகள் சொல்லுவார்கள். ஆகம விதி அப்படி இருக்கிறதென்றும் அவர்கள் இயம்புவார்கள். அதற்குத் தக்க காரணமும் உண்டு. இயற்கையின் நடைமுறையின் புறச் சின்னமாகப் பெரிய கோபுரம் அமைந்திருக்கிறதென்றால்இயற்கையில் உள்ளவைகளை யெல்லாம் அதன் மூலம் விளக்கி யாக வேண்டும். நாகரிகம், அநாகரிகம் ஆகிய இரண்டும் இயற்கையில் இடம் பெற்றிருக்கின்றன.

பாராட்டத்தக்க பெருவாழ்வும் பாராட்டத் தகாத சிற்றியல்பும் சிறு செயல்களும் இயற்கையில் இடம் பெற்றிருக்கின்றன. நம்முடைய உடல் அமைப்பையே ஆராய்ந்து பார்த்தால் இக் கூற்று நன்கு விளங்கும். நம் உடல் அமைப்பில் விளம்பரப்படுத்தக் கூடிய பாங்கிலுள்ள அவயங்கள் உண்டு. மறைத்து வைக்கவேண்டிய பகுதிகளும் அதில் இடம்பெற்றிருக்கின்றன. அதைக் குறித்து நாம் வருந்துவதில்லை ; வெட்கப்படுவதும் இல்லை. அது தான் உடலமைப்பு என்று உள்ளதை உள்ளவாறு அங்கீகரித்துக் கொள்கிறோம். அதே விதத்தில் இயற்கையில் நலம், கேடு ஆகிய எல்லாம் இருக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டுதற்கே இந்த கோபுரம் அமைந்துள்ளது. வாழ்க்கையில் நம்முடைய குறிக்கோள் என்ன என்பதையும் இது விளக்குகிறது. புற உலகை அறிகிற செயலை அப்படியே நிறுத்தி வைத்துவிட்டு மனத்தைத் துணையாகக் கொண்டு பரம் பொருளிடத்து உள்முகமாகப் பயணம் போகவேண்டும் என்னும் கோட்பாட்டை ராஜ கோபுர வாயிலினுள் பண்ணும் பிரவேசம் விளக்கிக் காட்டுகிறது.

### ரதம் என்னும் சின்னம்

ஒவ்வொரு ஆலயத்தோடும் சம்பந்தப்பட்டதாக ரதோற்சவம் என்பது ஒன்று உண்டு. ஆலயம் என்னும் சின்னத்தில் மற்றொரு பகுதியாக அது அமைந்திருக்கிறது. ஓடுதல் என்னும் செயலில் ரதம் உடல் தத்தவத்தை நன்கு விளக்குகிறது. சரீரத்தை ரதம் என்றும், அதன் உள்ளிருக்கும் ஆத்மாவை ரதி அல்லது ஊர்ந்து செல்லுபவன் என்றும் கருதவேண்டுமென ஞான சாஸ்திரங்கள் புகட்டுகின்றன. சரீரத்திலுள்ள இயல்புகளை யெல்லாம் ரதத்தில் அமைப்பதும் வழக்கமாய் இருந்து வருகிறது. ஒன்று நிலைத்திருக்கும் சின்னம் ; மற்றது இயங்குகின்ற சின்னம், அவைகளின் மூலம் விளக்கப்பெறும் கருத்து ஒன்றேயாம்.

### மனம் மாறியமைதல்

ராஜ கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்றதும் நம் காட்சிக்கு வருவது பலிபீடம், அதனருகில் சென்று வீழ்ந்து வணங்க வேண்டும். வீழ்ந்து வணங்குகின்ற பொழுது வழிபடுகின்ற மனிதன் தன் மனதில் எண்ணும் எண்ணமே மிக முக்கியமானது. வெறுமனே வீழ்ந்து வணங்குவதால் நலன் ஒன்றும் வந்துவிடாது. வீழ்ந்து வணங்கும் பொழுது தனது கீழான இயல்புகளெல்லாம் அந்த இடத்திலே பலிகொடுக்கப்பட்டன, இனி அவை தலை எடுப்பதற்கு அவகாசம் இல்லை என்று ஆழ்ந்து எண்ணுதல் வேண்டும். மனிதனிடத்திலுள்ள கீழ்மையெல்லாம் ஆங்குக் கீழே வீழ்ந்து விட்டது.

மேன்மையும் மேலான எண்ணமுமே எஞ்சி யிருக்கிறது என்னும் எண்ணத்துடன் மனிதன் எழுந்திருக்க வேண்டும். விலங்குத் தன்மை வாய்ந்த மனிதன் கீழே வீழ்ந்து மாய்ந்து போய்விட்டான்; மனுஷத் தன்மை வாய்ந்த மனிதன் எழுந்திருக்கின்றான் என்ற எண்ணம் வலிவு பெறுகிறது. அந்த எண்ணத்தின் வலிவு அவன் புதியதொரு பிறவி எடுத்துக் கொண்டதற்குச் சமான மாகிறது.

புதியதாக வருவித்துக் கொண்டுள்ள மேலான மனப்பான்மையை இனி தெய்வத்துக் குரியதாக மாற்றிவிட வேண்டும். அதன் பொருட்டுச் சாதகன் கோயிலினுள் வலம் வருகின்றான். அவன் வலம் வரவேண்டிய முறையை பலிபீடத்துக்கு அடுத்த படியிலிருக்கும் துவஜஸ்தம்பம் அல்லது கொடிக் கம்பம் விளக்குகிறது.

கொடி உள்முகமாகத் திரும்பிக் கொண்டிருக்கிறது. கோயிலைச் சுற்றி நடக்கும் பொழுது உள்ளிருக்கும் தெய்வம் தனது வலதுகைப் பக்கம் இருக்கும்படி பக்தன் பார்த்துக் கொள்கிறான். அதுவே வலம் வருதல் என்பதன் பொருளாம். வலம் வருதல் பிராணாயாமத்தின் சின்னமாகும். ஒழுங்குபட்ட மேலாம் மனது பிராணாயாமத்துக்குத் தகுதியுடையதாகிறது. மனத்தகத்து உண்டாகும் மாறுதலுக்கு ஏற்ப சுவாசிக்கின்ற வாயுவில் வேறுபாடு உண்டாகிறது. கீழான மனப்பான்மை உடையவர்க்கு சுவாசத்தின் போக்குவரவில் தடுமாற்றம் உண்டு. மேலான மனப்பான்மை உடையவர்க்கு சுவாசத்தின் போக்குவரத்து அல்லது பிராணாயாமம் முறையாக

உட்புகுதல்

நிகழ்கின்றது. தங்குதடையின்றி அமைதியாக வலம் வருவது போன்று பிராணாயாமமும் ஒழுங்காக நிகழ்ந்து விடுகிறது. சூக்ஷமமாக உடலின்கண் நிகழும் நிகழ்ச்சி பிராணாயாமம். வலம் வருதல் என்னும் சரீரத்தின் ஸ்தூலமான செயல் அதன்புறச் சின்னமாகிறது.

துவஜஸ்தம்பத்துக்கு அடுத்தபடியில் இருப்பது தெய்வத்துக்குரிய வாகனம், சிவபெருமானுக்கு நந்திவாகனம், மகாவிஷ்ணுவுக்கு கருடன் வாகனம், அம்பிகைக்கு சிங்கம் வாகனம், வாகனம் எதுவாயினும் அது ஜீவாத்மனைக் குறிக்கின்றது. மூலப் பொருளாகிய கடவுளைப் பார்த்த வண்ணமாய் வாகனம் அமைந்திருக்கிறது. கடவுளைச் சென்றடைய வேண்டியது ஜீவாத்மாவின் குறிக்கோள். கடவுளைச் சென்றடைவதற்கு சர்வகாலமும் மனது கடவுள் நாட்டத்திலேயே இருக்கவேண்டும் என்னும் கோட்பாட்டை வாகனம் விளக்கிக் கொண்டிருக்கிறது. சுற்றிவருகின்ற பக்தன் ஆலயத்தின் உள்ளிருக்கும் தெய்வத்தையும் அதைப் பார்த்தவண்ணமாயிருக்கும் வாகனத்தையும் சேர்த்து வைத்த வலம் வருகின்றான். குறுக்கே நுழைவது முறையன்று. வழிபடுகின்ற அனைவர்க்கும் வழிபாட்டுக்கு ஒத்தாசை செய்யவேண்டும். இடைஞ்சல் செய்யலாகாது என்பது அதன் கருத்து. பிறர்க்கு இடைஞ்சல் செய்கின்ற அளவு தானே கடவுள் வழிபாட்டுக்குப் புறம்பாய் விடுகிறான். பிறர் வழிபாட்டுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து வைக்குமளவு ஒருவன் தானே வழிபாட்டில் முன்னேற்றமடைகிறான். பிறரைப் புறக்கணித்து யாரும் முன்னேற்றமடைய முடியாது. பிறர்க்குப் பணிவிடை செய்து யாரும் முன்னேற்ற மடையலாம். இக்கோட்பாடு ஆலய வழிபாட்டில் அடங்கியிருக்கிறது.

கோயிலின் கர்ப்பக்கிரஹத்துக்குச் செல்லும் பொழுது அது இருள் சூழ்ந்திருக்கிறது. காற்றுக்கோ சூரிய வெளிச்சத்துக்கோ ஆங்கு இடமில்லை. ஜன்னல் முதலியன வைத்து ஆலயத்தை ஏன் அமைப்பதில்லை என்று குறை கூறுபவர் உளர். ஆகம விதி அதற்கெல்லாம் இடம் தருவதில்லை என்ற விடை வருகிறது. நம் உடலமைப்பின் புறச்சின்னமாக கர்ப்பக்கிருஹம் அமைந்திருக்கிறது. உடலுக்குள்ளே நம் நெஞ்சத்தினுள் ஒரே கார் இருளைத்தான் கண்மூடி இருக்கும்பொழுது நாம் காண்கிறோம். புற உலகிலிருந்து ஆங்கு வெளிச்சம் ஒன்றும் வருவதில்லை.

கர்ப்பக்கிருஹத்தின் அருகில் சென்று தரிசனத்துக்காக பக்தன் காத்திருக்கிறான். திரை மூடப்பட்டிருக்கிறது. சிறிது நேரத்துக்குள் மணி ஓசை கேட்கிறது. இனி விரைவில் தரிசனம் கிட்டும் என்று பக்தன் ஆர்வத்துடன் அதை எதிர்பார்த்து நிற்கிறான். திரை நீங்குகிறது. உள்ளே கற்பூர ஆராதனை காட்டப்படுகிறது. அதன் வெளிச்சத்தில் தெய்வத்தின் விக்கிரஹத்தைப் பக்தன் தரிசிக்கிறான்; விக்ரஹம் என்னும் எண்ணம் அவன் மனதில் உதிப்பதில்லை; தெய்வத்தையே தரிசிப்பதாக உணருகிறான்.

மனத்தகத்து நிகழவேண்டிய ஞானக் காட்சியின் புறத் தோற்றமாகும் இது. மனதினுள் சிந்தையைச் செலுத்தும் ஆத்ம சாதகன் கார் இருளையே தன்னுள் காண்கின்றான். அயினும் மனத்தை உள்முகத்தில் வைத்திருக்கப் பழகவேண்டும். அப்பழக்கம் உறுதி பெற நெடுங்காலம் பிடிக்கும். மனத்தை உள்ளத்தினுள் ஒடுக்கி வைத்துப் பழகுபவனுக்கு ஓர் அனுபவம் கிட்டும்; தனது உள்ளத்தினுள்ளே ஒருவித இனிய ஓசையை அவன் கேட்பான் ; புகைபோன்றும், மின்மினிப் பூச்சிகளின் நடமாட்டம் போன்றும் சில காட்சிகளைத் தன்னுள் காண்பான். ஒளி, ஒலி ஆகிய இரண்டும் மனதினுள் உதிப்பது சாதகன் சாதனத்தில் முன்னேறி வருவதன் அறிகுறியாகும். இறுதியில் மனத்தகத்திருக்கும் அஞ்ஞானம் என்னும் திரை நீங்குகிறது. ஞான ஒளியின் தரிசனம் கிட்டுகிறது. அந்த ஞான ஒளியும் ஆத்ம சொரூபமும் ஒன்றேயாம். அங்ஙனம் மனத்தகத்து உண்டாகின்ற ஆத்ம தரிசனத்துக்குப் புறச்சின்னமாக ஆலய தரிசனம் அமைந் திருக்கின்றது.

பூஜா விதி

ஆலயத்தினுள் எழுந்தருளியிருக்கும் தெய்வத்துக்குப் பலவிதமான உபசாரங்களுடன்

ஆராதனை நிகழ்கின்றது. இத்தகைய ஆராதனைகளெல்லாம் ஆத்ம சாதகன் அடைந்து வரும் மனபரிபாகத்தின் புறச் செயல்களாம். ஆராதனை செய்கின்றவர்கள் சதாசாரமே வடிவெடுத்திருக்க வேண்டும். நல்லொழுக்கம் அவர்களிடம் ஓங்குமளவு வழிபாடு மேம்பாடு உடையதாகிறது. நல்லொழுக்கம் இல்லாதவனுக்கு ஆத்ம சாதனத்தில் முன்னேற்றம் ஒருபொழுதும் கிடையாது. தெய்வத்தின் அபிஷேகத்துக்காகத் தூய நன்னீர் கொண்டுவரப்படுகிறது. அதைக் கொண்டு இறைவன் நீராட்டப்படுகிறார். மனத்தகத்து அன்பை வளர்ப்பதற்கு அறிகுறியாகப் புறத்தே ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் தெய்வத்துக்குத் திருமுழுக்கு செய்விக்கப்படுகிறது.

நீராடிய பிறகு நாம் ஓரளவு உள்ளத் தெளிவை எய்துகிறோம். அன்பைப் பெருக்குமளவு நமக்கு உள்ளத் தெளிவு உண்டாகிறது என்பதை நாம் உணர முடியும். பால், தயிர், நெய், பஞ்சாமிர்தம் முதலியவைகளைச் சொரிந்தும் அபிஷேகம் செய்வது வழக்கம். இவையாவும் உடலை வளர்ப்பதற்கு நல்லுணவு ஆகின்றன. நல்லுணவு படைத்து உடலை வளர்ப்பது போன்று நல்லெண்ணங்களை எண்ணி உள்ளத்தை வளர்க்கவேண்டும் என்பது கோட்பாடு. எண்ணத்திற்கு ஏற்ப உள்ளத்தில் உயர்வோ, தாழ்வோ உண்டாகிறது. நல்லெண்ணத்தை வளர்ப்பதே ஆலயவழிபாடு ஆகிறது.

மூர்த்தியை முழுக்காட்டிய பிறகு அவரை அலங்கரிக்கின்றோம். ஆடை, ஆபரணம் முதலியன சாத்தி அலங்கரிப்பது வழக்கம். நம் உடல் வாழ்க்கையை எங்ஙனம் ஓம்புகின்றோமோ அதே கோட்பாட்டைத் தெய்வத்தின்கண் காண அன்பர்கள் முயலுகின்றனர். தெய்வத்துக்கு உணவும் உடையும் தேவையானவை அல்ல, இவை யாவையும் கடந்த நிலையில் இருப்பது பரம்பொருள். ஆனால் இத்தகைய வைகளை ஏற்று அங்கீகரித்து மகிழ்வுற்றிருக்கும் மூர்த்தியாக சாதகன் தெய்வத்தைப் பற்றிக் கருதுகிறான். அதன் மூலம் அவனுடைய மனது விகசிப்பு அடைவதே ஆலய வழிபாட்டின் பயன் ஆகும்.

மூர்த்தியை அலங்கரித்தான பிறகு அவருக்கு இனிய நல்லுணவு நைவேத்தியமாகப் படைக்கப் படுகிறது. இறைவன் அதை அங்கீகரிக்கின்றார் என்றே அன்பன் உணருகின்றான். ஆத்ம சாதனத்தில் முன்னேற்ற மடைந்தவர்கள் உணவை தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைப்பதில் பொருள் மிக உண்டு என்று உறுதி கூறுகின்றனர். மிக அண்மையில் தோன்றி ஆலய வழிபாடு செய்து வந்த ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இதற்கு அத்தாட்சி கூறுகிறார். அன்புடன் தெய்வத்துக்குப் படைக்கப்படும் நைவேத்தியத்தை மூர்த்தியினிட மிருந்து அருட் ஜோதி ஒன்று கிளம்பி வந்து ஸ்பரிசிக்கிறது. அத்தகைய அருள் ஸ்பரிசம் ஆன பின்பே அது பிரசாதமாகின்றது. ஈசுவரப் பிரசாதமாக அன்பன் அதை ஏற்றுக் கொள்கின்ற பொழுது அவனுடைய அந்தக் கரண சுத்திக்கு அது பேர் உதவி புரிகின்றது.

நைவேத்தியம் படைத்தான பிறகு தெய்வத்துக்கு ஸ்தோத்திரம், அர்ச்சனை முதலியன சமர்ப்பிக்கப்படுகின்றன. நம் வீட்டுக்கு வரும் நண்பர் ஒருவருக்கு நல்லுணவு படைத்தான பிறகு நாம் அவருடன் உரையாடுகிறோம். உரையாடி அவரை மகிழ்விக்கிறோம். அதே பாங்கில் ஆலயத்தில் கடவுள் வழிபாடு நிகழ்கிறது. தெய்வத்துக்கு உணவு வகைகளை நைவேத்தியமாகப் படைத்தான பிறகு அவரை நாம் புகழ்ந்து பாடுகின்றோம். போற்றுகின்றோம். அதன்மூலம் நமக்கு மனப் பூரிப்பு ஏற்படுகிறது. ஆராதனையின்மூலம் ஆராதிக்கப் பெறும் தெய்வ சொரூபமாக படிப்படியாக நாம் மாறியமைகின்றோம். நாம் மேலோராக மாறியமைவதே பூஜையின் விளைவு. மேலோராக நாம் மாறியமையவில்லை என்றால் நாம் செய்தது சரியான பூஜையன்று என்னும் முடிவுக்கு வந்தாகவேண்டும்.

**நைவேத்தியம்**

கோயிலுக்குச் செல்லுகின்றவர்கள் வெறுங் கையுடன் செல்லலாகாது என்பது ஐதிகம். இக்கோட்பாடு இன்னும் பரந்த பாங்கில் வழக்கத்தில் இருந்து வருகிறது. பெரியோர்களையும்.







குழந்தைகளையும், கடவுளையும் தரிசிக்கச் செல்லுகின்றவர்கள் வெறுங்கையுடன் போகலாகாது. நல்ல உணவுப் பொருள் ஏதேனும் ஒன்றை எடுத்துச் செல்ல வேண்டும். உணவுப் பொருளின் மூலமாகவே குழந்தைகளோடு நாம் ஒற்றுமை பாராட்ட முடியும். அக்கோட்பாடு பிறகு பெரியோர்களுடைய இணக்கத்துக்கும் முதற்படி யாகின்றது. கடவுள் வழிபாட்டிலும் அதே கருத்து அடங்கியிருக்கிறது. குழந்தைகளுக்கும் பெரியோர் களுக்கும் எடுத்துச் செல்லும் பொருள்கள் அவர்களுக்கு விருப்பமானவைகளாக இருக்க வேண்டும். கடவுளுக்கு எடுத்தச் செல்லும் பொருள் தனக்கு மிக விருப்பமானதாக இருக்கவேண்டும். ஆலய வழிபாட்டுக்கு அது உகந்ததாகவும் இருக்கவேண்டும். தனக்கு விருப்பமான பொருளைக் கடவுளுக்குப் படைப்பதில் நலன் ஒன்று ஆத்ம சாதகனுக்கு விளைகின்றது.

கடவுளுக்குப் படையாது தான் அதை உண்பதில்லை என்னும் கொள்கையிலிருந்து உணவுப் பொருள்மீது வைத்த பற்றுதல் குறைகிறது. கடவுளுக்குப் படைப்பதன் மூலம் அது தூய உணவாக மாற்றப் பெறுகிறது. அது ஈசுவரப் பிரசாதமான பிறகு மற்றவர்களுக்கெல்லாம் வழங்கியான பின்பே எஞ்சியிருக்கும் ஒரு சிறு பகுதியைத் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். தெய்வத்தின் பெயரால் மன்னுயிர்களையெல்லாம் தன்னுயிர் போன்று கருதும் மனப்பான்மையும் இதனின்று உண்டாகிறது. எல்லா உயிர்களும் கடவுளுக்குச் சொந்தம். எல்லா உயிர்களும் ஓம்புதல் மூலம் கடவுள் நன்கு வழுத்தப்படுகின்றார். உணவு இல்லாது கடவுள் வழிபாடு நிகழலாகாது என்பதன் கருத்து இதுவேயாம்.

மாந்தர் சேகரிக்கும் நல்ல உணவுப் பொருள்களில் பெரும் பகுதி ஆலயத்துக்கு வந்து விடுவது முறை. கடவுளின் பெயரால் பிறகு அது பலர்க்குப் பகுத்துக் கொடுக்கப்படுகிறது. கடவுளின் பெயரால் கொடுக்கப்படுகின்ற பொழுது கொடுக்கின்ற வனுக்குத் தான் கொடையாளி என்கின்ற அகங்காரம் உதிக்காது. ஈசுவரப் பிரசாதத்தை ஏற்கின்றவர்களுக்குப் பிறரிடமிருந்து பொருளை ஏற்பது இகழ்ச்சி என்ற மனப்பான்மையும் வராது. கொடுப்பவரும் ஏற்பவரும் கடவுளுக்குரியவர் ஆய்விடுகின்றனர். மனப்பான்மை மேன்மை யடைவதற்குப் பொருளைக் கடவுளுக்கு நைவேத்தியமாகப் படைப்பதே சிறந்த உபாயமாகும். பலர் கருதுகின்றபடி இதில் பொருள் நஷ்டமில்லை. பொதுமக்களுக்குப் பொருள் நன்கு விநியோகிக்கப்படுகிறது.

## கிரியைகள்

நமது ஆலயங்களில் கையாளப்படும் கிரியைகள் தத்துவத்துக்கு விளக்கமாக அமைந்துள்ளன. தீப ஆராதனையை அதற்குச் சான்றாக எடுத்துக் கொள்வோம். அஞ்ஞானம் என்னும் திரை நீங்கியவுடன் ஜோதிப் பிழம்பாக பல விளக்குகள் கொண்ட அடுக்குத் தீபம் ஒன்று சுற்றப்படுகிறது. அஞ்ஞான இருளினின்று ஞான பூமிக்குள் பிரவேசிக்கின்ற ஆத்மா ஒரே ஒளிப் பிழம்பைக் காண்கின்றான்.

அந்த ஒளிப் பிழம்பில் அவன் ஒன்றித்து விடுவதற்குச் சிறிது நேரமாகின்றது. பரம்பொருள் என்றைக்கும் அணையாத ஆத்மப் பிரகாசமாய் இருக்கிறார். அடுக்குத் தீபத்தில் கணக்கற்ற விளக்குகள் இருக்கின்றன. அதன் பிறகு காட்டப்படும் தீபங்கள் எண்ணிக்கையில் குறைந்து வருகின்றன. கடைசியில் ஒரு தீபத்தில் வந்து ஆராதனை முற்றுப் பெறுகிறது. இதன் அடிப்படைத் தத்துவம் ஏகமாய் உள்ள பரமாத்மனே எண்ணிறந்த ஜீவாத்மாக்களாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார் என்பதேயாம்.

கடவுள் ஆராதனையில் பஞ்சேந்திரியங்களும் இடம்பெறுகின்றன. பஞ்சேந்திரியங்கள் பொதுவாகப் பிரபஞ்சத்தை விஷயமாக்குதற் கென்று அமைந்தவை. அவ்வைந்து பொறிகளையும் பரமனை நுகர்தற்கென்று பயன்படுத்துங்கால் அது நல்ல ஆத்ம சாதனமாகிறது. தேவ ஆராதனையில் கண்கொண்டு காண்பது ஜோதி சொரூபமான பரம்பொருள். காதால் கேட்பது அவனிடத்திருந்து

உண்டாகும் நாதம். அதற்குச் சின்னமாக மணி ஓசையும், சங்கு வாத்தியமும் அமைகின்றன. வேதமோதுதலும் ஆங்கு நிகழ்கிறது. மூக்கால் முகர்வது ஆராதனையோடு சம்பந்தப்பட்ட நறுமணம் கமழும் தூபமாகும். ஸ்பரிசித்து இன்புறுதற்கு பரமனுக்குச் சாத்திய பூமாலை தரப்படுகிறது. நாவால் சுவைத்து வணங்குதற்கு அவனுடைய பிரசாதம் வழங்கப்படுகிறது. இங்ஙனம் பஞ்சேந்திரியங்களைக் கொண்டும் பரம்பொருளே நுகரப்படுகிறார். இந்நிகழ்ச்சியில் ஆலய வழிபாடு உச்ச ஸ்தானம் பெற்று விடுகின்றது. உலகை அறிதற்கென்று அமைந்த பொறிகளை பரமனை அறிதற்கென்று பயன்படுத்துமிடத்து அது நல்ல பழக்கமாகிறது.

### மனப்பான்மை

மனம், மொழி, மெய் ஆகிய திரிகரண சுத்தியுடன் ஆலய வழிபாட்டுக்குப் போகவேண்டும் என்பது கோட்பாடு. ஆலயத்துக்குள் நுழையும் பொழுதே உலக வியவகாரங்களை ஒதுக்கி வைத்துவிட வேண்டும். கடவுளைப் பற்றிய சிந்தனையே சித்தமிசை குடிகொண்டிருப்பது அவசியமாகிறது. பதைபதைப்புக்கோ வேகம் நிறைந்த நடமாட்டத்துக்கோ ஆங்கு இடமில்லை. அமைதியும் சாந்தமும் வடிவெடுத்தவனாக வழிபடுபவன் ஆகிவிடுகிறான். கோயிலுக்குள் கூச்சலிட்டுப் பேசுகின்றவர்கள் வழிபடுபவர் ஆகார். கோயிலின் புனிதத்தையும் ஒருவிதத்தில் அவர்கள் பாழ்படுத்திவிடுகின்றனர். ஒருவரோடு ஒருவர் பேசாதிருந்து வழிபாடு செய்வது சாலச் சிறந்தது. வழிபாட்டை முடித்தான பிறகு ஓர் இடத்தில் அமைதியாக அமர்ந்திருந்து தியானம் பண்ணுவது முற்றிலும் அவசியம். பல பெரியோர் ஆழ்ந்து எண்ணிய உயர்ந்த எண்ணங்கள் நிறையப்பெற்ற இடம் ஆலயம். ஆங்கு வழிபடுபவன் அமைதியுற்று அமர்ந்திருப்பானாகில் அந்த உயர்ந்த எண்ணங்கள் அவனது மனத்தகத்து பிரதிபலிக்கும். அதுவே ஆலய வழிபாட்டினின்று வழிபடுபவன் பெறுகின்ற பெரிய பேறு ஆகும். இத்தகைய மனப்பான்மையுடன் எத்தனைபேர் ஆலயத்துக்குள் வந்து வணங்குகின்றார்களோ அதற்கேற்ப ஆலயத்தினுள் ஏற்கெனவே அமைந்துள்ள அருள் பன்மடங்கு பெரியதாகின்றது. அருளைத்தானே அடைவதன் மூலம் ஆலயத்தின்கண் அன்பன் அருளைப் பெருக்குகின்றான். ஆலய வழிபாட்டின் ஒப்பற்ற பயன் இதுவேயாம்.



### அன்னாபிஷேகம்

சிவனுக்கு ஞாயிற்றுக்கிழமை நடைபெறும் அன்னாபிஷேகம் மிகவும் விசேஷமானது. சிவனுக்கு அன்னாபிஷேகம் செய்து, பக்தர்களுக்கு போஜனம் அளிப்பது பெரும் புண்ணியத்தைத் தர வல்லதாகும்.

### வில்வத்தின் உயர்வு

வில்வ இலைகள் சிவசொரூபம், அதிலுள்ள முட்கள் சக்தி சொரூபம், கிளைகள் வேதமாகும், வேர்கள் பதினொரு கோடி ருத்திரர்கள். ஐந்து வில்வங்களை எடுத்து நான்கு திசைகளுக்கு நான்கு இலைகளையும், நடுவில் ஒரு வில்வ இலையையும், அதன் அருகில் ஒரு துளசியையும் வைத்துப் பூஜித்தால் சிவசக்தியைப் பூஜித்ததற்கு சமமாகும்.

### எவ்வெவர்க்கு எந்தெந்த மலர்கள் ஆகாதவை

| | | |
|---|---|---|
| விநாயகருக்கு | – | துளசி |
| தேவிக்கு | – | அறுகு (அறுகம்புல்) |
| சூரியனுக்கு | – | வில்வம் |
| விஷ்ணுவுக்கு | – | எருக்கம்பூ, ஊமத்தம்பூ ஆகாதவை |

### பூஜைக்குரிய பத்ரங்கள் (இலைகள்)

துளசி, மகிழம், சண்பம், தாமரை, வில்வம், மருக்கொழுந்து, தர்ப்பை, அறுகு. விஷ்ணுகிரந்தி, நெல்லி முதலிய இவற்றின் பத்ரங்கள் பூஜைக்குரியவைகள்.



# திருக்கோயில்

– சிவத்திரு. சு. சுவாமிநாத குருக்கள்

கோயில்கள் தலக்கோயில், மலைக்கோயில், குடருக்கோயிலென மூவகைப்படும். ஒரு பட்டணமோ, பெருங் கிராமமோ, சிறு கிராமமோ நிர்மாணிக்கும்பொழுது அந்த சிவாலயங் கட்டவேண்டிய இடத்தை ஒரு சதுரமாகவோ, விருத்தம், நீண்ட விருத்தம் இவ்வாறு திட்டமிட்டுக்கொண்டு அவ்விடத்தை இரண்டு தச்சு முழ அளவாவது அவ்விடத்து மண்ணை அப்புறப்படுத்தவும்; இப்பள்ளம் வெட்டுவது அஸ்திவாரம் போடவேயாகும். இவ்விடத்தில் எள், கடுகு நீக்கிய தானியங்களை விதைத்து தண்ணீரும் வார்த்துச் செவ்வனே காப்பாற்றி வந்து பிறகு பசுக்களைக்கொண்டு அம்முளைகளை சாப்பிடச் செய்து மேல்சொன்ன பள்ளத்தை எலும்பு, கரி இல்லாததாகச் செய்து அதிலிருந்து எடுத்து மண்ணை மேல் சொன்னபடி சுத்தமாக்கி, அம்மண்ணாலேயே அப்பள்ளத்தை நிரப்பவும். அம்மண் பள்ளம் நிரம்பி மிச்சமாயின் உத்தமமாகவும், பூர்த்தியாக்கிவிட்டால் மத்திமமாகவும், போதாமல் போய் வேறு மண் கொண்டு மட்டமாகும்படியாயின் அவ்விடம் அதமமுமாகும். மேல் சொன்ன உத்தம, மத்திம இடமே சிவாலங் கட்ட யோக்கியமாகும்.

சிவாலயங் கட்ட குறிப்பிட்ட இடத்திற்கு எஜமானன் சிவாசார்யர், சில்பாசார்யர் இவர்களுடன் சென்று அவ்விடத்தில் சகுனம் பார்க்கவும், நல்ல சகுணமாயின் நல்லதாகும். கெட்ட சகுனமாயின் சாந்தியாக சிவாசார்யரைக்கொண்டு அகோராஸ்திர ஓமஞ் செய்வித்து பின் சதுரப்படுத்தி அவ்விடத்தை செவ்வனே உழச்செய்து அவ்விடத்திலுள்ள எலும்பு, கரி, ரோமம் முதலான சல்யங்களைப் போக்கி, நான்கு தண்ட அளவு தூரம் உழுதபின் நெல், பாசிப்பயறு, எள் இவைகளை விதைத்து ஜலமும் வார்க்க வேண்டும். விதைத்த தான்யங்கள் மூன்று தினங்களில் முளைக்குமாயின் உத்தமம். ஐந்து தினங்களில் முளைக்குமாயின் மத்திமம். இதற்கு மேல் முளைக்குமாயின் அதமமாகும். இவைகளுள் உத்தம, மத்திமமான இடங்கள் சிவலிங்க ஸ்தாபனத்திற்கு மிகச் சிறந்தது. அதமமாயின் சாந்தி செய்துகொள்ளவும். பின் அம்முளைகளை, மாதம், பக்ஷம் வரைக் காப்பாற்றி, பின் பசுக்கூட்டங்களைக் கொண்டும், சாப்பிடச் செய்யவும்; பின் அவ்விடத்தில் பிராம்மண போஜனத்துடன், ஆடு, காளைமாடு, எருமை, பசுமாடு இவைகளை வசிக்கச்செய்து பின் பஞ்ச கவ்யங்கொண்டும் அவ்விடத்தைப் புரோக்ஷிக்கவும்.

பின் சிவாலய கர்பக்ரஹ அளவுக்கான இடத்தை கெட்டிப்படுத்திக்கொண்டு, அவ்விடத்தில் வாஸ்து சாந்தியைச் செய்விக்க வேண்டும். அதாவது அஸுராசார்யரான சுக்ரன் தேவர்களை யொடுக்கவேண்டி ஸ்ரீ பரமேசுவரனைக் குறித்து கடுந்தவம் புரிந்தான். அத்தவப் பயனாக மூன்று உலகமும் பயமடையக் கூடிய ஒரு பூதமுண்டானான். இப்பூதம் தேவர்களுடன் கடுமையான போரைப் புரிந்தான். அப்போது எல்லா தேவர்களும் சேர்ந்து அப்பூதத்தைப் பிடித்திழுத்து பூமியில் கீழ் முகமாகத் தள்ளி, எல்லா தேவர்களும் அவனது சரிர பாகங்களில் அமர்ந்துகொண்டு அவனை அசையாமல் அழுத்தியும் விட்டார்கள். அவ்வாறு அவன் மேல் உட்காரந்து கொண்டவர்களான பிர்மா முதலான தேவர்களையும் அந்த பூத உருவமான வாஸ்து புருஷனையும் பூஜித்து திருப்தி செய்தபின் சிவலிங்கத்தை வைக்கப்படவேண்டிய இடத்தில் யாதொரு விக்னமும் வரக்கூடாது என்று பிர்மா முதலான ஐம்பத்தி மூன்று தேவர்களை வேண்டிக்கொள்வது வாஸ்து சாந்தியாகும். இந்த காரணம் பற்றியே இதைச் சிவாலய உத்ஸவ பிரதிட்டாதிகளிலும், ஆலயங்களிலேற்படும் அசாரம் முதலிய மரணங்களிலும் செய்விக்கச் சிவாகமங் கூறிய வண்ணமும் அனுஷ்டிக்கப்படுகிறது. இந்த பூத உரவ வாஸ்து புருஷனது உற்பத்தியை ஸ்ரீ பரமேசுவரன் அனந்த நாராயணரது யுத்தத்தின் பொழுது ஸ்ரீ பரமேசுவரரது கோபத்தினின்று உண்டானதாகவுஞ் சில சிவாகமங்களில் கூறப்படுகிறது.

பின் அவ்விடத்தை நடுவிலிருந்து கிழக்கு முதலிய திக்குகளில் முளையடித்து அந்தந்த திக்குகளில் வைரம், வைடூரியம் முதலிய ரத்னங்களை வைத்த நல்ல வேளையில், கருங்கல் ஆலயமாயின் கருங்கல்லையும், சுட்ட கல்மயமான கோயிலாயின், சுட்ட கற்களைக்கொண்டும் மணை முகூர்த்தஞ் செய்விக்கவும். மேற்சொன்ன காரியங்களில் மந்திரமயமானதைச் சிவாசார்யர்களும், கிரியா உருவமானதை சில்பாசார்யரைக் கொண்டும் செய்விக்க வேண்டும். பின் நதி அல்லது ஐந்து சுத்தமான மண்ணால் கொஞ்சம் நிரப்பவும் வேண்டும். பின் கருங்கல்லாலும், ஆற்று மண்ணாலும் பள்ளத்தை நிரப்பும் வாயிலாக ஜலத்தையும் விட்டு கெட்டியாகச் செய்யவும். இவைகளை பூமி மட்டஞ் செய்து கொண்டபின் உப பீடஞ் செய்துகொள்ளத் தக்கது.

இவ்வுப பீடம் ஆலயம் உயரவும் அழகாகவுமிருக்கச் செய்யப்படுவதாகும். மேலும் இது கோபுரங்களுக்கும், மண்டபங்களுக்கும் பெரும்பாலும் உபயோகமாகும். இது குறிப்பிடப்போகுமளவை களைப் பகிர்ந்து உபாணம், பத்மம், கண்டம், கல்பம், மேல்–பத்மம், மேல்–பட்டிகை, கம்பம் இவ்வுறுப்புகளுடன் அல்லது அளவுக்குத் தகுந்தபடி மேல்சொன்ன உறுப்புக்களுடன் கூடுதலாக வுமிருக்கும். இப்பீட கண்டத்தில் பூதங்கள், ஸர்பங்கள், யானைகள், சிங்கங்கள் இவைகளையும் அழகாக அமைக்கலாம்.

மேல் 24 அங்குல நீளமுள்ள தச்சு முழ அளவு கொண்டு ப்ராஸாத மணலிடப்பட வேண்டும். தச்சு முழம் ஒன்றுக்கு ஜாதி அங்குலம் 34 ஆகும். இந்த முழங்கொண்டு சிவாலயங்கள் முதலிய தேவாலயங்கள் அளக்கப்படவேண்டும். இவ்வுபபீடம் மேல் சொல்லப் போகும் அதிஷ்டானமெனுங் கர்பக்ரஹ அளவைக்காட்டிலும் அதிஷ்டான வர்க்கத்திற்குத் தக்கபடி அவ்வளவைக் காட்டிலும் 5,3, 2, $1\frac{3}{4}$, $1\frac{1}{2}$, இந்த அளவு விசாலமும் உயரமுமிருக்க வேண்டும்.

இதன் மேல் கர்பகிரஹமெனும் ப்ரஸாதத்தின் அளவுகளின் விவரமாவது, 7, 8, 9 முழ அளவு அதம பக்ஷத்தில் 3 வீதமும் 10,12, 16 முழ அளவு மத்ய பக்ஷத்தில் 3 வீதமும், 20, 30, 50 முழ அளவு உத்தம பக்ஷத்தில் 3 அளவும் இந்த கர்பக்ரஹ விசாலத்தை 25 பாகஞ்செய்து, 9 பங்கு விசாலமும் சுவர் கனம் 16 அங்குலமும், உயரம் அந்தந்த விசாலமும் இருக்க வேண்டும். கர்பக்ரஹத்தி னடிபாகம் அதிஷ்டானமெனும் ப்ரஸ்தரம் என்று காட்டப்படும். இவ்விஸ்தாரத்திற்குகந்தபடி 11, 13, 15 தளமுடைய விமானங்கள் செய்விக்கப்படும். இந்த கர்பக்ரஹ அளவுக்குரிய லிங்கத்தைக் காட்டிலும் கர்பக்ரஹம் இதனுடைய மூன்றிலொரு பாகம் சுவர் கனமும், இதைக்காட்டிலும் கால் பங்கு கூடுதலாக கீழ்ச் சொன்ன உபபீடமும் இருக்கவேண்டும். இக் கர்பக்ரஹ அடிப்ரஸ்தரம் வரையுள்ள பாகம் மேல்சொன்ன 7 முதலான 50 வரையுமுள்ள விசாலத்திற்குத் தக்கபடி சொல்லப்பட்ட அளவுபடி உபானம் ஜகதி. (அல்லது மத்மம்) குமுதம், கம்பம்.

இவ்விசாலத்திற்குத் தகுந்தபடி சுவர் கனத்தில் பிரகாரத்துடன் இரண்டு சுவர்களுமிருக்கலாம். கண்டம், கம்பம், பட்டிகா–கம்பம், வேதி–ஸ்தம்பம், கலசம், ரவிபளிகா, வீரகாண்டம், போதிகை உத்தரம், வாஜனம், சுபேதம் என்ற வரையிலான ப்ரஸ்தரம் என்பதை உடையதாகவும் இதற்குமேல் விமான அடிபாகம் கீழ்சொன்ன அடிபாகம் போன்ற சில உறுப்புகளுடன் கோஷ்டம், பஞ்சரம், கர்ண கூடம், போதம், (இதுவரை பிரஸ்தரம் எனும்) வேதிகை, களம், ஹாரம், பத்ரநாஸி, சிகரம், ஸ்தூபி இவ்வுறுப்புகளை உடையதாகவுமிருக்கத்தக்கது. ப்ரஸ்தரம் என்பது யாப்பு என்பதே. மேல்சொன்ன உறுப்புகள் சில சிறிதும், சில பெரியதாகவும் இருப்பதாகும். பெரிதான உறுப்புகளை மட்டும் கணக்கிட்டு ஆறு, ஐந்து, மூன்று அங்கமென்றே உலக வழக்காக உள்ளது. இவ்வர்கங்களுள் கீழ் பாகத்தில் யாளிவாக்கமும், மேல் பாகத்தில் பூதவர்கமும் செய்விக்கலாம்.

இவ்விதமான தளம் ஒன்று முதல் 16 தளம்வரையும் 1 முழம் முதல் 100 முழ அளவு உயரமுமிருக்கலாம். மேல் சொன்னவைகளை சில்பாயாரியர் அழகக்குக் தக்கபடியும் திருஷ்டத்திற்குத் தக்கபடியும் பார்த்துச்செய்யவேண்டும்.

இவ்விமானங்களுள் உபானம் முதல் ஸ்தூபி வரை நான்கு பட்டம் நாகரமெனவும், நான்கு பட்டை முதல் நீண்ட சதுரம், எட்டு பட்டை இவ்வாறுள்ளது. திராவிடம் எனவும் விருத்தம், நீண்ட விருத்தம், இரு பட்டை விருத்தம் வேஸரமெனவும் ஆகும். இவ் விமானங்கள் 95 பேதங்கள், இவைகளை கல்களுடன் சுண்ணாம்பு கலந்தும், மரங்களுடன் செம்பு, தங்கத் தகடுகளைக் கொண்டும் செய்யலாம். இவ் விமானங்களில் காட்டப்பட்ட படி வாயில்கள் கூடம், கோஷ்டம் இவைகளின் ப்ரதிமைகளுடனும், பிரதிமைகளில்லாமலுஞ் செய்விக்கலாம்.

வாயில்கள் உயரத்தின் கீழும், பட்டிகையின் மேலுமுள்ள உயரமும் அவ்வுயரத்தின் பத்து பங்கு அளவில் 1, 2, 3 பங்கு குறைவான அளவு விசாலமும் இருக்கவேண்டிதோடு கர்பக்ரஹம் கதவில்லாமல் இருக்க வேண்டியதாகும்.

மேல்சொன்ன ஆலய அளவுகளுள் எந்த அளவு எஜமானருக்குப் பொருத்தமானதோ (ஆயாதிகத்தத்துடன்) அவ்வளவு கொண்டு அளந்து செய்யப்படும். கர்பக்ரஹ சதுர அளவு ஒரு தண்டமெனப்படும். அந்த தண்டத்தின் பாதி அளவு விஸ்தாரங்கொண்டு அந்தர் மண்டலமெனும் நீராழிப் பத்தியும் ஒரு தண்ட அளவு விஸ்தாரம் உள் ப்ரகாரம், இரண்டு தண்ட விஸ்தாரம் இரண்டாவது ப்ராகாரம், நான்கு தண்ட அளவு மூன்றாம் ப்ரகாரம், 7 தண்ட அளவு நான்காவது ப்ரகாரமும் இருக்க வேண்டும். இப்பிரகாரங்கள் அவ்விஸ்தாரப்படி 2, 3, 4 பங்கு விஸ்தாரம் அளவு கொண்ட உயரச்சுவரும் அதற்கான விசால வாயிலுடன் ஒன்று முதல் கூடுதலான தளத்தை உடைய கோபுரங்களையுடையனவாகவும், ஒரு முழ அகலத்துடன் கூடிய அகலமுள்ளதாயும் கர்ப கிரஹ தளம்வரை உயரத்துடன் இருக்கவேண்டும். இதனுள் 1, 2 பிரகாரச்சுவர்களை யனுசரித்துத் திருமாளிகைப் பத்தி எனும் மண்டபத்துடன் பரிவார தேவர்களது ஆலயத்துடனும் இருக்கவேண்டும்.

இவ்வாலய சுண்ணாம்பு சேர்க்கை கடுக்காய், தானிக்காய், நெல்லிக்காய் சேர்ந்த ஜலங்கொண்டு கலந்து அரைத்தவை களாலேயே சுதா பிம்பங்கள், பூச்சுகளுக்கு செய்விக்கவும், இக்கலவைகளை வேறுஞ்சில விதமாகவுஞ் சிவாகமங்களில் கூறப்படுகிறது. ஆக கர்பக்ரஹ லக்ஷணம் கூறப்பட்டது.



## கொடி மரத்தின் பொருள்

அசுரர்களை அகற்றவும், சிவகணங்களையும், தேவர்களையும் அழைக்கவும், ஆலயத்தைக் காக்கவும், பக்தர்களை பாதுகாக்கவும் கொடிமரம் நிறுவப்படுகிறது. சிவன்கோயில் கொடிமரத்தின் மேல்பாகத்தில் நந்தியையும், விஷ்ணு கோயிலில் கருடனையும், தேவி ஆலயங்களில் சிங்கத்தையும், விநாயகர் கோயிலில் மூஷிகத்தையும், முருகன் கோயிலில் மயிலையும் அமைப்பர்.

## கொடி மரத்திற்கு ஏற்ற மர வகைகள்

சந்தனம், தேவதாரு, செண்பகம், வில்வம், மகிழ் முதலிய மரங்கள் ஆகும். இவை உத்தமம். பலா, மா முதலிய மரங்கள் மத்திமம். கமுகு, தென்னை, பனை முதலிய மரங்கள் அதமம்.

## பலிபீடம் என்பதின் பொருள்

திருக்கோயிலில் பலிபீடம் என்பது பாசத்தைக் குறிக்கிறது. இதை ஸ்ரீ பலிநாதர் என்பர். ஆலயத்துள் எட்டு பலி பீடங்கள் அமைந்திருக்கும். இவை எட்டு திக்குபாலகர்களை உணர்த்துகிறது. இவைகளுக்கெல்லாம் தலைமைப் பீடமாக உள்ளது நந்தியெம் பெருமானின் பின்பு உள்ள பலி பீடமாகும்.

# சோட சோபசார பூசை

– சிவத்திரு. எஸ். சாம்பசிவ சிவாசாரியார்

"குருவே தந்தை! குருவே தாய்! குருவே நண்பர் ! நமக்குக் குருவைக் காட்டிலும் இவ்வுலகில் மேலானது ஒன்றுமில்லை" என்று அம்சுமானாகமம் கூறுகிறது.

சமய தீட்சை, விசேட தீட்சை, நிர்வாண தீட்சை, ஆசாரியாபிஷேகம் என்பவைகளைப் பெற்ற ஆசாரியர்கள் வரிசைப்படி ஒருவரைக் காட்டிலும் அடுத்தவர் மேலானவர். வணங்கத் தகுதியுடையவர்கள். மேலுள்ளவர் கீழுள்ளவரை வணங்கலாகாது.

ஆகம வடிவினரை ஆகமவிநோதராக அருள்புரிய ஆகம முறைப்படி, ஆலயங்களில் பூசைகள் நடைபெற்று வருகின்றன. ஆத்மார்த்தபூசை, பரார்த்த பூசை என பூசை இருவகைப்படும். ஒவ்வொருவரும் தத்தம் வீட்டில் பூசிப்பது அவரவர்கள் பயன் கருதியேயாகும். ஆலயங்களில் பூசை நடைபெறுவது, உலகிலுள்ள எல்லா ஆன்மாக்களும் இவ்வுலகில் இவ்வுலகில் இன்பமாக வாழ்த்து மேலுலகமாகிய பேரின்ப வீட்டில் ஆனந்தமயமாக இருக்கவே ஆகும்.

சோடசோபசார பூசை என்பது விரிவான அழகான ஆகமத்தின் விதிப்படி நிறைவுபெற்ற பூசையாகும். பதினாறு : அவையாவன :

1. ஆவாகனம், 2. தாபனம், 3. சந்நிதானம், 4.சன்னிரோதனம், 5.அலகுண்டனம், 6.தேனுமுத்திரை, 7. பாத்தியம், 8. ஆசமனீயம், 9. அர்க்கியம், 10. புட்பதானம், 11. தூபம், 12. தீபம், 13.நைவேத்தியம், 14. பானீயம், 15. ஜெபசமர்ப்பணம், 16. ஆராத்திரிகை என்பவைகளாகும்.

ஆவாகனம் முதல் புட்பதானம் வரையில் செய்யப்படும் பூசை 'தசோபசாரம்' எனப்படும். சித்தாந்த சாரா வெளியில் – பூசையின்போது சிவபெருமானுக்குப் படைக்கும் கிழங்கு வகைகள், பழவகைகள், பத்திரம், புட்பம், அன்னம், பருப்பு, வடை, பாயசம் முதலியவைகள் பூமியின் தத்துவம் – அதாவது பிருதுவி சம்பந்தமானதால் பார்த்திவோபசாரம் என்றும், வெண்பட்டு, பாத்தியம், அர்க்கியம் முதலியவை நீர் சம்பந்தமானவை யாதலால் ஜலீயோபசாரம் என்றும், அழகான நவரத்தினங்கள், ஆபரணங்கள், தீபம், கற்பூரதீபம் முதலியன அனல் சம்பந்தமானவையாதலால் தைஜஸோபசாரம் என்றும், தூபம், சாமரம், விசிறி ஆகியன வாயு சம்பந்தமானவையாதலால் வாயுவீயோபசாரம் என்றும், மணி சத்தம், பாட்டு, வாத்தியம், தோத்திரங்கள் ஆகாச சம்பந்தமானவை யாதலால் நாதஸோபசாரம் என்றும் கூறப்படும். நிலம், நீர், தீ, மணி, ஆகாயம் என்ற ஐம்பூதங்களில் முற்கூறிய எல்லாப் பொருள்களும் சுருக்கமாகப் "பஞ்சோபசாரம்" என்று சொல்லப்படுகிறது.

பதினாறு உபசாரமே மிகவும் சிறப்புடையது. மந்திரம், தந்திரம் (ஆகமங்களின் பெயர்) கிரியை, பாவனை என்ற நான்கு அம்சங்களும் பூசைக்கு இன்றியமையாதவையாகும். பூசையில் ஈடுபடும் போது ஒரு ஆகம வழியில் நின்று மந்திரம் உச்சரிக்க அது அதற்குரிய பாவனையோடு செயல்பட வேண்டியதாக உள்ளது.

**1. ஆவாகனம்**

முன்னரே ஞானாசாரியரால் சந்தான பரம்பரையின் முறைப்படி உபதேசிக்கப்பெற்று அளவற்ற பேரானந்தப் பெரும் ஞானப் பிழம்பதோர் அருவமேனியாம் சிவபெருமானை மந்திர வடிவமான சதாசிவமூர்த்தியாகக் குறிப்பிட்ட இடமான சிவலிங்கத் திருமேனியிடத்தே விளங்கித் தோன்றச் செய்தல் ; "ஸாதாம் சம்முகி பாவம் ஆவாகன மிஹோச்யதே" இரு கைகளையும் அஞ்சலி செய்து மோதிர விரலில் கட்டை விரலைச் சேர்த்து மேல்முகமாக (புட்பாஞ்சலியாக) செய்யப்பட்ட ஆவாகனீ என்ற முத்திரையைக் கொண்டு "ஸத்யோஜாத" என்ற மந்திரம் சொல்லி ஆதரவோடு

கூட நமக்கு எதிர்முகமாக இருக்கப் பாவித்தல். இதனால் நினைக்கும் தோறும் சிவஞானம் பிரகாசமாகும். "நாதம் சக்திமயம் சூக்குமம்". என்றதால் எப்படி நினைந்து ஆவாகிக்க வேண்டும் என்பது கூறப்படுகிறது.

எங்கும் நிறைந்த பரம்பொருளை ஓரிடத்து வரவழைத்தல் என்று கூறுவது பலவாற்றாலும் பொருந்தாதே எனின், நாம் இறைவனைப் பூசிக்கிறோம். இறைவன் பூசிக்கப்படுகிறார். ஆகையால் பூஜ்ய பூஜக பாவசம்பந்தம் என்றும் ; இறைவன் நமக்கு அனுக்கிரகிக்கிறார். நாம் அவரிடமிருந்து அனுக்கிரகம் பெறுகிறோம் என்பதால், "அனுக்கிராஹக அனுக்கிராஹ்ய பாவசம்பந்தம்" என்ற இரு சம்பந்தங்கள் ஆவாகனத்தால் ஏற்படுகின்றன. மேலும் வேர் முதல் மரம் பூராவும் வியாபகமாக உள்ள நெருப்பைக் குறித்த இடத்துப் பெறுவதால் மரத்தின் மற்ற பகுதிகளில் இருப்பது எப்படி பாதிக்கப்படவில்லையோ அதுபோலவே கடவுளின் வியாபகம் என்பது குறித்த இடத்து ஆவாகிப்பதால் பாதிக்கப்பட மாட்டாது.

*"விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்*
*மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்*
*உறவுகோல் நட்டு உணர்வுகயிற்றினால்*
*முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே."*

மேலும் ஆன்மா ஒரு சரீரத்திடமிருந்து அங்குமிங்கும் எப்படி வருதல் புரிகிறதோ அதுபோல் பக்தர்கள் செய்யும் பூசைகளை ஏற்றுக்கொள்ளவே பக்தர்களின் விருப்பப்படி இன்ன இன்ன மந்திரங்கள் இன்ன அவயங்கள் என்று ஆகமம் கூறியபடி பாவிக்கப்பட்ட மந்திர வடிவத்திலே விளங்கித் தோன்றி அருளுகிறார் என்பது அனுபூதிமான்கள் அறிந்த விடயமேயாகும்.

**2. தாபனம்**

தாபன முத்திரை ஆவாகனி முத்திரையைப் புரட்டிக் கீழ்முகமாகக் கையைக் காட்டுதல், தாபன முத்திரையோடு "வாம தேவ", மந்திரம் சொல்லி எம்பெருமானின் திருவருளினாலே நினைந்து நினைந்து குறித்த இடத்து நிலையாக இருந்தருள் புரிய பக்தியோடு பாவித்தல் தாபனமாகும்.

**3. சந்நிதானம்**

மேல் நீட்டிக் கட்டை விரரோடு கூடிய முட்டி முத்திரை சந்நிதான முத்திரையாகும். சந்நிதான முத்திரையோடு "அகார" மந்திரத்தைச் சொல்லி சந்நதீ பாவம் சொய்யும்போது, ஞானப்பிரகாசமான மூர்த்தியினிடத்தே நம் அறிவு நிறைந்தும் ஞானப்பிரகாச மயமான சிவத்தின் அருள் சுரந்து நம்மிடத்து நிறைந்தும் நிற்கும்.

**4. சன்னிரோதனம்**

உள்ளே மடக்கிய கட்டை விரலோடு கூடிய முட்டிமுத்திரை, சன்னிரோதன முத்திரையாகும். "தத்புருஷ" மந்திரம் சொல்லித் திரோதனம் செய்து தேவ தேவரே தாங்கள் அடியார்களுக்கு எப்போதும் அனுக்கிரகம் செய்தவண்ணமாகவே இருக்க வேண்டும் என்று வேண்டி நம்மைத் திருவருட் பெருக்கில் முழுகிய வண்ணம் நடுக்கடலில் நங்கூரம் பாய்ச்சிய கப்பல் போல் அசையாது நிலையாக நிற்றல் வேண்டும். அப்போது சுவாமிக்கு நல்வரவு கூறவேண்டும். அவர் சொல்வார் "வந்தருளினோம் குழந்தாய்," என்று, நமது அகம் மகிழப் பூரித்து நிற்போம்.

**5. அவகுண்டனம்**

தர்ஜ்ஜனீ விரலைக் கீழ் நோக்கிப் பிடித்தல் ; அவகுண்டன முத்திரையோடு, "ஈசான" என்ற மந்திரம் சொல்லிச் சிந்திப்பவர்களுக்குச் சிறந்து செந்தேன் மல்கும் ஆனந்த மூர்த்தியான சிவத்திற்கு மூன்று முறை சுற்றுதல் அவகுண்டனம். இடையூறுகள் களைய சோடிகா முத்திரை, காளகண்டீ முத்திரை முதலிய பல முத்திகைளை அதற்குரிய மந்திரங்கள் சொல்லிக் காட்டவேண்டும்.

**6. தேனுமுத்திரை**

கை விரல்களால் பசுவின் மடி நான்கு காம்போடு கூடியது போலக் காட்டுவது தேனு முத்திரையாகும். மூலமந்திரத்தை உச்சரித்து ஆன்ம அறிவு பேரானந்தமான சிவஞானத்தோடு ஒன்றிக் கலந்து விட்டிருத்தல் என்பதாகும். அமிருத மயமாக ஆக்குவதால் இம்முத்திரைக்கு அமிருத முத்திரை என்றும் பெயர் உண்டு.

மந்திர வடிவம் சம்ஹிதா மந்திரம் முதலிய ஆகமத்தில் கூறிய மந்திரங்களாலான வடிவமாகும். மந்திர வடிவினரான சுவாமியைப் பூசை முடியும் வரையில் இவ்விடத்து அன்போடு இருந்து எனது பூசையை ஏற்றருள வேண்டும் என வேண்டுதல்.

**7. பாத்தியம்**

உரிய பாத்திரத்தில் விளாமிச்ச வேர், சந்தனம், அறுகு, வெண்கடுகு ஆகிய நான்கு திரவியங்களையும் போட்டுச் சுத்தமான நீர் விட்டு அதற்குரிய மந்திரம் சொல்லிப் பூசித்து வைத்தல் வேண்டும். பாதத்தில் விடவேண்டிய ஜலம் பாத்தியம். மிகவும் பரிசுத்தரான சிவத்திற்குப் பாத்தியம் எதற்கு ? ஆன்மாக்களாகிய நாம் சிவபதம் அடையவே பாத்தியம் கொடுக்கிறோம். நம, என்பதோடு கூடிய 'இருதய மந்திரம்' சொல்லி இரு பாதம் புயத்திலும் ஜலம் விடுதல் பாத்தியமாகும்.

**8. ஆசமனீயம்**

ஏலக்காய், கிராம்பு, பச்சைக் கற்பூரம், நாவற்பழம், ஜாதிக்காய் ஆகியவைகளைக் குறிப்பிட்ட பாத்திரத்தில் போட்டுச் சுத்த நீர் நிரப்பிப் பூசிக்கவும். இந்த நீரை மூல மந்திரத்துடன் "ஸ்வதா," என்று திருமுகங்களில் ஆசமனீய ஜலம் கொடுக்க வேண்டும். ஆன்மாக்கள் திருவருளாகிய திருமுகத்திலே சேர்த்தல் என்ற பாவத்தில் உள்ளதாகும்.

**9. அர்க்கியம்**

எள், நெல், தருப்பை நுனி, ஜலம், பால், அட்சதை, வெண்கடுகு, யவம் இந்தத் திரவியங்களை அதற்குரிய பாத்திரத்தில் சுத்த நீர் விட்டுச் சேர்த்துப் பூசித்து வைத்தல், மூல மந்திரத்தோடு "ஸ்வாஹா" என்ற மந்திரம் கூட்டிச் சொல்லிச் சிவபெருமான் திருமுடியில் அர்க்கிய ஜலம் கொடுக்க, திருவருளைத் திருமுடியில் சேர்த்தலாகும். சதாசிவ புவனம் அடைய நிமித்தமாகும்.

அபிஷேகம் ஆரம்பம், அதன் முடிவு, நைவேத்தியாரம்பம், அதன் முடிவு, தூபம் தீபம் செய்யும் காலங்கள் பாத்யம், ஆசமனீயம், கொடுக்க வேண்டும். பூசை ஆரம்பம், அபிஷேக ஆரம்பம், முடிவு, பூசையின் முடிவு இவைகளில் அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

**10. புட்பதானம்**

அறுகு, சண்பகம், புன்னாகம், நந்தியாவட்டை, பாதிரி, பிரஹதி, அரளி, தும்பை ஆகிய எட்டு புட்பங்களையும், அட்சதைகளையும் சேர்த்துக் கொண்டு,மூல மந்திரத்தோடு, "வௌடட்" என்று மந்திரம் உச்சரித்தச் சமர்ப்பிக்க வேண்டும். இது பேரின்ப வீட்டை அடையச் செய்யும்.

கொல்லாமை, வாய்மை, ஐம்பொறியடக்கம், பொறை, அருள், அறிவு, தவம், அன்பு என்பவைகளே அட்டபுட்பமாம். அட்டபுட்பம் சமர்ப்பிக்க வேண்டிய காலங்கள்; ஆவாகனம், அர்க்கியம், அபிஷேகம், தூபம், சுகந்த சந்தனத் திரவியங்கள் பூசும்போது, நைவேத்தியம், பூசை முடிவுகள் ஆகும்.

சுவாமிக்குப் பத்மாசனத்தில் ஆவாகனமும், அனந்தாசனத்தில் அபிஷேகமும், விமலாசனத்தில் அர்ச்சனையும், யோகாசனத்தில் நைவேத்தியமும், சிம்மாசனத்தில் வஸ்திர சமர்ப்பணமும் செய்யவேண்டும்.

மனதால் செய்யவேண்டிய உபசாரங்கள் – பாவனாபிஷேகம் என்று பெயர். அபிஷேகம் விசேஷமாகச் செய்வித்துப் பட்டுப் பீதாம்பரம் உடுத்தி, சந்தனம், தங்கப்பூணுதல், அரைஞான், தோள்வளை, கடகம், ஆரம், குண்டலம் முதலிய சுவர்ண நவரத்னாபரணங்கள் பூட்டி நறுமண மலர் மாலைகள் அணிவித்துச் சந்தனம் சமர்ப்பித்தப் பாவிக்க.

லயாங்க பூசை, போகாங்க பூசை என இரு பிரிவுகளாகும். லயாங்க பூசை முடித்துப் போகாங்க பூசை செய்து முடிவில் தூப தீபங்கள் சமர்ப்பிக்க வேண்டும். போகாங்க பூசையால் ஸர்வக்ஞத்துவம் முதலிய குணங்கள் பரிசுத்தரான பூசகர்களுக்குச் சித்திக்கிறது.

**11. தூபம், 12. தீபம்**

"ஹிருதய" மந்திரத்துடன், "ஸ்வாஹா" என்பதைக் கடைசியில் கொண்டதாக உச்சரித்துத் தூபம் கொடுக்க வேண்டும். தூபம் கிரியா சக்தியையும், தீபம் ஞான சக்தியையும் குறிக்கும். மூக்குக்கு நேராகத் தூபத்தையும், கண்ணுக்கு நேராகத் தீபத்தையும் காட்டவேண்டும்.



**12. நைவேத்தியம்**

இயல்பாகவே திருப்தராக உள்ள சிவபெருமானுக்கு நிவேதனம், பானீயம், தாம்பூலம், ஆர்த்தி, தீப விசேடங்கள், குடை, சாமரம், கண்ணாடி முதலிய உபசாரங்கள் எதற்கு என்று கேட்டுக் கொண்ட ஞானசம்பு சிவாசாரியர் சிவ சுலோகங்களால் விடை கூறுகிறார். சர்வ மங்கலங்களையும் செய்பவருக்கு மங்கலத் திரவியங்களைச் சமர்ப்பிக்கிறோம் - நம் மனத் திருப்திக்காகவே என்கிறார். ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்து முகங்களுக்கும் எள்ளன்னம், சர்க்கரான்னம், பாயசம், சுத்தான்னம், பொங்கல் அன்னம் விசேடமாகும். யானை உண்ட விளாங்கனிபோல அன்னத்தின் சாரத்தை மட்டும் பருகுகிறார். அன்ன வகைகளில் உறிஞ்சுதல், கடித்தல், புசித்தல், பருகுதல், நக்குதல் என்ற வகைகளில் அமையப் பெற்ற பாயசம், வடை, தேன்குழல், காய்கறி உணவு சமர்ப்பிக்க வேண்டும். இதனால் உலகில் துர்பிட்சம் நீங்கிச் சுபிட்சம் ஏற்படும்.

**14. பானீயம்**

பருகப்படும் ஜலம் பானீயம், இதனைக் கொடுப்பதால் ஆன்மாக்களின் இவ்வுலகப் பற்று நீங்கி மேலான பேரின்ப வீடு கிட்டுகிறது.

**15. ஜெப சமர்ப்பணம்**

உருத்திராட்ச மணி கொண்டு மூல மந்திரம் உச்சரித்து சம்கிதா மந்திரத்தால் முறைப்படி கவசம் செய்து அர்க்கிய ஜலம் வார்த்துச் சிவபெருமானின் வலக்கையில் சமர்ப்பித்துப் பிரார்த்திக்க வேண்டும். பிரார்த்திக்கும் முறை - பூசைகளில் உச்சரிக்கப்படும் மந்திரங்களில் தெரிந்தோ தெரியாமலோ அல்லது மறதியினாலோ குறைகள் நேரிட்டு இருக்குமே யானால் அக்குறைகளை நீக்கி நிறைவாகவே ஆக்கி அருள வேண்டும் எனப் பிரார்த்திக்க வேண்டும்.

**16. ஆர்த்தி**

ஆர்த்தி முதலிய தீபங்களில் புட்பமிட்டுப் பார்த்தல், ஜலம் தெளித்தல், தட்டுதல், மந்திரம் சொல்லுதல் என்ற நான்கு வகை சமஸ்காரம் செய்து தீபங்களைச் சுற்ற வேண்டும்.

தீபங்களைச் சுற்றும்போது முகம், கண், நாசி, கழுத்து, மார்பு, கால்கள் இவ்விடங்களில் ப்ரணவாகாரமாய் இடது காலைச் சமமாகவும் வலதுகாலைக் கொஞ்சம் தூக்கியும் வைத்துக்கொண்டு மூன்று தடவை சுற்றவேண்டும். இது பூமி, ஆகாசம், சுவர்க்கம் இவைகளைக் காப்பதற்காகவேயாகும்.

மணி சப்தம் இனிமையாக இருக்கவேண்டும். பயங்கரமான அசுரர்களை விரட்டித் தெய்வமயமாக ஆக்குவதால் பூஜாகாலங்களில் அவசியம் மணி அடிக்க வேண்டும்.

**(சோட சோபசாரம்) பதினாறு உபசாரத்தில் தீபவிசேடங்கள் :**

1. தூபம், 2. தீபம், 3. மகாதீபம், 4. நாகதீபம், 5. விருஷ தீபம், 6. புருட தீபம், 7. பூர்ணகும்ப தீபம், 8. ஐந்து தட்டுத் தீபம் (ஐந்து), 13. நட்சத்திர தீபம், 14.மேரு தீபம், 15.கற்பூர தீபம், 16.மகா நீராஞ்சனம் என்பவைகளாம். இவைகளுக்கு அதிதேவதைகள் வருமாறு : தூபம், அக்னி, மகாதீபம்-சிவம், நாகதீபம்-கேது, விருஷ தீபம்-தர்மதேவன், மிருக தீபம்-விஷ்ணு, பூர்ண கும்பம்-ருத்ரன், பஞ்ச தீபம்-பஞ்சபிர்மம், நட்சத்திர தீபம்-நட்சத்திரங்கள், மேரு தீபம்-பன்னிரண்டு சூர்யர்கள், திருநீற்றுக்குச் சிவபெருமான், கண்ணாடி-சூர்யன், குடை-சந்திரன், சாமரம்-மகாலட்சுமி, வயஜனம்-அயன், விசிறி-வாயு, கற்பூரம்-அக்னி இப்படியாகத் தீபமும் அதற்கு அதிதேவதையும் கூறப்பட்டுள்ளன. பூசைகளில் எந்தத் திரவியங்களும் இல்லாது பூசிக்கப்பட்டால் அதற்குத் தனித்தனியே தோஷங்களும் கூறியுள்ளது. ஆகையால நிறைவாகவே பூசிக்க முயல வேண்டும்.

தீபோபசாரங்கள் செய்து முடித்து மங்கல திரவியங்களான (1) கண்ணாடி-சந்திர மண்டலத்தை ஒத்த சுத்தமான கண்ணாடி சிவசக்தி வடிவமாகும். அதன் ஒளி சிவமாகும். கண்ணாடி உபசாரத்தால் கல்பகோடிகாலம் சிவலோகத்திருப்பார்.

(2) குடை - சரத்காலச் சந்திரனை ஒத்த முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட குடையைக் காட்டுவதில், நூற்றுக் கணக்கான சித்திர விமானங்களோடு சுகானுபவிகளாக நீண்டகாலம் சிவபுரத்திருப்பார்கள்.

(3) சாமரம் - மணிகளால் அலங்கரிக்கப்பட்ட சாமரம் வீசி உபசரிப்பதால் சாமரம் பிடித்த தேவ கன்னியர்கள் புடைசூழ தேவ விமானத்தில் நீண்ட காலம் சிவபுரத்திருப்பார்கள்.

(4) தாளவிருத்தம் - அழகான விசிறியைச் சமர்ப்பித்துபசரிப்பதால் ஆயிரம் கோடி வருஷம் வாயு உலகில் சௌக்கியமாக இருப்பார்கள்.

(5) மயில் தோகை விசிறி-சிவபெருமானுக்குச் சமர்ப்பிப்பதால் அளவு கடந்த பேரானந்தத்தை ஆன்மாக்கள் பெறும்.

(6) சிதவாஸம் - வெள்ளை வஸ்திரம் வீசுவதால் தன்னை ஒரு முகமாக சிவத்தினிடம் சேர்த்தல் என்பதாகும்.

சுவாமிக்கு சுவர்ண புட்பம், மந்திர புட்பம், அட்ட புட்பம் முதலியவற்றைக் குறிப்பிட்ட மந்திரங்களைச் சொல்லிச் சமர்ப்பிக்க வேண்டும்.

அபிஷேக காலம், நைவேத்தியக் காலம், தூபதீபகாலம், பூசையின் முடிவு காலம் இவைகளில் வேதமுழக்கம் செய்ய வேண்டும். அபிஷேகம், நைவேத்தியம், தூபம் பூசை முடியும் காலங்களில் பக்தர்கள் தோத்திரங்கள் சொல்லி வழிபடல் வேண்டும். அபிஷேகம், நைவேத்தியம், தூபம், பலியிடும் காலம், விடியற்காலம் ஆகிய இக்காலங்களில் பலவிதமான வாத்தியங்கள் வாசிக்க வேண்டும்.

பக்தியோடு தோத்திரம் செய்து உருகி நின்று "சுவாமியே மெலிந்த வேலைக்காரனான அடியேன் சிற்றறிவுடையவனாய் ஏதோ பக்தியின் காரணமாக இதுவரை புலம்பினேன். தேவரீர் இப்பூசையைத் திருப்தியோடு ஏற்று, குற்றம் பொறுத்து, அருளல் வேண்டும்". என மிகவும் பிரார்த்தித்துக்கொண்டு தண்டம் போல நிலத்தில் மும்முறை விழுந்து எழுந்து வணக்கம் செலுத்திக்கொண்டு இதுகாறும் நினைந்து பூசிக்க என்ன பாக்கியம் செய்தேன் என்பதை நினைந்துருகி மறுபடியும் இப்படிப் பூசிக்க எப்போது வாய்க்குமோ என்பதையும் நினைந்து, மீண்டும் பூசிக்கும் பாக்கியம் கிட்டவேண்டும் எனவும் சொல்லி பொறுத்தருளுவீர், என விடைபெற வேண்டும்.

இதுவரை சொல்லிய பூசைகள் யாவும் முருகப்பெருமான், கணபதி, உமை இவர்களுக்கும் பொருந்தும். இப்படியே மற்ற மூர்த்திகளையும் பூசிக்கவேண்டும்.

நீராஜனம் - கற்பூர தீபம் காட்டி முடிக்கவும். கற்பூரம் வெண்ணிறம் சத்துவகுண வடிவமானதாகும். கற்பூரம் ஏற்றிய இடத்து அதன் வடிவம் சிறிதும் இல்லாது ஒரே ஒளிமயமாய் எரிந்து ஒளியோடு சேர்ந்து விடுகிறது. அதுபோலவே ஆன்மாவிடத்து சிவஞானாக்கினி பற்றிய இடத்து பசுத்துவமானது நீங்கி தூல சூக்குமகாரண சரீரங்கள் கரையப் பெற்று எப்பற்றும் இல்லாது (சிதாகசத்தோடு) ஞானகாசத்தோடு அத்துவிதமாய் பேரின்பம் பெற்று இருத்தலை உணர்த்தும் என்பதாம்.

*"வாழ்த்தவாயும் நினைக்க மடநெஞ்சும்*
*தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை*
*சூழ்த்த மாமலர் தூவித்துதியாதே*
*வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே."*



## அறுவகை உபச்சாரங்கள்

பகவானுக்கு ஆறு வகையான உபச்சாரங்கள் செய்யப்படுகின்றன.

1. அபிஷேகம் – நீர், பால், தயிர், தேன், பன்னீர், இளநீர், வாசனை திரவியங்களால் செய்யப்படுவது
2. அலங்காரம் – பட்டு பீதாம்பரத்தாலும், பொன்னாலும், மலர் மாலைகளாலும், தங்க, வைர நகைகளாலும் அழகுபடுத்தப்படுவதாகும்.
3. அர்ச்சனை – பாக்களாலும், பூக்களாலும் செய்யப்படுவது
4. நைவேத்தியம் – பல்வேறு உணவு வகைகள், பால் பழம் முதலியவற்றைப் படைப்பது.
5. ஆராதனை – தூபம் காட்டுவது, தீபம் காட்டுவது
6. உற்சவம் – பெருவிழா நடத்தி மூர்த்தியை வலமாக வீதிகளில் கொண்டு செல்லுதல்.



## விக்கிரக வழிபாடு

அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் வியாபித்திருக்கிற பரம்பொருளாகிய கடவுள் உலகத்தைப் படைப்பதற்காகவும், பலதரப்பட்ட உயிர்களுக்குப் பலதரப்பட்ட உடல்கள் கொடுப்பதற்காகவும், அவற்றை ஆள்வதற்காகவும் அவர் தானாக எடுத்துக்கொண்ட உருவத் திருமேனி உண்டு என்பதனை எல்லா மதங்களும் ஒப்புக்கொள்கின்றன. அருவமாய் உள்ள சிவ பரம்பொருள் கருணை காரணமாகப் பிறருக்குக் காட்சி கொடுப்பதற்கென எடுத்துக்கொண்ட 25 திருமேனிகளும் தோன்றுவதற்கு மூலாதாரமாக உள்ள, உருவமும் உருவமில்லாத அருவுருவ நிலையுமான சோதி சொரூபத்தை முதற்கண் தாங்கிக்கொள்ளத் திருவுள்ளம் கொண்டது. அந்தச் சோதி சொரூபமே சிவலிங்க வடிவாகும். அந்தச் சோதி சொரூபத்திலிருந்து 25 திருமேனிகள் தோன்றி ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு காரியத்தினை நிகழ்த்தி துஷ்ட நிக்கிரகமும், சிஷ்ட பரிபாலனமும் செய்ய வேண்டியதாயிற்று. அவை :

(1) சோமாஸ்கந்தர், (2) நடராஜப் பெருமான், (3) இடபாரூடர், (4) சந்திர சேகரர், (5) கல்யாணசுந்தரர், (6) பிட்சாடனர், (7) காமாரி, (8) காலாரி, (9) சவந்தரி, (10) திரிபுராரி, (11) கசாரி, (12) வீரபத்திரர், (13) தக்ஷிணாமூர்த்தி, (14) கிராதர், (15) நீலகண்டர், (16) கங்காளர், (17) சக்ரதானர், (18) கசமுகானுக்ரகர், (19) சண்டேசானுக்ரகர், (20) ஏகபாதர், (21) லிங்கோத்பவர், (22) சுகாசீனர், (23) உமாமகேஸ்வரர், (24)அரியர்த்தர், (25) அர்த்தநாரீஸ்வரர்

*"அருவமும் உருவமாகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்*
*பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகிக்*
*கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும்*
*கொண்டே*
*ஒருதிரு முருகன் வந்து ஆங்குதித்தனன் உலகம் உய்ய"*

என்று முருகப் பெருமானது தோற்றத்தை நமது கச்சியப்ப சிவாசாரியர் அருளிச் செய்திருக்கிறார். ஆகவே யாரும் அறிய முடியாத அருவமாய் இருந்த பரமசிவம், பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு காட்சி கொடுக்கவும், தமது ஆட்சியின் சட்ட திட்டங்களாகிய வேதாகமங்களை அருளிச் செய்யவும் எடுத்துக்கொண்ட மூர்த்தமே சிவலிங்க வடிவமாகும்.

சிவலிங்கம் மூன்று கூறுகள் உடையது. அடிப்பாகம் நாற்கோண வடிவமாய்ப் பூமிக்கு அதிபதியான சிருஷ்டி கர்த்தாவான பிரம்ம பாகத்தை உணர்த்துவதாகும். மத்தியபாகம் எட்டுப்பட்டம் உடைய அட்டகோண வடிவமாய், (1) வாமை, (2) சேஷ்டை, (3) ரௌத்திரி, (4) காளி, (5) கலவிகரணி, (6) பலவிகரணி, (7) பலப்பிரதமனி, (8) சர்வபூத தமனி என்னும் மகாவிஷ்ணுவின் எட்டு சக்திகளும் அதனோடு பொருந்த இருக்கும் ஆவுடை எனப்படும் மனோன்மணியாகிய ஒன்பதாவது சக்தியும் சேர்ந்து நவசக்திகளாகி நீருக்கு அதிபதியான காத்தல் எனப்படும் "ஸ்திதி" கர்த்தரான விஷ்ணுபாகத்தை உணர்த்துவதாகும். அரன் என்பதன் பெண்பாலே அரி என்பதாகும். அதனாலேயே "அரியலால் தேவி இல்லை ஐயன் ஐயாறனார்க்கே"என்று திருநாவுக்கரசு நாயனாரும், 'மாதாய மாலவனை மாயவனை' என்று திருமழிசையாழ்வாரும் அருளிச் செய்திருக் கிறார்கள். மேலுள்ள பாகம் நெருப்பிற்கு அதிபதி. அழித்தல், மறைத்தல், அருளல் எனப்படும் முத்தொழில்களுக்கும் அதிபதியாகிய சிவபாகம். இம்மூன்றும் சேர்ந்த அருவமும் உருவமுமற்ற ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் ஜோதி வடிவே சிவலிங்கமாகும்.

சிவலிங்கத்தை வழிபட்டால் பிரம்மாவை வழிபட்ட பலனும், மகாவிஷ்ணுவின் 10 திரு அவதாரங்களை வழிபட்ட பலனும் சிவபெருமானின் 25 மூர்த்தங்களை வழிபட்ட பலனும் ஒருங்கே கிடைக்கக் கூடியதாகவும் இருக்கிறதென்பதை வேதாகமங்கள் வலியுறுத்து கின்றன. புராண இதிகாசங்களும் அனுபூதி மான்களது







அனுபவங்களும் அந்த உண்மையை உறுதிப்படுத்துகின்றன. அரசமரம் சுற்றிவரும் சைவ–வைஷ்ணவ அன்பர்கள் "மூலதோ பிரம்ம ரூபாய, மத்யதோ விஷ்ணி ரூபிணி, அக்ரதஸ்சிவ ரூபாய விருக்ஷராஜாயதே நம !" என்று சொல்லுகிற மந்திரமும் சிவலிங்க தத்துவத்தை வலியுறுத்துகின்றன அல்லவா?

மேலுலகத்தில் அதிகாரம் பெற்ற சகலருமே சிவபூஜை செய்தே அவ்வப் பதவிகளைப் பெற்றிருப்பதாக நமது நாயன்மார்களும் மாணிக்கவாசகரும் தேவார திருவாசகங்களில் அருளிச் செய்திருக்கிறார்கள்.

ஆகவே இம்மண்ணுலகிலுள்ள நாம் மேலே சொன்ன சிவலிங்க வடிவிலோ அல்லது அவர் எடுத்துக்கொண்ட 25 மூர்த்தங்களில் ஏதாவது ஒரு வடிவத்திலோ ஒரு சிலையைச் செய்து அதற்கு வேதாகமங்களில் சொன்ன முறைப்படி (1) ஆவாகனம், (2) ஸ்தாபனம், (3) சந்நிதானம், (4) சந்நிரோதானம் முதலிய கிரியைகளைச் செய்து அதில் அந்த மூர்த்தியை எழுந்தருளியிருக்கும்படி வேண்டிக் கொண்டால் முன்னே வெறும் சிலையாக இருந்த அது முருகப் பெருமான், நடராஜப் பெருமான், விநாயகப் பெருமான் என்ற அந்தந்தச் சிறப்புப் பெயர் பெற்று, அந்தந்த மூர்த்தத்தில் என்னென்ன அதிகாரம் செலுத்தினார்களோ அந்தந்த அதிகார மூர்த்தியாக வேதாகமச் சட்டப்படி அமைந்து விடுகிறார்கள்.

ஆண்டவன் எடுத்துக்கொண்ட திருமேனிகளின் விவரங்களை எல்லாம் விண்ணுலகிலிருந்து விளங்கி, இம்மண்ணுலகில் அந்தந்த உருவங்களைச் சிற்ப சாஸ்திர முறையில் சிலைகளாகச் செய்து அவற்றில் அதற்குரிய மூர்த்திகளைப் பக்தர்களுக்காக எழுந்தருளி வீற்றிருக்கும்படி பிரார்த்தனை செய்து விக்ரக ஆராதனை செய்து வருகிறார்கள். அதிகநாள் கெடாமல் இருப்பதற்காகவும், விஞ்ஞானரீதியாகவும் அவற்றைக் களிமண்ணால் செய்யாமல் கருங் கல்லாலும், செம்பாலும் அமைத்திருக்கிறார்கள். கல்லினது ஆற்றல் செம்பின் ஆற்றலைவிடப் பன்மடங்கு அதிகமானது. கல்லானது எந்தப் பொருளையும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்தது. உதாரணமாக மலையானது ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கும் மேகத்தைத் தன்பால் இழுத்துக் குளிர்வித்து, மழையாகப் பொழியும்படி செய்கிறது. அல்லாமலும் கல்லில் பஞ்சபூதங்களின் தன்மையும் விசேடமாக அடங்கியிருந்து வெளிப்படுதல் போல மற்ற உலோகங்களில் இல்லை. பஞ்சபூதங்களாவன :

(1) ஆகாயம், (2) காற்று, (3) நெருப்பு, (4) நீர், (5) நிலம் என்பன.

1. வெளியில் உள்ள சப்தத்தைத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கி, பின்னர் வெளியிடும் ஆற்றல் ஆகாயத்திற்கு உண்டு. அதே தன்மை கல்லுக்கும் உண்டு. கல் மண்டபங்களிலும், மலைப் பிரதேசங்களிலும் சப்தங்கள் எதிரொலியாவது போல் வேறு எந்த இடங்களிலும் ஒலிப்பதில்லை என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

2. கல்லிலே காற்று உண்டு என்பதைக் "கல்லினுள் தேரைக்கும்" என்ற தொடரை ஆய்வதிலிருந்து தெரியலாம். காற்று இல்லாத இடத்தில் எந்த ஜீவராசியும் உயிர்வாழ முடியாது. கல்லினுட் தேரை வசிக்க வேண்டுமானால் கல்லிலே காற்று இருக்க வேண்டுமல்லவா ? எனவே கல்லில் இரண்டாவது சொல்லப்பெற்ற காற்றும் உள்ளது.

3. இனிக் கல்லிலே நெருப்பு தங்கியிருப்பது போல் வேறு எந்தப் பொருளிலும் இல்லை. அதனால்தான் பழங்காலத்தில் நெருப்பு உண்டாக்க வேண்டுமானால் இக்கற்களை ஒன்றோடொன்று உராயச் செய்து நெருப்பினை உண்டாக்கி உபயோகித்தார்கள். அரணி மரக்கட்டைகளைக் கடைந்தும், நெருப்பை உண்டாக்கினார்கள். இருந்தாலும் கல்லில்தான் நெருப்பின் சக்தி மிகுதியாக இருக்கிறது. அதிலும் சிகி முகிக் கற்கள் அந்த வகையில் மிகுந்த ஆற்றலுடையவை. அநேகமாக அவைதாம் தீயினை உண்டாக்க அந்நாளில் உபயோகப்படுத்தப்பட்டன. ஆகவே கல்லில் நாம் மூன்றாவதாகச் சொன்ன நெருப்பும் உள்ளது.



4. மேற்கூறிய மூன்று ஆற்றல்களை உடையதாக இருந்தாலும், கல்லானது தன் இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறாமல் இருக்கும். சாதாரணமாகக் கல்லைத் தொட்டால் அது தண்ணீர் போன்று தண்ணென்றிருப்பதையும், சில பாறைகளில் நீரூற்று இருப்பதையும் எல்லோரும் அனுபவத்தில் உணரலாம்.

5. இனி ஐந்தாவதாக் கல்லில் நிலம் என்ற கடைசிப் பூதம் இருக்கிறதா என்பதைக் கேட்கவே வேண்டாம். கல்லே நிலத்தைச் சேர்ந்ததுதான் அல்லவா ? ஐம்பூதங்கள் அடங்கியிருப்பதற்கும் ஆண்டவனுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சிலர் கேட்கலாம். ஆண்டவனே ஐம்பூதங்களில் கலந்துதான் இருக்கிறார் என்பதற்கு மாணிக்கவாசகர் திருவாசகம் சான்று தருகிறது.

*பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி*
*நீரிடை நான்காய் திகழ்ந்தாய் போற்றி*
*தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி*
*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி*
*வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி*

என்பது திருவாசகத்தில் போற்றித் திருவகவலில் வரும் அவ்வழகமைந்த பகுதியாகும். ஐம்பூத வடிவாகி விளங்கும். ஆண்டவனது உருவத்தை ஐம்பூதங்களும் அடங்கிய ஒரு பொருளில் வீற்றிருக்கும்படி வேண்டுதல் செய்து வழிபடுதல் சாலச் சிறந்ததல்லவா? அதனால்தான் நமது முன்னோர்கள் நாம் வழிபடும் மூர்த்திகளுடைய விக்ரகங்களைக் கல்லால் அமைத்தார்கள்.

ஆனதால் மூர்த்தி, தலம், தீர்த்தம் சிறப்புக்கள் கொண்ட ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டு இம்மை, அம்மை, மறுமை, நலங்களைப் பெற்று நல்வாழ்வு வாழ்வோமாக.



## வழிபாடு செய்வது எப்படி?

* தினந்தோறும் சில நிமிடங்களை ஒதுக்கி வையுங்கள். அப்போது ஒன்றும் பேசாதீர்கள். கடவுளைப் பற்றி நினைக்கப் பழகுங்கள். பிறகு இயல்பாக, சாதாரண வார்த்தையில் உங்கள் மனதில் உள்ளதை கடவுளிடம் சொல்லுங்கள்.
* பஸ்ஸில் போகும்போது, ஆபீசில் வேலை செய்யும்போது கடவுள் எதிரே உட்கார்ந்து இருப்பதாகப் பாவனை செய்துகொண்டு குட்டிப் பிரார்த்தனைகளை அடிக்கடி பண்ணுங்கள்.
* எப்போதும் அது வேண்டும், இது வேண்டும் என்று கேட்டுக் கொண்டேயிராதீர்கள். கடவுள் ஏற்கனவே கொடுத்திருப்பதற்கு நன்றி செலுத்துங்கள். உங்கள் பிரார்த்தனைகள் உங்களுக்குப் பிரியமானவர்களுக்கு கடவுளின் அன்பையும், பாதுகாப்பையும் சம்பாதித்துத் தரும் என்று நம்புங்கள். கசப்பு, பகை இவற்றுக்குப் பிரார்த்தனையின் போது இடம் கொடாதீர்கள்.
* கடவுளிடம் கேட்க வேண்டியதைக் கேளுங்கள். ஆனால் அவர் கொடுப்பதைப் பெற்றுக்கொள்ளத் தயாராக இருங்கள். நீங்கள் கேட்பவைகளைவிட அவர் கொடுப்பது சிறந்ததாக இருக்கும்.
* கடவுள் மீது பாரத்தைப் போட்டுவிட்டு இயன்றதைச் செய்யுங்கள். பலன் தருவதும் தராததும் அவர் விருப்பம்.
* உங்களைப் பிடிக்காதவர்களின், உங்களைச் சரியாக நடத்தாதவர்களின் நலம் கோரிப் பிரார்த்தனை செய்யுங்கள். அது அதிகப் பலனையும், மனநிம்மதியையும் நிச்சயம் நல்கும் என்பதை அனுபவத்தில் உணருவீர்கள்.
* யார் யாருடைய நன்மை வேண்டிப் பிரார்த்தனை செய்வது என்று ஒரு பட்டியல் தயாரியுங்கள். எவ்வளவு அதிகமான பேருக்குத் குறிப்பாகச் சம்பந்தப்படாதவர்களுக்காக பிரார்த்தனை செய்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக உங்களுக்குப் பலன் கிடைக்கும் என்கிறார், பல சுய முன்னேற்றப் புத்தகங்களை எழுதிய நார்மன் வின்செண்ட் பீல்.




# சங்கே முழங்கு

"சங்கு சுட்டாலும் வெண்மைதரும் – கெட்டாலும் மேன் மக்கள் மேன் மக்களே"

என்று சங்கின் பெருமையைப் பறைசாற்றுகிறது பழம் பாடல் ஒன்று.

Conch என்று பெயர் கொண்ட சங்கு ஆழ்கடலில் அதிகம் காணப் பெறுகின்றது. முத்துக் குளிப்பது போன்று சங்கு எடுப்பதும் மிகவும் கடினமான தொழிலாகும்.

இந்தியாவில் தூத்துக்குடிப் பகுதியில் தான் சங்குகள் பெருமளவு எடுக்கப்படுகின்றன. சங்கினைக் காதருகில் வைத்துக் கேட்டால் கடல் அலைகளின் ஓசையைக் கேட்கலாம். சங்கின் உள்ளே வளைவாக அமைந்த பாதை வழியே காற்று புகுந்து வருவதால் ஏற்படும் ஓசையே அது.

*'புள்ளும் சிலம்பின காண் ; புள்ளரையன் கோயிலில்*
*வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?'*

என்ற பாடல் வரிகள் அந்நாளில் ஆலயங்களில் மங்கள இசையாகச் சங்கு ஒலிக்கப்பட்டதை உணர்த்தும். இறைவனுக்குச் சங்கினால் அபிஷேகம் செய்து வழிபட்டு வருவது இன்றும் நடைமுறையில் உள்ளது. இன்னும் பலவிதமான ஆன்மிக யாகங்களுக்கும், ஹோமங்களுக்கும் பூஜைகளுக்கும் சங்கு பயன்படுகிறது.

*'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத*
*முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்*
*மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்*
*கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீ ! நான்;'*

எனும் ஆண்டாளின் பாசுரம், திருமணங்களில் மங்கள இசையாகச் சங்கொலி எழுப்பப்பட்டதை அறிவிக்கிறது. போர்க் காலங்களிலோ போரில் கிடைத்த வெற்றியைப் பறைசாற்றும் விதமாகச் சங்கநாதம் முழங்கப்பட்டது. இதனை அடியொற்றித்தான் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்,

*'எங்கள் வாழ்வும்*
*எங்கள் வளமும்*
*மங்காத தமிழ் என்று*
*சங்கே முழங்கு'*

தமிழ்மொழியின் சிறப்பினை, வெற்றிப் பெருமையைக் கூறிச் சங்கு முழக்குகிறார்.

சங்குகளில் பலவகை உண்டு. அவற்றுள் சிறப்பாக கருதப்படுவது வலம்புரிச் சங்கு. வலப்புறம் சுழித்துக் காணப்படுவதால் இப்பெயர் பெறுகிறது. வலம்புரிச் சங்கு மிகவும் அரிதாகக் கிடைக்கக் கூடிய வலம்புரி விநாயகர் போல் சிறப்புடையது இது.

சங்கு சக்ரதாரி என்றழைக்கப்படும் திருமால் தன் திருக்கையில் ஏந்தியுள்ள வலம்புரிச் சங்கு பாற்கடலின்றும் தோன்றியது. இறவா வரத்தைத் தரும் தேவாமிருதத்தைப் பெறத் தேவர்களும் அசுரர்களும் மந்தார மலையை மத்தாக நட்டு வாசுகியை நாணாக இட்டு, பாற்கடலைக் கடைந்த போது அக்கடலினின்றும் வெள்ளையானை (ஐராவதம்) கற்பக விருக்ஷம் காமதேனு என்று ஒவ்வொன்றாக வந்ததைப் போல வலம்புரிச் சங்கும் வந்ததாகவும் அதைத் திருமால் தன் திருக்கையில் ஏந்திக் கொண்டதாகவும் கூறப்படுகிறது.

அதர்மத்தையழித்துத் தர்மத்தை நிலைநிறுத்த அஞ்சனவண்ணன் கண்ணபிரானாய் அவதரித்த போதும் அவர் தம் கையில் வீற்றிருக்கும் பாக்கியம் பெற்று, குருக்ஷேத்திரப் போரில் தனது முழக்கத்தால் பகைவர்களையெல்லாம் நடுங்க வைத்த பாஞ்சசன்யம் என்னும் பெயர் பெற்ற அவ்வலம்புரிச் சங்கிற்குப் 'படை போர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே' என்று பெரியாழ்வார் பல்லாண்டு பாடியுள்ளார்.

'நீ உண்பதோ உலகளந்தான் வாயமுதம், நீ உறங்குவதோ கடல் வண்ணன் கைகளிலே, அதனால், பெண்களெல்லாம் உன்மேல் பொறாமை

கொண்டுள்ளார்கள்' என்று அச்சங்கு பெற்ற பேற்றினை வியந்து கூறும் அண்டாள், 'கற்பூரம் நாறுமோ ! கமலப் பூ நாறுமோ ?' என்று மாதவனின் வாய்ச்சுவையையும், மணத்தையும் பற்றிச் சங்கினிடம் வினவுகிறாள்.

இத்தகு தெய்வீகத் தன்மைகள் கொண்டதாலேயே வீடுகளில் வலம்புரிச் சங்கைப் பூஜையில் வைத்து நாம் வழிபடுகிறோம். திருமாலின் திருச்சின்னங்களுள் ஒன்றான வலம்புரியை வைத்துப் பூஜிப்பதால் செல்வத்துக்கும் அதிபதியாக விளங்கும் லக்ஷ்மி விரும்பி வாசம் செய்வாள். அதனால், வீட்டில் சுபிட்சம் பெருகும் என்று திடமாக நம்பப்படுகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த வலம்புரிச் சங்கு மருத்துவ குணம் கொண்டும் விளங்குகிறது. சிறு குழந்தைகளுக்குப் பால், மருந்து முதலியவற்றை இச்சங்கில் கொடுக்க நோய்கள் அணுகா. கடலில் பிறந்ததால் கால்சியம், சோடியம், பாஸ்பரம் போன்ற உடலுக்குத் தேவையான தாது உப்புகளைக் கொண்டிருக்கும் சங்கில் சேமிக்கப்பட்ட நீரைக் குடித்தால் பலவிதமான நோய்களிலிருந்தும் நம்மைக் காத்துக்கொள்ள முடியும்.

இன்றும் வங்காளத்தில் மக்களின் வாழ்வில் சங்கு மிக முக்கிய இடம் பெறுகிறது. அங்குத் திருமணமான பெண்கள் சிறுசிறு சங்குகளால் செய்யப்படும் வளையல்களை மங்கல அணிகலனாக அணிகின்றனர். சங்கு மாலை போன்ற ஆபரணங்களையும் விரும்பி அணிகின்றனர். திருமணங்களில் சங்கொலியே மங்கள இசையாக ஒலிக்கப்படுகின்றது.

நகரத்தார் திருமணங்களில் முதன் முதலில் சங்கு ஊதித்தான் கொழுமேளம் வாசிப்பது, கோலம் போடுவது, மணை போடுவது, மாப்பிள்ளை அழைப்பது என்று எதனையும் தொடங்குவது பரம்பரை வழக்கமாக உள்ளது. அதே போல் கேத வீடுகளிலும் சங்கு ஊதப்பெறுவது வழக்கமாகும்.

நம் தமிழ்நாட்டின் மாநிலச் சின்னமாக இருப்பது சங்கு. திருவனந்தபுரத்தில் உள்ள சங்கு முகம் என்ற துறையில் நீராடிய பின்னரே அனந்த பத்ம நாபரைத் தரிசிக்க மன்னர் செல்வது இன்றும் வழக்கத்தில் இருக்கிறது.



## 9 வகையான பக்தி முழக்கம்

| | | |
|---|---|---|
| 1. சிரவணம் | – | இறைவன் புகழைத் தக்கவர் கூறக் கேட்டல் |
| 2. கீர்த்தனம் | – | இறைவன் புகழ்பாடுதல் |
| 3. ஸ்மரணம் | – | இறைவனை எப்போதும் மறவாதிருத்தல் |
| 4. பாதஸேவனம் | – | ஆண்டவனுக்கும் அடியார்களுக்கும் தொண்டு செய்தல் |
| 5. அர்ச்சனம் | – | ஆண்டவனுக்கு அர்ச்சித்தல் |
| 6. வந்தனம் | – | ஆண்டவனை அஷ்டாங்க, பஞ்சாங்க நமஸ்காரம் செய்தல் |
| 7. தாஸ்யம் | – | ஆண்டவனின் பெருமைகளை விளக்கிக் கூறுதல் |
| 8. லக்யம் | – | மனதை ஒருநிலைப்படுத்தி அவனை எண்ணி தியானம் செய்தல் |
| 9. ஆத்ம நிவேதம் | – | அவனிடம் தன்னையே அர்ப்பணித்தல் |

இந்த 9 மார்க்கத்தில் அர்ச்சனம் என்னும் பூஜையே சிறந்தது. பூஜைகளை மூன்று வகைப்படுத்தலாம்

1. உருவ வழிபாடு – முதல் நிலை
2. அருவ வழிபாடு – முதிர்ந்த நிலை
3. அருவுருவ வழிபாடு – இது முதிர்ந்த நிலையான ஞானிகள் வழிபடும் அருவ நிலைக்கு வழிகாட்டும்

# ஆலய நாதசுர இசைமரபுகள்

– ஆண்டாங்கோயில் நாதசுரக்கலைஞர், **ஏ.வி. செல்வரெத்தினம்**

## இசைக்கருவிகள் நான்கு வகை

துளைக் கருவிகள், நரம்புக் கருவிகள், தோல் கருவிகள், கஞ்சக்கருவிகள் என நான்கு வகைப்படுத்தி, கோயில் பூஜைக்கெனவும், மணவினைக்கெனவும், விளையாட்டிற்கெனவும், வீரத்திற்கெனவும், விழாவிற்கெனவும் வழங்கி வந்துள்ளன. இவைகளைப் பற்றிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, முதலிய பழம்பெரும் நூல்களின் வாயிலாக அறியக்கிடைக்கின்றன. எல்லாவற்றையும் தனித்தனியே விளக்கிடுவதற்குக் கட்டுரை இடமளிக்காது. எனவே, இங்கு அவசியமானதாகிய குழல் வகைகள் மாத்திரம் சொல்லப்படுகின்றது.

## துளைக்கருவிகள்

சங்கு, தவளச்சங்கு, திருச்சின்னம், பூரி, நபூரி, எக்காளம், கவுரிகாளம், தாரை, கோணத்தாரை, பெருந்தாரை, முகவீணை, வங்கியம், பெருவங்கியம் நாதஸ்வரம், திமிரி நாதஸ்வரம் என்பவை துளைக் கருவிகளாகும்.

கோயில் பூஜா காலங்களுக்கு என்று தற்போது குழல் வகைகளில் எஞ்சி நிற்பது நாதஸ்வரம், சங்கு, முகவீணை, திருச்சின்னம், எக்காளம், நபூரி ஆகியவை மட்டுமே. இவைகளில் முதன்மைநிலை வகிப்பது, நாதஸ்வரமே'; சுவாமி புறப்பாட்டில் இறைவனுக்கு நேராக நின்று வாசிக்கப்படும் சேவகமுறை நாதஸ்வர மேளத்துக்குத்தான் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றைய குழல்வகைகள் மேளத்துக்குப் பின்புறமும், தேவாரம் திருப்பல்லாண்டு முதலியன சுவாமிக்குப் பின்புறமும் சேவகமுறை கொடுக்கப்பட்டுள்ளது. இதன் காரணம் ;

## புராண வரலாறு

துர்வாச முனிவரின் சாபத்தினால் தேவேந்திர மகாராஜாவின் ஆஸ்திகளனைத்தும் கடலுக்குள் சங்கமமாகி விடுகின்றன. தேவேந்திரன் மகாவிஷ்ணுவிடம் முறையிடுகின்றார். இதன் காரணமாக மகாமேரு பர்வதத்தை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பினைக் கயிறாகவும் கொண்டு தேவர்கள் ஒரு புறமும் அசுரர்கள் ஒரு புறமுமாகவும் நின்று திருப்பாற்கடலைக் கடைகின்றபோது ஸ்ரீ மகாலெட்சுமி அமிர்த குடத்தோடு பிரஸன்னமாகின்றார். தேவர்கள் புறம் அமிர்தம் கிடைக்கப்பட்ட உத்வேகத்தில் வெற்றி முழக்கமாகப் பாம்பின் வாலையே கொம்புபோல் வாயில் வைத்து ஊதி சுயம்பிரகாசமாகிய நாதத்தை எழுப்பியதாகச் சொல்லப்படுகின்றது. ராஜ வாத்யம் – மங்கள வாத்தியம் என்பதான பொருளுடன் விளங்கி வரும் நாதஸ்வரத்துக்கு நாதஸ்வரமா? நாகஸ்வரமா என்ற வழக்கு ஒன்று உள்ளது. நாக சர்பத்தின் உருவ அமைப்போடு விளங்குவதனால் நாகஸ்வரம் என்று சொன்னாலும், நாதனால் நாதத்தை எழுப்பி நாதோபாசனையே செய்துவரும் இந்த வாத்யத்துக்கு நாதஸ்வரம்' என்ற பெயரே மிகவும் பொருந்தும்.

## நாதஸ்வரம் செய்விக்கும் மரம்

*ஓங்கிய மூங்கிலுயர் சந்துவெண் கலமே*
*பாங்குடை செங்காலி கருங்காலி பூங்குழலாய்*
*கண்ண ணுவந்த கழச்சிவை யாமென்றார்*
*மண்முழுது நூலுணர்ந்தோர் வைப்பு.*

பஞ்சபுராண நூலில் கண்டுள்ள இந்தச் செய்யுளில், ஐந்து வகைகள் தான் சொல்லப்பட்டுள்ளன. எங்கள் மூதாதையர்களின் குறிப்பின்படி சந்தனம், கருங்காலி, செங்கருங்காலி எனச் சொல்லப்படும் ஆச்சாமரம் – வேங்கை மூங்கில் – தோதகத்தி – விப்புளா – வெண்கலம் – வெள்ளி – பொன் – யானைத் தந்தம் இப்பதினொன்றில் ஏதாவது ஒன்றினால் நீளம் 120 நெல் – கீழணசு வைக்கம் நீளம் விரல் 1 நெல் 4; மேலணசு வைக்கும் நீளம் விரல் 2 நெல் 4; சுரத்தின் துவாரம் சுற்றளவு நெல் 1; உளவின் சுற்றளவு மேல் புறம் 2 1/2 விரல் கீழ்ப்புறம் 4 1/2 விரல், நாதசுரத்தின் முழுநீளம் 32 விரல்கள் என்று சொல்லப்படுகின்றது.

இந்த விவரப்படி 28 அங்குலம் நீளம் அஞ்சுகட்டை ஸ்ருதி உள்ள நாதஸ்வரம் இந்தக் கணக்குவரும்.



என் தந்தையார், ஆண்டாங்கோயில் வீராசாமி பிள்ளை அவர்கள் இந்த அளவுள்ளதான தங்க நாதஸ்வரம் வாசித்துள்ளார். "தங்க நாயனக்காரர் வீடு" என்பதாக எங்கள் வீடு அடையாளம் சொல்லப்படும் வழக்கம் இன்றும் நடந்து வருகின்றது.

நாதஸ்வரம் தற்போது செங்கருங்காலி என்னும் ஆச்சா மரத்தில் மட்டுமே செய்விக்கப்படுகின்றது. இம்மரம் 42 வயதுள்ளதாகவும் கூடுதல் குறைச்சலாகவும் வயதுடையது கூடாது என்பதாகவும், 42 வயது தானா என்று சோதித்திட, அம்மரத்தைக் கொஞ்சம் சீவி விளக்கில் பிடித்தால் தீபம்போல் எரியுமென்றும் கூடுதல் குறைச்சல் வயதுள்ளதாயின் கருகிவிடும் என்றும் சொல்லப்படுகின்றது.

ரிக்வேதத்தில் உத்தாலவேணு என்னும் பெயர் நாதஸ்வரமே என்பதை ஜெர்மானிய ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ச்சி செய்து கண்டறிந்து தெளிவாக்கியுள்ளார்கள். வேத சாஸ்திர முறைப்படி நாஸ்வர உடற்கூறின் வேதைகள் சொல்லப்படுகிறது.

அடிவட்டம் சூரியன், மேல்சுற்று அஷ்டமாநாகம், அதன்மேல் காணப்படும் சில் சந்திரன், மேலே உள்ள ஸ்வரத்தின் துளை சக்தி, உள்ளே பெருந்துளை விஷ்ணு, சுயம்பிரகாசமே நாதம்.

துளைகளில் எழும் ஒலி ஸப்தமாதர்கள், சுரங்கள் தேவர்கள், கிருஷ்ணா, இந்திரன் வலதுகனிஷ்டை-சரஸ்வதி, அருமிகை-இந்திராணி, மந்திமை-வைரவி, தர்சனி-வராகி, இடது அருமிகை -காளி, மித்திமை-நாராயணி, தர்சனி-துர்கை என்பதாகச் சொல்லப்படுகின்றது.

### (இது நந்தி மதமாம்)

1. எகிப்தில் உள்ள இரண்டு பிரமிடுகளிலும், மலேஷியாவில் உள்ள ஒரு புராதன ஆலயத்திலும் நாதஸ்வர வாத்யம் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் காணப்படுவதாக ஆராய்ச்சி யாளர்கள் குறிப்பிடுகின்றனர்.
2. சிலப்பதிகாரத்தில் வங்கியம் என்ற பெயரில் நாதஸ்வரம் குறிப்பிடப்படுவதினை, அந்நூல் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் சொல்லியுள்ளார்.
3. கி.பி. 1100ஆம் ஆண்டில் எழுதப்பட்ட சிங்கிராஜ புராணம் என்ற கன்னட நூலிலும்
4. ஸ்காந்தம் என்ற பழைமையான ஸமஸ்க்ருத நூலில் சிவரகஸ்ய காண்டம் என்ற அத்யாயத்திலும் நாதஸ்வரம் பற்றிய விவரங்கள் உள்ளதாக ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.
5. கி.பி. 1400ஆம் ஆண்டு துவங்கிக் காணப்படும் பல கல்வெட்டுகளும் நாதஸ்வர தவில் வித்வான்களுக்கு மான்யம் வழங்கப்பட்டதற்கான செப்பேடுகளும் உள்ளதாக ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

இத்தகைய தொன்மை வாய்ந்த நாதஸ்வரக் கலையினை இறைவன் தனக்கே உரியதாக வைத்துக்கொண்டுள்ளதே மிகவும் சிறப்புடையதாகும். உலகில் திருக்கோயில்கள் தோன்றிய நாளாய் குழலொலியும் – பாவராக தாளத்துடன் அமையப் பெற்ற கூத்தொலியும், பெரியமேளம் சின்னமேளம் என்கின்ற பெயருடன் ஈசனின் பூஜைக்குச் சேவகம் செய்யப்பட்டு வந்துள்ளது.

### சேந்தனார் திருப்பல்லாண்டு

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி 'விழவொலி விண்ணளவும் சென்று விம்மி மிகு திருவாரூரின்' மழவிடையார்க்கு வழி வழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த பழ அடியாரொடும் கூடி எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

### இளங்கோவடிகள்

*"குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும்*
*வழுவின்றிசைத்து வழித்திறன் காட்டும்*
*அரும்பெறன் மரபிற்பெரும்பாண் இருக்கையும்"*

என்பதாகச் சிலப்பதிகாரத்தில் குழலைத்தான் முதன்மையாகக் கொண்டு பாடியுள்ளார்கள்.

### நாதஸ்வரத்துக்குச் சில நியதிகள்

இன்னின்ன நேரத்தில் ராகங்கள் (நிறங்கள் என்றும் சொல்லலாம்) வாசிக்கப்படவேண்டும். ஒவ்வொரு நிறங்களுக்கும் உள்ள சிறப்புக்கள் என்ன என்பதையும் முன்னோர்கள் வகுத்துத் தந்துள்ளார்கள். அவற்றின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன. அக்காலத்தில் சங்கீதத்தை மிகவும் பக்தியுடனும், காயகதோஷம் வராமலும் கையாண்டுள்ளார்கள். உதாரணமாக மண் பாண்டங்களில் சமைத்துப் படைத்திட எவ்வளவு பக்குவம் வேண்டுமோ அத்தகைய முறையில் ஆக்கியளித்துள்ளார்கள். இசை உலகில் என்றென்றும் வாழுபவர்களாகிய மகானுபவர்களால் சொல்லப்பட்ட வழிமுறைகளை என் சிற்றறிவுக்கு எட்டியவற்றினைத் தெரிவித்துள்ளேன்.

## இலக்கணமுறை இராக நிறங்களும் அவற்றின் மெய்யுணர்வுகளும்

1. நாட்டை : இது இறைவன் பவனி வருவதைப் பறைசாற்றிடவும், இறைவணக்கத்துடன் நற்காரியங்கள் துவங்கிடவும், வீரமுழக்கமாக அமைந்த நிறம்.

2. கௌளை: மனதில் தெய்வபக்தியைப் பெருக்குவதற்கும், இறைவனுக்கு அபிஷேகம் நடக்கும்போதும் தென்றல் வடிவை உணரச் செய்யும் நிறம்.

3. ஆரபி : இறைவனை ஜோதியாகத் தியானம் செய்வதற்கு உகந்த நிறம்.

4. வராளி : பந்தபாசங்களை மறந்து மனத்தை ஒருநிலைப்படுத்தி 'ஒன்றென்ற ஒன்றே காண்' என உணரச் செய்து யோக நிலையளிக்க இந்த நிறம் உகந்தது.

5. ஸ்ரீராகம்: உமையொருபாகம் என்பதை, பரமனில் பாதி ஸ்ரீ என்னும் தத்துவத்துடன் அர்த்தநாரீஸ்வரராக உணரச் செய்வது, ஸ்ரீ ராகம் என்னும் நிறம்.

6. கல்யாணி : மகிழ்ச்சியாய் அமர்ந்துகொண்டு இன்ப உணர்ச்சியுடன் இசையை ஆராதிப்பது இந்த நிறத்துக்குப் பொருந்தும்.

7. தன்யாசி : கடவுளிடம் நம் குறைகளை முறையிட்டு ஆபத்ஸஹாயராக வந்து அருளக் கோரிடுவதற்கு இந்த நிறம் ஏற்றது.

8. கேதாரகௌளை : மிகவும் துன்பப்படுவதாய் வேண்டி, குறை தீர்க்கும்படி கேட்டுக் கொள்ளுவதற்கு இந்த நிறம் ஏற்றது.

9. பூர்விகல்யாணி : பாவம் செய்யாதே மனமே என்று தன் மனத்தையும் தரணியிலுள்ள பேர்க்கும் இந்நிலை அருள்வேண்டும் என்பதற்காக வேண்டுவது இந்த நிறம்.

10. பெஹாக் : தான் விரும்பிய கோரிக்கை நிறைவேறிட நன்றியுடையவனாக வேண்டிக்கொள்வது இந்த நிறம்.

11. யதுகுல காம்போதி : மெய்யறிவுத் தோற்றம் உண்டாகவே, அதற்குமுன் தான் செய்த பாபச் செய்கைகளைக் குறித்து இரங்குதலும், இனி அவ்வாறான செய்கைகளில் ஈடுபடால் உறுதி மனம் வேண்டிடுவதாக அமையப்பட்டது இந்த நிறம்.

12. பிலகரி : நல்ல காரியங்களைச் செய்வதற்குத் துணிவு, புலன்களை வெற்றி கொள் எனத் தூண்டுதல் செய்வதற்கு இந்த நிறம் பெரிதும் தகுதியுடையதாகும்.

13. ஸகானா : ராகதேவதைகளிடம் மன்னிப்புக் கோரிட இந்த நிறம் பொருந்தும்.

14. ஆனந்தபைரவி : நிலைபெற்ற சாந்தம் கோரிடுவதற்கு இந்த நிறம் உகந்தது.

15. தோடி : கடவுளிடம் நம்பிக்கையுடைய ஒரு அன்பன் தனக்கும் கடவுளுக்கும் உள்ள பேதாபேதங்களை வெளிப்படுத்த இந்த நிறம் தகுதியுடையது.

16. பூபாளம் : அருணோதயத்தின் மெய்யுணர்வும் சாந்த மனோ நிலையும் அமைதியும் தரும் நிறம்.

17. மோகனம் : கடவுளின் எல்லையில்லாப் புகழினைப் பாடிப் பரவசப்படும் நிறம்.

18. நீலாம்பரி : நற்சாந்த நிலையில் அமைதியாய்த் தூங்கி, தேக வலிமை மனோவலிமை புத்துணர்ச்சியும் பெற்று வாழ் என்று வாழ்த்தும் நிறம்.

19. முகாரி : துக்கத்தை வெளிப்படுத்திப் புலம்பலாகக் கோரிக்கை விடுக்கும் நிறம்.

20. நாட்டைக்குறிச்சி : எல்லோரும் இன்பசாகரத்தில் திளைத்து இனிய மன மகிழ்வு பெறும் நிறம்.

21. நாதநாமக்கிரியை : நாதமும் வேதமும் கீதமுமாகிகய இறைவனின் கிரியா சக்தியைப் போற்றிப் புகழும் நிறம்.

22. புன்னாகவராளி : மெய்ம்மறந்து மகாதேவனிடம் மனம் லயித்துக் கூத்தாடி மகிழச் செய்யும் இந்த நிறம்.

23. சாவேரி: கடவுளிடம் கொண்டுள்ள தூயதான பக்திக் காதலை வெள்ளப் பெருக்காகப் பெருக்கெடுத்து ஓடச் செய்வது இந்த நிறம்.

24. சங்கராபரணம்: கைலைநாதரைக் கல்யாணசுந்தரராகக் கொண்டு கண்டு மகிழ்வுபெறும் உணர்வினைத் தூண்டச் செய்யும் நிறம்.

25. வேகடை : சத்தியத்தையே கடைப்பிடித்து வரும் ஒரு அன்பருக்கு எதிர்பாராத இன்னல் வந்து நேர்ந்துள்ளபோது, நண்பனாக வந்து காத்தருளும்படியாக இறைவனிடம் வேண்டியழைக்க இந்த நிறம் உகந்தது.

26. மத்தியமாவதி : பக்தியுடன் பகவானை அனுதினமும் போற்றும் பாவலர்களுக்கும் பாமரர் களுக்கும் கோரிக்கையில்லாமலேயே ஸர்வமங்களங்களும் கங்காளதாரணர் அருள்பாலித்திருவார் என்பதைக் குறித்திடும் நிறம்.

இம்மாதிரி நிறங்களின் சுவை உணர்ச்சி தக்கவிதத்தில் பொருந்துவதாய், இன்பமாய், அநிர்வன்மாய்ப் புகழத்தக்க விதத்தில் நிற ஆளத்தியென்பது நம் தமிழ்நாட்டிலேயே தொன்றுதொட்டு மரபாக வழங்கி வருகின்றது. இந்த நிறமாகிய இராகமும், நிறத்தின் ஆலாபனை முறையும் நம் தமிழினத்தோரின் பூர்விகச் சொத்து.

**திருக்கோயில்களில் அன்றாடம் நடைபெறும் பூஜாகாலங்கள்**

| | | |
|---|---|---|
| அதிகாலை | 5 மணிக்கு துவக்கம் | உஷத்காலம் |
| காலை | 9 மணிக்கு துவக்கம் | காலசந்தி |
| பகல் | 12மணிக்கு துவக்கம் | உச்சிக்காலம் |
| மாலை | 5 மணிக்கு துவக்கம் | சாயரட்சை |
| இரவு | 7 மணிக்கு துவக்கம் | இரண்டாங்காலம் |
| இரவு | 9 மணிக்கு | அர்த்தஜாமம்-பள்ளியறை பூஜை |

**பள்ளியறை பூஜை சமயம்**

ஆனந்தபைரவி – நீலாம்பரி – ஸகானா ஆகிய நிறங்களில் ஏதாவது ஒன்று வாசித்துக் கதவடைப்பாட்டு என்று சக்கரவாக இராக நிறத்திலமைந்த பாடல் வாசிக்கப்படும். மற்றும் இராக நிறங்களைப் பூஜாகாலங்களுக்கென்று பன்னிரண்டு பாகமாகப் பிரித்துக் காண்பிக்கப்பட்டுள்ளதின்படி அந்தந்தக் காலம் நேரத்துக்கு ஏற்ப வாசித்திடுவதே வழக்கம்.

**அதிகாலை மணி 4 முதல் 6 வரை**

பூபாளம் – பௌளி – மலயமாருதம் – வலஜி நாத நாமக்கிரியை – மாயாமாளவ கௌளை.

**காலை மணி 6 முதல் 8 வரை**

பிலகரி – கேதாரம் – கௌளிபந்து – ஜகன்மோகினி

**காலை மணி 8 முதல் 10 வரை**

தன்யாசி – அசாவேரி – சாவேரி – ஆரபி – தேவகாந்தாரி – தேவமனோகரி

**10 மணி முதல் பகல் 12 மணி வரை**

சுருட்டி – ஸ்ரீராகம் –மத்யமாவதி – மணிரங்கு – பிருந்தாவன சாரங்கா – தர்பார்.

**பகல் மணி 12 முதல் 2 மணி வரை**

சுத்தபங்களா – பூர்ணசந்திரிகா – கோபிகா திலகம் – முகாரி – கௌட மல்லாரி.

**பிற்பகல் 2 மணி முதல் 4 மணி வரை**

நாட்டைக் குறிஞ்சி – உசேனி – ரவிசந்திரிகா – வர்த்தனி – ஹம்ஸானந்தி – மந்தாரி.

**மாலை 4 மணி முதல் 6 மணி வரை**

பூர்விகல்யாணி – பந்துவராளி – வஸந்தா – லலிதா – சரஸ்வதி – சீளாங்கி – கல்யாணி – போகவசந்தம் – ஹம்ஸப்பரமரி.

**மாலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை**

சங்கராபரணம் – பைரவி – கரகரப்பிரியா – பைரவம் – நாராயணி – ஹம்ஸத்வனி – கௌளை – இரத்னாம்பரி.

**இரவு மணி 8 முதல் 10 வரை**

காம்போதி – ஷண்முகப்பிரியா – தோடி – நடபைரவி – ஹரிகாம்போதி – கமாஸ் – அமிர்த வஸந்தம் – ஸ்ரீரஞ்சனி

**இரவு 10 முதல் 12 வரை**

சிம்மேந்திரமத்யமம் – சாருகேசி – கீர்வாணி – ரீதிகௌளை – ஆனந்த பைரவி – நீலாம்பரி – யதகுலகாம்போதி – கார்த்தியாயனி – அம்ஸ நாதம்.

**நள்ளிரவு 12 மணி முதல் 2 மணி வரை**

அடாளு – கேதாரகௌளை – வேகடை – சாமா – வராளி – தர்மவாதி – பூஷவளி.

**2 மணி முதல் அதிகாலை 4 மணி வரை**

ஹேமவதி – கர்னாடக தேவகாந்தாரி – ரசாளி – பாகேஸ்வரி – மோகனம் – அருணக்கிரியா.

**உற்சவ காலங்களில்**

ஏர்படி உத்ஸவ காலங்களில் பத்து தினங்கள் சுவாமி வீதியுலா நடைபெறும். காலை விழாவில் கோயில் ஆஸ்தான கலைஞர்கள் வாசிப்பார்கள்.

**இரவு புறப்பாட்டிற்கு ஏர்படி மேளம்**

இரவு வீதியுலாவிற்குச் சிறப்பு நாதஸ்வர கச்சேரி பத்து தினங்களுக்கும் ஒரே குழுவினரோ, இரண்டு பகுதியாக, ஐந்து தினங்களுக்கு ஒரு செட்டோ, ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். முக்கிய திருவிழாக்களில் இரண்டு குழுவினர் சந்தித்து வாசிக்கும்படியாகவும் அதிகமாகச் செட்டு ஏற்பாடு செய்வது வழக்கம்.







**மல்லாரி**

சுவாமிக்கு மண்டகப்படி தீபாரதனை நடக்கும் எழுந்தருளும் சமயம், கெம்பீர நாட்டை தவில் அலாரிப்புடன் முழங்கிடும். பிறகு மல்லாரி.

**மல்லாரி என்பது கலைஞர்களின் கைவண்ணமே**

ஆதியில் காளிதேவியுடன் தாண்டவம் புரிந்த சிவபெருமான் கால் சலங்கையுடன் ஆகாயத்தில் உயரக்கிளம்பி ஆகாயமளவி இறங்கும்போது அவரது புஜம் துடை பாதம் நிலத்தில் விழுந்தபோது தா, தீ, தொம், நம் என்ற ஜதி பிறந்தது. அது ஜாதி வர்ணங்களினால் மிருதங்காதி வாத்யங்களுக்குப் பிரதானமாகவும் சக்தி, சிவம் பொருந்திய இரண்டு கைகளினாலும் தீம் தீம் திமி தாம் தாம் என்று அடிக்கும்போது உண்டாகிய தொனியானது ஸப்தஸ்வரங்களினுடைய நாதம் என்றும் சொல்லப்பெறும். இதன் காரணமாகத் தான் தோல்கருவியாகிய தவில் வாத்தியத்தில் தவுல் சொல் "குந்தகு குந்தகு திருத குந்தகு" என்பதாக அலாரிப்பு வாசிக்கச் செய்து பிறகு கெம்பீர நாட்டை நிறமும் மல்லாரியும் துவங்கப்படுகிறது.

**மல்லாரியென்பது என்ன ?**

பஞ்சமுக பரமனின் பாதசலங்கையில் ஒலித்து, பவனிவரும் நாட்டை கௌளை ஆரபி வராளி ஸ்ரீ ராகம் இணைந்து அலாரிப்புடனே தாளம் தவிலுடன் தழுவிக் குழலில் நடனம் செய்யும். மல்லாரியென்று சொல்லும் காவியக்கலையிதுவே.

பரமனாரின் பாத சலங்கையிலிருந்து தோற்றுவிக்கப்பட்டவையே அனைத்தும் என்பதான கருத்துடன் இந்த ஸாஹித்யம் செய்யும்படி எனக்கு அருள் கிட்டியது. இதற்கு உவமையாக திருவாசகத்திலிருந்து ஒரு வாசகம் தருகிறேன். குயிற்பத்து.

*கீதமினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்*
*பாதமிரண்டும் வினவில் பாதள மேழினுக்கப்பால்*
*சோதிமணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தன்மை*
*ஆதிகுண மொன்றுமில்லான் அந்தமில்லான் வரக்கூவாய்.*

பாதங்கள் வினவிடும் சொற்கள் ஏழுபாதளங் களுக்கு அப்பாலும் பேசிடுவதாகவும், மற்ற எந்தச் சொற்களும் உயிரற்றதாகவும் மாணிக்கவாசகர் சொல்லிடும் பாதங்கள் இரண்டும் வினவிடும் சொற்கட்டுகளையே, தாளக்கட்டுப்பாட்டுடன் மல்லாரியாக அமைத்து சுரக்கோர்வை ஆகியவைகளுடன் அவாளவா திறமைக்கேற்ப மல்லரி உருப்பெற்று முழங்கி வழங்கிடப்படுகின்றது.

கெம்பீரநாட்டை நிறத்தில்தான் மல்லாரி வாசிக்கப்படவேண்டும். ரிஷபம் பிடித்துப் பாடப்படும் சலநாட்டையில் மல்லாரி வாசிக்கக் கூடாது. இறைவனுக்குக் கட்டியம் கூறியிடுவதான கருத்துடன் அமைந்துள்ளதுதான் மல்லாரி. மல்லாரியில் லயவேலைப்பாடுகள் முடிந்து, பிறகு அன்னிய ராகமாக (அதாவது ராகமாலிகை) கனபஞ்ச இராகங்கள், நாட்டைக்குப் பிறகு கௌளை, ஆரபி, வராளி, ஸ்ரீராகம் இந்த ஐந்து ராகங்களும் தேரடிவரை வாசிக்கலாம். இவ்வகைப் பஞ்சரங்களின் சிறப்புகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| பவனி வருங்கால் | – | நாட்டை |
| பக்திப் பெருக்கால் | – | கௌளை |
| பரம்ஜோதியே | – | ஆரபி |
| பந்தத்தை மறக்க | – | வராளி |
| பரமனில்பாதி | – | ஸ்ரீ |

சுவாமி புறப்பட்டுக் கோபுரவாயிலில் வந்தவுடன் கோபுரதெரிசன தீபாரதனை செய்யப்படும். அது சமயம் கெட்டி மேளம் வாசிக்கப்படும். "கெட்டி மேளம்" அரஹரா அரஹரா என்று இறைஞ்சி முழங்கிடுவதான பொருள். அங்கு முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்து எண்ணாயிரம் கோடி ரிஷிகள், அஷ்டவசுக்கள், கின்னர், கிம்புருடர், சித்த வித்யாதரர், ஏகாதஸருத்ராள், துவாத சாதித்தர், ஆகியோரெல்லாம் வந்து அருள்பாலிப்பதாகிய மெய்யுணர வேண்டும். சகலவாத்யம் சாதுஜா சங்கமம் !

தேரடி வந்து வாஹனங்களில் எழுந்தருளிய பிறகு தலைமை (நிறம்) இராகம் வாசித்திடும் ஸம்ப்ரதாயம்.

**காலம் கண்டு இராகம் வாசித்தல்**

கலைஞர்களின் அப்போதைய மனோபாவத்துக் கேற்ப தலைமை இராகம் (நிறம்) எடுத்துக்கொள்ளப்படும். தெற்குக்கோபுர வாசல் வந்தவுடன் பல்லவி–ரக்தி ஆகியவை வாசித்து லயவின்யாசங்கள் செய்யப்படும். அதன் பிறகு கிருதிகள் மற்றும் ரஸிகப்பெருமக்கள் அவாவைப் பூர்த்தி செய்வதாகியன வாசிக்கப்படும்.

வீதிவலம் வந்து கீழ் வாசலில் திருஷ்டி சுத்தும்போது தேவாரம் முதலிய திருமுறைப்பாடல்கள் வாசிக்கவேண்டும். சுவாமி கருவறைக்கு வரும்போது எச்சரிக்கை பதம் ஜாவளி ஆகியவை வாசித்து நிறைவு செய்யப்படும். ஐந்தாம் திருவிழாவன்று தெருவடைச்சான் என்னும் ஓலை சப்பரக்காட்சி, பஞ்சமூர்த்திகளும் புறப்பட்டுக் கோபுர தெரிசனம்வரை வாசித்திட வேண்டும்.

### எட்டாந்திருவிழா

பிக்ஷாடனர் புவியிலுள்ளோர்களின் பாவங் களைப் போக்கிடுவதான பொருள்படிப் பகவான் பிக்ஷாடனராக வீதிவலம் வரும் காட்சி. அன்று உடற்கூறு வாசித்திட வேண்டும். நாத நாமக்கிரியா நிறத்திலமைந்த சந்தம். நாதனுடைய நாமக் கிரியைகளைப் போற்றிப் புகழ்வதாக இந்த உடற்கூறு அமைகின்றது. மூன்றுமணி நேரத்துக்கும் அதிகமாகவே இதே உடற்கூறும் லய வின்யாசங்களும் செய்து வந்து தங்கரதத்தில் பரமேஸ்வரன் எழுந்தருளும் வரை வாசித்திட வேண்டும்.

### ஒன்பதாம் திருவிழா

காலை சுவாமி ரதத்துக்குப் புறப்படுதல், ரதயாத்ராதானம் தேர் மல்லாரி (பஞ்சாட்சரம்) ஐந்து அட்ச்சரங்களைக் கொண்டதாகிய கெண்டை நடையில் வாசிக்கப்படும். தேரில் எழுந்தருளும் வரை, இதையே தான் வாசித்திடல் வேண்டும். மாறுதல் செய்யக்கூடாது. மூன்று மணி நேரம் ஆகிவிடும். வீதியில் உத்ஸவமேளம் வாசிப்பது இல்லை. இரவு 7 மணியளவுக்குத் தேர் நிலையடி வந்த பிறகு ஆயிரங்கால் மண்டபம் வரை முத்துத் தாண்டவர் பதங்கள் வாசித்து அழைத்து வரவேண்டும்.

### பத்தாம் திருவிழா

அதிகாலை தீர்த்தமல்லாரியுடன் திருமஞ்சனம் எடுத்துவரப்பட்டு அபிஷேகம் அலங்காரதிகளுக்குப் பிறகு தளிகை மல்லாரியுடன் நிவேதனங்கள் கொண்டு வரப்பட்டுத் தீபாராதனை. பிறகு தெரிசனம் ஞானகான சித்சபா பிரவேஸக் காட்சி.

### ஐவகை மல்லாரிகள்

1. தீர்த்தமல்லாரி – திருமஞ்சனம் எடுத்துவரும்போது
2. தளிகை மல்லாரி – நிவேதனம் எடுத்துவரும்போது
3. கும்பமல்லாரி – பூர்ண கும்பம் கொடுக்கப்படும் போது
4. தேர் மல்லாரி – சுவாமி தேருக்குப்புறப்படும்போது
5. புறப்பாட்டு மல்லாரி – சுவாமி புறப்படும்போது

### விடையாற்றி

விடையாற்றி முத்துப்பல்லக்கில் பஞ்ச மூர்த்திகளும் வீதியுலா. அன்று உஸேனி நிறம்தான் ஆலாபனைக்கு முக்கியமாக எடுத்துக்கொண்டு பல்லவி ஆகியவை. வழக்கப்படி சுவாமி கருவறைக்கு வந்து சேர்ந்த பிறகு லாலி ஊஞ்சல், மங்களம் வாசித்து நிறைவு செய்யப்படும்.

### தில்லை கோவிந்தராஜ பெருமாள் ஆலயத்தில்

நவராத்திரி ஒன்பது நாள்களும், கோயில் உள்ளே பிரகாரம் மட்டும் ஸ்ரீ தாயார் புறப்பாடு இவ்விழாவில் பெருமாள் சந்நதிக்கு நேராக வந்து நிறுத்தி, மாலை மாற்று வைபவம் நடைபெறும். சுமார் ஒரு மணி நேரம் மாலை மாற்றுப் பாடல்கள் சங்கராபரணம், சுருட்டி, ரீதிகௌளை, ஆனந்த பைரவி, உஸேனி, மத்யமாவதி ஆகிய நிறங்களிலமைந்து ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் உத்ஸவசம்பிரதாயப் பாடல்கள் வாசிக்கப்படும். தாயார் சந்நிதிக்கு வந்தவுடன் திருவந்திகாப்பு (வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பெயர்) திருஷ்டி சுத்து நடைபெறும்.

தேவாரம் மற்றும் சில நிறங்கள் வாசித்து எச்சரிக்கை வாசித்துக் கருவறை சேர்த்திடல் வேண்டும். உத்ஸவம் மறுநாள் உண்டு என்றால் மல்லாரியை ஒரு சுற்றுக் காண்பித்து நிறுத்துவது வழக்கம். பூர்த்தியன்று மங்களம் வாசித்துப் பூர்த்தி செய்திட வேண்டும்.

இந்த வழிமுறைகள் யாவும் குருகுல வாசத்தின் மூலமாகவும் அனுபவ வாயிலாகவுமே பெறமுடியும். இந்தக் கட்டுரையை நான் எழுதிட அடிப்படை எங்கள் மூதாதையர்கள் என் தகப்பனார் ஆண்டாங்கோயில் **வீராசாமிபிள்ளை** அவர்களும் என் தமையனார் ஆண்டாங்கோயில் **ஏ.வி. கருப்பையா பிள்ளை** அவர்களும் மிகவும் பிரபலமான, அடிப்படை யுடையவர்களான நாதஸ்வர வித்வான்கள். அவர்கள் விட்டுச்சென்ற கையெழுத்துப் பிரதிகளாகிய இறைக்குறிப்புகளைப் பார்த்தும் எனது மைத்துனரும் மாமனாருமாகிய நாதஸ்வர வித்வான் கலைமாமணி சிதம்பரம் **ஸ்ரீ ராதாகிருஷ்ன பிள்ளை** அவர்களிடம் 15 வயது முதல் கூட வாசித்த அனுபவமும் மற்றும் இசை இலக்கிய இலக்கண நூல்களைப் பார்த்தும் கடவுளனுக்ரஹத்துடன்; சங்கீதம் ஒரு நுண்கலை மட்டுமல்ல இசை வழிபாட்டிற்கு உறுதுணையானது என்பதினைப் பணிவுடன் ஆன்றோர்கள் தாள் பணிந்து ஸமர்ப்பிக்கிறேன்.

## திருக்கோயில் வழக்குச் சொல்லகராதி !

இச் சொல்லகராதி இலக்கியங்களில் எடுத்தாளப்பெற்ற சொற்கள், பேச்சு வழக்கில் கல்வெட்டுகளில் வழங்கப்பெற்ற சொற்கள் சிலவும் அமைந்தவை. இதுவொரு முன்மாதிரியே.

சைவ வைணவ சமயங்களில் கூறப்பட்டுள்ள கடவுளர் பெயர்கள், அடியார்கள், முக்கிய தலங்கள், திருக்கோயில்களோடு ஒட்டிய, பழக்கவழக்கங்களைக் குறிக்கும் சொற்கள், சமயத் தொடர்புடைய தத்துவச் சொற்கள் போன்றவை இவ்வகராதியில் இடம் பெற்றுள்ளன.

***********

### அ

**அக்கினி காரியம்** – அக்கினியில் செய்யப்படும் ஓமம் முதலியன.

**அக்கினி குண்டம்** – ஓமம் வளர்க்கும் குழி.

**அக்கினிகுமாரன்** – முருகக் கடவுள்

**அக்கினி கோத்திரம்** – தினந்தோறும் செய்யும் ஓம விசேடம்.

**அக்கினி கோத்திரி** – நித்திய ஓமாக்கினி வளர்ப்போன்.

**அகச்சந்தானம்** – சைவசித்தாந்தக் கொள்கைகளைக் கைலாய பரம்பரையில் உபதேசித்து வந்தவர்களும் நந்திதேவர் சனற்குமாரர் சத்தியஞான தரிசினிகள் பரஞ்சோதி முனிவர் என்று பெயர் பெற்றவர்களுமான நான்கு குரவர்கள்.

**அகண்டாகாரம்** – பகுக்கப்படாத வடிவம்.

**அகம்படித்தொண்டு** – அணுக்கத்தொண்டு, கோயிலுள்ளாலகம்படித் தொண்டு செய்வார்.

**அகோபிலம்** – சிங்கவேள் குன்றம் என்னுந் திருப்பதி.

**அகோரம்** – சிவன் முகத்தொன்று.

**அங்கநியாசம்** – மந்திரத்தோடு உறுப்புக்களைத் தொடுகை.

**அங்கப் பதக்கணம், அங்கப் பிரதக்கணம் அங்கப் பிரதட்சிணம்** – சரீரத்தால் புரண்டு வலம் வருகை.

**அட்டசித்தி** – அஷ்டமாசித்தி

**அட்டமூர்த்தம்** – சிவன் வடிவம் எட்டு.

**அட்டவீரட்டம்** – கண்டியூர், கடவூர், அதிகை, வழுவூர், பறியலூர், கோவலூர், குறுக்கை விற்குடி, எட்டு வீரட்டானப் பதிகள்.

**அட்டாங்க நமஸ்காரம்** – மோவாய், செவிகள் இரண்டு, தலை, புயங்கள் இரண்டு, கைகள் இரண்டு என்னும் எட்டுறுப்பும் நிலத்திலே தோய வணங்குதல்.

**அடங்கன்முறை** – சைவத்திருமறைகள், தேவாரம்

**அணுக்கன்திருவாயில்** – கர்ப்பக்கிருக வாயில்

**அத்தநாரீசுரன்** – பாதி உடம்பு பெண்வடிவான சிவன்

**அத்தன்** – சிவன், தேவர்

**அத்தியாபகன்** – வேதம் ஓதுவிப்போன்

**அத்தியாபனம்** – வேதம் ஓதுவிக்கை

**அந்நாபிடேகம் (அன்னாபிடேகம்)** – அன்னம் சார்த்தி விக்கிரகத்துக்கு செய்யும் அபிடேகம்

**அபேதவாதம்** – சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றெனக் கூறுங்கொள்கை

**அமண்** – சமண மதம்

**அமணர்** – சமணர்







**அருஉரு** – உணர்வொடு கூடிய உயிரும் உடம்பும்; உயிர் அருவமாயும், உடல் உருவமாயும், இருத்தலின் அருஉரு எனப்பட்டது. இது நாமரூபம் என்றும் கூறப்படும்.

**அருக்கியம்** – பூசனை முறைகளுள் ஒன்று. அது படையல் போடுதல், மந்திர நீரிறைத்தல்.

**அருச்சகன்** – கோயிற் பூசை செய்வோன்.

**அருச்சனை** – பூசை, கடவுள் நாமம் கூறி மலர் முதலியன இடுகை.

**அரையர்** – விஷ்ணு கோயில்களில் திவ்யப் பிரபந்தங்களைப் பாடுந் தொண்டு செய்வோர்.

**அலகு போடல், அலகுபோடுதல்** – பிரார்த்தனைக்காக நா முதலிய உறுப்புக்களில் கம்பிகளைக் குத்திக்கொள்ளுதல்.

**அவதாரம்** – திவ்யப் பிறப்பு ; மேலிருந்து கீழே இறங்கி வருதல்

**அவதானம்** – சமயத்தொடர்புடைய பேரருட்செயல் அல்லது செயற்கருஞ் செயலாகும்.

**அவி** – வேள்வித்தீயில் தேவர்க்குக் கொடுக்கும் உணவு.

**அவிப்பாகம்** – தேவருணவின் பங்கு.

**அனுக்கிரகம்** – அருள்

**அனுகற்பம்** – பசுவின் சாணத்தைக்கொண்டு முறைப்படி உண்டாக்கிய விபூதி.

**அனுபூதி** – அனுபவ ஞானம்

**அஜபா நடனம்** – திருவாரூர்க் கோயிலுள் நடைபெறும் தியாகேசனது நடனம்.

**அஷ்ட பந்தனம்** – சுக்கான் கல், கொம்பரக்கு சாதிலிங்கம், செம்பஞ்சு, தேன் மெழுகு, எருமை வெண்ணெய், குங்கிலியம், நாற்காவி ஆகிய எட்டுப் பொருள்களின் கட்டுமானம்; சிலா விக்கிரங்கள், அசைவின்றி இருக்கும்படி பீடத்தையும், பிம்பத்தையும் இணைத்து சாத்தப்படும் கூட்டுச்சரக்கு.

**அஷ்டமூர்த்தம்** – சிவனின் எண் வடிவம், பூமி, நீர், தேய, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா.

**அஷ்டலக்ஷ்மி** – தனலக்ஷ்மி, தானியலக்ஷ்மி, தைரியலக்ஷ்மி, வீரலக்ஷ்மி, வித்தியாலக்ஷ்மி, சந்தானலக்ஷ்மி, விஜயலக்ஷ்மி, ராஜ்யலக்ஷ்மி

**அஷ்டாங்க நமஸ்காரம்** – எட்டுறுப்புக்கள் நிலந்தோய வணங்குகை.

**அஷ்டாக்ஷரம்** – ஓம் ந மோ நா ரா ய ணா ய, எனும் விஷ்ணு மந்திரம்.

**அஸ்திரதேவர்** – உற்சவ காலங்களில் சுவாமி புறப்படுவதற்கு முன் வீதியைச் சுற்றிக்கொண்டு வரும் ஆயுத வடிவமான மூர்த்தி.

## ஆ

**ஆக்கிநேயம், ஆக்கினேயம்** – திருநீறு

**ஆக்கினேயம்** – 1. அக்கினிக்குரியது, 2.ஆக்கினேய புராணம், 3. சிவகாமத்துள் ஒன்று

**ஆகம சாஸ்திரம்** – சைவ, வைணவ, சாக்த, சைன தந்திரங்கள்.

**ஆகமம்** – வேதசாஸ்திரங்கள், முதல்வன் சிவ விஷ்ணுக்களால் இருடிகள் பொருட்டு அருளிச் செய்யப்பட்ட நூல்கள். வேதங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் அமைந்த பெயராக இருப்பினும், சிறப்பாகக் கடவுளுடைய வழிபாட்டை இரகசியம், மந்திரம், மூர்த்தி, ஆலயம் ஆகிய முறைகளில் விரித்துக் கூறும் தொகுதியின் பெயராக வழங்கி வருகின்றது. சிவ வழிபாட்டைக் கூறுவது சிவாகமம். விஷ்ணு வழிபாட்டைக் கூறுவது வைஷ்ணவாகமம். சக்தி வழிபாட்டைக் கூறுவது சாக்தாகமம்.

**ஆகாமியம்** – இப்பிறப்பிலே செய்யும் புண்ணிய பாவங்கள்.

**ஆகுதி** – அக்கினியில் மந்திர பூர்வமாகச் செய்யும் ஓமம், தெய்வத்திற்கு இடும் பலி.

**ஆசமனம்** – வலக்குடங் கையால் மந்திரபூர்வமாக நீரை மும்முறையுட் கொள்ளுதல்.

**ஆலகண்டன்** – சிவன்

**ஆலிலைப்பள்ளியான்** – திருமால்

**ஆவாகனம்** – எழுத்தருளும்படி மந்திரத்தால் தெய்வத்தை அழைத்தல்.

**ஆவுடையார்** – லிங்க பீடம்

**ஆழ்வார்** – 1. பகவத்குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர், 2. திருமாலடியார் பதின்மர்.

**ஆழி** – சக்கராயுதம்

**ஆழிநாதன்** – திருமால்

**ஆளுடைய பிள்ளையார்** – திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்

**ஆளுடையவரசு** – திருநாவுக்கரசு நாயனார்

**ஆறாட்டு** – தீர்த்தவாரியுற்சவம்

**ஆறுகட்டி** – சைவர் காதிலணியும் உருத்திராக்க மணிவடம்.

**ஆறெழுத்து** – ஷடாக்ஷரம் : ந ம கு மா ரா ய

**ஆன்மார்த்த பூசை** – தன் பொருட்டுத் தானே செய்யும் பூசை, இட்டலிங்க பூசை

**ஆனஞ்சு, ஆனைந்து** – பஞ்ச கவ்வியம்

**ஆனந்த தாண்டவம்** – நடராஜர் புரியும் நிருத்தம்

## இ

**இட்டலிங்கம்** – சீடனுக்கு ஆசாரியனாற் கொடுக்கப்படும் நித்திய பூசைக்குரிய ஆன்மார்த்தலிங்கம்.

**இடபதீபம்** – கோயில் மூர்த்தியின் முன்பு எடுக்கும் அலங்கார தீபவகை

**இடபாரூடர்** – சிவமூர்த்தங்களுள் ஒன்று. ரிஷப வாகனம் அமர்ந்த சிவன்

**இளங்கோயில்** – பாலாலயம்

**இஷ்டதேவதை** – உபாசனா தெய்வம்

## ஈ

**ஈசாவாசியம்**–நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று

**ஈசானம்** – சிவனின் ஐந்து முகத்தொன்று

## உ

**உக்கி** – தோப்புக்கரணம்

**உச்சிக்காலம்** – கோயிலின் மத்தியான பூசை

**உண்ணாழிகை** – கர்ப்பக்கிருகம்

**உத்தூளனம்** – விபூதியை நீரிற் குழையாது வரியின்றிப் பூசுகை

**உபகற்பம்** – காட்டுத்தீ முதலியவற்றால் வெந்த சாம்பலைக்கொண்டு முறைப்படியமைத்த விபூதி

**உபநிடதம்** – வேதத்தின் ஞான காண்டம்

**உபயம்** – கோயில் முதலியவற்றிற்குக் கொடுக்கும் தருமம்.

**உபயவேதாந்தம்** – வடமொழி தென்மொழி வேதங்களின் முடிவு

**உபயவேதாந்தாசாரியர்** – உபயவேதாந்தங் களிலுந் தேர்ந்த வைணவருக்கு வழங்கும் ஒரு பட்டப்பெயர்.

**உபவாசகாலம்** – பட்டினியாயிருக்கும் விரதகாலம்

**உபவீதம்** – பூணூல்

**உபாசனை** – வழிபாடு

**உரு** – விக்கிரகம்

**உருத்திரன்** – சிவன்

**உருத்திராக்கம்**–உருத்திராக்க மரத்தின் மணி, 2. சிவ சின்னங்களுள் ஒன்று. சிவபெருமான் திருக்கண்ணில் தோன்றிய மணி என்று பொருளாகும்.

**உருத்திராட்ச கண்டிகை** – உருத்திராக்க மாலை

**உற்சவம்** – கோயில் திருவிழா

**உற்சவர்** – உற்சவத்தில் எழுந்தருளும் விக்கிரகம்.





ஊ

**ஊர்த்துவதாண்டவம்** – மேலே ஒரு பாதத்தை முற்றுமாகத் தூக்கியாடும் நடனம்

எ

**எண் குணங்கள்** – இறைவனுடைய எட்டு குணங்கள்.

ஏ

**ஏகபாதமூர்த்தி** – சிவன் (சத்தி சிவத்தில் ஒடுங்கிய திருக்கோலம்)

**ஏகபாதர்** – ஒற்றைத்தாளர் ஆகிய சிவமூர்த்தம்

**ஏகாந்த சேவை** – சில உற்சவங்களில் இரவில் ஏகாந்தமாக நிகழும் சுவாமி தரிசனம்.

ஐ

**ஐந்தெழுத்து** – சிவசின்னங்களுள் ஒன்று. திருவைந்தெழுத்து தக்க ஆசாரியரிடத்து உபதேசமூலம் பெறத்தக்கது.

**ஐயனார்** – அரிகரபுத்திரன்

ஓ

**ஓதுவார்** – சந்நிதிகளில் தேவார முதலிய அருட்பாக்களைப் பாடுஞ் சைவவேளார்

**ஓம்** – பிரணவம்

**ஓமகுண்டம்** – வேள்விக்குழி

ஔ

**ஔபாசனம்** – காலை மாலைகளில் இல்லறத்தார் இடும் ஓமத்தீ ஓம்புகை.

க

**கடவுள் மண்டிலம்** – சூரியன்

**கடவுள் மங்கலம்** - தெய்வப் பிரதிஷ்டை செய்தல்

**கப்பரை** – விபூதிக்கலம்

**கர்ப்பக்கிருகம்**– ஆலயத்தினுள் மூலஸ்தானம் உள்ள இடம்.

**கல்யாணசுந்தரர்** – பார்வதியைத் திருமணஞ் செய்த சிவமூர்த்தத் திருவுரு

**கலசபூஜை** – நீர்நிரம்பிய கலசத்தில் தேவதையை ஆவாகித்துச் செய்யும் பூசை

**கற்றளி** – கற்கோயில்

கா

**காமன் பண்டிகை** – மன்மத தகனத் திருவிழா

**காயத்திரி** – பார்ப்பனர் நாள்தோறும் ஓதி வரும் ஒரு வேதமந்திரம். ஆனால் அது அவர்க்கு மட்டும் உரியது அன்று.

**காலசந்தி**– 1. ஒருநாளின் ஆறுபாகங்களுள் இரண்டிரண்டு பாகங்கள் கூடுஞ்சந்திக் காலங்களில் கோயில்களிலே செய்யும் பூசை 2. காலை வழிபாடு

**காளிங்கமர்த்தனன்** – காலிங்கனென்னும் நாகத்தின் மீது பாதங்களை வைத்து ஆடித்துகைத்த கண்ணபிரான்

கி

**கிரியை** – சிவனை ஆகமங்களில் விதித்தவாறு புறத்தொழிலானும் அகத்தொழிலானும் வழிபடுகை

கு

**குஞ்சித பாதம்** – நடனத்தில் வளையத் தூக்கின நடராசர் தாள்

**கும்பகலசம்** – விசேடங்களில், நூல் சுற்றி மந்திரத்தாற் சுத்தி செய்து தானியக்குவியலின் மீது வைக்கும் மந்திர கலசம்.

**கும்பாபிடேகம், கும்பாபிஷேகம்** – கோயில்களில் பிரதிட்டை செய்வதற்கும், சுத்தி செய்வதற்கும் உரிய சடங்கு, குடமுழுக்கு.

**குருமூர்த்தி** – தட்சிணாமூர்த்தி

கே

**கேதாரகௌரிவிரதம்** – ஐப்பசிக் கிருஷ்ண சதுர்த்தசியில் கேதாரதலத்திலுள்ள கௌரியை நினைந்து பெண்பாலார் அனுட்டிக்கும் நோன்பு.

**கேதாரம்** – இமயமலையிலுள்ள ஒரு சிவத்தலம்.

கோ

**கோகழி** – திருவாவடுதுறை என்னும் சிவத்தலம்

**கோகுலாஷ்டமி** – கண்ணன் அவதரித்த ஆவணி மாதத்துக் கிருஷ்ணாஷ்டமி

கௌ

**கௌரிசங்கம்** – இரட்டை உருத்திராட்சம் ; இது சத்திசிவ வடிவமாயுள்ளது

ச

**சகஸ்ரநாமார்ச்சனை** — கடவுளுடைய ஆயிரநாமங்களையும் ஒவ்வொன்றாகச் சொல்லி மலர் முதலியவற்றை இட்டுப் பூசிக்கை.

**சங்காபிஷேகம்** — சங்கத்தினால் சுவாமிக்குச் செய்யும் அபிஷேகம்.

**சச்சிதானந்தன்** — உண்மை (சத்) அறிவு (சித்) ஆனந்தம் என்னும் முக்குணங்களையுடைய பரம்பொருள்.

**சடாதரன்** — சிவன்

**சடாமகுடதாரி** — சிவன்

**சண்டப்பிரசண்டர்** — திருமால் கோயிலுள்ள துவாரபாலகர் இருவர்

**சத்தமாதர்** — சிவசத்தியின் மூர்த்த பேதங்களான ஏழுமாதர்கள்

**சத்தவிடங்கத்தலம்** — தியாகராசமூர்த்தி கோயில் கொண்டுள்ள ஆரூர், நாகை, நள்ளாறு மறைக்காடு, காறாயல், வாய்மூர், கோளிலி என்ற ஏழுதலங்கள்.

**சத்திபீடம்** — சக்தியின் ஆதிக்கமுள்ள ஆலயம்.

**சத்தியோசாதம்** — சிவன் ஐம் முகங்களுள் மேற்கு நோக்கியது.

**சம்புரோட்சணம்** — சுத்திக்காகக் கோயில்களிற் செய்யுஞ் சடங்கு.

**சமிதை (சமித்து)** — யாகத்திற்குரிய ஆல் அரசு அத்தி இத்தி மா பலாசு வன்னி நாயுருவி கருங்காலி என்பவற்றின் சுள்ளி.

**சரபமூர்த்தி** — சிவன்

**சரியை** — சிவனைச் சகளத்திருமேனியராகக் கோயிலில் வைத்து வழிபடுகை.

**சன்னிதானம்** — 1. கடவுளின் திருமுன்பு 2. மடாதிபதிகள் முதலிய பெரியோரைக் குறிக்க வழங்கும் மரியாதைச் சொல்.

**சன்னதி** — தெய்வம், குரு, பெரியோர் இவர்களின் திருமுன்பு

சா

**சாக்கியம்** — புத்தமதம்

**சாக்தம்** — சக்தியே பரதேவதையாக வழிபடுஞ் சமயம்

**சாத்தன்** — அரிஹரபுத்திரன்

**சாத்தா** — ஐயனார்

**சாத்துப்படி** — கோயில் விக்கிரகங்களுக்குச் செய்யும் அலங்காரம்.

**சாத்துமுறை** — கோயில் முதலிய இடங்களில் பிரபந்தத்தை ஓதியபின் இறுதியில் சில பாசுரங்களை விசேடந்தோன்றத் தனியே ஓதுகை.

**சாயரட்சை** — கோயிலில் மாலையும் இரவும் சந்திக்கும் அந்திவேளையில் நிகழும் மாலைப் பூசை

**சாளக்கிராமம்** — திருமாலுருவமாகக் கொண்டு பூசித்தற்குரிய கண்டகிச்சிலை.

சி

**சிவபுண்ணியம்** — சிவனே முழு முதற்கடவுளெனக் கொண்டு அக்கடவுளுவப்பச் செய்யும் நற்கருமங்கள்.

**சிற்பரன்** — அறவிற்கு எட்டாத கடவுள்

**சிறுகாலைச் சந்தி** — கோயிலில் உதய காலத்தில் செய்யும் பூசை.

சீ

**சீபலி** — 1. கோயிலில் இடும் அன்னபலி 2. கோயிலில் நாடோறும் பலிபூசைக்காக எழுந்தருளப் பண்ணும் சிறுவிக்கிரகம் 3. கோயிலில் நடக்கும் நித்தியோற்சவம்.

**சீபாதந்தாங்கிகள்** — கோயிலில் சுவாமிக்குரிய வாகனந் தாங்கிச் செல்வோர்.

**சீரணோத்தாரணம்** — பழுதுபட்ட கோயில் முதலியவற்றைச் செப்பமிடுகை.

**சீவன்முத்தி** — ஆன்மா இம்மையிலேயே முத்தியடைகை.

சு

**சுவர்க்கவாசல்** – விஷ்ணு கோயில்களில் மார்கழி மாதத்துச் சுக்கில ஏகாதசி முதல் பத்து நாள்வரை சுவாமி எழுந்தருளுதற்கு உரியதும், வைகுண்ட வாயில்போலக் கருதிப் பலரும் செல்வதற்கு உரியதும் மற்றக் காலங்களில் திறக்கப்படாததுமான தனிவாயில்.

**சுவஸ்திவாசனம்** – சுவாமி புறப்பாட்டில் ஓதப்படும் வேதம்.

**சுவாகா** – ஆகுதி செய்யும்பொழுது தேவதையின் பெயர்க்குப் பின் கூறும் மொழி.

**சுற்றுக் கோயில்** – ஆலயத்தின் சுற்றுப் பிரகாரத்தில் உள்ள சிறு சன்னிதிகள்.

**சுற்றுத்தேவதை** – கோயிலிலுள்ள பரிவார தெய்வம்.

**சுற்றுப்பிரகாரம்** – கோயிற்பிரகாரம்

செ

**செம்படம்** – திருநீறுவைக்குஞ் சிறுசெப்பு.

சே

**சேத்திரபாலன்** – பைரவர்

**சேஷசயனம்** – திருமாலுக்குதிய ஆதிசேஷனாகிய படுக்கை.

சொ

**சொக்கப்பனை** – கார்த்திகைத் திருவிழாவில் கோயில்களுக்கு முன்பு எரிக்கும் பனையோலைக் கூடு.

சோ

**சோடசோபசாரம்** – ஆசனம், சுவாகதம், பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம், மதுபர்க்கம், ஆசமனம், ஸ்னானம், ஆடை ஆபரணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் வந்தனம் அல்லது மஞ்சனம். பூ, கந்தம், தூபம், தீபம், நீர், அமுது, தூசு, அடைக்காய், ஆடி, குடை, கவரி, ஆலவட்டம், விசிறி, ஆடல், வாச்சியம் என்ற பதினாறு வகை உபசாரங்கள். சர்வ வல்லமை யுடைய ஞானமயமான பரம்பொருளைத்தான் வழிபடுமிடத்தில் வருவித்து, வரவேற்று, உபசரித்துத் தன் வழிபாட்டை ஏற்றருளுமாறு பிரார்த்தித்தல் இவ்வுபசாரங்களின் பொருளாகும்.

**சோமசூத்திரப்பிரதக்ஷிணம்**– சிவாலயத்தில் சோமசூத்திரத்தைக்கடவாது செய்யப்பெறும் பிரதிக்ஷிணவகை. பிரதோஷ காலத்தில் செய்ய உகந்தது.

**சோமசூத்திரம்** – சிவாலயத்தில் அபிஷேக நீர்விழுங்கோமுகம்

**சோமாஸ்கந்தன்** – உமையோடும் கந்தனோடுங்கூடியுள்ள சிவமூர்த்தம்.

டோ

**டோலோற்சவம்** – அலங்கரித்த ஊஞ்சலில் கோயில் மூர்த்திகளை எழுந்தருளிவித்து ஆட்டி நடத்தும் விழா.

த

**ததீயாராதனை** – திருமாலடியவர்க்கிடும் விருந்துணவு

**தயிலக்காப்பு** – கடவுள் திருமேனிக்குத் தயிலம் சாத்துகை

**தலைமாலை** – சிவபிரான் அணியுஞ் சிரங்களாலாகிய மாலை.

**தளிகை** – ஓரளவு கொண்ட நைவேத்தியப் பிரசாதம்.

தா

**தாவடம்** – உருத்திராக்க மாலை

தி

**திரிபுண்டரம்** – சைவர் நெற்றியில் விபூதியால் அணியும் மூவரி கொண்ட குறி.

**திருதுழாய்** – துளசி

**திருப்பரிவட்டம்** – கோயில் மரியாதையாகப் பெரியோர் தலையில் சுற்றப்படும் கடவுளின் ஆடை

**திருப்பாவாடை** – ஆடைமேல் கோயில் மூர்த்திக்குப் படைக்கும் பெரிய நிவேதனம்.

**திருமடைப்பள்ளி** – கோயில் சமையலறை

**திருமதில்** – கோயிலில் சுற்றுமதில்.

**திருவோலக்கம்** – தெய்வ சன்னிதானம்

**திவ்விய நாம சங்கீர்த்தனம்** – பாகவதர் பலர் விளக்கைச் சுற்றி நடனஞ் செய்து கடவுளின் திருநாமங்களைச் சொல்லிப் புகழ்ந்து பாடுகை.

**து**

**துவாதசநாமம்** – 1. திருமாலின் 12 திருநாமங்கள் 2. வைஷ்ணவர் உடம்பில் நெற்றி முதலிய பன்னிரண்டு இடங்களில் தரித்துக் கொள்ளும் திருமண்.

**நி**

**நிவந்தம்** – கோயில் தொண்டு.

**ப**

**பஞ்சகவ்வியம்**–கோமயம் என்றழைக்கப் பெறும். பசுஞ் சாணம், கோமூத்திரம், தயிர், நெய், பால் என்பனவற்றை மந்திரபூர்வமாகச் சேர்க்கப்படுவது.

**பஞ்சபாத்திரம்** – 1. பூசையில் அர்க்கியம், பாத்தியம், ஆசமனீயம், ஸ்நாநீயம், சுத்தோதகம் என்பவைகளுக்கு உபயோகிக்கப்படும் ஐந்து நீர்வட்டில் 2. அகன்ற வாயுள்ள தீர்த்தபாத்திரம்.

**பஞ்சமூர்த்தி** – 1. சிவபிரானுக்குரிய சதாசிவன் மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் என்ற ஐந்து மூர்த்தங்கள் 2. விநாயகன், முருகன், சிவன், உமை, சண்டேசுவரன் என்ற ஐவகைக் கடவுளர்.

**பஞ்சாட்சரப்படி** – சிதம்பரங் கோயிலுள் சித்சபையில் ஏறுதற்கமைந்த ஐந்துபடிகள்.

**பா**

**பரார்த்த பூசை** – அனைத்துயிரக்கும் அருள் வேண்டிச் சிவனைக் கோயில்களில் பிரதிட்டை செய்து பூசித்தல்.

**பாஞ்ச சன்னியம்** – திருமாலின் சங்கு.

**பாஞ்சராத்திரம்** – வைணவ ஆகமங்களுள் ஒன்று.

**பாண்டரங்கம்** – கூத்துப் பதினொன்றுள் திரிபுரத்தை அழித்தபோது சிவபிரான் வெண்ணீறணிந்து ஆடியது.

**பாலாலயம்** – மூலஸ்தானத்தை பழுதுபார்த்துப் புதுப்பிக்குங் காலத்தில் கடவுளை வேறாக ஆவாகனஞ் செய்திருக்கும் சிறிய கோயில்.

**பி**

**பிரபத்தி** – சரணமாக அடைதல்; பிரபத்தி என்னும் பேருடை நெறியால் இறைவனது வல்லமையிலும் பூரண நம்பிக்கை வைத்துத் தன்னை முற்றாக அவனிடம் ஒப்படைத்தலே பிரபத்தியாகும்.

**பிரபன்னன்** – கடவுளே சரணாகவுள்ளவன்.

**பிரமஸ்தானம்** – கருப்பக் கிருகம்

**பிரமோற்சவம்** – கோயிலில் ஆண்டுக்கொரு முறை நடக்கும் தலைமைத் திருவிழா.

**பிரளயாகலர்** – மும்மலங்களுள் ஆணவம், கன்மம் என்னும் இரண்டினையுடைய ஆன்மாக்கள்.

**பிராணப்பிரதிஷ்டை** – விக்கிரகத்தில் தெய்வத்தை ஆவாகிக்கை.

**பிரியாவுடையாள்** – பார்வதி தேவி ; பிரியா ஆவுடை என்பது மருவி இன்று பிரியாவிடை என்று வழக்கில் உள்ளது.

**பு**

**புனஸ்காரம்** – வணக்கம், பக்தியோடு செய்யும் வந்தனம்.

**புஷ்கரணி** – கோயிலைச் சேர்ந்த குளம்.

**பூ**

**பூச்சக்கரவாளக்குடை** – கோயில் மூர்த்திகட்குப் பிடிக்கும் பெரிய குடை.






பெ

**பெரிய திருவடி** — கருடன், பெருமாளுக்கு வாகனமாய் இருப்பதோடு அவருடைய திருவடிகளையும் கைகளில் தாங்குவதால் சம்பிரதாயப் பெயராயிற்று.

பே

**பேராயிரம்** — கடவுளின் சகஸ்ரநாமம்.

போ

**போத்தி** — மலையாளக் கோயில்களிலுள்ள கோயில் அருச்சகர்.

**போனகம்** — கடவுளுக்குப் படைக்கும் உணவு.

மா

**மாக்காப்பு** — விக்கிரங்கட்குச் சாத்தும் அரிசிமாச் சாத்துப்படி

**மாடவீதி** — கோயிலைச் சுற்றியுள்ள வீதி.

**மானசதீட்சை** — சீடனது மனத்துள் யோக சித்தியால் குரு பிரவேசித்து அவனைச் சுத்தி செய்விக்கும் தீட்சைவகை.

**மானத பூசை** — மனப்பாவனையாலே வழிபடுகை.

மி

**மிருத்தியுஞ்சயன்** — சிவபிரான்

மு

**முப்புரிநூல்** — பூணூல்

மூ

**மூலவர்** — கோயிலின் கர்ப்பக் கிருகத்தில் ஸ்திரமாகவுள்ள மூர்த்தி

மே

**மேல்சாந்தி** — கோயிலின் தலைமைப் பூசகர்

யா

**யாக குண்டம்** — வேள்விக்குழி

**யாக சாலை** — வேள்விச் சாலை

வ

**வசந்தோற்சவம்** — கோயிலில் வசந்த காலத்தில் நடைபெறும் விழா.

**வடபத்திரசாயி** — ஆலிலையில் பள்ளிகொண்ட திருமால்.

வா

**வாமதேவம்** — சிவனின் ஐந்து முகத்தொன்று

வி

**விசுவரூப சேவை** — ஆலயத்தில் சுவாமியின் பள்ளியெழுச்சிக் காலத்துச் செய்யும் வணக்கம்.

**விஞ்ஞானகலர்** — ஆணவ மலம் ஒன்றேயுடைய ஆன்மாக்கள்.

**விடங்கன்** — உளியினாற் செதுக்கப்பட்டது தானே உண்டான சுயம்புலிங்கம்.

**விண்ணகரம்** — திருமால் கோயில்

**விநயசம்பன்னதை** — குருக்கள் முதலாயினாரை உபசரிப்பதில் ஆதுரமுடைமை

வே

**வேதிகை** — பூசை செய்யும் இடம்

ஜ

**ஜலபவித்திரம்** — திருமஞ்சன காலத்தில் மூர்த்திகளுக்கு அணிவிக்கும் ஆடை

ஸ

**ஸப்தஸ்தானம்** — சிவத்தல மூர்த்தி அருகேயுள்ள ஆறு சிவத்தலங்களுக்கு எழுந்தருளும் உற்சவம் ; (உ-ம்) திருவையாற்று ஈசன் திருப்பழனம்(1), திருச்சோற்றுத்துறை(2), திருவேதிகுடி (3), திருக்கண்டியூர் (4), திருப்பூந்துருத்தி (5), திருநெய்த்தானம் (6) ஆகிய ஆறு தலங்களுக்கு எழுந்தருளல்



## பலர்க்கும் களைகண்ணே
# பகச்சால மூர்த்தியே!

*– எஸ்ஸார்எம்.*

மேல் – கீழ்; – பக்கம் என்று எல்லா இடமும் குறுகியன எனத் தோன்றுமாறு பரவியிருக்கின்றன ஏழு மராமரங்கள். அந்த ஐந்தினோடு இரண்டில், ஒன்(று) உருவ (துளைக்கும்படி) நின் அம்பு செல்ல வேண்டும் என்றுதான் வாலி கூறினான். ஆனால் இராமன் எய்த ஓர் அம்பு, ஏழு பெரிய மராமரங்களையும் துளைத்து, ஏழு கீழ் உலகங்களையும் ஊடுருவிச் சென்று, அதன் பின்னர் ஏழு என்னும் தொகையுடைய பொருள் வேறு இல்லாமையால் அவனிடமே திரும்பியது என்று கவிச்சக்கரவர்த்தி கம்பர் கூறுகிறார்.[1] இவ்வாறு இராமாயணத்தினால் துளைக்கும் சிறப்பினைப் பெற்ற இந்த மராமரத்தை ஆச்சா மரம் என்றும், சால மரம் என்றும் கூறுவர்.

இந்த மரா(சால)மரம், திருமாலின் மோகினி அவதாரத்தில் சிவன் வழி அவதரித்த அரிகரசுதனின் பிறப்பிடமாக இருக்கும் பெருமையையும் பெற்றிருக்கிறது.[2] இதனால் ஐயனார் ‘சாலமூர்த்தி ஐயனார்’ ஆகிறார்.

ஐயனாரின் அருளாற்றலை அறிய வேண்டாமா? கடவுளை அறகுணன் என்றும் கூறுவர். அவாவின்மை, ஈச்சுரததன்மை. கீர்த்தி, செல்வம் ஞானம், வீரியம்[3] ஆகிய இந்த அறுகுணங்களையும் ‘பகம்’ என்று சொல்வதுண்டு.

இந்த அறுகுணங்(பகம்)களை உடைய சால மரத்தின் அடியில் அவதரித்த ஐயனார் பகச்சாலமூர்த்தி ஐயனார்– என்னும் பெயர் பெறுகிறார்.

ஆனால், இவர் பிறந்தது என்னவோ இங்குள்ள பாலைமரத்தின் அடியில்தானாம். அதனாலேயே இவரைப் “பாலையடியான் பகச்சாலமூர்த்தி” என்கின்றனர். அங்கிருந்துதான் கருவறைக்குக் கொண்டு செல்லப்பெற்றுப் பிரதிஷ்டை செய்யப்பெற்றார் என்று கூறுகின்றனர்.[4]

காரைக்குடியிலிருந்து மானகிரி வழியாகத் திருப்புத்தூர் செல்லும் சாலையில் 8 ஆவது கி.மீட்டரில் (இலங்குடி என்னும் பெயர் அறிவிப்புப் பலகையும், பேருந்து நிற்கும் இடத்தின் பிரயாணிகள் தங்கம் கூடமும் உள்ள இடத்தில்) இடப்புறம் திரும்பி, ஊருணியைத் தாண்டி நேரே சென்றால், கோயிலும் குளமும் உள்ள இடத்தை அடையலாம்.

கோயிலுக்கு முன் உள்ள குளத்தைச் சற்றிலும் காணப்பெறம் அடர்ந்த மரங்கள் நிறைந்த சோலை போன்ற சூழல், ஞான சம்பந்தப் பெருமான் குறிப்பிடும் ‘வெயில்புகா’ச் சோலையை5 நினைவூட்டுகின்றது.

அழகிய சிறிய கோயில், திருக்குட நீராட்டு நடந்து 12 ஆண்டுகள் ஆகியும் (அடுத்த குடமுழுக்கு விழாவுக்கான காலம் நெருங்கிவிட்டது. இம்முறை மலேசியாவில் உள்ள இந்தக் கோயிற்காரர்கள் திருப்பணிப் பொறுப்பை ஏற்கவேண்டும் என்று வேளார்கள் விரும்புகின்றனர்.) இன்னும் புதுமை மெருகுடன் பொலிகின்றது.

ஒருவேளை ஞானசம்பந்தர், ஞானக்கண்ணால் இக்கோயிலின் அமைப்பைக் கண்டிருப்பாரோ? ‘கோயில்வாயிற்கண் குடவயிற்றனசில பூதம்’[6] என்று பாடியிருக்கிறாரே !

ஆம், வெளியே இரு பூதங்கள்; உள்ளே சேமங்குதிரையைத் தாங்கி நிற்கும் 3 பூதங்கள்; போதாததற்குக், கோயிலின் இணைப்புப் பகுதியில் உள்ள பாலைமரத்தை ஒட்டி மற்றொரு பெரிய பூதம் !

ஒருவேளைப் பூசையாக உச்சிக்காலத்தில் மட்டும் பூசை நடை பெறுமாதலால், அந்நேரத்தில் மட்டுமே அர்ச்சகரான வேளார் கோயிலில் இருப்பார். எனவே மானகிரி அல்லது இலங்குடியில் விசாரித்துத் தெரிந்துகொண்டு தேவையானால் வேளாரை உடன் அழைத்துச் செல்வது நல்லது.

குளக்கரையில் கைலாச விநாயகர் தனியாகக் கோயில் கொண்டிருக்கிறார். அவரை வழிபட்டுக் கொண்டு, மூன்றுநிலை இராஜ கோபுரத்தின்வழி கோயிலினுள் செல்கிறோம். வாயிலின் இருபுறமும் உள்ள பூதங்களுக்கு வந்தனம் செலுத்தத் தவறாதீர்கள். இல்லாவிட்டால் கையில் தாங்கியுள்ள கதாயுதத்தை அவர்கள் சுழற்றிவிடக் கூடும் !

இராஜகோபுர நுழைவாசலிலிருந்து கருவறை வரையுமே மண்டபம் அமைக்கப்பெற்றிருக்கிறது. காரைக்குடி நகரத்தார் குடும்பத்தினரால் இம்மண்டபம் இப்போதுதான் புதிதாக அமைக்கப் பெற்றுள்ளதாம்[7].

மண்டபத்திற்கும், நம் இடப்பக்கமுள்ள மடப்பளிக்கும் இடையில் பெரியதொரு சேமங்குதிரை உள்ளது. இந்த இடத்தில்தான் 3 பூதங்கள் காணப்பெறுகின்றன.



பாலைமரத்தை ஒட்டிப் பளபளவென்று தனியாக ஒரு பூதம் இருக்கிறதே. அதன் கதையும் இங்கிருந்துதான் தொடங்குகிறது.

சண்முகநாதபுரம் நகரத்தார் குடும்பத்தினர், திருக்குட நீராட்டுக்கு முன்னர் இந்தச் சேமங்குதிரையைப் புதுப்பித்த நேரத்தில், முன்னரும் அங்கு இருந்த மூன்று பூதங்களில் ஒன்று சேதமுறாமல் நன்றாக இருந்ததால், அதை எடுத்துச் சுவர் ஓரமாக வைத்துக் காற்றினால் சாய்ந்துவிடாதிருக்கக் கயிற்றினால் கட்டி வைத்தார்கள். 'என்னை மழையிலும் வெயிலிலும் கட்டிப் போட்டுப் பட்டினியும் போட்டுவிட்டார்களே' என்று பலருடைய கனவில் பூதம் குறைபட்டுக்கொள்ள, முதன் முதலில் அதைச் செய்து வைத்தவர்களான கோனாபட்டு நகரத்தார் குடும்பத்தினர், கூடம் ஒன்று அமைத்து, அதில் புதிய வண்ணத்தில் பொலிவுடன் திகழும் பூதத்தை வைத்துப் பூசித்து வருகின்றனர்.[8]

கல் தூண்களைக் கொண்ட மண்டபத்தில், வழக்கம்போல் பீடத்தில் யானை, பலிபீடம் ஆகியவையும், பீடத்தின் கீழ் ஒரு பலிபீடமும் உள்ளன. மண்டப மேல் விதானத்தில் பன்னிரு இராசிகளும் வேலைப்பாட்டுடன் பொறிக்கப்பெற்றுள்ளன.

முழுவதும் கல் திருப்பணியான கருவறையின் முன்னர், துவார பாலகர் காட்சி தருகின்றனர். உள்ளே அம்பிகையர் புடைசூழ அமர்ந்திருக்கிறார் பகச்சாலமூர்த்தி ஐயனார்.

'இருகரமும் கூப்பிநின்று ஐயனாரப்பா – உன்றன்
இணையடியில் மனம்பதித்தோம் ஐயனாரப்பா!'[9]

என்று பகச்சால மூர்த்தியிடம் பணிந்து நிற்கிறோம்.

இக்கோயிலில்தான் நாம் முதன்முதலில் ஐயனார் கோயில் ஒன்றில் சண்டேசுவரரைக் காண்கிறோம். வழக்கமாகச் சிவாலயங்களில் கருவறையின் இடப்புறத்தில் (வடக்கே) கோமுகத்தை (அபிடேகத் தீர்த்தத் தொட்டிக்கு) அடுத்து, இவருடைய சிறிய சந்நிதி அமைந்திருக்கும். அந்த முறையில் இங்கும் சண்டேசுவரர் சிலை அமைக்கப் பெற்றிருக்கிறது.

பெரியபுராணத்தில் சண்டேசுர நாயனார் புராணம் முக்கியமானதொன்று. விசாரசருமன் என்னும் அந்தணச் சிறுவன், தன் சிவ பூசைக்கு இடையூறாய் இருந்த தந்தை எச்சதத்தனின் காலை வெட்ட இறைவன் காட்சி தந்து, அவருக்குச் சண்டேசுரபதம் தந்ததை இப்புராணம் விரிவாகக் கூறுகிறது.

இது ஒரு பதவிதான். சிவபெருமான், அம்பிகை, விநாயகர், முருகன், சூரியன் ஆகியோருக்கு அந்தந்த மூர்த்திகளை நெருங்கி, அந்தந்த நிலையில் சண்டீசபதம் உண்டு. அவரவர், அந்தந்த மூர்த்திகளை வழிபடுவோருக்கு அவ்வவ்வழிபாட்டின் பயனை நல்குவர். சூரிய மூர்த்தியிடம் உள்ள சண்டிகேசர் தேசச்சண்டர் என்றும், அம்பிகையிடம் உள்ளவர் நீலச்சண்டர் என்றும், விநாயகரிடம் உள்ளவர் ஆம்போச்சண்டர், முருகனிடம் உள்ளவர் மாத்ருச்சண்டர், சிவபெருமானிடத்து உள்ளவர் தொனிச்சண்டர் என்றும் பெயர் பெறுவர்.[10]

ஒவ்வொரு கோயிலிலும் கோயிலின் சொத்துக்களைக் கண்காணிக்கும் முக்கிய அதிகாரி சண்டேசுவரர். முன்னாட்களில் அவர் பெயராலேயே கோயில் வரவு – செலவுக் கணக்குகள் எழுதுவதும், விலை கொள்வதும், விற்பதும் நடைபெற்று வந்திருக்கின்றன.[11]

தென் பிராகாரத்தில் நொண்டிக் கறுப்பர் (இச்சந்நிதி காரைக்குடி நகரத்தார் குடும்பத்தினரால் இடைப்பட்ட காலத்தில் கட்டப்பெற்றதாம்.[12]). பேச்சி, பத்ரகாளி, இராக்காயி, மீண்டும் நொண்டிக் கறுப்பர், முத்துக்கறுப்பர், பெரிய கறுப்பர், சின்னக்கறுப்பர்,[13] முனீஸ்வரர், ஆஞ்சநேயர், சப்த கன்னியர் ஆகியோருடன், நாச்சியப்ப பண்டித (வேளா)ரின் பெரிய சிலையும், இராமசாமி செட்டியாரின் சிறியதொரு சிலையும் உள்ளன.

இவற்றுடன் இருபுறமும் பெண்களுடன் தேனாண்டாள் குப்பாஞ் செட்டியாரின் சிலையும் உள்ளது. செட்டியார்களின் சிலைகளுக்குப் பூசை நடத்துவதற்காக அந்தந்தக் குடும்பத்தார் கணிசமானதொரு தொகையைக் கொடுத்து வருகின்றனராம்.

மேற்குப் பிரகாரத்தில் மூஷிஹம், பலிபீடத்துடன் கற்பகப் பிள்ளையார், மூஷிஹத்துடன் கன்னிமூலை கணபதி, சித்திவிநாயகர், வீரபத்திரர், கறுப்பர் ஆகியோரும், வடமேற்கு மூலையில் வள்ளி–தெய்வாயானையுடன் கூடிய சுப்பிரமணியர், வடகிழக்கு மூலையில் பைரவர் ஆகியோரும் பரிவார தெய்வங்களாக அமைந்துள்ளனர்.

அடுத்துக் கோயிலின் வலப்புறம் (தெற்கே) உள்ள திறந்த வெளிப்பகுதிக்குச் செல்கிறோம்.

நாகதாளி மரத்தின் அருகில் பெரியதொரு கல் மேடை ; அதில் இரு பீடங்கள் ; அரிவாள், திரிசூலம் ஆகியவை அருகே உள்ளன. இவற்றில் தெற்கே உள்ளது மேடைக் கருப்பர் என்றும், வடக்கே உள்ளது மேடைக்காளி என்றும் கூறுகின்றனர்.

மேடைக்காளிக்கு அர்ச்சனை செய்யும்போது, எத்துணை முறை சொல்லிக் கொண்டார்களோ,

அத்துணை முறை 65 காசு வீதம் மேடையில் வைப்பார்களாம்.[14] நேர்ந்து கொண்டதற்கு ஏற்ப 11 ரூபாய் முதல் 101 ரூபாய் வரை வைப்பவர்களும் உண்டு. இந்தச் சந்நிதியைச் சிறப்புடையது என்றும், பெண்கள் நேரடியாக வந்து வழிபடாமல், பின்னால் சற்றுத் தள்ளி நின்றே தரிசிப்பர் என்றும் கூறுகின்றனர். நேர்ந்து கொண்டவர்கள் காளிக்கும், கறுப்பருக்கும் சேலை, வேட்டி சாத்துவதும் உண்டு.[15]

இதற்கு முன்னால் (மேற்கே)தான், இக்கோயிலின் தலமரமான பாலை மரம் இருக்கிறது. மேடை அமைத்து, இதனையும் பாலையடியான் என்று கூறி வணங்குகின்றனர். இதன்வழிதான், பகச்சாலமூர்த்தி பாலையடியான் என்னும் பெயரை இணைத்துக் கொண்டிருக்கிறார்.

01-07-1982 கணக்குப்படி, 24 ஊர்களைச் சேர்ந்த 2374 புள்ளிகள் இக்கோயிலைக் குலதெய்வக் கோயிலாகக் கொண்டுள்ளனர். ஊர்களும், புள்ளிகள் விவரமும் வருமாறு :

அமராவதிபுதூர் (23 புள்ளிகள்), அரண்மனைச் சிறுவயல் (8), ஆத்தங்குடி (21), ஆறாவயல் (24), உ.சிறுவயல் (134), கடியாபட்டி (3), கண்டரமாணிக்கம் (109), கண்டவராயன்பட்டி (இளையாற்றங்குடி ஒக்கூர், கழனிவாசற் பிரிவினர் - 100), கண்டனூர் (2), கல்லல் (6), காரைக்குடி (இளையாற்றங்குடி ஒக்கூர். வைரவன் கோயில் பெரிய வகுப்பினர் - 670), குழிபிறை (43), கூத்தலூர் (35), கோனாபட்டு (157), சிராவயல் (36), சொக்கநாதபுரம் (பிள்ளையார்பட்டியினர் - 13), தேவகோட்டை (690), நாச்சியாபுரம் (இலுப்பைக்குடியினர் - 80), நெற்குப்பை (3) புதுப்பட்டி (25), மானகிரி (28), மிதிலைப்பட்டி (மாத்தூர் குளத்தூர் - 48), வலையப்பட்டி (21), விராமதி (இளையாற்றங்குடி ஒக்கூர் - 95).[16]

இவர்களுடன் அமராவதிபுதூர், தேவகோட்டை ரஸ்தா ஒற்றைவடச் செட்டியார்களும் இக்கோயிலில் வழிபாடு செய்கின்றனர்.[17]

இவர்கள் அனைவரும் சேர்ந்து ஆண்டில் ஒருநாள் கோயிலுக்கு வந்து வழிபடுவது கிடையாது. காரைக்குடி நகரத்தார்கள் தை அல்லது மாசி மாதத்தில் வந்து வழிபடுகின்றனர் ; சிறுவயல் நகரத்தார்கள் சித்திரை அல்லது ஆடியில் வருவதுண்டு; தேவகோட்டைப் பங்காளிகள் தை மாதத்தில் வருவர்.[18]

நகரத்தார் வீடுகளில் நடைபெறும் திருமணங்களுக்குச் சில நேரங்களில் (நகரத்தார்கள் விரும்பிச் சொன்னால்), வேளார்கள் சென்று விபுதி கொடுத்துவருகின்றனர்.

திருமணத்திற்கு முன்னர் கோயிலுக்குச் சென்று அபிஷேகம் செய்து தீர்த்தம் எடுத்துச் செல்லும் வழக்கமும் இவர்களிடையே இருந்து வருகிறது.[19]

நகரத்தார் குடும்பங்களில் பிள்ளைகள் பிறந்தால், இங்கு வந்து முடிஇறக்கிப் பெயர் சூப்பிடும் வழக்கம் நிலவுகிறது. இதற்குக் காணிக்கையாக ஐந்து ரூபாய் கொடுப்பார்கள் என்கிறார் அர்ச்சகர். குழந்தைகளுக்கு முடி இறக்கும் வழக்கம் முன்னர் இருந்தது; இப்போது இல்லை; மேலும் பிள்ளைகளுக்குச்சுவாமி பெயர் வைப்பதும் இல்லை என்று நகரத்தார்கள் கூறுகின்றனர்.[20]

இங்கு சிறப்புடன் கொண்டாடப்பெறும் மாசிமாதச் சிவராத்திரியின் போது, இக்கோயிலைக் குலதெய்வக் கோயிலாகக் கொண்ட நகரத்தார்களும் வந்து வழிபாடு செய்கின்றனர். புரவிஎடுப்பு அத்தி பூத்தாற்போல் எப்போதாவதுதான் நிகழ்கிறது.

ஈராண்டுகளுக்கு ஒருமுறை வைகாசி மாதத்தில் சுவாமி புறப்பாடு உண்டு. வேறு கோயில்களிலிருந்து சப்பரம் கொண்டு வந்து இங்குள்ள உற்சவரை வைத்து நிகழும் இவ்விழா. ஒரு நாள் திருவிழாவாகக் கொண்டாடப்பெறுகிறது.[21]

இதுவரை இக்கோயிலில் மும்முறை திருக்குடநீராட்டு நிகழ்ந்திருக்கிறது. முதல் குடமுழுக்கு நடைபெற்ற நாள் விவரம் யாருக்குமே தெரியவில்லை. 08-06-1930ல் இரண்டாவது குடமுழுக்கும், 01-07-1982 மூன்றாவது குடமுழுக்கும் நடைபெற்றிருக்கின்றன.

82ஆம் ஆண்டில் நடைபெற்ற குடமுழுக்கின்போது, காரைக்குடி, கண்டவராயன்பட்டி, சண்முகநாதபுரம், அமராவதிபுதூர் நகரத்தார்கள் தனித்தனியாகத் திருப்பணிப் பொறுப்புகளை ஏற்று இராஜகோபுரம், முன்மண்டபம், விமானங்கள், மடப்பளி, சேமங்குதிரை, முன்னோடியான் சந்நிதி ஆகியவற்றைப் பழுது பார்த்தும், புதுப்பித்தும் உதவியுள்ளனர்.[23] மொத்தத்தில் நகரத்தார்களிடம் புள்ளிவரியும், நிதிவசூலும் செய்து திருக்குடநீராட்டு நடைபெற்றிருக்கிறது.[24]

இங்கு, கிராமத்தில் உள்ள நகரவிடுதி பராமரிப்பு இல்லாமல் பழைமையாகிவிட்ட போதிலும்,[25] சில குடும்பத்தினர் வேண்டுதல் காரணமாக இங்கு விடுதியில் தங்கியிருந்து வழிபாடு செய்வது உண்டாம்.[26]



# ஐயனார் வழிபாடு

– மரு.பரமகுரு

ஐயனார் வழிபாடு, காலப்பழமையுடையது. சிலப்பதிகாரத்தில், 'புறம்பணையான்' என்றும், 'பாசாண்ட சாத்தன்' என்றும் ஐயனார் குறிக்கப்படுகிறார். 'புறம்பணையான்' என்பதற்கு 'மாசாத்தன்' என்று அடியார்க்கு நல்லார் பொருள் கூறுவார். மேலும் அவர், புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்கு என விரித்துரைப்பார். அடுத்துப் 'பாசாண்ட சாத்தற்கு' என்னும் தொடருக்கு 'சாத்தன் என்ற ஐயன் கோயிலிலே' என்று பொருள் கூறுவார். சாத்தன், மாசாத்தன் என்பன ஐயனாரின் திருநாமங்களாகும்.

புத்தர் பல சாத்திரங்களைக் கற்று வல்லவர் என்ற காரணத்தால் அவருக்குச் சாஸ்தா அல்லது மகாசாஸ்தா எனப் பெயர்களுண்டு என்பது அறிஞர் கருத்து. ஒன்பதாம் நூற்றாண்டு இலக்கியமாகக் கருதப்படும் வளையாபதிக் காப்பியம்,

" பண்ணார் திறத்தில் பழுதின்றி மேம்பட்ட
தொண்ணூற் றாறுவகைக் கோவையும் வல்லவன்
விண்ணாறு இயங்கும் விறலவராயினும்
கண்ணாறி நோக்கிக் கடுநகை செய்வான்"

என்று ஐயனார் பற்றிப் பேசுகிறது.

" பாசாண்டத் துறையும் இவற்றுட் பலவாம்
பேசில் தொண்ணூற்று அறுவகைப்படுமே"

என்று திவாகரநிகண்டு – 12 பாசாண்டம் பற்றி விளக்குகிறது. இவற்றால் பாசாண்டம் எனப்படும் தொண்ணூற்றாறு வகைத் தத்துவ நூல்களையும் கற்று வல்லவர் எனப்படும் ஐயனார், பல சாத்திரங்களையும் கற்றுவல்ல புத்தர்தான் சாஸ்தாதான் எனக் கருதுவதில் தவறில்லை. தமிழகத்தில் புத்தருக்கெனத் தோன்றிய சாத்தன் கோயில்கள் ஐயனார் கோயில்களாக மாற்றப்பட்டன. சாஸ்தா அல்லது சாத்தன் என்னும் வடசொல்லிற்கு நிகரான தமிழ்ச்சொல் ஐயனார் என்பது. 'ஐயன்' என்பதற்கு, உயர்ந்தோன், குரு, ஆசான் என்பன பொருள். பௌத்தமதம் அழிந்தபின்னர் அம்மதக் கொள்கைகளையும் தெய்வங்களையும் இந்துமதம் ஏற்றுக் கொண்டபோது வெவ்வேறு கதைகள் கற்பிக்கப்பட்டன (பௌத்தமும் தமிழும் பக்.147) என்பது எண்ணத்தக்கது. இவ்வாறு உருவான வரலாறு சிலப்பதிகாரக் காலத்திலேயே நிலைகொண்டுவிட்டதை, 'பாசாண்ட சாத்தன்' என்ற சொல் உறுதி செய்கின்றது. புறம்பணையான் என்பதற்கு 'புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்று' என்பார் அடியார்க்கு நல்லார். இதன்மூலம் ஐயனார் கோயில் ஊருக்குப் புறம்பில் அமைந்திருப்பதை எங்கும் காணலாம்.

இனி, ஐயனார் பற்றிய புராணச் செய்தியைப் பார்க்கலாம்.

முன்னொரு காலத்தில் அமுதம் வேண்டித் தேவர்களும் அசுரர்களும் இணைந்து பாற்கடலைக் கடைந்தனர். அமுதம் எழுந்தது. அந்த அமுதத்தை அசுரர்கள் உண்டுவிடாமலிருக்கக் கருதிய திருமால் மோகினி வடிவம் கொண்டு அங்கு சென்று நின்றார். இதனை கந்தபுராணம்.

"ஞாலம் பிறந்தோர் சுரர்தானவர் நச்ச ஆங்கோர் ஆலம் பிறந்த தெனமோகினி யாகிநின்றான்"

(கந்த.மகா.சாத்தப்படலம்–8)

என்று பேசும்.

இவ்வாறு நின்ற மோகினியின்பால் மோகம்கொண்டு அசுரர்கள் அமுதம் உண்பதை விட்டு அவளைச் சூழ்ந்தனர். அசுரர்கள் இவ்வாறு இடப்பெயர்ச்சியானதும் தேவர்கள் அந்த அமுதத்தை உண்டனர். அதுபோது அந்த மோகினியின்மீது விருப்பம் கொண்ட சிவபெருமான் மோகினியோடு கூடி முயங்கினான். அப்போது ஐயனார் தோன்றினார்.

"...............................முராரியும்
அந்தி வண்ணத்து அமலனும் ஆகியே
முந்து கூடி முயங்கிய எல்லையில்
வந்த னன்எமை வாழ்விக்கும் ஐயனே"

(கந்தபுராணம் மகாசாத்தப்படலம்)

என்பது கந்தபுராணம், இவ்வாறு அவதரித்த

மைந்தருக்கு சிவபெருமான் 'அரிகரபுத்திரன்' எனும் நாமம் சூட்டினார். உருத்திரர்களோடு அமரச் செய்தனர். வரம்பல வழங்கினர். புவனங்களை வழங்கி, அப்புவனங்களுக்குத் தலைவனாக்கினார். தேவர்களும் முனிவர்களும் ஏனையோரும் வணங்கும் ஏற்றம் நல்கினார். பின் அந்த அரிகரபுத்திரன், தம் துணைவர்களோடு எல்லாவுலகையும் இரவுபகலாகக் காத்து வருகின்றான். இவ்வையன், பூரணை, புட்கலை உடனாக இருப்பவன். யானை வாகனம் உடையவன் என்றெல்லாம் கந்தபுராணம் எடுத்தோதுகிறது. ஆதலால் ஐயனார் காத்தல் தெய்வம் என்று அறிகின்றோம். அவ்வாறே மக்கள் அவரைக் கருதி வழிபாடும் செய்துவருகின்றனர்.

"விண்வழியில் செல்கின்ற விறலுடைய வராயினும் அவர்களைக் கண்வழி நோக்கிக் கடுநகை செய்வான்" என்று பேசும் வளையாபதியின் வாக்கு ஐயனார் காவல் தெய்வமாக விளங்குவதைத் தெளிவுபடுத்தும்.

"மூவுலகத்தையும் கருணையோடு காப்பவன் என்றும், கரியநிற மேனிக் கடவுள் என்றும், வெள்ளை யானையை வாகனமாகக் கொண்டவன்" என்றும் கந்தபுராணம் கூறும்.

"தாரணி முதல மூன்றும் தலையளி புரிந்து காப்பான் காரணி செறிந்துற் றன்ன கரியவன் வெள்ளை வாரணம் உடைய ஐயன்"

(கந்தபுராணம், மகாகாளர் விருபடலம் –12)

என்பது கந்தபுராணம், பூம்புகாரில் இருந்த பல கோட்டங்களில் பாசாண்ட சாத்தன் கோயிலும் இருந்தது என்பதை முன்னர் அறிந்தோம். காவல் தெய்வமான இந்தப் பாசாண்ட சாத்தன் எளியார்க்கிரங்கும் கருணைத் தெய்வமாகவும் விளங்கிய செய்தியைச் சிலப்பதிகாரத்தில் பார்க்கலாம்.

பூம்புகாரில் மாலதி என்பவள் வாழ்ந்தாள். அவள் தன் மாற்றாளின் (சக்களத்தியின்) ஆண்குழந்தைக்கு மாற்றாள் இல்லாதபோது பாலூட்டினாள். அப்போது பால் விக்கி, அக்குழந்தை இறந்துவிட்டது. மாலதி திடுக்கிட்டாள். தன்மீது, தன் கணவனும் மாற்றாளும் அடாதபழி சுமத்துவரே என்று ஏங்கினாள். அதனால் அந்த மகவைக் கையிலேந்திக்கொண்டு அமரர் தருக்கோட்டம், வெள்ளானைக் கோட்டம், பலதேவர் கோட்டம், சூரியதேவன் கோட்டம், ஊர்க்காவல் தெய்வக் கோட்டம், வேல்கோட்டம், வச்சிரப்படைக் கோட்டம், புறம்பணையான் (மாசாத்தன்) கோட்டம், அருகன் கோட்டம், சந்திரன் கோட்டம் முதலிய கோட்டங்களுக்கு எல்லாம் சென்று 'தெய்வங்களே, எனக்கு வந்த துயரைத் தீருங்கள்...'எனத் தொழுது வேண்டினாள். பயன் ஏதுமில்லை.

அதன்பின் பாசாண்ட சாத்தனை வழிபட்டுப் பாடு கிடந்தாள். ஓர் இடாகினிப் பேய் அழகிய வடிவில் அப்போது தோன்றியது. "குற்றமற்றவளே, செய்தவம் இல்லாதவருக்கு எந்தத் தேவரும் வரம் கொடுக்க மாட்டார்கள். இது பொய்யுரையன்று, மெய்யுரை, இறந்த குழந்தையை என் கையில் தா" என்று சொல்லிப் பறித்துக் கொண்டது. அப்போது காரிருள் பொழுது. சுடுகாட்டுக்குச் சென்றது. அங்கு புதைக்கும் பிணங்களைத் தின்னும் அந்த இடாகினிப் பேய் இறந்த அக்குழந்தையைத் தன் வாயில் போட்டு விழுங்கியது. அக்கொடிய காட்சியினைக் கண்ட மாலதி இடியுண்ட மயிலைப் போல் துடித்தாள். ஏங்கி அழுது கதறினாள்.

அவள்நிலைகண்ட பாசாண்ட சாத்தன் – (ஐயனார்) பெரிதும் இரங்கி – தாயே, நீ ஏங்கி அழாதே. நீ செல்லும் வழியில் உன் கண் எதிரிலேயே உன் குழந்தையைக் காண்பாய்– என்றான். அந்தக் குழந்தையாய் வடிவு கொண்டு ஒரு சோலையில் மரத்தடியில் கிடந்தான் அந்த மாயக்குழந்தையை மகிழ்ச்சியுடன் மார்பில் அணைத்துக்கொண்டு சென்று, பெற்ற தாயான மாற்றாளிடம் தந்து மகிழ்ந்தாள் மாலதி.

குழந்தையாகத் தோன்றி மாலதியின் துயர் துடைத்த பாசாண்ட சாத்தன் வளர்ந்து இளைஞனானான். மேலான பொருளுணர்ந்த நூல்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றான். தாய், தந்தை இறந்தபின் அவர்களுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தான்.

தேவந்தி என்னும் பெண்ணை மணந்து இல்லறத்தில் இனிது வாழ்ந்தான். இந்த நிலையில் உண்மையைச் சொல்லித் தன் தெய்வத் தன்மையை மீண்டும் அடையக் கருதிய அந்தப்



பாசாண்ட சாத்தன், தன் மனைவியாகிய தேவந்தியை அழைத்து, 'என் பிரிவைப் பொறுத்துக்கொள்' என்றுகூறி, மூப்பற்ற இளமை நலத்தை அவளுக்குக் காட்டி, இனி நீ நம் கோயிலுக்கு வந்து நம்மைக் காண்பாயாக என்று கூறி மறைந்தான். தேவந்தியும் அவ்வாறே, வழிபட்டு வரலானாள் என்பது அச்செய்தி.

காவல் தெய்வமான பாசாண்ட சாத்தன் துன்பமுற்றோர் துயர் துடைப்பதற்காகத் தானே குழந்தை வடிவாகி மனிதரோடு மனிதராக வாழ்ந்து ஆறுதலளித்த இச்செய்தி ஐயனாரின் வான்கருணையை எடுத்துக் காட்டுவதாகும்.

ஐயனார் பற்றிய செய்தி திருமுறைகளிலும் இடம் பெற்றுள்ளது. அப்பரடிகள், தேவாரத்தில் சாத்தனாரைச் சிவபெருமானின் மகனாகவே போற்றியுள்ளார்.

"பார்த்தனுக் கருளும் வைத்தார்
பாம்பரை ஆட வைத்தார்
சாத்தனை மகனா வைத்தார்
சாமுண்டி சாம வேதம்
கூத்தொடும் பாட வைத்தார்
கேளரா மதியம் நல்ல
தீர்த்தமும் சடைமேல் வைத்தார்
திருப்பயற் றூர னாரே"

என்பது அப்பரடிகள் தேவாரம். மேலும் நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்த திருப்பண்ணியர் விருத்தம், இந்தச் சாத்தனைப் பற்றிப் பேசுகிறது.

"கூத்தன்என் றும்தில்லை வாணன்என்
றும்குழு மிட்டிமையோர்
ஏத்தன்என் றும்செவி மாட்டிசை
யாதே இடுதுணங்கை
மூத்தவன் பெண்டிர் குணலையிட்
டாலும் முகில் நிறைந்த
சாத்தன்என் றாலும் வருமோ
இவளுக்குத் தண்ணெனவே"

என்பது அத்திருப்பாடல். காதல் வயப்பட்ட குறிஞ்சி நிலத்துப் பெண்களை முருகன் பற்றுவதாகக் கூறுதலும் உண்டு என்பது இதனால் அறிகின்றோம். 'முகில் நிறைந்த சாத்தன் என்றாலும் வருமோ இவளுக்குத் தண்ணெனவே' என்ற தொடர் சிந்திக்கத்தக்கது.

'புறப்பொருள் வெண்பாமாலை' என்னும் இலக்கண நூலை யாத்த புலவர் ஐயனாரிதனார் என்பவர். இவர் ஒன்பதாம் நூற்றாண்டினர். அக் காலத்திலேயே ஐயனாரின் திருப்பெயர் கொண்டவராக இவர் விளங்கியிருப்பது எண்ணத்தக்கது. புறப்பொருள் வெண்பா மாலையைப் பதிப்பித்த உ.வே.சா. அவர்கள். 'ஐயானாரிதனார் என்பது திருவிடைக்கழியைச் சார்ந்த குராஞ்சேரியிலுள்ள சாஸ்தாவின் பெயர்' என்று குறிப்பிடுகிறார். எனவே, பல நூற்றாண்டுகளுக்கு முன்பே ஐயனார் தமிழர்களின் சிறந்த வழிபடு தெய்வமாகிவிட்டார் என்பதை அறியலாம்.

இத்தகைய ஐயனார் பயிர்த்தொழிலின் காவல் தெய்வமாகப் போற்றப்படுகிறார். இதனால் ஊருக்குப் புறத்தே விளைநிலங்களுக்கு நடுவில் அல்லது புறத்தில் ஐயனார் கோயில்கள் அமைந்திருப்பதைக் காணலாம்.

உழவர் பெருமக்கள் இத்தெய்வத்திற்கு ஆண்டுதோறும் பயபக்தியோடு 'விதைப்புக் காணிக்கை' வழங்குவதும் பொங்கல் வைத்து வழிபடுவதும் மழைவேண்டி 'சிறப்பு' செய்வதும் இன்றும் நிகழ்ந்து வரும் நிகழ்வுகளாகும். வீரத் தெய்வம் ஆதலால் 'புரவிஎடுப்பு' என்ற விழா இத்தெய்வத்திற்குச் சிறப்பாக நடைபெற்று வருவதையும் காணலாம். அது மட்டுமின்றி மெய்யன்பர்கள் ஐயனார் கோயிலில் தம் குழந்தைகளுக்கு முடியெடுத்தல், காதுகுத்துதல், கரும்புத்தொட்டி எடுத்தல் முதலிய நேர்த்திக் கடன்கள் செலுத்துவதையும் காணலாம். இவ்வாறு ஐயனார் வழிபாடு தமிழ்நாட்டு மக்களின் உணர்வோடு கலந்துவிட்டது.

ஐயனார் என்னும் அருமைத் தெய்வத்தை வழிபட்டு அச்சம் நீங்கி, ஆக்கமும் ஊக்கமும் பெற்று வளமோடும் நலமோடும் வாழ்வோமாக.

# ஐயனாரின் காவலும் கருணையும்

- அ.அறிவுநம்பி

மனிதனுடைய நல்வாழ்க்கைக்குக் காரணமாயிருப்பவை அவனுடைய நம்பிக்கைக்கு உரிய தெய்வங்கள்தாம். மனிதவாழ்வில் நிகழும் நல்லனவற்றிற்கு ஆண்டவனின் திருவருள் தேவை என்பது பொதுவான கருத்து. தான் தோன்றிய குலம், வாழும் பகுதி, சார்ந்துள்ள சமயம் என்ப போன்ற பல காரணங்களால் மனிதனுக்குத் தெய்வங்கள் பலவற்றின் உதவி தேவையாகின்றது. மனிதர்கள் நம்பிக்கையின் அடிப்படையில் தெய்வங்களிடம் முறையிடுவது, நேர்த்திக்கடன் செய்வது, திருவிழாக்களை நடத்துவது போன்ற செயல்களில் இறங்குவது நடப்பியல். தமிழர்களின் வழிபடு தெய்வங்கள் பலவாக இருக்கக்கூடும். அவ்வாறான தெய்வங்களுக்குள்ளே ஐயனார் இறையன்பர்களின் வேண்டுகோளுக்குச் செவிதந்து அவர்களின் நல்வாழ்வுக்கு உதவுபவர். தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஐயனார் வழிபாடு பல வேறுபாடுகளுடன் நிகழ்ந்து வருகின்றது. ஐயனார் பற்றிய செய்திகளை இக்கட்டுரை முன்வைக்கிறது; அவ்வளவே.

## ஊர் மக்களும் ஐயனாரும்

சிற்றூர்ப் புறங்களில் பொதுவாக ஊர் எல்லையில் ஐயனாருக்குக் கோயிலெழுப்பி வழிபடுவர். சில ஊர்களில் ஊரின் நடுப்பகுதியில் ஐயனார் எழுந்தருளுவதும் உண்டு. சான்றாக, விருதுநகர் மாவட்டத்தில் புதுப்பட்டி என்ற ஊரில் தெற்கு எல்லையில் குதிரைமேல் வீற்றிருக்கும் ஐயனார் சிலை தென்படுகிறது. 'ஒருகாலத்தில் காவல் தெய்வமாக அய்யனார் விளங்கியதன் எச்சமாக (Reminiscence) இச்சிலை அமைந்துள்ளது'[1] என்பர். ஊராருக்குக் காவல்புரிவது இந்த ஐயனாரின் பணி. தமிழகத்தில் காவல் தெய்வங்கள் இவ்வாறு ஊரெல்லையில் அமைவது பொதுமரபு. சங்கிலிக்கருப்பு, பைரவர், கறுப்பணசாமி போன்ற ஆண்தெய்வங்களும், மாரியம்மன், வடக்குவா(யில்) செல்வி போன்ற பெண்தெய்வங்களும் இவ்வாறு காவல் தெய்வங்களாவர். கிராம தெய்வங்களில் முதன்மையாகக் கருதப்பெறும் ஆண்தெய்வம் ஐயனார். ஐயனார் தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் வழிபடப்படும் ஓர் ஒப்பற்ற கிராம தெய்வம். அவ்வூரின் காவல்காரனாக 'காவல் தெய்வமாகக் கருதப்படுபவர் ஐயனார். இரவில் தன் பரிவாரங்களுடன் கோயிலைவிட்டுக் கிளம்பி ஆவிகளிடமிருந்து ஊர்மக்களைக் காப்பது இவர் செயலாகும்'[2] என்ற குறிப்பு உணரத்தக்கது.

தங்களின் மூதாதையர்களை வணங்குவது சில குலங்களில் காணப்பெறுகின்றது. அவ்வாறான வழிபாடு காலப்போக்கில் சுற்றுப்புறத்தாராலும் மேற்கொள்ளப் பெற்று சிறுதெய்வ வழிபாடாகவும் மாறிவிடும். நிலக்கோட்டை வட்டம் பள்ளபட்டிக்கு அருகில் உள்ள மாவூத்து ஆற்றங்கரையில் உள்ள ஐயனார் வழிபாடு அப்பகுதி மக்களின் முன்னோர் வழிபாடாகத் தொடங்கியது. இன்று அத்தெய்வம் பலவகைச் சாதியாருக்கும் கண்கண்ட தெய்வமாக விளங்குகிறது. இது தலைமைத் தெய்வமாக இருக்கப் பரிவார தெய்வங்களாகப் பல தெய்வங்கள் இடம்பெறுகின்றன.

சிலவூர்களில் மரத்தடி ஒன்றில் சிலை வடிவமாக ஐயனார் இருப்பார். சில பகுதிகளில் மண்சிலை இருக்கும். குதிரை, நாய் வீரர்கள் உடனிருக்கவும் காணலாம். ஏழுகன்னிமார் உடன் இருப்பதையும் சில கிராமங்களில் காணலாம். காவல் தெய்வம் என்பதால் வேட்டைப் பணிக்கேற்ப ஏனையவை காணப்படும். 'ஐயனார் ஊரின் முன்னோடித் தெய்வம். ஊரின் காவல் தெய்வம். அத்தெய்வத்திற்குத்தான் முதற்பூசை நடக்கும். ஆனால் தமிழ்நாட்டில் ஒரே ஒரு இடத்தில் திருச்சி மாவட்டத்தில் ஐயனார் துணைத் தெய்வமாகக் காட்சியளிக்கிறார்'[3] என நாட்டுப்புறத் தெய்வங்கள் என்ற நூல் செய்தி தரும். அடியவர்களுக்கு அருள்தரும் ஐயனாரைத் துடிப்பான கடவுள் (துடியான சாமி) என்கின்றனர் வழிபடுவோர். கொடுக்கல் வாங்கல் சிக்கல், திருட்டுக் குற்றம் போன்றவற்றை ஐயனார் தீர்ப்பதாக நம்புகின்றனர்.

காலப்போக்கில் ஐயனாரை மேல்நிலைக் கடவுளாக்கி வழிபடுகின்றனர். ஆடம்பரமான கோவில், சிவன் பெருமாள் கோவில்களைப் போல வடிவ மாற்றம், திருவிழாக்களில் புதிய செயல்பாடுகள் ஆகியன நிகழ்கின்றன. மேல்சாதியினருக்கும் ஐயனார் வழிபடு தெய்வங்களாகக் காட்சிதரக் காணலாம். இவை யாவும் ஐயனார் வழிபாட்டின் வளர்ச்சி எனலாம்.





## ஐயனார் பற்றிய பிற செய்திகள்

ஐயன் என்பது மூத்தோன் என்ற விளக்கம் பெறும். 'ஐயர் யாத்தனர் கரணம்' என்ற தொல்காப்பிய வரிக்கு மூத்தோர் என்றே பொருள் காணுவர். அச்சம் காரணமாகவும், தங்களைக் காக்கும் வல்லமை கொண்ட தெய்வம் என்பதற்காகவும், மக்கள் பெண்தெய்வங்களில் மாரியம்மா என்ற பெயரையும் ஆண் தெய்வங்களில் ஐயனார் என்ற பெயரையும் பரவலாகத் தங்கள் தெய்வங்களுக்குச் சூட்டினர்.

ஐயனாருக்குரிய பெயர்கள் நல்ல தமிழில் வடிவமைக்கப் பெற்றுள்ளதை 'நாட்டார் வாழ்வியலும் பண்பாடும்' என்ற நூல் கூறும்.1 செங்கோலுடைய ஐயனார், 2 மங்கோவிலுடைய ஐயானார் 3, கரிமுகமுடைய ஐயனார் போன்றவை குறிப்பிடத் தக்கவை. 4 கூடமுடைய ஐயனார், மாவூத்து ஐயனார், ஐயனாரப்பன், இலங்கமுடைய ஐயனார் போன்ற பெயர்களையும் காணமுடிகிறது. சிவகங்கை மாவட்டம் கல்லலுக்கருகில் உள்ள கீழ்க்கோட்டையில் கோயில்கொண்ட ஐயனார் ஆதினமிளகி ஐயனார் என்றே அழைக்கப் பெறுகிறார். இக்கோயிலை வழிபட்ட நகரத்தார் இனத்தாரில் நைனப்பையா குறிப்பிடத்தக்கவர். அவருக்குத் தனிச் சன்னிதி இக்கோயிலில் இருப்பதும் தேவகோட்டையில் படைப்பு வீடு தனியே இருப்பதும் குறிக்கத் தக்க செய்திகள்.

காரைக்குடிக்கருகில் உள்ள ஓர் ஊர் இலங்குடி. இவ்வூரின் காவல் தெய்வம் ஐயனார். பெயர் பகச்சாலமூர்த்தி ஐயனார். பரிவாரத் தெய்வங்கள் பைரவர், முனீசுவரர், நொண்டிக் கருப்பர், பேச்சியம்மன் உட்படப் பல தெய்வங்கள். இத்தெய்வம் பனைமரத்தடியிலிருந்து கண்டெடுக்கப் பட்டதாக ஒரு கதை கூறப்படுகிறது. இந்த ஐயனாரை நகரத்தார்கள் தங்களின் குலதெய்வமாகக் கொண்டாடுவது குறிக்கப்பட வேண்டிய ஒன்று. இன்றைக்குப் பலியிட்டு வணங்குவது குறைந்து போய்விட்டது. எனினும், பொங்கலிடுவது, மாவிளக்கேற்றுவது, காணிக்கை செலுத்துவது, மொட்டையடித்துக்கொள்வது எனப் பலவகையான நேர்த்திக்கடன்கள் தென்படுகின்றன.

## காக்கும் கடவுள்

ஊர்காக்கும் ஐயனாரின் இறையன்பர்கள் முன்மொழியும் வேண்டுதல்கள் பல. திருமணம் கைகூடுவது. பிள்ளைப்பேறு, நோய்நீக்கம் போன்றவை முதன்மை பெறுபவை. ஐயனார் வழிபாட்டால் குடும்பத்தில் செல்வம் பெருகும். நல்ல நிகழ்வுகள் அமையும். தடங்கல்கள் நீங்கும் என்பவை நம்பிக்கைகள். ஐயனாரை மறந்தவர்கள் வீடுகளில் சண்டை சச்சரவுகள் இருக்கும். குழப்பம் குவியும், தடைகள் ஏற்படும் எனவும் மக்கள் நம்புகின்றனர். அதற்காகவே, நாள், வார, திங்கள் வழிபாடுகளை ஏற்பாடு செய்கின்றனர். திருவிழாக்களில் மக்கள் ஒன்றுகூடி விதவிதமாக வழிபாட்டைக் கவனிக்கின்றனர். பள்ளயம் இடுவது, அன்னதானம், குடமுழுக்கு, குருபூசை என்றவாறு பற்பல நிகழ்வுகளை ஐயனார் திருக்கோயில்களில் காணலாம். வறட்சியைத் தடுக்கும் ஆற்றல் ஐயனாருக்குண்டு என்பது அன்பர்களின் ஆழமான நம்பிக்கை. பிரிவினைகளை நீக்குவதில் ஐயனார் உதவுவதாகச் சிற்றூர் மக்கள் கருதுவதால் ஐயனாரின் முன்னிலையில் அமைதி (சமாதானம்) செய்து கொள்வது நடக்கிறது. ஐயனார்முன் சத்தியம் செய்துவிட்டு பிறகு மாறினால், அவர் தண்டிப்பார் என்பது அழுத்தமான நம்பிக்கை.

## காவலும் கருணையும்

பற்பல பெயர்களில் ஐயனார் கொலுவீற்றிருக்கிறார். அவருடைய திருவுருவங்களும் ஊருக்கு ஊர் வெவ்வேறாகக் காணப் பெறுகின்றன. ஐயனார் கோவில் உருவானமைக்குக் கதைகள் பலவும் கூறப்படுவதுண்டு. குலதெய்வம், ஊர்த்தெய்வம், காவல்தெய்வம், முன்னோரின் நினைவால் உருவான தெய்வம் எனப்பல அடைமொழிகளை ஐயனார் கொண்டிருக்கிறார்.

நல்லனவற்றை அவரே வழங்குகிறார் என்பதும் தொல்லைகளை அவரே நீக்குகிறார் என்பதும் ஐயனார் வழிபாட்டில் முதன்மையானவை. பரிவாரத் தெய்வங்களின் துணையுடன் ஐயனார் ஊரையும், மக்களையும் காக்கின்றார். அவருக்கு நேர்த்திக்கடன் செலுத்துவதில் மக்கள் ஆர்வங்காட்டுகின்றனர். ஐயனாரின் உதவியால் தீமைகள் நீக்கப்படுகின்றன என்பதால் ஆண்டுதோறும் விழாக்கள் எடுக்கப் பெறுகின்றன. இப்படிக் காவல் தெய்வமாகவும் காட்சிதரும் ஐயனார் கோவிலின் குடமுழுக்கு மக்கள் அனைவருக்கும் பயனையும் பொலிவையும் உண்டாக்கும். இலங்குடி ஐயனாரின் புகழை ஓதி அவர் அருள்பெற்றுக் கவலைகளை நீக்கி மகிழ்வைப் பெறுவோமாக.

# அய்யனாரா? ஐயனாரா?

– கி. காளைராசன்

## அய்யனாரா? ஐயனாரா?

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றிய மூத்தகுடி" தமிழ்க் குடியாகும். உயிர், உடல் ஆயுதம் இவற்றோடு தோன்றிய தமிழர் தாம் பேசும் தமிழ் மொழியிலும் உயிர் எழுத்துகளையும், மெய்யெழுத்துகளையும் ஆயுத எழுத்துகளையும் உருவாக்கிச் சங்கம் வைத்து ஆராயந்து தமிழ் மொழியை வளர்த்துள்ளனர். தமிழில் எழுத்துகளைக் குறில் எழுத்துகள் என்றும் நெடில் எழுத்துகள் என்றும் குற்றெழுத்துகள் என்றும் பிரித்துள்ளனர். குறில் எழுத்துகள் ஒரு மாத்திரை அளவு நேரம் ஒலிக்கும். நெடில் எழுத்துகள் இரண்டு மாத்திரை அளவு நேரம் ஒலிக்கும் மெய்யெழுத்துகள் அரை மாத்திரை அளவு நேரம் ஒலிக்கும். எனவே தமிழில் ஒவ்வொரு சொல்லும் மிகவும் சிறப்புப் பெற்றனவாகத் திகழ்கின்றன. உதாரணமாக 'அணி' என்ற சொல்லுக்கும் ஆணி என்ற சொல்லுக்கும் மிகப்பெரிய வேறுபாடு உண்டு. கல்லுக்கும் காதலுக்கும் வேறுபாடு உண்டு. பல பால் இவற்றிடையே மிகுந்த வேறுபாடு உண்டு. எனவே சொல்லில் உள்ள எழுத்துகளின் ஒலிஅளவைக் கூட்டினாலோ அல்லது குறைத்தாலோ பொருள் மாறுபடும்.

'சொல்லுக சொல்லின் பொருள் உணர்ந்து' என்பதற்கேற்பத் தற்போது விவரம் தெரிந்தவர்கள் ஐயனார் என்று எழுதுகின்றனர். ஆனால், சிலர் அய்யனார் என்றும் எழுதுகின்றனர். ஐயனார் என்ற சொல்லில் ஐ என்பது நெடில் எழுத்தாகும். இரண்டு மாத்திரை அளவு இதற்கு உள்ளது. ஆனால் அ என்பது குறில் ஒரு மாத்திரை அளவு உள்ளதாகும். ய் என்பது மெய்யெழுத்து அரைமாத்திரை உள்ளதாகும். எனவே அய் என்று எழுதினால் ஒன்றரை மாத்திரை அளவுதான் ஒலிக்கும்.

ஐ என்றால் தமிழில் தலைவன் என்று பொருள். ஐயன் என்றால் தலைவனாவான் என்று பொருள். அய் என்றால் பொருள் ஏதும் இல்லை. எனவே நாம் வணங்கும் தெய்வத்தின் பெயரை நாம் குறைத்து ஒலிப்பதும் கூறுவதும் எழுதுவதும் தவறாகும். எனவே ஐயனார் என்றே கூறவேண்டும். எழுத வேண்டும், படிக்க வேண்டும். இதுபோல் ஐயா என்றுதான் எழுதவேண்டும். அய்யா என்று எழுதக்கூடாது.

## ஐயனை அறிந்துகொள்வோம் தோற்றம்

தாருகாவனத்திலே மகரிஷிகளின் அகங்காரத்தை அழிப்பதற்காக வேள்வியைக் குலைக்க வேண்டியிருந்தது. இதற்காகப் பரமேசுவரன் பிட்சாடனார் உருவமும், மகாவிஷ்ணு, மோகினி உருவமும் கொண்டனர். பிட்சாடனார் மகரிஷிகளின் பத்தினிகள் வாழும் வீட்டுத் தெருக்களிலே சென்று பிச்சை கேட்டார். அவரது தோற்றத்தைக் கண்டவர்களின் மனத்தில் தடுமாற்றம் ஏற்பட்டது. மோகினியானவள், ரிஷிகள் வேள்விகள் செய்யும் இடத்திற்குச் சென்று அவர்களின் மனதை அலைபாயச் செய்தார். இதனால் வேள்வி தடைப்பட்டது. ஆனால் பிட்சாடனார் மோகினியின் உருவத்தில் காமுற்று அவளை அடையவேண்டி விரட்டிச் சென்றார். அப்போது காட்டுக்குள்ளே கண்மாய்க்கரையில் பிறந்தவர் ஐயனார் அல்லது சாஸ்தா ஆவார்.

ஐயனார் மாசிமாதம் தேய்பிறையில் அமாவாசைக்கு முதல்நாள் சிவராத்திரி அன்று பிறந்தார்.

## வடிவம்

ஐயனார் சர்வேசுவரனைப் போன்ற தோற்றம் உடையவராய் இருப்பார். கிழக்குத்திசை நோக்கி அமர்ந்திருப்பார். மார்பில் பூணூல் அணிந்திருப்பார். இளைஞரைப் போன்றவர். விரிந்து பரந்த முகத்தையும் மார்பையும் உடையவர். தங்கநிறம் அல்லது சிவப்பு நிறமானவர். கிரீடம்

அணிந்திருப்பார். கருத்த அடர்த்தியான சுருண்ட முடி உடையவர். வலது காதில் குழையும் இடதுகாதில் குண்டமும் மற்றும் சர்வேசுவரனுக்கான அனைத்து ஆபரணங்களையும் அணிந்திருப்பார். சந்தனம் பூசியிருப்பார். பீடத்தின்மீது நன்கு நிமிர்ந்து உட்கார்ந்திருப்பார். வலது கையில் தண்டம் அல்லது தடி வைத்திருப்பார். இடது கையை இடதுகாலின்மீது சார்த்தியது போல் வைத்திருப்பார். இடதுகாலை மடித்து பீடத்தில் வைத்துக்கொண்டு வலதுகாலைக் கீழே தொங்கவிட்டிருப்பார்.

கண்மாய்க்கரை அல்லாத இடங்களில் உள்ள ஐயனார் நின்றபடி இருப்பார். தேவியர்களும் நின்றபடி இருப்பர்.

சாந்த குணமுடையவர், நாய், கோழி, யானை, குதிரை இவற்றுடன் விளையாட்டுக் குணம் உடையவர். பொழுதுபோக்காகவும் விளை யாட்டாகவும் பாடிக்கொண்டிருப்பவர். யானை வாகனம் உடையவர். யானைக்கொடி மரத்தை உடையவர். வெள்ளைக்குதிரையை உடையவர்.

## தேவியர் இருவர்

சிறப்பான காரணகாரியங்கள் கருதி சில ஊர்களில் தேவியர்களுடன் சேர்ந்திருக்காமல் ஐயனார் தனித்தும் இருக்கிறார். இவ்வாறாகத் தனித்து இருக்கும் ஐயனாரை பாலசாஸ்தா என்று அழைக்கின்றனர். இவ்வாறு இருக்கும் ஐயனார் மிகவும் துடுக்கானவராகவும் துடியானவராகவும் விளங்குகின்றார்.

பொதுவாக, ஐயனாருக்குப் பூர்ணாதேவி, புஷ்கலாதேவி என இரண்டு தேவியர் உள்ளனர். ஐயனார் தேவலோகத்தைச் சேர்ந்தவர். பூலோகத்தில் அவதரித்தவர். எனவே தேவலோகத்தைச் சேர்ந்த புஷ்கலாதேவியும் பூலோகத்தைச் சேர்ந்த பூர்ணாதேவியும் துணைவியராக உள்ளனர்.

இவர்களது தலையானது ஐயனாரின் தோள்பட்டை உயரத்தில் இருக்கும் ஐயனாரின் அருகில் உள்ள கையில் மலரைப் பிடித்தபடியும், ஐயனாரின் அருகில் உள்ள காலை மடித்துப் பீடத்தின் மீது வைத்துக்கொண்டு மற்றொரு காலைக் கீழே தொங்கவிட்டபடியும் அமர்ந்திருப்பார்.

புஷ்கலை என்றால் பூவைப் போன்ற பண்புடையவள் என்று பொருள். பு என்று பொதுவில் சொன்னால் அது தாமரையைக் குறிக்கும். எனவே, புஷ்கலை என்றால் தாமரை மலரைப் போன்றவள். மலர்ந்த முகமுடையவள், பரந்த எண்ணமுடையவள், மணம் நிறைந்தவள், தங்க நிறமானவள்.

பூரணம் என்றால் நிறைவு, பௌர்ணமி என்று பொருள். எனவே, பூரணை என்றால் மனநிறை வானவள், முழுமதி போன்றவள் என்று பொருளாகும்.

## பரிவார தெய்வங்கள்

ஐயனாரின் பரிவார தெய்வங்களான கருப்பணசாமி, வீரபத்திரர், இடும்பன், நடுக்காட்டான், நடாள், ஆண்டி, நொண்டி, இருளப்பன், சின்னான், சன்னாசி, மூக்கன் மற்றும் சோணை முதலிய ஆண் தெய்வங்களும், காளி, நீலி, ராக்காயி, கருப்பாயி, சடைச்சி, இருளாயி, செகப்பி, மூக்காயி, பேச்சி, ஏழைகாத்த அம்மன் மற்றும் சப்த கன்னியர்கள் ஆகிய பெண் தெய்வங்களும் பரிவார தெய்வங்களாக உள்ளனர்.

## கோயில்

ஐயனாருக்கு முன்னே இரண்டு பக்கங்களிலும் பக்கத்திற்கு ஒன்றாக இரண்டு பெரிய குதிரைகள் இருக்கும். இவற்றிற்குச் சேமங்குதிரை என்ற பெயர். இக்குதிரைகள் முன்னங்கால்களைத் தூக்கியபடி இருக்கும். அவற்றின் கால்களுக்குக் கீழே இரண்டு பூதங்கள் நிற்கும் இப்பூதங்களுக்கு நடுவே, குதிரைக்குக் கீழே காளிதேவி நிற்பாள்.

## கோயில் பூசாரி

பூணூல் அணிந்தும், அசைவம் உண்ணும் வழக்கமுடைய வேளார் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் ஐயனார் கோயில்களில் பரம்பரை பூசாரிகளாக உள்ளனர்.

## திருவிழாக்கள்

சிவராத்திரி அன்று ஐயனார் பிறந்தவர் என்பதால் அன்று வழிபாடுகள் சிறப்பாக நடைபெறுகின்றன.

எருதுகட்டுதல் என்ற விழாவில் ஊர்மக்கள் தங்களது ஆடு மாடுகளை ஐயனாருக்கு காணிக்கையாகக் கொடுக்கின்றனர்.

தைப்பொங்கலை அடுத்துவரும் மஞ்சுவிரட்டு திருவிழாவில் ஐயனார் கோயில் காளை மாடுகளையும், தங்களது வீட்டில் உள்ள மாடுகளையும் அவிழ்த்து விரட்டிவிடுகின்றனர். இவற்றை இளைஞர்கள் பிடிக்கின்றனர்.

புரவிஎடுத்தல் அன்று ஐயனார் கோவிலில் உள்ள சேமங்குதிரைகளைப் போலச் சிறிய மண் குதிரைகளைச் செய்து, மக்கள் அனைவரும் திருவிழா அன்று அவற்றை எடுத்துச் சென்று கோயிலில் சேர்ப்பர். சிலர் நேர்த்திக்கடனாகவும் செய்கின்றனர்.

## பிரசாதம்

சிவன்கோயிலில் விபூதியும், அம்மன் கோயிலில் குங்கமமும் விஷ்ணு கோயிலில் துளசித் தீர்த்தமும் பிரசாதமாக வழங்கப்படும். ஐயனார் கோயிலில் சந்தனமும் சுத்தமான நீரும் பிரசாதமாக வழங்கப்படும். இவற்றுடன் விபூதியும் குங்குமமும் வழங்கப்படும்.

## ஐயனாரும் ஐயப்பனும்

சிவபெருமானுக்கும் மோகினி (பெண்வடிவில் இருந்த மகாவிஷ்ணு)க்கும் பிறந்தவர்கள் என்ற அடிப்படையில் ஐயனாரும், ஐயப்பனும் ஒருவரே என்று சிலர் கூறுகின்றனர். இக்கருத்தானது, தனித்து இருக்கும் பாலசாஸ்தா என்ற ஐயனாருக்கும் ஐயப்பனுக்குமே பொருந்தும். ஆனால் தம்பதி சமேதராகத் தேவியருடன் வீற்றிருந்து அருளும் ஐயனாரும் ஐயப்பனும் வேறுவேறானவர்கள் என்பதைக் கீழ்க்கண்ட செய்திகளால் நன்கு அறியலாம்.

ஐயனார் என்பவர் தெய்வம், மனித அவதாரம் எடுக்காதவர். ஆனால், ஐயப்பன் மனிதனாகப் பிறந்தவர்.

ஐயனார் கண்மாய்க்கரையில் தெய்வமாகப் பரமேசுவரன், மோகினியால் தோற்றுவிக்கப் பெற்றவர். ஆனால், ஐயப்பன் காட்டில் குழந்தையாகக் கண்டெடுக்கப்பெற்று அரசனால் வளர்க்கப் பெற்றவர்.

ஐயனார் ஒரு குடும்பஸ்தர். இரண்டு தேவியருடனும் பரிவார தெய்வங்களுடனும் ஆட்சி செய்பவர். ஆனால் ஐயப்பன் ஒரு யோகி. சீவசமாதியில் நித்தியயோகியாய் இன்றும் இருப்பவர்.

ஐயனார் இடதுகாலை மடித்து வலதுகாலைத் தொங்கவிட்டு அமர்ந்திருப்பார். ஆனால், ஐயப்பன் இரண்டு கால்களையும் மடித்து முழங்கால்கள் மேலே தூக்கியவாறு இருக்கும்படி அமர்ந்திருப்பார்.

## அகோர மூர்த்தி

திருவெண்காடு திருத்தலத்தில் உள்ள சிவபெருமானின் வடிவம் அகோரம் எனப்படுகிறது. இந்த உருவத்தில் சிவபெருமானைக் காண்பது அபூர்வம். கரிய உருவமும், எட்டு கரங்களும், ஏழு ஆயுதங்களும் கொண்டு எரி சிகைகளுடன் நெற்றிக்கண் நெருப்பைக் கக்க கம்பீரமான திருக்கோலத்தில் காட்சி தருகிறார். மருத்துவாசுரனை அழிக்க சிவபெருமான் எடுத்தருளிய திருக்கோலம் இது.

## பள்ளி கொண்ட சிவன்

விஷத்தை உண்ட சிவபெருமானின் திருவுருவம் விஷபாஹரண மூர்த்தி எனப் பெறும். இது சிவபெருமானின் மகேஸ்வர வடிவங்கள் 25ல் ஒன்று.

சென்னையிலிருந்து நாகலாபுரம் செல்லும் வழியில் ஆந்திர மாநிலத்தில் சுருட்டப்பள்ளி என்ற தலத்தில் சிவபெருமான் திருமாலைப் போன்று பள்ளிக்கொண்ட பெருமானாக காட்சியளிக்கிறார்.





# அயல்நாடுகளில் ஐயனார் வழிபாடு

– இரா. குறிஞ்சிவேந்தன்

தமிழ்மரபின் நீண்ட வரலாற்றுச் சுவடுகளில் படிந்து கிடக்கும் நம்பிக்கையே வழிபாடு. இயற்கையைப் போற்றி வணங்கிய தமிழர், சமுதாயத்திற்காகவும், மக்களுக்காகவும் உயிர்நீத்த வீரர்களின் நினைவையும் சேர்த்துப்போற்றினர். வயல்வெளிகளிலும், நீர்நிலைகளின் ஓரங்களிலும் கம்பீரமாக அமர்ந்திருக்கும் கிராமதேவதைகளின் பின்னணியில் உருக்கமும், சுவையும் நிறைந்த நிகழ்வுகள் பலவற்றை இன்றும் கேட்கலாம். அவற்றுள் தலைமைத் தன்மையுடன் விளங்கும் தெய்வமே ஐயனார். ஐயனார், சாத்தன் என்று கொண்டாடப்படும் தெய்வவழிபாடு திராவிட இனத்தின் தனித்தன்மையுடன் விளங்குவதாகும். காவல் தெய்வமாகவும், பல்வேறு சாதியினரின் குலதெய்வமாகவும் ஐயனார் வணங்கப்படுகிறார். கிராமதேவதைகளாகக் கூறப்படும் 21 சிறு தெய்வங்களின் மைய இழையாகத் தனித்துவத்துடன் மிளிர்வது ஐயனார் வழிபாடு. குதிரையுடன் கம்பீரமாகக் காட்சியளிக்கும் ஐயனார் வழிபாடு பன்னூறு ஆண்டுகளாகத் தமிழ் மண்ணில் பின்பற்றப்படுவது ஒருபுறமெனின், ஐயனார் கடல்கடந்து சென்ற வரலாறு மற்றொரு அத்தியாயமாகும்.

கி.பி.17ஆம் நூற்றாண்டு தொடங்கி, 20ஆம் நூற்றாண்டின் முதல் காற்பகுதி வரை கடலுக்கப்பால் இருந்த பல்வேறு காலனிநாடுகள் மற்றும் தீவுகளுக்குத் தமிழர்கள் கொண்டு செல்லப்பட்டனர். தொடக்கத்தில், போர்த்துகீசியர்கள், டச்சுக்காரர்கள் போன்றவர்களாலும், பின்னர் பிரெஞ்சு மற்றும் பிரிட்டிஷாரால் கூலித் தொழிலாளர்களாகக் கொண்டு செல்லப்பட்ட தமிழர்கள் எண்ணிக்கை பல இலட்சமாகும். ஜாவா, சுமத்திரா தீவுகள் முதல் இலங்கை, மலேயா, பிஜி, தென்னாப்பிரிக்கா, மொரிஷியஸ், ரியூனியன், கரினாம், மார்டினிக் குவாடலூப் மற்றும் கரிபீயன் தீவுகள் என எண்ணற்ற நாடுகளில் அமைந்திருந்த காபி, தேயிலை, மிளகு, கரும்பு, இரப்பர்த் தோட்டங்களில் இத்தமிழர்கள் தம் உழைப்பினை ஈந்தனர். ஆயிரக்கணக்கில் புலம்பெயர்ந்த இத்தமிழர்களில் பெரும்பாலோனோர் கிராமப் புறங்களைச் சார்ந்தவர்கள். காலங்காலமாகத் தாம் வாழ்ந்த சமூகப் பழக்கவழக்கம் மற்றும் பண்பாடுகளில் ஒன்றாகக் கலந்தவர்கள்.

அக்காலத்தில் புலம் பெயர்ந்த தமிழர்கள் சென்றடைந்தது, நாகரிகமிக்க நகரத்தையோ, குடியிருப்புகளையோ அன்று; கொடுங்குளிர் உறைந்த மலைப்பிரதேசங்கள், பள்ளத்தாக்குகள், அடர்த்தியான காடுகள் போன்றவையே. மலேரியாவை உண்டாக்கும் கொசுக்களும். அட்டைகளும் நிறைந்த பகுதிகளில் வாழ்ந்த தமிழர்கள் பின்பற்றிய வழிபாட்டு முறை மெய்சிலிர்க்க வைக்கக்கூடியது. காடுகள் நிறைந்த தேயிலை மற்றும் இரப்பர்த் தோட்டங்களில் மாரியம்மன், ஐயனார் மற்றும் பிற சிறு தெய்வங்களுக்குக் கோயில் எழுப்பினர். தாயகத்தில் பாடிப் பழகிய நாட்டுப்புறப் பாடல்களால் அங்கும் அத்தெய்வங்களுக்கு பூசைகள் நல்கினர். கடும் உழைப்பினைத் தந்து பாடுபடும் தங்களை நோய்– நொடிகள் அண்டாமல் காப்பதற்காக மாரியம்மனை வழிபட்டனர். நள்ளிரவிலும் தோட்டங்களில் பால்மரம் சீவுவதற்குச் செல்லும் தங்களைக் காக்கும் குலதெய்வமாக ஐயனாரை அம்மக்கள் வழிபட்டனர். சொந்தங்களையும், சுற்றங்களையும் இழந்து கண்காணாத நாடுகளில் தனிமையில் வாடிய தமிழர்களுக்கு, மருந்தாக விளங்கிய இடமாக இக்கோவில்கள் விளங்கின. தங்களுக்குக் கிடைத்த சொற்பக்கூலியில் இத்தெய்வங்களுக்குத் திருவிழா எடுப்பதில் மிகுந்த உவகையையும் பெற்றனர். தோட்டப்புறங்களில் சிறுகோவில்கள் அமைத்துக்கொள்ள அனுமதித்ததோடு, அக்கோவில் திருவிழா,

தீமிதித்தல் போன்றவற்றுக்குப் பணவுதவியினையும் வெள்ளையர்கள் செய்து வந்தனர். இவ்வாறாக, தமிழ்நாட்டில் மட்டுமின்றி, தமிழர்கள் செல்லுமிடம் எல்லாம் துணையாகத் தொடரும் காவல் தெய்வமாக ஐயனார் பரிணமித்தார்.

மேற்கிந்திய தீவுகளிலும், பிற தொலைதூர நாடுகளிலும் காலப்போக்கில் இவ்வழிபாட்டில் மாறுதல்கள் ஏற்பட்டன. ஏனெனில், தென்னாப்பிரிக்கா, மொரிசியஸ் உள்ளிட்ட நாடுகளில் தமிழர்களின் வாழ்க்கை மாறத் தொடங்கியது. தங்களின் பிள்ளைகளுக்குத் தரமான கல்வியை அளித்து உயர்பதவிகளிலும், பிற தொழில்களிலும் தமிழர்களின் நாட்டம் சென்றன. அதனால் தோட்டங்களில் இருந்து வெளியேறிய தமிழர்கள் அந்தந்த நாடுகளின் நகர்ப்புறங்களில் குடியமர்ந்தனர். இதனால் தோட்டங்களில் ஐயனார் வழிபாட்டில் தொய்வு நிலை ஏற்பட்டது. தமிழர்களின் சமய மாற்றம். பிற இனத்தவர்களைத் திருமணம் செய்துகொள்ளுதல் போன்றவற்றால் தொலைதூர நாடுகளில் காலப்போக்கில் ஐயனார் வழிபாடு குன்றத் தொடங்கின. ஆனால் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளில் இன்றும் ஐயனார் வழிபாட்டை முனைப்புடன் செய்யும் முறைமையைக் காணலாம்.

இலங்கையில் மலையகத்தில் வாழும் இந்தியத் தமிழர்களின் குடியிருப்புப் பகுதிகளில் ஐயனார், குதிரையுடன் காவல் தெய்வமாக நிமிர்ந்து நிற்பதை இன்றும் காணலாம். தேயிலைத் தோட்டங்களில் உழைக்கும் இந்தியத் தமிழர்கள் ஐயனார் வணக்கத்தினை மலைக்கிராமங்கள் தோறும் செய்துவருகின்றனர். பங்குனி மாதத்தில் ஐயனாருக்கு நடைபெறும் விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அவ்விழாக்களில் ஐயனார் தொடர்பான நாட்டுப்புறக்கதைப்பாடல்கள், இன்னிசைக்கருவிகளுடன் இசைத்துப் பாடப்பெறும்.

இலங்கையில் வடக்கு மற்றும் கிழக்குப் பகுதிகளில் ஈழத்தமிழர்கள் வாழ்வியல் வழிபாடுகளில் ஐயனாருக்குத் தனியிடம் உண்டு. யாழ்ப்பாணத்தினைத் தமிழ்மன்னர்கள் ஆண்ட காலத்தில் தொடங்கிய இவ்வழிபாட்டுமுறை இன்றும் தொடர்கிறது. போர்மேகங்கள் சூழ்ந்த வடக்கு இலங்கையில், பெரும்பாலான கிராமங்களில் பனைமரங்களின் சலசலப்புக்கிடையில் குதிரைகள் வரிசையாக நிற்க, அமைதி தவழும் ஐயானர் கோவில்களைக் காணமுடியும். ஐயனாரின் கதைகளைக் கூறும். 'வியவில் ஐயனார்' 'காரைநகர் மற்றம் குதிரைமலை ஐயனார் வில்லுப்பாட்டு' போன்றவை இலங்கை ஐயனார் குறித்த செய்திகளைத் தருகின்றன. முழவு உள்ளிட்ட தோற்கருவிகளைக் கொண்டு இப்பாடல்கள் பாடப்பட்டு வருகின்றன.

இலங்கையில் தமிழர்கள் மட்டுமின்றி, புத்தரை வழிபடும் சிங்கள இனத்தவர்களிடையும் ஐயனார் வழிபாடு இருப்பது வியப்பூட்டும் செய்தியாகும். 'ஐயநாயக' (Ayyanayake) என்ற பெயரில் ஐயனார் வழிபாட்டினைச் சிங்களவர்கள் செய்துவருகின்றனர். அங்கு பலவிடங்களில் ஐயனாரை, புத்தருடன் இணைத்து வழிபடும் காட்சிகளை இன்றும் காண இயலும். பாலாவிக் குளம், பூநகரி, குருந்துமலை போன்றவிடங்களில் ஐயனார் கோயிலில், சிங்களர்களின் புத்தவழிபாடு இணைந்து 'ஐயநாயக' வழிபாடகத் தோற்றமளிப்பதைக் காணலாம். வன்னிப்பகுதியின் கதைப்பாடல்களும் இது குறித்த செய்திகளைத் தருகின்றன. கிராமக்காவல் தெய்வமாக சிங்களர்களால் வழிபடப்படும் 'ஐயநாயக' நம் தமிழ்ச் சமூகத்தின் ஐயனாரே.

மலேசியாவின் இரப்பர்த் தோட்டங்களில் ஐயனார் வழிபாடு முகிழ்த்த வரலாறும் குறிப்பிடத் தக்கது. சிறுதெய்வவழிபாட்டிற்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கும் மலேசியத் தமிழர்கள், ஐயனார் வழிபாட்டினையும் சிறப்பாகப் பின்பற்றி வருகின்றனர். தோட்டப்புறங்களில் மட்டுமன்றி, குடியமர்ந்த இடங்களில் எல்லாம், ஐயனார்

வழிபாட்டுக்குத் தனிச்சிறப்பினை அளித்தவர்கள் மலேசியத் தமிழர்கள். கோலாலம்பூரில் இன்று முக்கிய நகரப் பகுதியாகத் திகழும் பிரிக்ஃபீல்ட்ஸ் (Brickfields) போன்ற செங்கல்சூளைப் பகுதிகளில் ஐயனார் வழிபாட்டு முறையை 150 ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய தமிழர்கள், இன்றுவரை தொடர்வதைக் காணமுடிகிறது. ஐயனாருக்கு உகந்த பங்குனி மாதத் திருவிழாவினைக் கூத்து உள்ளிட்ட இன்னிசைக் கருவிகளுடன் கொண்டாடி மகிழும் தோட்டப்புற வாழ் தமிழர்களின் பண்பாட்டினைக் காணும்போது வியப்பு மேலிடும். சிங்கப்பூர் கோயில்களில் ஐயனாருக்கு என்று தனியாகச் சன்னிதிகள் உள்ளன.

காலஓட்டத்தில், பல மாற்றங்கள் ஏற்பட்டபோதும். அந்தந்த நாடுகளின் தோட்டப்புறங்களில் ஐயனார் வணக்கம் இன்றும் தொடர்கின்றன. தோட்டங்களுக்குச் சென்ற தலைமுறையினரின் அடையாளங்கள் மறைந்து, வருவது குறிப்பிடத்தக்கது. தொலைதூர நாடுகளில் இன்று இவ்வழிபாட்டு முறையில் பின்னடைவு தோன்றியுள்ளன. தாயகத்துடன் தொடர்பின்மை, பிற சமயத்தவராக மாற்றம் செய்யப்படுதல் போன்ற நிகழ்ச்சிகள் தோட்டப்புறத் தமிழர்கள் வாழ்வில் ஏற்பட்டதால் உருவான விளைவுகள் இவையாகும் ரியூனியன் போன்ற தீவுகளில் பிற சமயத்தவராக மாறிய தமிழர்களின் வீடுகளில் தற்போதும் வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஐயனார் மற்றும் முனீசுவரர் சிலைகள் இருப்பதைக் காணமுடியும்.

காவல்தெய்வமாகப் போற்றப்படும் ஐயனார், தீமைகளை வீழ்த்தி சமூகத்திற்கு நன்மை பயக்கும் நல்ல தெய்வமாக வணங்கப்படுவது இவ்வழிபாட்டின் அடிப்படைச் சிறப்பு. கால, தேச, வர்த்தமானங்களைத் தாண்டி மாறாத் தன்மையுடன் மண்ணின் மணம்வீசும் ஐயனார் வழிபாடு தொடர்வது, தமிழ் உணர்வின் அடையாளமாகும். மதுரையாக இருந்தாலும், மலேசியாவின் இரப்பர் தோட்டமாக இருந்தாலும் காக்கும் தெய்வமாக ஐயனாரைத் தொழும் தமிழர்களின் பண்பாட்டுச் சங்கிலி கண்ணுக்குப் புலனாகாத நீட்சியை யுடையது. அச்சங்கிலியைத் தமிழகத்தின் குக்கிராமங்களில் இரவில் உறுமும் கூத்துக் கலைஞனின் பாட்டிலும் காணமுடியும்.

வாராரு.... வாராரு... ஐயனாரு வெள்ளைக் குதிரை ஏறி வாராரு.... வாராரு.... என இலங்கைத் தேயிலைத் தோட்டத்திலிருந்து காற்றில் மிதந்து வரும் தமிழனின் குரலிலும் தரிசிக்க இயலும்.



## வைதீக பூஜை நடைபெறும் தலங்கள்

1. திருவொற்றியூர் (சென்னை)
2. இராமேஸ்வரம்
3. காஞ்சிபுரம் (காமாட்சியம்மன் கோயில்)
4. திருஆனைக்கா (அகிலாண்டேஸ்வரி ஆலயம்)
5. ஆவுடையார் கோயில்
6. திருச்செந்தூர் (மூலவர்)
7. கன்னியாகுமரி அம்மன் கோயில்
8. சிதம்பரம்
9. தஞ்சை (பங்காரு காமாட்சி அம்மன் கோயில்)

இங்கெல்லாம் ஆகம முறைப்படி அன்றி, வேத முறைப்படி வழிபாட்டு முறைகள் நடைபெற்று வருகின்றன. மஹாராஷ்டிரம் முதல் வட இந்தியா முழுவதும் வைதீக முறைப்படியே (வேத மந்திரம் பிரதானம்) பூஜை வழிபாடுகள் நடைபெறுகின்றன.

# முத்தித்தலங்கள்

– சி. பாலசுப்பிரமணியன்

உலகில் மனிதராகப் பிறந்த ஒவ்வொருவர் வீட்டிற்கும் சுற்றத்திற்கும் நாட்டிற்கும் ஆற்றவேண்டிய கடமைகளைச் செவ்வனே ஆற்றி, அறநெறி போற்றும் அருளாளர் துணையுடன் இறையருளுள் கலத்தல் இன்றியமையாத வாழ்வுப் பயனாகப் போற்றப் பெறுகின்றது. இவ்வுலகச் சமயங்கள் யாவும் இக்கருத்தை வலியுறுத்தக் காணலாம். அவற்றுள் சைவ சமயம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் வாழ்வியல் நெறியைச் சிறப்புறச் சித்திரிக்கின்றது.

*ஈதல் அறம் தீவினைவிட்டு*
*ஈட்டல்பொருள் எஞ்ஞான்றும்*
*காதல் இருவர்*
*கருத்தொருமித்து – ஆதரவு*
*பட்டதே இன்பம்*
*பரனை நினைந்(து) இம்மூன்றும்*
*விட்டதே பேரின்ப வீடு.*

என்னும் பழம்பாடல் இதற்குச் சான்றாகும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இந்நான்கும் "உறுதிப்பொருள்கள்" என உரைக்கப் பெறுகின்றன. வடமொழி அறிஞர்கள் இவற்றைப் "புருஷார்த்தம்" என்று கூறுவர். உறுதிப் பொருள் நான்கனுள் வீடு என்பது உலகக் கட்டுகளிலிருந்து விடுதலை பெற்று முத்தியடைதலாம். முத்தியடைதலையும், முத்தியளிக்கும் கடவுள் ஆற்றலையும் முத்தியடையத்தக்க தலங்களையும் நம்முடைய முன்னோர்கள் நம்பி வந்தனர். அவர்கள் தம் நம்பிக்கையை நூல்களின் வழி வெளிப்படுத்தியும் உள்ளனர். அச்சான்றோரின் நம்பிக்கைகளுள் ஒன்றாகிய முத்தியளிக்கும் தலங்கள் குறித்து இவண் நோக்கலாம்.

தமிழ்ச் சான்றோர் முத்தியளிக்கும் தலங்களாக நான்கு ஊரைக் குறிப்பிடுவர். திருவாரூர், சிதம்பரம், திருவண்ணாமலை, காசி என்பன அவ்வூர்கள். இவற்றுள் திருவாரூர் பிறக்க முத்தி தருவது; சிதம்பரம் தரிசிக்க முத்தி தருவது; திருவண்ணாமலை நினைக்க முத்தி தருவது ; காசி இறக்க முத்தி தருவது. இக்கருத்துக்களை

*தெரிசனம்செயத் தில்லையிற் கமலையிற் செனிக்க*
*மரணமாய்விடக் கங்கைசூழ் வாரணா சியிலே*
*அருணை மாநகர் நினைத்திட முத்தியஞ் செழுத்தும்*
*பிரணவத்தொடெப் பேர்களு முரைக்கினும் பெறலாம்.*

என்னும் அழகிய பாடலில் காணமுடிகின்றது. நல்ல எண்ணம், நல்ல செயல், நல்ல பண்பு முதலியவற்றால் நற்கதி பெற்றோர் வாழும் திருத்தலங்களாக இவை போற்றிக் கூறப் பெறுகின்றன. கட்டறுத்து வீடு பெற எண்ணும் ஒவ்வோர் உயிரும் இத்தலங்களை நாடுதல் இயல்புதானே ! இனி இத்தலங்களின் சிறப்புகளை நுணுகி நோக்குதல் நல்லது.

## திருவாரூர் :

இன்றையத் தஞ்சை மாவட்டத்தில் உள்ள சைவத் திருப்பதி திருவாரூர். தேவார மும்மூர்த்திகளாகிய ஆளுடைய பிள்ளை, அப்பர், ஆரூரர் ஆகிய மூவரின் பாடல் பெற்ற தலமாக இவ்வூர் திகழ்கின்றது. வன்மீகநாதர் என்னும் திருப்பெயருடன் இக்கோயிலின் மூர்த்தி எழுந்தருளியுள்ளார். அவர் இருக்கும் இடத்தைத் திருமூலட்டானம் என்றும் பூங்கோயில் என்றும் வழங்குவர். வன்மீக நாதர்என்பதைப் புற்றிடங் கொண்டார் என அழகு தமிழில் உரைப்பர். இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் உற்சவமூர்த்தி தியாகராசர். இவருக்கென்று தனிச் சந்நிதி உள்ளது. அதனைத் தேவசபை என்பர். அல்லியங்கோதை, கமலாம்பிகை என்னும் இரு அம்பிகைகள் இக்கோயிலின் கண் எழுந்தருளியுள்ளனர்.

திருவிழாக் காலங்களில் தியாகராசப் பெருமானுடைய நடனம் சிறப்புடையதாகப் போற்றப்பட்டு, பக்தர்கள் பலராலும் கண்டுகளிக்கப் பெறுகின்றது. ஆடல்வல்லாரின் நடனத்தை "அசபா நடனம்" எனக் குறிப்பர். அழகும் பொலிவும், தூய்மையும், அருளும் நிறைந்த இடமாக இக்கோயில் விளங்குகின்றது. இக்கோயிலுக் கென்றுள்ள தடாகம் கமலாலயம் என்னும் பெயருடையது.







இதனடிப்படையில் இவ்வூருக்குக் 'கமலை' என்ற பெயரும் உள்ளது. இத் தடாகம் 18 ஏக்கர் பரப்புடையது. 'திருவாரூர்த்' தேரழகு என்பது இவ்வூர்த் தேரின் சிறப்பு நோக்கித் தோன்றிய பழமொழியாகும். வழிபாட்டு ஒலியும், வேத மந்திரங்களின் ஒலியும், பல்லியப் பாடல்களின் ஒலியும் இவ்வூரில் ஒலித்தவண்ணம் இருந்தமையை,

*வேத ஓசையும் வீணையின் ஓசையும்*
*சோதி வானவர் தோத்திர ஓசையும்*
*மாதர் ஆடல் மணி முழு வோசையும்*
*கீத ஓசையு மாய்க்கிளர் வுற்றவே.*

என்னும் சேக்கிழார் பெருமானின் திருத்தொண்டர் புராணப் பாடல் கட்டுகின்றது. அறியாமல் பசுவின் கன்றைக் கொன்ற தன் ஒரே மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்று பசுவுக்கு நீதி வழங்கிய மனுநீதிச் சோழன் இவ்வூரில் செங்கோலோச்சியதை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

இத்தகு சிறப்புகள் வாய்ந்த இவ்வூரில் தான் நமிநந்தியடிகள் நாயனார் பூசை செய்து வழிபட்டார்; மேலை ஞானப்பிரகாசர் இங்கே வழிபாடு செய்தார்; விறன்மிண்ட நாயனார் இத்தலத்தில் நெடுங்காலம் தங்கியிருந்தார். சுந்தரமூர்த்தி நாயனார் இவ்வூருக்கு வந்து பரவை நாச்சியாரை மணந்துகொண்டு வாழ்ந்தார்; இவ்வூரிலே தான் திருத்தொண்டத் தொகையைப் பாடினார். சுந்தரர், பரவையார் இருவரும் எழுந்தருளியுள்ள பரவை நாச்சியார் கோவில் இவ்வூரில் உள்ளது. சங்கீத மும்மூர்த்திகள் என அழைக்கப்பெறும் முத்துசாமி தீட்சிதர், தியாகராஜ சுவாமிகள், சியாமா சாஸ்திரிகள் ஆகிய மூவரும் இவ்வூரில் தோன்றியவர்கள்.

இத்தலத்தைப் பற்றிக் கூறும் இலக்கியங்கள் பல எழுந்துள்ளன. கமலாலய சிறப்பு, திருவாரூர்ப் புராணம், தேரூர்ந்த சோழபுராணம், தியாகராச லீலை, திருவாரூர் நான்மணிமாலை, தியாகராசர் பள்ளு, குறவஞ்சி, திருவாரூர்ப் பன்மணிமாலை, கமலாம்பிகை பிள்ளைத் தமிழ், திருவாரூர் ஒருதுறைக்கோவை, தியாகராசர் கழிநெடில், திருவாரூர் உலா, திருவாரூர்க்கோவை என்னும் நூல்கள் அவற்றுள் குறிப்பிடத்தக்கவையாகும். இத்தகைய சிறப்புகள் பல வாய்ந்த ஊரில் பிறப்பது முத்தி அளிக்கும் என்னும் மரவு ஏற்புடையதே.

### சிதம்பரம் :

கோயில் என்றாலே சிதம்பரத்தைக் குறிப்பதாக உரைப்பர். வேடன் பிள்ளையார் கோயில், செங்கழுநீர்ப் பிள்ளையார் கோயில், சேக்கிழார் கோயில், கமலீசுரன் கோயில், தேரடிப் பிள்ளையார் கோயில், மாரியம்மன் கோயில், காளியம்மன் கோயில், வீரபத்திரசாமி கோயில், செல்லியம்மன் கோயில், நந்தனார் கோயில், கூத்தாடும் பிள்ளையார் கோயில், இளமையாக்கினார் கோயில், அனந்தீசுவரர் கோயில், தில்லைக் காளியம்மன் கோயில், நரமுகப் பிள்ளையார் கோயில், மத்தியந்தனேசுவரர் கோயில் என்னும் கோயில்கள் இவ்வூரின் கண் அமைந்துள்ளன. இவ்வாறு கோயில்கள் நிறைந்த ஊர் என்பதால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். சிற்றம்பலம், புலியூர், தில்லை, சித்திர கூடம் என்பன இவ்வூருக்கு வழங்கப்பெறும் வேறு பெயர்கள். ஐம்பூதத் தலங்களுள் இஃது ஆகாயத்தலம். இங்குள்ள இலிங்கம் "ஆகாயலிங்கம்" எனக் குறிக்கப்பெறுகின்றது. தேவார மும்மூர்த்திகள் பாடல் பெற்ற தலங்களுள் இதுவும் ஒன்று. சேக்கிழார் பெருமான் தம்முடைய திருத்தொண்டர் புராணத்தை இத்திலையம்பலத்திலேதான் அரங்கேற்றம் செய்தார். பொன்னம்பலத்தே நடராசப் பெரமான் திருவடி தூக்கி ஆடுகின்ற நடனக்காட்சி கண்ணாரக் கண்டுகளிக்கத் தக்கது. அந்நடனத்தை "நாதாந்த நடனம்" எனக் குறிப்பர்.

சம்பந்தர், அப்பர், சுந்தரர், கல்லாடர், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கண்டராதித்தர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, பட்டினத்தார், அருணகிரியார், சேரமான் பெருமாள், உமாபதிசிவம் முதலிய பலர் சிதம்பரத்தைப் பாடியுள்ளார். இவ்வூரில் 63 நாயன்மார்களின் சிலைகளும் வழிபாட்டுக்குரிய வகையில் கோயிலின் உள்ளே அமைக்கப்பட்டுள்ளன.

இத்தகு சிறப்புகள் நிறைந்த இவ் ஊரில் மாணிக்கவாசகர். திருநீலகண்டர், திருநாளைப் போவார், கூற்றுவநாயனார், கோச்செங்கட்சோழ நாயனார், கணம் புல்ல நாயனார், மறைஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார் முதலிய பெருமக்கள் முத்தியடைந்தனர். இதன் காரணமாகவும் இத்தலத்தின் மாட்சிமை புலனாகும்.

சிதம்பரத்தின் பெருமைகளைப் பெரியபுராணம், கோயிற்புராணம், சிதம்பர புராணம், புலியூர்ப் புராணம், தில்லைக் கலம்பகம், சிதம்பரச் செய்யுட் கோவை, சிதம்பரநாதர் பதிகம், புலியூர் வெண் சோழமண்டல சதகம், கந்த புராணம் போன்ற நூல்கள் விதந்தோதியுள்ளன. கண்ணுதற் கடவுளின் தண்ணருள் வேண்டுவோர் இத்தலம் நாடி வந்து ஆடுகின்ற அவ் அண்ணலைத் தரிசித்துப் பிறவிப் பயன் பெறுகின்றனர்.

### திருவண்ணாமலை

ஐம்பூதத் தலங்களுள் அக்கினித் தலமாகக் கருதப்பெறுவது திருவண்ணாமலை என்னும் திருப்பதி. இங்குள்ள மலை, இறைவன் உருவமாக – சோதி வடிவாகப் புகழப் பெறுகின்றது. இம்மலையை வலம்வர வேண்டுமெனில் எட்டேகால் மைல் தூரம் நடக்கவேண்டும். அந்த அளவிற்குப் பெரிய மலையாக இஃது உள்ளது. இத்தலத்தை நினைத்தாலே முத்திகிட்டும் என்னும் நம்பிக்கை காலங் காலமாகத் தமிழ் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு வந்துள்ளது.

இயற்கையழகும், சீரான தட்ப வெப்ப நிலையும் இவ்வூரில் இயல்பாக அமைந்திருத்தல் காணலாம். இங்கே உள்ள கோயில் அண்ணாமலையார் கோயில் என வழங்கப் பெறுகின்றது. இங்குள்ள அம்மன் உண்ணாமுலையம்மை என்னும் பெயரினள். அபீத குசாம்பாள் எனவும் அம்மனைக் குறிப்பர். நான்கு பெரிய மதில் வாயில்களிலும் உயரிய கோபுரங்கள், கோயிலின் உள்ளே ஐந்து நடுத்தரக் கோபுரங்கள் பெற்று அமைதியான அழகுடன் இக்கோயில் திகழ்கின்றது. இவ்வூரில் பல குளங்கள், ஆயிரக்கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம் ஆகியன அமைந்து அழகுக்கு அழகு சேர்க்கின்றன.

தேவார மூர்த்திகளின் பாடல் பெற்ற தலமாகவும், திருப்புகழ் பாடல்பெற்ற தலமாகவும் விளங்குதல் இவ்வூரின் சிறப்புகளுள் குறிப்பிடத்தக்கது. இங்கு நடைபெறும் திருவிழாக்களில் கார்த்திகைத் தீபவிழா தலைசிறந்த விழாவாகும். இவ்விழா அடிமுடி தேடிய ஐதிகத்தைப் பின் பற்றியது. அரியும் அயனும் தம்மில் யார் உயர்ந்தவர்கள் எனப் போட்டி கொண்டனர். இறைவன் அவர்களுக்குத் தம் உண்மையான ஆற்றலை உணர்த்த திருவிளையாடல் ஒன்றை மேற்கொண்டார். அதன்படி தம்மைச் சோதிமலையாக நிறுத்திக் கொண்டார். அரியும் அயனும் முறையே வராக அவதாரமும் அன்னப்பறவை அவதாரமும் எடுத்து இறைவனின் அடிமுடியைத் தேடினர். இறைவனின் திருவிளையாடலை உணராத அவ்விருவரும் பெருமுயற்சி மேற்கொண்டு இறுதியில் அடிமுடி காணாது அயர்ந்தனர். அந்தக் கதையை நினைவூட்டுவது போன்று இம்மலையில் கார்த்திகைத் திருவிழா நடைபெற்று வருகின்றது.

### காசி

கங்கையைச் சார்ந்த திருப்பதிகளில் காசியே முதன்மை பெற்றது. பாரத நாட்டின் கணக்கற்ற திருப்பதிகளிலும் தலைசிறந்தது. இதற்கு அவிமுக்த க்ஷேத்திரம், ஆநந்தவனம், பெருமயானம் என்றும் பெயர். இங்கே வந்து வசித்தாலே நற்கதி அடையலாம். இங்கு உடலை நீத்தலே முத்திக்கு வழியாகும். சிவபிரான் இங்கே தெருத்தெருவாக அலைந்துகொண்டு மடியும் மக்கள் காதில் தாரக மந்திரத்தை உபதேசித்து கொண்டிருக்கிறார் என்பர்.

காசி இந்து சமயங்களின் வளர்ச்சிக்கு நிலைக்களனான இடமாகும். வியாச முனிவர், மகாவீரர், புத்தர், சங்கரர், துளசிநாதர் முதலிய சமய ஆசாரியர்கள் இப்புண்ணியத் தலத்தில் வாழ்ந்தனர். இங்கே நூற்றுக்கணக்காக கோயில்கள் உள்ளன. அவற்றுள் விசுவநாதர், அன்னபூரணி, விசாலாட்சி, துர்க்கை, பிந்துமாதவர், கேதாரேசுவரர் கோயில்கள் முக்கியமானவை.

# இமயத்தில் இருதலங்கள்

எஸ்.ஆர்எம்.பழனியப்பன், கோலாலம்பூர்

இந்தியாவில் தோன்றிய சமயங்களை இரு பிரிவாகப் பிரிவாகப் பிரித்துக் கூறுவது உண்டு. வேதத்தை ஏற்றுக்கொள்ளும் **வைதிக சமயங்கள்,** வேதத்தை மறுத்துத் தோன்றிய **அவைதிக சமயங்கள்** என்பவையே அவை.

'உலகே உள்பொருள், அதைத் தவிர வேறு ஏதுமில்லை' என்று கூறும் உலோகாயதம், சமணம், பௌத்தம் போன்றவை அவைதிக சமயங்கள்.

சைவம், வைணவம் போன்றவை வைதிக சமயங்கள். மிகப் பழமையான இவ்விரு சமயங்களும், தொன்றுதொட்டு வைதிக நெறியின் இரு கண்களாகத் திகழ்ந்து வந்திருக்கின்றன. இவை இரண்டும் என்றும் பின்னிப் பிணைந்து மக்களிடையே சமரசச் சமயங்களாத் திகழ வேண்டும் என்று முன்னோர் விழைந்தனர்; அதன் விளைவினை இன்று பல வடிவங்களில் காண்கிறோம்.

திருமால் சிவனை வழிபட்டதாகவும், சிவன் திருமாலின் பெருமையைப் பேசுவதாகவும் அமைந்துள்ள இரு தலங்கள், இந்தியாவின் தெற்கில் ஒன்றும், வடக்கில் ஒன்றுமாகக் காணப்பெறுகின்றன.

திருமாலின் பத்து அவதாரங்களில் ஒருவனான இராமன், சிவலிங்கம் அமைத்து வழிபட்ட தலம் **இராமேஸ்வரம்;** சிவராஜதானி என்று போற்றப்பெறும் **காசி**யில் மரணமடைவோரின் காதுகளில், சிவபெருமானே **இராம** நாமத்தை உபதேசிப்பதாக இராமகிருஷ்ணர் போன்ற பெரும் ஞானியர் கூறியுள்ளனர்.

மேலும், இரட்டைக் காப்பியங்கள், இரட்டைப் புலவர்கள் என்பது போன்று, தமிழகத்திலும், இந்தியாவின் பிற பகுதிகளிலும், இவ்விரு சமயங்களின் தலங்களும் **இரட்டைத் தலங்களாகவும்** திகழ்கின்றன.

தமிழகத்தில் கோயில் என்று சொன்னால், அது சைவ சமயத்தின் தில்லை (சிதம்பரம்) நடராஜர் கோயிலையும், வைணவ சமயத்தில் திருவ(ஸ்ரீ)ரங்கம் அரங்கநாதர் ஆலயத்தையுமே குறிக்கும்.

இவ்விரு தலங்களும் பல வழிகளில் ஒருமைப்பாடு உடையவையாக விளங்குகின்றன.

சைவத்தின் பிரதான நூல்களான திருமுறைகள் தில்லையிலிருந்து பரவின; வைணவத்தின், திராவிட வேதம் என்று சிறப்பிக்கப் பெரும் ஆழ்வார்களின் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தங்கள் திருவரங்கத்திலிருந்தே பரவின.

சம்பந்தர் – அப்பர் – சுந்தரர் ஆகிய மூவரால் பாடப்பெற்ற பதிகள், **பாடல் பெற்ற தலங்கள்** என்ற சிறப்பித்துக் கூறப் பெறுகின்றன. அதே போன்று பன்னிரு ஆழ்வார்களின் பாடல்களைப் பெற்ற வைணவத் தலங்களை **மங்களாசாஸனம்** செய்யப்பெற்ற திருப்பதிகள் என்று வழங்குகின்றனர்.

இவ்வகையில், மூவர் முதலிகளும் பாடிச் சிறப்பித்துள்ள பாடல் பெற்ற தலம் தில்லை ; ஆழ்வார் பன்னிருவரில் பதினொருவரின் பாடல்களைப் பெற்றுச் சிறப்படைந்த தலம் திருவரங்கம் (ஆழ்வார்களில் ஒருவரான மதுரகவியார், தம் குருவான நம்மாழ்வாரை மட்டுமே பாடியவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது).

தம் பிறந்த குலத்தின் காரணமாகத் தில்லையின் எல்லையை மிதிக்கத் தயங்கிய **திருநாளைப் போவார் நாயனார்** என்னும் நந்தனாரைத் தில்லை மூவாயிரவரை அனுப்பித் தம்மிடம் வரவழைத்துக் கொண்டவர், தில்லைக்கூத்தர். (மூவாயிரவர் கைகூப்ப முனியாயவன் என்று நந்தனின் பெருமையைப் பேசுகிறது திருத்தொண்டர் திருவந்தாதி, 20)

இதே காரணத்திற்காகக் காவிரியைக் கடந்து திருவரங்கத்தை மிதிக்கத் தயங்கிய **திருப்பாணாழ்வாரை,** லோகசாரங்க முனிவரின் தோளில் சுமந்து வரச்செய்து ஆட்கொண்டவர் திருவரங்கத்தம்மான். (வம்பவிழ்தார் முனிதோளில் வந்தபிரான் என்று திருப்பாணாழ்வார் பேசப்பெறுகிறார்)

தில்லையில் **திருக்களிற்றுப்படி (பஞ்சாட்சரப்படி)** இருப்பது போன்று, திருவரங்கத்தில் அஷ்டாக்ஷரப் படிக்கட்டு (எட்டு வரிசைப் படிகள்) உள்ளது. அதன் திருவாசலும், தில்லையைப் போன்று அணுக்கன் திருவாயில் என்றே அழைக்கப் பெறுகிறது.

இவ்வாறு பல துறைகளில் இவ்விரு தலங்களும் தமிழகத்தின் இரட்டைத் தலங்களாக விளங்குகின்றன.

இவ்வாறே தெலுங்கு தேசத்தில் **திருப்பருப்பதம்** (ஸ்ரீசைலம்) என்னும் சிவத்தலமும், **திருவேங்கடம்** என்னும் திருப்பதியும் இரட்டைத் தலங்களாக விளங்குகின்றன

●●●●●

ஸ்ரீசைலத்திற்குச் சம்பந்தர்–அப்பர்–சுந்தரர் ஆகிய மூவருமே பதிகங்கள் பாடியுள்ளனர். திருமலை என்னும் திருப்பதியை ஆழ்வார் பதின்மர் மங்களாசாஸனம் செய்துள்ளனர்.

இவ்விரு தலங்களும் சைவ–வைணவ சமயங்களின் இரு பெருந்தலங்களாகத் திகழ்கின்றன.

●●●●●

இதுபோன்றே வட இந்தியாவின் இமயமலைப் பகுதியில், **திருக்கேதாரமும், பத்ரிநாத்** என்னும் வதரியாச்சிரமும் (பத்ரிகாஸ்ரமம்), இமயத்தின் இரட்டைத் தலங்கள் என்னும் சிறப்பைப் பெறுகின்றன.

திருக்கேதாரத்திற்குச் சம்பந்தரும், சுந்தரரும் பதிகங்கள் பாடியுள்ளது போன்று, பத்ரிநாத்திற்குப் பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பாசுரங்கள் பாடியுள்ளனர்.

ஒன்று (கேதாரம்) மந்தாகினி ஆற்றங்கரையிலும், மற்றொன்று (பத்ரி) அலகநந்தா ஆற்றங்கரையிலும் அமைந்துள்ளன. மேலும் புராண அடிப்படையிலும், இவை ஒன்றுக்கொன்று தொடர்புடையவையாகவும் காணப்பெறுகின்றன.

இமயத்திலுள்ள **கங்கோத்ரி** (கங்கை உற்பத்தியாகும் இடம்), **யமுனோத்ரி** (யமுனை உற்பத்தியாகும் இடம்) **கேதார்நாத், பத்ரிநாத்** ஆகிய நான்கு இடங்களுக்கும் ஒரே முறையில் பயணம் செய்து வருவதை **உத்தரகண்ட யாத்திரை** என்பர். கொடுத்து வைத்தவர்களுக்கே கிட்டக்கூடிய இந்தப் புனிதப் பயணம், மிகுந்த புண்ணியத்தை நல்கும் என்னும் நம்பிக்கை தொன்றுதொட்டு நிலவுகிறது.

●●●●●

கேதார் – பத்ரி ஆகிய இரு தலங்களுமே ஹர(ரி)த்வாரிலிருந்துதான் புறப்பட வேண்டும். ஹர(ரி)த்வார் என்னும் இவ்வூரின் பெயரே இதனைப் புலப்படுத்துவதாக அமைகிறது.

ஹரன் – சிவன்; ஹரி – திருமால்; த்வாரம் – துவாரம் – நுழைவாயில்.

சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கேதாரத்துக்கு, அல்லது திருமால் அருள்பாலிக்கும் பத்ரிநாத்துக்கு நுழைவாயில் என்று இவ்வூரின் பெயருக்குப் பொருள் கொள்ளலாம்.

இவ்விரு தலங்களுக்கும் தோரணவாயிலாகத் திகழும் ஹர(ரி)த்வார், கங்கையாற்றை இந்தியாவுக்கு அறிமுகப்படுத்தும் அறிமுக வாயிலாகவும் அமைகிறது. இமயத்தில் பிறக்கும் கங்கை, முதன்முதலில் இங்குதான் சமவெளியில் பாயத் தொடங்குகிறது. சிவபெருமான் முடியிலிருந்து இறங்கிய கங்கை, அவனுடைய திருப்பாதத்தைத் தொட்ட பகுதி இதுதான் என்று புராணக் கதைகள் கூறுகின்றன.

மலையிலிருந்து சமவெளிக்கு வரும் கங்கை அன்னையை வரவேற்பது போன்று, ஒவ்வொரு நாள் மாலையிலும் இங்கு நிகழும் கங்கா பூஜை, ஒவ்வொருவரும் வாழ்நாளில் ஒருமறையேனும் காணவேண்டிய காட்சியாகும்! (நாசிக்

பஞ்சவடியிலும், அண்மைக் காலத்தில் காசியிலும் இத்தகைய கங்கை பூஜை ஒவ்வொருநாள் மாலையிலும் நடந்துவருகிறது)

கங்கா பூஜையைக் கண்டுவிட்டு, இமயத்தின் இரட்டைத் தலங்களுக்கான பயணத்தைத் தொடங்குகிறோம். ஹரத்வாரிலிருந்து 24 கிமீ தொலைவிலுள்ள **ரிஷிகேஷ்** வரைதான் புகைவண்டித் தொடர்பு உண்டு. பின்னர் பஸ் அல்லது காரில்தான் கேதாருக்கோ, பத்ரிக்கோ செல்லவேண்டும்.

செல்லும் வழியில் ரிஷிகேஷிலிருந்து 70 கிமீ தொலைவிலுள்ள தேவப்ரயாக் என்னும் இடம், பெரியாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திருக்கண்டங்கடி நகர் என்னும் பதியாகும். இங்குதான் பாகீரதி ஆறும், அலகநந்தாவும் ஒன்றுகூடிக் கங்கை என்று பெயர் பெறுகின்றன.

பாகீரதி சிவபெருமானின் முடியிலிருந்து பூமிக்கு இறங்கியதாக ஐதிகம். பத்ரியில் திருமாலின் திருப்பாதத்திலிருந்து அலகநந்தா உருவாகி ஓடி வருவதாகக் கூறுகின்றனர். அவை இரண்டும் இந்தத் திருப்பதியல் சங்கமம் ஆவதைப் பெரியாழ்வார் மிக அழகாக வருணிக்கிறார்.

நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும்,
நாரணன் பாதத் துழாயும்
கலந்துஇழி புனலால் புகர்படு கங்கைக்
கண்டம் என்னும் கடிநகரே – முதலாயிரம் 4:7:2

(நன்மை விளங்கும் சடைமுடியை உடைய சிவபெருமானின் தலையில் அணியப் பெற்றுள்ள கொன்றையும், நாராயணன் திருவடியில் பக்தர்கள் தூவிய திருத்துழா(துளசி)யும் கலந்து பெருகி வருகின்ற ஒளியைப் பெற்ற கங்கைக் கரை மீதுள்ள கண்டம் என்னும் சிறப்பு நகர்)

இந்தப் புண்ணிய ஆற்றில் நீராடினால்,
எழுமையும் வடி ஈண்டிய பாவம்
இரைப்பொழுது அளவினில்... – மேற்படி : 5

(ஏழு பிறவிகளில் திரண்ட பாவங்கள் அனைத்தும் ஒரு கணப்பொழுதில்) அகன்றுவிடும் என்று விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார் உறுதி அளிக்கிறார்.

இங்குள்ள சாளக்கிராமத்தினால் உருவான
பொங்கொலி கங்கைக் கரைமலி கண்டத்து
உறை புருடோத்தமனை.... – மேற்படி : 11

(பொங்கி எழும் ஓசையினைக் கொண்ட கங்கை ஆற்றின் கரையில் உள்ள கண்டம் என்னும் திருப்பதியில் உறைகின்ற ஆண்தகையை (புருஷ உத்தமனை) வழிபட்டுக்கொண்டு கேதாரப் பயணத்தைத் தொடருகிறோம்.

●●●●●

திருமாலின் 108 திருப்பதிகளில் ஒன்றான தேவப்ரயாகையிலிருந்து 69கிமீ தொலைவில் உள்ள **ருத்ரப்ரயாகைக்கு** அடுத்து வருகிறோம். இங்குதான் கேதாரத்திற்கும் பத்ரிக்குமான பாதைகள் பிரிகின்றன. இங்கிருந்து 84 கிமீ தொலைவில் திருக்கேதாரம் அமைந்துள்ளது.

முதலில் ருத்ரப்ரயாகையிலிருந்து 39 கிமீ. தொலைவிலுள்ள **குப்தகாசி** என்னும் ஊருக்குச் செல்கிறோம். குப்தகாசியிலிருந்து கேதாரத்துக்கு ஒருவழிப் பயணந்தான்.

சிவபரம்பொருள் தம் பரம இரகசிய உருவத்தைத் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வெளிப்படுத்தி அருளிய தலமாதலால், குப்தகாசி (குப்தம் – இரகசியம்) என்று வழங்கப் பெறுவதாகச் சொல்கின்றனர்.

இங்குள்ள கோயிலில் கேதாரநாதர் அமைப்பில் விச்வநாதர் அருள்பாலிக்கிறார். இந்த ஊரைச் சுற்றியுள்ள சிற்றூர்களில்தான் திருக்கேதாரத்தில் சிவப்பணி புரியும் பண்டாக்கள் (அருச்சகர்கள்) வசிக்கிறார்களாம்.

இதனருகே உக்கிமட் என்னும் சிற்றூர் உள்ளது. பனிக்காலத்தின்போது ஆறு மாதங்களுக்குத் திருக்கேதாரம் திருக்காப்பிடப் பெற்றிருக்கும்போது, கேதாரநாதருக்கு அந்தச் சிற்றூரில்தான் வழிபாடு நடைபெறுகிறது.

முனிவர்களும் தேவர்களும் வழிபட்ட விச்வநாதரை வணங்கி வழிபட்டுக்கொண்டு, ஏறத்தாழ 31கிமீ. தொலைவிலுள்ள **கௌரிகுண்டத்தை** நோக்கிப் பயணமாகிறோம்.

●●●●●

கௌரிகுண்டம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளின் பாடல் பெற்ற தலம். தேவாரப் பாடல்களில் இத்தலம் **திருஅனேகதங்காவதம்** என்று அழைக்கப்பெறுகிறது.

இறைவி, கௌரி என்னும் பெயருடன் சிவபெருமானைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டுத் தவம் செய்த பதி என்று இதனைக் கூறுகின்றனர்.

பனிக்கட்டி போன்று குளிர்ந்து போயிருக்கும் மந்தாகினி ஆற்றங்கரையில், கோமுகியின் வழியாகச் சுடுநீர் எந்நேரமும் கொட்டிக் கொண்டிருக்கிறது.

சற்றுத் தொலைவில் மஞ்சள் நீரைக்கொண்ட கௌரிகுண்டம் என்னும் குளம் இருக்கிறது. அங்கதான் பார்வதி மஞ்சள் தேய்த்துக் குளித்தாராம். எதிரே பார்வதி கோயில்; அம்மையின் பெயர் கௌரி. அருகில் சுயம்பு மூர்த்தியான சிவலிங்கம் ஒன்று உள்ளது. அதன் சிரசில் பாம்பு ஒன்று காணப்பெறுகிறது.

ஆரம் பாம்பது அணிவான்தன்

அனேகதங்காவதம் - 2 : 141 : 8

(பாம்பினை மாலையாக அணியும் சிவபெருமான் உறையும் அனேகதங்காவதம்) என்னும் சம்பந்தரின் வாக்கை, இது மெய்ப்பிப்பது போல் உள்ளது.

கேதாரேஸ்வரன் பெருமையைப் பாடிக் கொண்டு இங்கிருந்து 14 கிமீ தொலைவிலுள்ள திருக்கேதாரத்துக்கு நடைப் பயணம் தொடங்குகிறோம். (நாங்கள் யாத்திரை மேற்கொண்ட 1985ஆம் ஆண்டில், கௌரி குண்டிலிருந்து நடந்தோ, மட்டக்குதிரையிலோ, தண்டியிலோதான் கேதாரத்துக்குச் செல்ல வேண்டும். இடையில் எத்தனையோ ஆண்டுகள் கடந்துவிட்டன ; இப்போது சாலைகள் அமைக்கப் பெற்றிருக்கலாம்.)

இந்தியாவிலுள்ள **பன்னிரு ஜோதிர்லிங்கத்** தலங்களில் ஒன்று திருக்கேதாரம். (பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்களையும் ஒரே பயணத்தில் தரிசித்து வழிபடுவது மிகச் சிறப்பானது; பலருக்குக் அந்தப் பாக்கியம் கிடைப்பதில்லை. 1991ஆம் ஆண்டில் அத்தகைய பெரும்பேறு எங்களுக்குக் கிட்டியது.)

பரமேசுவரன் ஆதிசங்கரருக்கு யோகலிங்கம், போகலிங்கம், வரலிங்கம், முக்திலிங்கம், மோட்சலிங்கம் என்னும் பெயர்களைக் கொண்ட ஐந்து ஸ்படிக லிங்கங்களைக் கொடுத்தார். அவற்றில் யோகலிங்கத்தைக் காஞ்சி மடத்திலும், போகலிங்கத்தைச் சிருங்கேரி மடத்திலும், வரலிங்கத்தை நேபாளத்தில் நீலகண்ட க்ஷேத்திரத்திலும், **முக்திலிங்கத்தைக் கேதாரத்திலும்,** மோட்சலிங்கத்தைச் சிதம்பரத்திலும் அவர் பிரதிஷ்டை செய்தார் என்று காஞ்சி மகா சுவாமிகள் கூறுகிறார்.

பஞ்ச பாண்டவருக்குப் பரம்பொருள் காட்சியளித்த தலம் திருக்கேதாரம்.

'சிவபெருமான் பூவுலகில் உறையும் இடங்களில் கேதாரத்திற்கு இணையான வேறோர் இடம் இல்லை' என்று வேதம் வகுத்த வியாசர் கூறுகிறார்.

கிடைத்தற்கரிய அந்தத் திருக்கேதார தரிசனம் நமக்கும் கிட்டுகிறது.

வெள்ளிப் பனிமலைகளின் பின்னணியில் கேதாரநாதரின் விமானம் தெளிவாகத் தெரிகிறது. தங்கும்விடுதிகள் - தேநீர்க் கடைகள் - வழிபாட்டு, நினைவுப் பொருட்கள் விற்கும் கடைகள் நிறைந்த சிற்றூரின் வழியே கோயிலுக்குச் செல்கிறோம்.

சிலபடிகள் ஏறிக் கோயிலின் முன் உள்ள திறந்த முற்றத்திற்குச் செல்கிறோம். தெற்கு நோக்கிய சந்நிதி தென்படுகிறது. சந்நிதிக்கு எதிரே முற்றத்தில் பெரிய இட(ரிஷ)பவாகனர்.

நுழைவாயிலின் அருகில் விக்கினம் தீர்க்கும் விநாயகர், கையில் உருத்திராக்க மாலையுடன் காட்சி தருகிறார்.

நுழைவாயிலின் இருபுறமும் துவாரபாலகர் சிலைகள்.

வடநாட்டுப் பாணியில் கூம்பு போன்று அமைந்த விமானம், கருங்கல்லால் ஆனது தமிழ்நாட்டுக் கோயில்களைப் போன்ற கோபுர -







விமான வேலைப்பாடுகளை வடநாட்டுக் கோயில்களில் காண்பதற்கில்லை ; கோயில்களும் சிறியனவே.

அந்த அடிப்படையில் இந்தக் கோயிலும் ஒரே பிரகாரத்தைக் கொண்ட சிறிய கோயில்தான்.

கோயிலை வலமாக வருகிறோம்.

மேற்குப் பிரகாரத்தில் ஆதிசங்கரர் சமாதியும், வடக்குப் பிரகாரத்தில் ஆதிசங்கரரின் நினைவாகப் பளிங்கினாலான ஒரு தண்டும் இருப்பதைக் காண்கிறோம்.

கேரளத்தின் காலடியில் பிறந்த சங்கரர். காஞ்சியில் மறைந்ததாகச் சில நூல்களும், கேதாரத்திலும் (மாதவியம் என்னும் நூல் சங்கரர் சித்தியடைந்த தலம் கேதாரம் என்று கூறுகிறது) கேரளத்திலும் சித்தி அடைந்ததாக வேறு சில நூல்களும் கூறிக்கொள்கின்றன. அந்த ஆராய்ச்சியில் இறங்காமல், சமாதியைத் தரிசித்துவிட்டுக் கிழக்குப் பிரகாரத்திற்கு வருகிறோம். அப்பிரகாரத்தில் உள்ள நுழைவுவாயில் வழியாகக் கோயிலின் உள்ளே செல்கிறோம்.

முதலில் நாம் காண்பது சபா மண்டபம் என்றும், நவக்கிரக மண்டம் என்று சொல்லப்பெறும் கருங்கல் மண்டபம்.

அறம் – பொருள் – இன்பம் – வீடு என்னும் நான்கு பேறுகளையும் காட்டுவது போன்று நான்கு தூண்கள்; நடுவே பித்தளையினாலான சிறு இடபவாகனர், கருவறையை நோக்கி வீற்றிருக்கிறார். அருகில், கீழே வீரபத்திரர்.

மேலும் உள்ளே செல்கிறோம். அர்த்த மண்டபம். அங்கு சித்தி–புத்தி கணபதியும், பார்வதியும் தரிசனம் தருகின்றனர்.

அடுத்துக் கருவறை.

....அஞ்சு களிறும் அடக்கிச், சுரும்பார் மலர்
இண்டைகட்டி .... – 2 : 250 : 1

(ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தி, வண்டுகள் பொருந்தி மேவும் மலர்களால் இண்டை மாலைகளைத் தொடுத்து)த் தொண்டர் வழிபாடு செய்யும் கேதாரநாதரைக் கண்குளிரக் காண்கிறோம். காணக் கண்அடியேன் பெற்றவாறே என்று எண்ணிக் களிப்படைகிறோம்.

பத்ரிநாத்தில் நர – நாராயண முனிவர்களால் வழிபடப்பெற்று வந்த சிவபெருமான், அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி இத்தலத்தில் தங்கியிருந்து அருள் பாலிப்பதாகச் சொல்வதுண்டு. கேதாரத்தில் ஜோதி வடிவில் என்றென்றம் எழுந்தருளி அருள்புரிய வேண்டும் என்னம் அவர்களின் கோரிக்கையை ஏற்று ஜோதிர் லிங்கமாகத் திகழ்கிறாராம்.

குருக்ஷேத்திரப் போரில் தங்கள் உற்றார் – உறவினரைக்கொன்ற பாவத்திற்கக் கழுவாய் தேடும் பொருட்டுப் பாண்டவர் ஐவரும், வாரணாசி, குப்தகாசி போன்ற தலங்களில் சிவபரம்பொருளைத் தேடி ஏமாற்றமடைந்து, இறுதியில் கேதாரம் வந்தடைகின்றனர். அங்கு எருது வடிவில் இறைவன் அவர்களுக்குக் காட்சி தந்தார் என்றும், பின்னர் அதே உருவில் அவர் நிலத்துக்குள் புகுந்தபோது, பீமன் எருதின் வாலைப் பிடித்து இழுக்க, அப்(காளையின்) பின்புறமே இப்போது காட்சி தரும் கேதாரநாதர் என்றும் கூறுகின்றனர். மூலவரைக் கூர்ந்து நோக்கினால், அவ்வடிவம் ஓரளவு புலப்படுகிறது.

வடநாட்டில் உள்ள எல்லாச் சிவாலயங்களிலும் மூலவருக்கு நாமே அபிஷேக – ஆராதனைகள் செய்யலாம்; கட்டித் தழுவலாம். ஆனால் திருமால் கோயில்களில், பண்டரீபுரம் பாண்டுரங்கன் கோயிலைத் தவிர்த்த இதர இடங்களில் அவ்வாறு அனுமதிப்பதில்லை. பண்டரீபுரத்தில் மட்டும் பாண்டுரங்கனின் பாதங்களைத் தொட்டுத் தலையாரக் கும்பிடலாம்; ஆனால், அதுவும் அருச்சகருக்குக் ‘கனிசமான’ காணிக்கை கொடுத்த பின்னர்தான்!

கேதாரநாதர் கோயிலுக்கு விடியற்காலையில் சென்றால், அபிஷேகக் காணிக்கை செலுத்தி நாமே ஆண்டவனுக்கு அபிஷேக – ஆராதனைகள் செய்யலாம். மற்ற நேரங்களில் அவரைத் தொட்டு வழிபடுவதோடு திருப்தி அடைய வேண்டியதுதான். இரவில் சிருங்கார தரிசனம் காணலாம்.

திருக்கேதாரத்துக்கு ஞானசம்பந்தரும், சுந்தரரும் ஆளுக்கொரு பதிகம் பாடியுள்ளனர். திருஞானசம்பந்தர் திருக்காளத்தியில் இருந்தவாறே திருக்கேதாரத்துக்குப் பதிகம் பாடியதாகச் சேக்கிழார்

சுவாமிகள் (ஞானசம்பந்தர் புராணம், 1026) கூறுகிறார். தம் பதிகத்தை இசையோடு பாடிக் கேதாரநாதரை வழிபடுவோர் வேந்தராகி உலகாண்டு வீடுகதி பெறுவரே என்று ஞானசம்பந்தரும், பரலோகத்து இருப்பாரே என்று சுந்தரரும் பதிகப் பலன்கள் கூறியுள்ளர்.

இக்கோயிலைப் பாண்டவர்களே முதலில் அமைத்ததாகச் சொல்கின்றனர். பின்னர் ஆதிசங்கரர் இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்த நேரத்தில் இங்கும் வந்து இக்கோயிலைப் புனர்நிர்மாணம் செய்தாராம்.

இமயமலைப் பகுதியில் இக்கோயில் இருப்பதால், ஆண்டு முழுவதும் இது திறந்திருப்பதில்லை. தீபாவளியை அடுத்துப் பனிக்காலமான ஆறு மாதங்களுக்குக் கோயில் பூட்டப்பெற்றே இருக்கும். ஏப்ரல் 15 முதல் செப்டம்பர் இறுதி வரை கேதாரேஸ்வரரைத் தரிசிக்கலாம் என்று கோயில் நிர்வாகம் கூறுகிறது.

கோயில் மூடப்பெற்றிருக்கும் காலத்தில் தேவர்கள் கேதாரநாதரை வழிபடுவதாக ஐதிகம்.

உள்ளம்மிக்கார், குதிரைம் முகத்தார், ஒருகாலர்கள்
எள்கல்இல்லா இமையோர்கள் சேரும்இடம்...2

2-2 : 250 : 4

(ஒன்றிய சிந்தையராய் உள்ளவர்களும், குதிரை முகம் கொண்டு விளங்கம் கின்னரர்களும், ஒற்றைக் காலில் நின்று தவம் செய்பவர்களும், பழியற்ற சிறப்புடை தேவர்களும் இறைவனைப் போற்றி வழிடுவதற்குச் சேரும் இடம்) என்று சம்பந்தப் பெருமான் அதைத்தான் குறிப்பிடுகிறார் போலும் !

இந்தியாவில் உள்ள 1008 சிவாலயங்களில் தலைசிறந்தது என்று புராணங்களில் வருணிக்கப்பெறும் திருக்கேதாரத்தைக் கண்டு வழிபடும் அரிய வாய்ப்புக் கிடைத்ததை எண்ணி மகிழ்ந்து, 11753 அடி (3583 மீட்டர்) உயரத்திலுள்ள கேதாரநாத்திலிருந்து, ருத்ரப்ரயாகைக்குத் திரும்புகிறோம், பத்ரிநாத் பயணத்தைத் தொடங்குவதற்காக.

கேதாரநாத்திலிருந்து மீண்டு ருத்ரப்ரயாகை சென்றுதான் பத்ரிப் பயணத்தை மேற்கொள்ள வேண்டும்.

பத்ரிநாத் செல்லும் வழியில் முதலில் ருத்ரப்ரயாகையிலிருந்து 111கிமீ தொலைவிலுள்ள **ஜோஷிமடம்** என்னும் ஊருக்கு வருகிறோம்.

பத்ரிநாத்தை நிர்மாணித்த ஆதிசங்கரர், முதன்முதலில் ஜோஷிமடத்தில்தான் சங்கரமடம் அமைத்தாராம்.

தமக்கு ஞானவொளி ஏற்பட்ட இத்தலத்தில் சங்கரர் ஜோதிமடம் ஒன்றை நிறுவியதாகவும், அதுவே பின்னர் ஜோஷிமடம் (ஜோஷிமட்) என்றாயிற்று என்றும் ஊருக்குப் பெயர்க் காரணம் கூறுகின்றனர்.

**திருப்பிரிதி** என்னும் பெயரில் இத்தலத்தை மங்களாசாஸனம் செய்திருக்கிறார் திருமங்கையாழ்வார்.

மறங்கொள் ஆளரி உருவென வெருவர,
ஒருவனது அகல் மார்வம்
திறந்து, வானவர் மணிமுடி பணிதர
இருந்த நல்இமயத்துள்

பிரிதி சென்றடை நெஞ்சே–பெரிய திருமொழி 1 : 2 : 4

(இரணியனின் மார்பைப் பிளந்தவனும், தேவர்களால் வணங்கப் பெறுகின்றவனுமாகிய ஒப்பற்ற நரசிங்கப் பெருமான் இமயத்தில் எழுந்தருளியுள்ள திருப்பிரிதியை, ஏ மனமே! நீ சென்றடைவாயாக) என்று திருமங்கையாழ்வார், இத்தலத்தில் குடிகொண்டுள்ள நரசிம்மரைப் பாடுகிறார்.

அந்த நரசிம்மர் கோயிலுக்கு நாமும் செல்கிறோம்.

வீடு போன்ற தோற்றத்தை உடைய இக்கோயிலில் குடிகொண்டுள்ள சாளக்கிராமத் தினாலான மூலவர் நரசிம்மர், ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப் பெற்றவராம்.

கருவறையில் பத்ரிநாராயணர் சிலையும் உள்ளது. குளிர்காலத்தில் (கேதாரத்தைப் போன்று) பத்ரி ஆலயம் மூடப் பெற்றிருக்கும்போது, பத்ரிநாரயணரின் உற்சவமூர்த்திக்கு இங்குதான் வழிபாடு நடைபெறுகிறதாம்.



கருவறையைக் கம்பிக் கதவினால் பூட்டியிருக்கிறார்கள். அருச்சகர் உள்ளே இருந்து நாம் கொடுக்கும் ஆராதனைப் பொருட்களைக் கம்பிக் கதவின்வழி வாங்கி இறைவழிபாட்டைச் செய்கிறார்.

இங்கிருந்து 48கிமீ தொலைவு பஸ்ஸில் பயணம் செய்து, வதரியாச்சிரமம் என்று ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப் பெற்றதும், பத்ரிகாஸ்மரம், பத்ரிவிஷால் என்றெல்லாம் அழைக்கப்பெறுவதுமான பத்ரிநாத்தைச் சென்றடைகிறோம்.

பல பிறவிகளில் தவமிருந்து புண்ணியம் செய்தோருக்கே பத்ரிநாத் தரிசனம் கிடைக்கும் என்று வசிஷ்ட முனிவர் கூறியிருப்பதாகச் சொல்வர். பத்ரியைப் பார்க்கக் கொடுத்து வைத்த நாமும், பல பிறவிகளில் புண்ணியம் செய்தவர்களாகத்தான் இருக்க வேண்டும்!

பூலோக வைகுந்தம் என்றும், தபோபூமி என்றும் வருணிக்கப்பெறும் இத்திருப்பதிக்குப் பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பாகரங்கள் பாடியுள்ளனர்.

தொழுதெழு தொண்டர்கள் தமக்குப்
பிணிஒழித்து, அமரர் பெருவிசும்பு அருளும்
பேரருளாளன்...

வதரியாச்சிரமத் துள்ளானே. – பெரிய திருமொழி
1 : 4 : 4

(தன்னை வழிபடும் தொண்டர்களின் நோயினைப் போக்கிப் பரமபதத்தை அருளும் பேரருளாளனான) எம்பெருமானை,

முற்றமுத்துக், கோல்துணையா, முன்னடி
நோக்கிவளைந்து

இற்றகால்போல் தள்ளி, மெள்ள இருந்தங்கு
இளையாமுன்... மேற்படி 1 : 31 : 1

(வயது முதிர்ந்து கூன் முதுகிட்டு, முன்னே செல்லும் அடியைத் தலை குனிந்து பார்த்து ஊன்றுகோலையே துணையாகக் கொண்டு, முறிந்த கால் போல் தடுமாறி ஆங்காங்கு உட்கார்ந்து சிரமப்படுவதற்கு முன்னரே) வணங்குங்கள் என்று திருமங்கையாழ்வார் அறிவுரை பகர்கின்றார்.

கடைசிக் காலத்தில் காசி (வாரணாசி)க்குச் சென்றால் போதும் என்று இருப்போர் ஏராளம். அவர்களைப் போன்று காத்திருப்போர், வயது முதிர்ந்த நிலையில் கேதாரம் – பத்ரி யாத்திரையை மேற்கொள்வது கடினம். அதனால் தான் வாலிபத்திலேயே வதரியை வணங்குங்கள் என்கிறார் நாலுகவிப் பெருமாள்.

10250 அடி (3110 மீட்டர்) உயரத்திலுள்ள இத்தலத்தைச் சிறியதொரு நகரம் என்றே சொல்லலாம். தங்குவதற்கான விடுதிகளும், தர்மசாலைகளும், உணவகங்களும், கடைகளும் ஏராளம். பஸ்களும், கார்களும் நிறைந்து எந்நேரமும் ஜேஜே என்று இருக்கிறது.

ஆதியில் திருமால் நான்கு வேதங்களையும் உருவாக்கி, அவற்றை உலகுக்கு வழங்கும் பொருட்டு நர – நாராயணர்களாகத் திருவவதாரம் செய்து, தவக்கோலம் பூண்டார். அப்போது திருமகள் பத்ரி (இலந்தை) மரமாக உருவெடுத்து நாராயணனுக்கு நிழல் தந்து, அவருடைய தவத்துக்குத் துணை புரிந்தாள். அதனாலேயே இத்தலம் பத்ரிகாஸ்ரமம் என்று பெயர் பெறலாயிற்று.

ஓம் நமோ நாராயணாய என்னும் தாரக மந்திரத்தை அவர் மனிதனுக்கு முதலில் உபதேசித்த தலமும் இதுவேயாகும்.

●●●●●

அலகநந்தா ஆற்றின் மீதுள்ள பாலத்தைக் கடந்து மேலே செல்கிறோம்.

கௌரி குண்டத்தைப் போன்று இங்கும் ஆற்றின் அருகிலேயே தப்தகுண்டம் என்னும் சுடுநீர்க் குளம் இருக்கிறது. (ஆதிசங்கரரின் பரிவாரத்தினர் நீராடுவதற்காக இறைவனே அமைத்துக்கொடுத்தது இக்குளம் என்று காஞ்சிப் பெரியவர் கூறுகிறார்). அதில் நீராடிவிட்டுப் படிகள் பல ஏறி பத்ரி நாராயணன் கோயிலை அடைகிறோம்.

வெளியில் வட இந்திய பாணியிலேயே கோயில் காணப்பெற்றாலும், உள்ளே முழுக்க முழுக்கத் தென்னிந்திய முறையிலேயே சிற்ப வேலைப்பாடுகள் யாவும் அமைந்துள்ளன.

முதலில் பெரிய திருவடியான கருடாழ்வாரைத் தரிசித்துவிட்டுச், சிறு மாடங்களில் உள்ள விநாயகர், அனுமான் ஆகியோரை வழிபடுகிறோம்.

தென் பிராகாரத்திலுள்ள சிறியதொரு சந்நிதியில் சாளக்கிராமத்தினாலான மஹாலக்ஷ்மியை வழிபட்டுக்கொண்டு மேலே செல்கிறோம். ஆதிசங்கரர் நினைவாக எழுப்பப்பெற்றுள்ள ஒரு கூடம் அடுத்துக் காணப்பெறுகிறது.

மூலவர் சந்நிதி கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இதற்கு இரு வாயில்கள் உள்ளன. கிழக்கு வாயில் வழியாகச் சென்றால், சபா மண்டபத்தினுள் சென்று தர்ம தரிசனம் செய்யலாம். அபிஷேக ஆராதனைகள் செய்யப் பணம் கட்டுவோர் தெற்கு வாயில் வழியாக அர்த்த மண்டபத்தினுள் செல்கின்றனர்.

பத்ரி நாராயணன் தரிசனம் நமக்குப் பரமானந்தத்தைத் தருகிறது.

விடியற்காலையில் நடைபெறும் அபிஷே –கத்தின் போதும், இரவு நடைபெறும் கடைசி வழிபாட்டின்போதும் மட்டுமே பரம்பொருளின் முழு உருவத்தைக் காண இயலும். ஏனைய நேரங்களில் பரந்தாமனின் முகம் மட்டும்தான் தெரிகிறது. நவரத்னக் கற்களாலான நகைகளும், மலர் மாலைகளும் நாராயணனின் உருவத்தை மறைத்துவிடுகின்றன.

முழு உருவத்தைப் பார்க்கும் பாக்கியம் கிட்டும்போது, பகவான் தவக்கோலத்தில் பத்மாசன நிலையில் இருப்பது தெரியும். திருமாலை இங்கு மட்டுமே இக்கோலத்தில் காண்கிறோம்.

இது குறித்துப் பல கருத்துக்கள் நிலவுகின்றன. அவற்றுள் ஒன்று, இங்கு இருப்பது புத்தர் சிலையே என்பதாகும்.

பௌத்தர்கள் இக்கோயிலைக் கைப்பற்றி இதனைப் பௌத்த விஹாரமாக்கியபோது, முதலில் இருந்த நாராயணனின் சிலையை அகற்றிவிட்டுப் புத்தர் சிலையை வைத்தனராம். பின்னர் இந்துக்கள் இக்கோயிலைப் பௌத்தர்களிடமிருந்து மீட்டபோது, புத்தர் சிலையை நாரதகுண்டம் என்னும் சுடுநீர்க் குளத்தில் எறிந்து விட்டனராம். ஆதிசங்கரர் இதனைப் புதுப்புதுப்பித்த நேரத்தில், நாரதகுண்டத்தில் காணப்பெற்ற சிலையே நாராயணன் சிலை என்று கூறி, அதனைப் பிரதிஷ்டை செய்ததாகக் கோயில் நிர்வாகத்துடன் தொடர்புடையோர் கூறுகின்றனர்.

வழக்கமாக நாம் காணும் புத்தர் சிலைக்கும், இந்த நாராயணனின் சிலைக்குமுள்ள ஒற்றுமையும், திருமாலின் பத்து அவதாரங்களில் புத்தர் அவதாரமும் ஒன்று என்னும் ஒரு சாராரின் கூற்றும் இந்த நம்பிக்கையை உறுதிப்படுத்துகின்றன.

(ஆதிசங்கரர் பத்ரிநாத்தில் மடம் நிறுவியபோது, வதரி நாராயண மூர்த்தியே அப்போது அலகநந்தா நதியில் புதைந்திருந்ததாகவும், சுவாமி, சொப்பனத்தில் ஆசாரியருக்குத் தெரிவித்தபடி, அவர் அதை எடுத்துவந்து பிரதிஷ்டை பண்ணினார் என்றும் ஐதிகம் இருக்கிறது என்கிறார் காஞ்சிப் பெரியவர்.)

எது எப்படி இருப்பினும் நாராயணன் சிலையின் உருவ அமைப்புத் தெளிவாகத் தெரியவில்லை என்பது மட்டும் உறுதி.

அருகில் மூலவருக்கு இடப்புறம் நர – நாராயணர் சிலைகளும், வலப்புறம் குபேரன் சிலையும் மற்றும் கருடாழ்வார், நாரதர் ஆகியோரின் சிலைகளும் உள்ளன.

கேரள நம்பூதிரி ஒருவர்தாம் மூலவருக்குப் பூஜை செய்கிறார். இது தொன்றுதொட்டு நடைபெற்று வருகிறது. இவரை ராவல் என்று அழைக்கின்றனர்.

இங்கும், கேதாரத்திலும் அருச்சகர்கள் இப்பகுதிகளின் குளிர்நிலைக்கு ஏற்பக் கம்பளி ஆடைகள், குல்லாய்கள் அணிந்தே பூஜை செய்கின்றனர்.

பத்ரி நாராயணனின் திவ்விய தரிசனம் கிடைத்த மகிழ்ச்சியில் கோயிலிலிருந்து வெளியே வருகிறோம்.

சைவர்கள் காசிக்கு அருகேயுள்ள கயாவில் பிதுர்களுக்கான பிண்டதானம் செய்வதை மிக முக்கியமான கடமையாகக் கருதுகின்றனர். அது

போன்றே பத்ரியிலுள்ள பிரம்மகபாலத்தில் பிண்டதானம் செய்வதை ஏனைய இடங்களில் செய்வதினும் பன்மடங்கு சிறந்ததாக வைணவர்கள் கருதுகின்றனர்.

நாம் பத்ரிக்குச் செல்கிறோம் என்று தெரிந்ததும் நம் முன்னோர்களின் ஆவிகள் அங்குச் சென்று நாம் அளிக்கப் போகும் பிண்டத்துக்காகக் காத்திருக்குமாம்.

கோயிலின் வடபுறத்தில் சிறிது தொலைவில் உள்ள சிறியதொரு பாறையைத்தான் பிரம்மகபாலம் என்கின்றனர். இது அலநந்தா ஆற்றை ஒட்டி அமைந்திருக்கிறது.

பிரம்மதேவனின் ஐந்தாவது தலையைக் கொய்த சிவபெருமான், அத்தலை தம் கையிலிருந்து அகலாதிருப்பதைக் கண்டு கவலையுறுகிறார். திருமாலின் ஆலோசனைப்படி பத்ரிகாஸ்மரம் வந்து, நாராயணனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த மஹாலக்ஷ்மியிடம் பிக்ஷை பெற்றதும், அத்தலை கீழே விழுகிறது. அதுவே பிரம்மகபாலம் எனப் பெறுகிறது.

இங்கு ஒருமுறை பிண்டதானம் செய்துவிட்டால், மீண்டும் சிரார்த்தம் (இறந்தநாட்கடன், திவசம்) முதலியவை செய்ய வேண்டியதில்லை என்றுகூடச் சொல்கின்றனர். (கயாவில் பிண்டதானம் செய்வோருக்கும் இத்தகைய விதிவிலக்குக் கிடைக்குமாம்!)

மற்ற இடங்களைப் போன்று அரிசியில் எள் கலந்து இங்கு பிண்டம் பிடிப்பதில்லை; மாறாக, நாராயணனின் பிரசாதமான மஞ்சள் சோற்றைக் கொண்டுதான் பிண்டம் பிடிக்கிறார்கள்.

பத்ரி யாத்திரையை மேற்கொள்வோர் ஏப்ரல் 25 முதல் அக்டோபர் 15 வரை கோயிலுக்கு வசதியாகச் சென்று வரலாம் என்ற கோயில் நிர்வாகிகள் கூறுகின்றனர்

நவம்பர் மத்தியில் கோயிலை மூடித் திருக்காப்பிட்டு விடுகின்றனர்.

கோயிலைக் குளிர்காலத்துக்காக மூடும் நாளில், ராவல் ஒரு பெண்ணைப் போன்று உடையணிந்து வழிபாடு செய்வாராம். (தமிழகத்தின் திருவானைக்காவிலும், அருச்சகர் பெண் உடையில் உச்சிக்காலப் பூஜை நிகழ்த்துவது இன்றும் நடைபெற்று வருகிறது.) முதலில் மஹாலக்ஷ்மிக்கு வழிபாடு செய்த பின்னர், அம்பாளை எடுத்துச் சென்று நாராயணனின் அருகில் வைத்து விடுவாராம். மூலவரின் மீது நெய் தடவிக் கம்பளியால் போர்த்திவிட்டுப் பெரிய நெய் விளக்கு ஒன்றை ஏற்றி வைப்பாராம். தொடர்ந்து கோயிலைப் பூட்டிச் சீல் வைத்து விடுகின்றனர்.

ஆறுமாதங்கள் கழித்துக் கருவறையைத் திறக்கும்போதும் அவ்விளக்கு அப்படியே எரிந்து கொண்டிக்குமாம்! (கேதாரத்திலும் இத்தகைய அணையாஜோதி கருவறையின் மேற்குச் சுவரில் காணப்பெறுகிறது. அங்கும் ஆறு மாதங்கள் கழித்துக் கதவைத் திறக்கும்போது அந்த விளக்கு அப்படியே எரிந்துகொண்டிருக்குமாம். இந்த அணையா ஜோதியைக்காணக் கோயில் திறக்கும் நாளில் ஆயிரக்கணக்கானோர் அங்குச் செல்கின்றனர்.

அத்தகைய அரிய வாய்ப்பு நமக்குக் கிட்டாவிடினும், வதரிநாராயணனை வணங்கி வழிபடும் வாய்ப்பாவது கிடைத்ததே என்று எண்ணி மகிழ்கிறோம்.

அலங்கல் ஆய தண்துழாய்கொண்டு ஆயிரம்நாமம் சொல்லி,
வலங்கொள் தொண்டர் பாடி ஆடும் வதரி... –
மேற்படி 1 : 3 : 9

(பக்தர்கள், திருத்துழாய் (துளசி) மாலையைக் கையில் கொண்டு, ஆயிரம் இறைநாமங்களைக் கூறி வலமாக வந்து ஆடிப்பாடும் வதரி) நாராயணனை வணங்கிவிட்டுத் திரும்புகிறோம்.

வசதியும் வாய்ப்பும் உள்ளவர்கள், வாரணாசி (காசி) – கேதார்நாத் – பத்ரிநாத் போன்ற தலங்களுக்கு, வாழ்நாளில் ஒருமுறையேனும் சென்று வருவது, பிறந்ததன் பெரும் பயனைப் பெற்றதாகும். நம்முடைய குறுகிய வாழ்நாளில் நாம் அடையக்கூடிய ஒரு சில இன்பங்களில் தலையாயது, இத்தகைய தலயாத்திரைகளால் பெறும் இன்பமேயாகும் என்று உறுதியாகச் சொல்லலாம்.

(ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதுகளில் இருமுறை வடநாட்டுப் பயணம் மேற்கொண்டபோது கிடைத்த தகவல்களின் அடிப்படையில் எழுதப்பெற்ற கட்டுரை இது. இடையில், போக்குவரத்து வசதிகள் போன்றவற்றில் எத்தனையோ மாற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம். இருப்பினும் தலங்களைப் பற்றிய குறிப்புகளும், வரலாறுகளும், மனிதர்களைப் போன்று மாறிக்கொண்டே இருப்பதில்லையே? அதனால்தான் இந்தப் பயணக் கட்டுரையைத் துணிந்து இந்த மலருக்கு (நன்றி : ஸ்ரீ காசி அருள்மிகு நகரேஸ்வரி சமேத நகரேஸ்வரர் ஆலயத் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பு மலர்–2007) வழங்கினேன். இதனைப் படிப்போரில் ஒரு சிலருக்காவது, கேதார–பத்ரி யாத்திரையை மேற்கொள்ளவேண்டும் என்னும் எண்ணம் ஏற்படுமானால், அதுவே எனக்குக் கிடைக்கும் பெரும் பரிசாகும். வணக்கம்)

* 1. அசி
2. லோலார்கம்
3. துளசிதாஸ்
4. ஜானகி
5. பாரசுவநாதம்
6. சிவாலயம்
7. நிரஞ்சனம்
8. பிரமேந்திரம்
9. அனுமந்தம்
10. அரிச்சந்திரம்
11. லல்லி
12. சிந்தாமணி
13. ராணி
* 14. கேதாரம்
15. சௌகி
16. உருக்மாங்கதம்
17. க்ஷேமேசுவரம்
18. மானசரோவர்
19. நாரதம்
21. பாண்டேயம்
22. சதுர்சஷ்டி
23. தண்டி
24. ராணாமகால்
25. முன்ஷி
26. அகல்யாபாய்
27. சீதளா
28. பிரயாகை
* 29. தசாசுவமேதம்
30. அசுவம்
31. கிடிகீ
32. மான்மந்திரம்
33. திரிபுரசுந்தரி
34. விசாலாட்சி
35. ஜராசசந்தேசுவரம்
36. லலிதா
37. கங்காகேசவம்
38. பிரம்மநாளம்
39. மகாசுமயானம்
40. சித்திவிநாயகம்
* 41. மணிகர்ணிகை
42. தத்தாத்ரேயம்
43. சேந்தியம்
44. சங்கடாதேவி
45. யமேசுவரம்
46. கங்காமகால்
47. அக்னீசுவரம்
48. இராமா
49. இலட்சுமண பாலா
50. மங்களா கௌரி
* 51. பஞ்சகங்கை
52. பிந்துமாதவம்
53. துர்க்கா
54. பிரம்மா
55. சத்திரம்
56. ராஜமந்திரம்
57. லால்
58. கௌ
59. நாராயணன்
60. திருலோசனேசுவரம்
61. பிரகலாதம்
62. ராஜ
63. கட்கவிநாயகம்
* 64. வருணாசங்கமேசுவரம்

(புள்ளியிட்டவை சிறப்புமிக்க நீராடுதுறைகள். நடந்துசெல்ல இயலாகவர்கள் படகிலேனும் சென்று இத்துறைகளிலும் நீராடுவது மரபு. 64ல் பலதுறைகள் இப்போது இல்லை)



# வைணவ வழி

– பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார்

வைஷ்ணவ மதம் அல்லது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயம் என்பதே வைணவமெனப்படுகின்றது. இதனை ஸ்ரீராமாநுஜமதம், ஸ்ரீராமாநுஜ ஸம்பிரதாயம். எம்பெருமானார் தரிசனம் என்கிற பெயர்களாலும் வழங்குவதுண்டு. இதனால் எம்பெருமானா ரெனப்படுகிற ஸ்ரீராமாநுஜர் காலந்தொடங்கித் தோன்றிய மதம் வைணவமதம் என்று சிலரோ பலரோ எண்ணிவிடுவதும் சொல்லிவிடுவதுமுண்டு. உண்மை அங்ஙனமல்ல. ஆழ்வார் காலத்திலும், அவர்கட்குப் பிறகு நாதமுனிகள் என்னும் ஆசாரியருடைய காலத்திலும், தழைத்தோங்கிய மதம் வைணவம். நாதமுனிகளென்பவர் ஸ்ரீராமாநுஜர்க்கு முந்நூறு வருடங்கள் முற்பட்டவர். இடையில் ஆளவந்தார் என்கிற பிரபல பண்டிதரான பேராசிரியர் தோன்றி வைணவ கோட்பாடுகளையுணர்த்தும் பல நூல்களை (வடமொழியில்) இயற்றியுள்ளார். அவ்வாசிரியருடைய சீடர்களை அடிபணிந்த பெரும்புகழ் பெற்றவர் ஸ்ரீராமாநுஜர். இவர் அவதாரபுருஷராகிப் பல பல கலைகளும் பயின்று விளக்கில் கொளுத்தின தீவட்டிபோல் மிக மேம்பட்டு விளங்கினபடியால் இவரது திருவடிகளை ஆயிரக்கணக்கான சீடர்கள் பணிந்து உய்வுபெற, அன்னவர்கள் முகமாகவும் வைணவம் உலகில் பரவி மிக்க வீறுபெற்றது.

வைணவ மதத்தின் கொள்கையைச் சுருக்கமாகச் சிலர் தெரிந்துகொள்ள விரும்பினால், தத்வம் ஹிதம் புருஷார்த்தம் எனப்படுகின்ற மூன்றில் வைணவர்களின் சித்தாந்தத்தை உணரப்பெற வேண்டும். பரதெய்வமாகக் கொள்ளப்படுவது எது ? அதனையடையும் வழியாகக் கொள்ளப்பட்டது எது ? அடைந்த பிறகு கொள்ளும் பயன் எது ? என்கிற இவற்றையறிந்து கொள்வதே தத்வஹித புருஷார்த்த ஞானமெனப்படும்.

ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும் அவனது திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுவதே ஹிதமென்றும், ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதே (அதாவது நித்திய கைங்கரியம் செய்வதே) புருஷார்த்த மென்றும் நிலையிடுவதே வைணவ ஆசிரியர்களின் ஒருமிடறான சித்தாந்தம். இத்தகைய அர்த்த விசேஷங்களை உபதேச முகத்தாலும் நூன்முகத்தாலும் நிலைநாட்டினவர் களென்கிற காரணத்தினால் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியோடொப்ப ஆதரிக்கப்பட்டு வருகிறார்கள். இச்சம்பிரதாயத்திற்கு இவர்கள் செய்தருளிய உபகாரம் மிகப்பெரிதாதலால் இவர்கள் மஹோபகாரர்களென்று குலாவப்படு கிறார்கள். அவரவர்கள் உயிரோடிருக்கும் நாளில் தம்மடி பணிந்தவர்களுக்கு உபதேசங்களை மட்டும் செய்து போனவர்களிற்காட்டிலும், உபதேசமுஞ்செய்து பிற்காலத்தவர்களும் நெடுகவாழுமாறு நூல்களைத் தேனும் பாலுங் கன்னலும் அமுதுமாகப் பொழித்து வைத்தவர்கள் மஹோபகாரர்களெனப்படுவர். பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கையாழ்வாரள வாகவுள்ள ஆழ்வார்கள் பன்னிருவரும் தமிழ் வேதமென்றும் திவ்வியப்பிரபந்தகளென்றும் வழங்கப்படுகிற பாசுரங்களைப் பாடிவைத்து மேற்சொன்ன தத்வஹிதபுருஷார்த்தங்களை விளங்கவைத்தார்கள். அத்திவ்வியப் பிரபந்தங்களில் மெய்யன்பு பூண்டு அவற்றைக் கண்டபாடஞ் செய்வதிலும், அவற்றின் செழும் பொருள்களை யுணர்ந்து பிரவசனஞ் செய்வதிலும் ஊக்கமுடைமை – வைணவர்களுக்கு இன்றி யமையாததாம்.

வைணவ சம்பிரதாயப் பேராசிரியர்களான நாதமுனிகள், ஆளவந்தார், ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வான் பட்டர், லோகாசாரியர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் முதலான பெரியார்களினால் பல வழிகளிலும் வளர்க்கப்பட்டது. இச்சமயம். இவ்வாசிரியர்களனைவரும் அந்தணர் தலைவராய் அவதரித்து வடமொழி வேதத்தில் ஊன்றினவர்களாயிருந்தும் அந்த வேதத்தின் உண்மைப் பொருள்களைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டிக் கொடுப்பவை ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களேயென்று கொண்டு வடமொழி வேதத்தை இடக்கண்ணாகவும் தென்மொழி வேதத்தை வலக்கண்ணாகவுங் கொண்டிருந்தார்கள். வேதாந்த தேசிகரென்னும் ஆசிரியர் செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே என்று கூறியிருப்பதொன்றே இதற்குச் சான்றாகும்.

ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியர்கட்கு உபய வேதாந்த ப்ரவரத்தகா சாரியர்கள் என்பது சிறப்புப் பெயர். வடமொழி வேதாந்தமும் தென்மொழி வேதாந்தமுமாகிய இவையே உபய வேதாந்த மெனப்படும். உபய வேதமெனினும் உபய வேதாந்த மெனினும் ஒக்கும். வடமொழிமறையிற் கூறின பொருள்களும் தென்மொழி மறையிற் கூறின பொருள்களும், வேறுபாடின்றி ஒத்திருந்தாலும் வடமொழி மறைப் பொருள்களைத் தெளிவாகக் காட்டுவது தென்மொழி மறை – என்பது பற்றியே உபயவேதாந்தப் பேராசிரியர்களென்று பிரசித்தி பெற்றனர் வைணவப் பெரியார்கள்.





## கோவிந்தா

கோவிந்தா எனச் சொன்னால் போனது வராது என்ற பொருளில் உள்ள வார்த்தை. இதனால்தான் கடன் பெற்றவன் திருப்பித்தராவிட்டால், கோவிந்தா தானா? என கேட்பது வழக்கம். கோவிந்தாவுக்கு இன்னொரு பொருளும் உண்டு. இதை கோ இந்தா என்பர். கோ என்றால் பசு, இந்தா என்றால் வாங்கிக் கொள் என்ற பொருளில் இது வரும். கோவிந்தா... கோவிந்தா என சொல்லச் சொல்ல பசுதானம் செய்த புண்ணியம் கிடைத்துக்கொண்டே இருக்கும். கிருஷ்ண ஜெயந்தியன்று கோவிந்த நாமம் சொல்லிக் கொண்டே இருங்கள். பசுக்களுடன் விளையாடி மகிழ்ந்த பாலகிருஷ்ணனின் அருள்கிட்டும். ஆண்டாள் முப்பது திருப்பாவைப் பாசுரங்களுள் மூன்றில் குறையொன்றுமில்லாத கோவிந்த நாமம் என்று கோவிந்தாவிற்கு ஏற்றம் சாதிக்கிறார்.

## விஷ்ணு  சகஸ்ரநாமம்

குருக்ஷேத்திர யுத்தத்தில் பீஷ்மர் அர்ஜுனனால் அம்பு எய்யப்பட்டு, காயங்களுடன் அம்புப் படுக்கையில் படுத்திருந்தார். அந்நேரத்தில் கிருஷ்ண பரமாத்மா அவரைக் காண வந்தார். அவரைக் கண்டதும் பீஷ்மர் அவரை போற்றிப்பாடினார். அவர் சொன்ன 1008 நாமாக்களே விஷ்ணு சகஸ்ரநாமம் ஆயிற்று.

பெருமாள் திருக்கோவிலுக்குச் சென்று ஸ்ரீபாத தீர்த்தம், துளசி, சடாரி இவைகளை ஏற்றுக்கொள்ளாமல் வரக்கூடாது.

பெருமாள் முன் தோப்புக்கரணம், கன்னத்தில் அடித்துக்கொள்ளுதல், தன்னையே தான் சுற்றிக் கொள்ளுதல் முதலியவை செய்யக் கூடாதவை.



# மங்களா சாசனம்

*– இராசிபுரம் மு. இராமசாமி*

## வாழ்த்து

மனித வாழ்க்கையின் வளர்ச்சிக்கு வித்தாக அமைவது வாழ்த்து. இது, அன்பில் தோய்ந்த அமைதி நிறைந்த உள்ளத்தில் தோன்றுவது. அத்தகைய உள்ளத்தினர் சான்றோர் எனப்படுவர். அவர்கள் ஆன்று அவிந்து அடங்கிய கொள்கையினராக விளங்குபவர்கள்.

இத்தகைய உயர்ந்த கொள்கைப் பிடிப்புள்ள சான்றோர்கள், தமது தூய உள்ளத்தில் எழும் நல்லுணர்வோடு, வாழ்த்துவார்கள். அந்த நல்வாழ்த்தினைப் பெற்றவர்கள், தமது வாழ்க்கையில் நல்ல வளர்ச்சி பெற்று, பிறர் பயன்படும் முறையில் வாழ்வார்கள்.

அனுபவத்தாலும், வயதாலும், தூய்மையாலும் பெரியவர்களாகயிருப்பவர்கள், தம்மினும் குறைந்த வயதினரை வாழ்த்துவது உலகியல் நெறி. வாழ்த்துபவர் பெரியவர், வாழ்த்துப் பெறுபவர் சிறியவர். இது உலகியல் நடைமுறை. ஆனால் ஆன்மிக நெறி இதற்கு மாறுபட்டதாக அமைகிறது.

## ஆன்மிக நெறி

எது ஆன்மிகம்? மனித உடலில் தங்கி உயிருக்கும் உயிராக அமைந்திருப்பது ஆன்மா. உடலை இயக்குவது உயிர். உயிரை இயக்குவது ஆன்மா. இயங்கும் உடல் கண்ணுக்குப் புலனாவது அதனை இயக்கும் உயிர் கண்ணுக்குப் புலனாகாதது. உடல் கருத்துக்கும் புலனாவது. அந்த உயிரை இயக்கும் ஆன்மா, கருத்துக்கும் புலனாகாதது. உடல் உணர்வுக்கும் அப்பாற்பட்ட ஒரு பேருணர்வினால் உணரப்படுவது. ஜீவனை (உயிரை) இயக்குவதால் ஜீவான்மா எனப்படும். இது அந்தராத்மா என்றும் பேசப்படும்.

இந்த ஜீவான்மாவையும் இயக்கும் ஆன்மா ஒன்று உண்டு. அது, 'பரமான்மா' என்று தத்துவஞானிகளால் கூறப்படும். ஜீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள தொடர்பு என்ன ? உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு யாது ? இவைகளின் இயக்கம் எவ்வாறு நடைபெறுகின்றன ? என்பதை விளக்குவதே ஆன்மிகம் என்று சொல்லப்படும்.

இந்த ஆன்மிக விளக்கத்தில், பரமான்மா, உயர்வற உயர்ந்த பரம்பொருள் என்றும், நிலையில்லாத உடலில் உயிரோடு இணைந்துள்ள ஜீவான்மா, தாழ்ந்தது என்றும் தெளியலாம். தாழ்ந்த நிலையினவான ஜீவான்மா, உயர் நிலையில் நிற்கும் பரமான்மாவை அணுகுவது எப்படி ?

அதற்கு உதவுவது பக்தி என்ற பேருணர்வு. ஜீவான்மா, பக்திப் பேருணர்வு நிறையப் பெற்றால் பக்தனாக உயர்வு பெறலாம். பக்தனாகிய ஜீவான்மா பரமான்மாவாகிய பகவானை நெருங்கி விடுகின்றது. நெருங்கிய பக்தன், தனது, அளவுகடந்த, ஊற்றெழுந்து ஓடி வந்த பக்திப் பெருக்கினால், தன்னினும் மிகமிக மேம்பட்ட பகவானையே வாழ்த்தத் தொடங்கி விடுகின்றான்.

வாழ்த்துவது பக்தன். அவன் அடியான், சிறிய ஞானத்தன். வாழ்த்துப் பெறுவது பகவான். அவன் ஆண்டான், மயர்வறமதிநலம் அருளும் தேவாதி தேவன். இது ஆன்மிக நெறி.

பக்தன் பகவானை வாழ்த்துவதற்குத்தான் **மங்களா சாசனம்** என்று பெயர்.

## மங்களா சாசனம்

இந்தச் சொல் தொடரை, மங்கள + சாசனம்' என்றும், மங்கள + ஆசனம்' என்றும் பிரிக்கலாம். இது வடமொழி சொல் தொடர். மங்கள + சாசனம்' மங்களாசாசனம்' என்று இயையும். இதனை தீர்க்க சந்தி என்று வடமொழி இலக்கணம் கூறும்.

மங்கள + ஆசனம் என்று பிரித்துப் பொருள்காண வேண்டும் என்பது, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காரச்சாரியர் அவர்களது கொள்கை.

'(பகவானுக்கு) எம் பெருமானுக்குக் காப்பிடும் விஷயம்' என்பது ஆச்சாரியார் கண்ட பொருள்.

சாசனம் – உறுதிப்படுத்துதல் – பகவானுக்கு, மங்களத்தை உறுதிப்படுத்துவது என்பது சில வைணவ அறிஞர் பெருமக்களது கருத்து. அதாவது, 'மங்களா சாசனம்' என்றால், மங்கல வாழ்த்து என்று பொருள் என்பது வைணவச் சான்றோர்கள் தரும் விளக்கம்.





பெரியவர்கள் சிறியவர்களை வாழ்த்துவது உலகியல் நெறியில் வாழ்த்து என்ற அளவில் நிற்கும். பக்தன் பகவானை வாழ்த்தும் ஆன்மிக நெறியில், மங்கல வாழ்த்து (மங்களாசாசனம்) என்று உயர்வு பெறும்.

'மங்களா சாசனம்' என்ற இந்த அருமையான, பொருள் பொதிந்த தொடர், வைணவ சம்பிரதாயத்தில் மட்டும் வழங்கும் உரிமை பெற்றதாகும்.

பெருமாள் எழுந்தருளியிருக்கும் வைணவத் திருத்தலங்கள் 108. இந்த நூற்றெட்டுத் திருத்தலங்களும் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்றவைகள். பன்னிரு ஆழ்வார்களும், தமது பாசுரங்களால் மங்களா சாசனம் (மங்கல வாழ்த்து) செய்யப்பெற்றதால் தான். இந்த 108 கோயில்களும் திவ்ய தேசத் திருத்தலங்களாயின.

## மங்களா சாசனத்தின் பெருமை

ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களுள் ஒருவருக்குப் பெரியாழ்வார் என்று பெயர். இவருக்கு இயற்பெயர் **விட்டு சித்தன்** (விஷ்ணு சித்தர்) என்பது. 'பெரியாழ்வார்' ஆனது என்படி? இவர் பொய்கையார் முதல் குலசேகரர் இறுதியாக உள்ள ஆழ்வார்களைக் காட்டிலும் மூத்தவரும் அல்லர் ! நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார் போன்று ஆயிரக்கணக்கான பாசுரங்களைப் பாடியவரும் அல்லர் ! அப்படியிருக்க 'பெருமை' என அப் பட்டத்திற்கு உரியவரானது எப்படி ?

இதனை விளக்குகின்றது உபதேசரத்தின மாலை என்ற வைணவப் பிரபந்தம். இது மணவாள மாமுனிகளால் அருளிச் செய்யப் பெற்றது.

'மங்காளா சாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவு தான் அன்றி – பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர்'.

என்ற வெண்பா, பட்டர் பிரான் (விட்டு சித்தன்) பெரியாழ்வாராகப் போற்றப்பட்டதன் காரணத்தை விளக்குகிறது.

'எம்பெருமானுக்கு என்வருகின்றதோ என்று வயிறு பிடித்து மங்களா சாசனம் செய்வதில் இவருடைய காதல் பெரிதானது பற்றியே, இவரைப் பெரியாழ்வார்' என்றனர் என்றதாயிற்று' என்பது பிரதிவாதி பயங்கரம் அவர்கள் தரும் தெளி பொருளாகும்.

*'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு*
*பலகோடி நூறாயிரம்*
*மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா !*
*உன் சேவடி செவ்விதிருக்காப்பு '*

என்பது, பகவானுக்கு, பக்திப் பெருக்கால் பெரியாழ்வார் பாடிய மங்களாசாசனப் பாசுரம். இதுவே, நாலாயிரத்திவ்யப் பிரபந்தத்தில் முதல் பாசுரமாகவும் விளங்குகின்றது.

இந்த அரும்பெரும் நிகழ்ச்சி மங்களா சாசனத்தின் பெருமையை விளக்குகின்றது.

பட்டர் பிரான், பாண்டியனது அவைக்களத்தில் நாராயணனது பரத்துவத்தை உறுதிப்படுத்தித் தெளிவாக்கினார். தனது பரத்துவ நிலையை மன்னன் முதலிய மக்கள் அனைவர்க்கும் தெளிவுபடுத்திக் காட்டிய பட்டர்பிரான் (விஷ்ணு சித்தர்) மகிழ்ந்து ஆனந்தம் பெற வேண்டி, பகவான், கருடவாகனனாய் விண்ணில் நின்று காட்சி கொடுத்தான். கிடைத்தற்கரிய காட்சியைக் கண்டு களித்த பட்டர் பிரான், இந்த அழியா அழகுக்குக் கண்ணேறு வந்து விடுமோ என்ற அச்சத்தால், அன்பு மீதூரப் பெற்றவராய் 'பல்லாண்டு' என்று பாசுரம் இட்டு பெரியாழ்வாராக உயர்ந்தார்.

இத்தகையதொரு நிகழ்ச்சி, மற்றைய ஆழ்வார்களின் பக்தி வாழ்க்கையில், அவர்களுக்குக் கிட்டவில்லை. ஆயினும் அவர்களும் மங்களாசாசனம் செய்தார்கள். அவர்களது மங்களாசாசனம் எல்லாக்காலத்து மக்களுக்கும் பயன்படுவனவாய் அமைந்துள்ளன. எப்படி ?

## ஐந்து நிலைகள்

அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்துள்ள (விஷ்ணு – எல்லா இடங்களிலும் நிறைந்தவன்) அந்த நாராயணன், ஜீவராசிகளைப் பாதுகாப்பதற்காக தனக்கு ஏற்படுத்திக்கொண்ட நிலைகள் ஐந்து. இது வைணவ சித்தாந்தம் கூறும் தெளிபொருள்.

பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்பன அந்த ஐந்து நிலைகள், பரமபதத்தில், திருமகள் கேள்வனாய், நித்திய சூரிகள் வணங்கி, வழிபாடு செய்யும் தோற்றத்தினனாய் வீற்றிருப்பது பரநிலை, திருப்பாற்கடலில், அனந்த சயனனாய் காட்சியளிப்பது வியூக நிலை. இதுதான் அவதாரம் செய்வதற்குக் கால்கொண்ட நிலை. மூன்றாவது, (விபவம்-அவதாரம்) இராமனாகவும், கண்ணனாகவும், அவதாரம் செய்து மக்களோடு மக்களாய் ஒன்றி நின்று வாழ்ந்து காட்டிய நிலை. இப்படி எடுத்த அவதாரங்கள் பத்து. நான்காவது, உயிர்ப்பொருள், உயிர் அற்ற பொருள் (இயங்குதினை நிலைத்தணை) அனைத்திலும் கலந்து கிடக்கும் நிலை. இது அந்தர்யாமியாய், (கண்ணுக்குப் புலப்படாமல்) அனைத்துப் பொருள்களோடும் இணைந்து நிற்பதாகும். ஐந்தாவது, அனைத்து உயிரினங்களும் தம் கண்ணால் கண்டு களிக்கும் வகையில் ஆங்காங்கு, கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அர்ச்சை நிலை. இதை, அர்ச்சாவதாரம் என்றே வைணவப் பெருமக்கள் போற்றுவார்கள்.

இந்த ஐந்து நிலைகளில், அர்ச்சை நிலையே, எல்லாக் காலத்து மக்களும் கண்டுகளிப்பதற்கு உரியதாகும். அதனால், மக்களின் நல்வாழ்வுக்காக, அர்ச்சாவதாரமாகிய இந்த நிலையைப் பெரிதும் போற்றிப் புகழ்ந்து பாசுரம் பாடலானார்கள் ஆழ்வார்கள்.

### அர்ச்ச நிலையின் பெருமை

'மண்ணுள் மக்களை ஆட்கொள்ளும் நல்ல வழி எது? என்பது விண்ணுலகத் தேவர்களுக்குக் காட்சி கொடுத்துக் கொண்டிருந்த பரமபர நாதனது சிந்தனை. அந்தச் சிந்தனையின் நிறைவுதான் அர்ச்சாவதாரம்.

மண்ணகத்துக் கோயில்களில் வீற்றிருக்கும் மூர்த்திகள் வெறும் கல்லாலும் செம்பாலும் ஆனவைகள் என்று சாதாரண மக்கள் எண்ணுவார்கள். ஆனால், ஆழ்வார்கள், பகவானே, இந்த வடிவில் எழுந்தருளிக் காட்சி கொடுக்கின்றான் என்று நம்புபவர்கள். அந்த நம்பிக்கையைத் தமது பாசுரங்களில் வெளியிட்டுள்ளார்கள் ஆழ்வார்கள். அத்தகைய பாசுரங்களே மங்களா சாசனப் பாசுரங்களாகும்.

### பரம் – பரமபதநாதன்

'திருவாறன் விளை' என்ற திவ்யதேசம் மலை நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இது நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்றதாகும்.

*'இன்பம் பயக்க எழில் மலர்*
*மாதரும் தானும் இவ் ஏழுலகை*
*இன்பம் பயக்க இனிதுடன்*
*வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்,*
*அன்புற்று அமர்ந்து உறைகின்ற*
*அணிபொழில் சூழ் திரு வாறன்விளை*
*அன்புற்று அமர்ந்து வலம் செய்து*
*கைதொழும் நாள்களும் ஆகும் கொலோ ?'*

(திருவாய்மொழி. *7.10.1*)

'திருமகளும் தானுமாய், இந்த ஏழு உலகங்களையும் ஆள்வதற்காக, பரமபதத்தில் வீற்றிருக்கும் எம் பெருமானே, இந்தத் திருவாறன் விளை என்னும் திருத்தலத்தில் வந்து கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்றான். அத்தகைய பெருமானைக் கண்டு அன்புடன் வணங்கிக் கைதொழும் நாட்களே, பயனுடைய நாள்களாகும்' என்பது இப்பாசுரத்தின் சுருக்கமான பொருள்.

பரநிலையில் வீற்றிருக்கும் பெருமானே, இங்கு வந்து அர்ச்ச நிலையில் காட்சி கொடுக்கின்றான் என்று நம்மாழ்வார் மங்களா சாசனம் செய்கின்றார்.

இங்கு எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு, 'திருக்குறளப்பன்' என்ற ஒரு புதுத்திருநாமம் வைத்து மகிழ்கின்றார் ஆழ்வார். ஆழ்வாரால் சூட்டப்பெற்ற திருநாமம் (பெயர்) பெருமானது வாமனாவதாரத்தையும், திருக்குறள் நிலையில் பக்தர்களின் உள்ளத்தில் தங்க வைக்கின்றது.

### வியூகம் : பாற்கடல் நாதன்

திருவழுந்தூர், சோழ நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இங்கு எழுந்தருளியுள்ள பெருமானை ஆமருவியப்பானாகக் கண்டு மகிழ்ந்தவர் திருமங்கை ஆழ்வார். அவர் மங்களாசாசனம் செய்கின்றார் இந்தத் திருத்தலத்தை.

*'செங்கமலத் திருமகளும் புவியும் செம்பொன்*
*திருவடியின் இணைவருட, முனிவர் ஏத்த,*
*வங்கமலி தடங்கடலுள் அனந்தன் என்னும்*
*வரியரவின் அணைத்துயின்ற மாயோன்*
*காண்மின்*
*எங்குமலி நிறைபுகழ் நால் வேதம் ஐந்து*
*வேள்விகளும் கேள்விகளும் இயன்ற தன்மை*
*அம்கமலத்து அயன் அனையார் பயிலும்*
*செல்வத்து*
*அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே'*
*(பெரிய திருமொழி. 8.7.1)*

'அழகிய திருவழுந்தூரில் நின்று மகிழ்ந்த தேவர் தலைவன், திருப்பாற்கடலினுள் திருஅனந்தன் என்ற பாம்பின் மேல் துயின்று கொண்டிருக்கும் மாயவன் தான். இந்த உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள் என்றும் மக்களுக்கு உணர்த்துகின்றார் மங்கை மன்னன்.

திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் நிலைக்குப் பிறகு தான் பெருமான் அவதாரம் செய்கின்றான், என்பது வைணவ சமயத் தத்துவம் கூறும் உண்மையாகும்.

அதனை உறுதிப்படுத்தும் வகையில் திருமங்கை ஆழ்வார். இந்த முதல் பாசுரத்திற்குப் பிறகு, பெருமானது பத்து அவதாரங்களையும் இந்தப் பதிகத்துள் பாடியுள்ளார்.

*'பன்றியாய் மீனாகி அரியாய் பாரைப்*
*படைத்து, காத்து உண்டு உமிழ்ந்த பரமன்'*

என்பது இந்தப் பதிகத்தின் இறுதிக் கவித்தொடர்.

### விபவம் : அவதாரப் பெருமான்

'திருச்சித்திர கூடம்' என்ற திவ்யதேசத்துக்கு, குலசேகராழ்வார் சென்றார். அங்கு வீற்றிருக்கும் எம்பெருமானை இராமனாகவே கண்டு கண் குளிர்கின்றார் குலசேகரர். இராமாவதாரத்தல் நிகழ்ந்த வரலாற்றுச் செய்திகள் அனைத்தையும் இந்தத் திருக்கோயிலிலேயே கண்டு ஆனந்தம் பெறுகிறார் ஆழ்வார்.

*'அங்கண்நெடு மதிள்புடை சூழ் அயோத்தி*
*என்னும்*
*அணிநகரத்து உலகனைத்தும் விளங்கும் சோதி*
*வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த்*
*தோன்றி*
*விண்முழுதும் உய்யக் கொண்ட வீரன் தன்னை,*
*செங்கண்நெடுங் கருமுகிலை, இராமன் தன்னைத்*
*தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்*
*எங்கள் தனி முதல்வனை, எம் பெருமான் தன்னை*
*என்றுகொலோ கண்குளிரக் காணும் நாளே.'*
(பெருமாள் திருமொழி *10:1*)

சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகிய தில்லை (சிதம்பரம்) நகர்த்திருச்சித்ர கூடத்துக் கோயிலில் வீற்றிருப்பது. அயோத்தியில் அவதாரம் செய்த இராமபிரானே என்று சாசனம் (உறுதிப்படுத்தி) செய்து மங்கலம் பாடுகின்றார் குலசேகராழ்வார்.

**அந்தர்யாமி :** அனைத்துள்ளும் கலந்து நிற்கும் பெருமான்.

கண்ணுக்குப் புலப்படாமல், ஒவ்வொருவர் உள்ளத்திலும் தங்கியிருக்கும் நிலைக்கு அந்தர்யாமித்துவம் என்று பெயர். அப்படிப்பட்ட நிலையினனான பெருமாளே திருவேங்கடத்தில் வீற்றிருக்கின்றான் என்று பேயாழ்வார் பாசுரம் இடுகின்றார்.

*'உளன்கண்டாய் நன்னெஞ்சே ! உத்தமன்*
*என்றும்*
*உளன்கண்டாய், உள்ளுவார் உள்ளத்து – உளன்*
*கண்டாய்*
*விண்ஒடுங்கக் கோடு உயரும் வீங்கருவி*
*வேங்கடத்தான்*
*மண் ஒடுங்கத்தான் அளந்த மன்'*

(மூன்றாம் திருவந்தாதி 40)

**அர்ச்சாவதாரம் :** அர்ச்சநிலைப் பெருமான்

பூதத்தாழ்வார் தனது அனுபவத்தைப் பாசுரமாக்கியுள்ளார். அந்தப் பாசுரங்களுள் ஒன்று ஒரு இடத்தில் அர்ச்சை நிலையில் காட்சி கொடுக்கும் பெருமானே மற்றோர் இடத்திலும் காட்சி கொடுப்பதாக அமைந்துள்ளது.



*'மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான், மற்றும்*
*நினைப்பரிய நீள் அரங்கத்துள்ளான் எனப் பலரும்*
*தேவாதி தேவன் எனப்படுவான், முன்*
*ஒருநாள் மாவாய் பிளந்த மகன்'*
*(இரண்டாம் திருவந்தாதி-28)*

*'மந்திபாய் வட வேங்கடமாமலை, வானவர்கள்*
*சந்தி செய்ய நின்றான் அரங்கத்து அரவின் அணையான்'*

என்ற திருப்பாணாழ்வாரின் பாசுரமும் இங்கு சிந்தித்தற்கு உரியது. மண்ணவரையும் விண்ணவரையும் சந்திக்கச் செய்வதற்காகவே திருவேங்கடத்தில் பெருமான் எழுந்தருளியுள்ளான். 'அந்தத் திருவேங்கடத்தானே திருவரங்கத்தில் பாம்பணையில் பள்ளி கொண்டுள்ளான்' என்பது இப்பாசுரத்தின் கருத்து.

'இவ்வாறாக ஐந்து நிலையாக அமர்ந்த பெருமானே ஆங்காங்கு, கோயில் கொண்டு எழுந்தருளி, மக்களுக்குக் காட்சி கொடுக்கின்றான்' என்று ஆழ்வார்கள் பாடுகின்றார்கள்.

ஒவ்வொரு கோயிலிலும் உள்ள மூர்த்தியின் மேல், ஒவ்வொரு நிலைப் பெருமானை ஆவாஹனம் செய்கின்றார்கள் அழ்வார்கள். ஆழ்வார்களால் பெருமான், மூர்த்தியின்மேல் எழுந்தருளித் தங்குவதாக, சாசனம் (உறுதிப்படுத்துதல்) செய்தபிறகு, அந்தத் திருக் கோயில் மங்கல வாழ்த்தோடு புனிதம் பெற்றுவிடுகின்றது.

ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற திவ்யதேசங்களுக்கு மக்கள் சென்று வழிபாடு செய்து உய்வு பெறலாம்.



## திருமாலினுடைய மங்கள (கல்யாண) குணங்கள்

1. வாத்ஸல்யம் 2. சௌலப்பியம் 3. சௌசீல்யம் 4. சுவாமித்துவம்

வாத்ஸல்யமாவது குற்றத்தையும் குணமாக கொள்ளும் அளவற்ற அன்பு

சௌலப்பியமாவது எல்லாரும் தன்னை பற்றுமாறு எளியனாயிருத்தல்.

சௌசீல்யமாவது உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு கலக்குங்கால் தன் உயர்வையும், அவன் தாழ்வையும் நெஞ்சிற் சிறிதேனும் கொள்ளாமல் குறையறக் கலக்கும் பண்பு.

சுவாமித்துவமாவது தனக்கு மேற்பட்ட தலைவன் எவனும் இல்லாமல் தானே எல்லா பொருள்களுக்கும் தலைவனாயிருத்தல்.

## ஸ்ரீ சடாரியின் மஹிமை

விஷ்ணு ஆலயங்களுக்குச் செல்லும் ஒவ்வொருவரும் எல்லாச் சந்நிதிகளிலும் தீர்த்தம், திருத்துழாய், மஞ்சள் காப்பு, குங்குமம் முதலிய பிரசாதங்களைப் பெற்று கொள்வதுடன் ஸ்ரீ சடாரியைச் சிரசில் சாதித்துக் கொண்டால்தான் அந்தந்தச் சந்நிதிகளில் வழிபாடு பூர்த்தியானதாகக் கருதுவர்.

பாதுகையே ஸ்ரீ சடாரி

ஸ்ரீ சடாரியே ஆழ்வார்

பாதுகை, ஸ்ரீ சடாரி, ஆழ்வார் எல்லாம் ஒன்றே.

சடகோபன் என்னும் பாதுகை அதாவது ஸ்ரீ சடாரி மூலமேதான் ஸ்ரீய : பதியான பகவான் திருவடிகளில் நம்தலையைச் சமர்ப்பிப்பது சாத்தியம் ஆகும்.

# கும்பாபிஷேக கிரியா விளக்கம்

*- கே. பிச்சைக் குருக்கள்*

உலகம் முழுதும் பரந்துள்ள பரம்பொருளை சைவத்தில் சிவபரம் பொருளாக வழிபடும் வழக்கம் தொன்று தொட்டு நிலவி வருகிறது. இறைவனுக்கு சொரூபலட்சணம் என்றும் தடத்தலட்சணம் என்றும் இரண்டு லட்சணம் சிவாகமங்களில் கூறப்படும். சொரூபம் அருவத்தையும் கடந்த நிலை, சிவஞானத்தால் உணர்ந்து அனுபவித்தும் மகிழும் பெருநிலை, தடத்தம் என்பது அருவம், அருஉருவம், உருவம் என மூன்று நிலைகளில் உயிர்கள் உய்ய பல நிலைகளில் கருணையால் இறங்கி வந்து அருளும் நிலை. உயிர்கள் அநாதி காலந்தொட்டும் ஆணவ மலச்சேர்க்கையால் தன்னையும் அறியாது இறைவனையும் அறியாது தவிக்கும். சிவபெருமானே ஆசிரிய வடிவம் தாங்கி வந்து தீட்சை செய்து ஆட்கொண்டு அருளும் நிலையை சைவசித்தாந்தம் சிவாகம நூல்கள் மூலமாகவும் மெய்கண்ட சாத்திரங்கள் மூலமாகவும் நன்கு விளக்கும். உயிர்கள் தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தால்தான் மனக்கவலை இன்றி வாழ்ந்து உய்ய முடியும் என்பதை உறுதியுடன் திருவள்ளுவரும் விளக்குவார். இறைவனுடைய திருவடித்தாமரையை அடைந்து மகிழ்வுடன் வாழ வழிபாடு இன்றியமையாதது. அவ்வழிபாட்டை ஆன்மார்த்தம், பரார்த்தம் என இரண்டு வகையாக பிரிப்பார்கள். தனக்காகவும் தன் குடும்பத்தின் நலன் வேண்டியும் சிவ தீட்சை பெற்று இல்லங்கள் தோறும் சிவபூஜை செய்வது ஆன்மார்த்தம் எனப்படும்.

எல்லா உயிரினங்களும் உய்ய திருக்கோவில்கள் அமைத்து அங்கு திருஉருவங்களை அஷ்டபந்தனம் முதலியவை கொண்டு பிரதிஷ்டை செய்து வழிபாடுகள் செய்வது பரார்த்தம் எனப்பெறும்.

*'யஜனம் த்விதம் புரோக்தம் ஆன்மார்த்தஞ்ச பரார்த்தகம்'*
*'ஆத்மார்த்தம் சலமித்யுக்தம் பரார்த்தம் ஸ்திரலிங்ககம்'*

என சிவாகமங்கள் கூறும்.

இவ்வாறு கூறப்படும் பரார்த்த பூஜைக்கான திருக்கோவில்களை அமைத்து உரிய ஸ்தானங்களில் லட்சணமும் அளவும் சிவாகம முறைப்படி அமைந்த திரு உருவங்களை ஸ்தாபித்து விமானங்கள் இராஜ கோபுரங்கள் கட்டி பிரதிஷ்டை செய்வதை கும்பாபிஷேகம் என்பர்.

சிவாகமங்களில் பிரதிஷ்டை நான்கு பிரிவாக கூறப்படும். கோவிலே இல்லாத ஊரில் அதற்கான பூமியை தெரிவு செய்து புதிதாக பிரதிஷ்டை செய்தல் ஏற்கனவே திருக்கோவில் இருந்து இயற்கையின் உற்பாதங்கள் பிற மன்னர் படையெடுப்பு முதலிய பல்வேறு காரணங்களால் சிலகால பூஜை இல்லாமல் இருந்து பின்னர் அதனை புதுப்பித்து பிரதிஷ்டை செய்தல், நித்திய நைமித்திக காம்ய பூஜைகள் நடைபெற்று வருங்காலத்தில் கோபுரங்களுக்கு வண்ணம் தீட்டியும் மதில்சுவர்கள் மற்றும் அவசியமான திருப்பணிகள் செய்து பிரதிஷ்டை செய்தல், திருடர்கள், பகைவர்கள், இடி மின்னல் போன்றவற்றால் பாதிக்கப்பட்டவுடன் பரிகாரம் செய்து நிறுவுதல் என நான்கு வகைப்படும்.

*'ஆவர்த்தசையனாவர்த்தம் புனராவர்த்தனம் ஸ்மிருதம்*

*அந்தரிதம்ஹி விக்நேயம் புரோட்ஷணந்து சதுர்விதம்'*

என்பது சிவாகம வாக்கு.

திருக்கோவிலில் சிவாகம முறைப்படி நடைபெறும் கும்பாபிஷேகத்திற்கு பிரதிஷ்டைக்கு தக்கவாறு உரிய கிரியைகள் உண்டு.

பொதுவாக முகூர்த்த நிர்ணயம், அநுக்ஞை, விக்னேஸ்வரபூஜை, தனபூஜை, வாஸ்து சாந்தி, மிருத் சங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரட்ஷாபந்தனம் என்பவை பூர்வாங்க கிரியைகள் எனப்படும். அதனைத் தொடர்ந்து பிரசன்னா பிஷேகம், கும்பாலங்காரம், கும்பாகர்ஷணம், யாத்ராதானம், யாத்ரா ஹோமம் முதலியன நிகழும்.



ஏற்கனவே அமைக்கப்பட்ட யாகசாலைக்கு சகலவாத்ய கோஷங்களுடன் யாக சாலை பிரவேசம் நிகழ்ந்து இரண்டு, நான்கு, ஆறு, எட்டு காலமாக பூஜைகள் திருக்கோவிலின் பொருளாதார வசதிக்கு தக்கபடி நிகழும். பின் யாக பூஜைகள் பூர்த்தியடைவதற்கு முன் யந்திரஸ்தாபனம், ரத்தினஸ்தாபனம் செய்து அஷ்டபந்தனம், ரஜதபந்தனம், ஸ்வர்ணபந்தனம் நிகழ்ந்து பிம்பசுத்தி ரட்ஷா பந்தனம் நிகழும்.

கும்பாபிஷேக தினத்தன்று யாகசாலை பூஜை ஸ்பர்சாகுதி நிகழ்ந்த பின் மகாபூர்ணாகுதி நடைபெறும். பின் யாத்திராதானம் செய்து பிரதான கலசங்கள் வலமாக வந்து திருக்கோவிலினுள்ளும் விமானம், ராஜகோபுரங் களையும் அடையும். உரிய முகூர்த்தத்தில் கலசங்களில் மகா கும்பாபிஷேகம் நடைபெறும். இதனைத் தொடர்ந்து மூலவர்க்கும், பரிவார மூர்த்திகளுக்கும் கும்பாபிஷேகம் நடந்து புதிய வஸ்திரம், புஷ்பமாலைகள் சாத்தி நிவேதனம் செய்து தீபாராதனைகள் நிகழும். பின்னர் பிரசாதம் வழங்கப்பெறும். இது விரிவான மிகப்பெரிய அளவில் விளக்க வேண்டிய ஒன்று.

இயன்றவரை நமது பக்தர்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்ற ஒரே நோக்கில் நமது கும்பாபிஷேக கிரியைகளை விளக்க முயற்சிக்கின்றோம்.

## யஜமான அநுக்ஞை, ஸங்கல்பம், விக்னேஸ்வர பூஜை

அறங்காவலர்கள் பக்தர்கள் புடைசூழ சன்னதி மண்டபத்தை அடைந்து கையில் பவித்திரம் அணிந்து கும்பாபிஷேகம் இறைவன் திருவருளால் சிறப்புடன் நடைபெற உறுதியெடுத்துக் கொள்ளும் சங்கல்பம் ஆச்சார்யரால் செய்து வைக்கப்பெறும். அதைத் தொடர்ந்து அநுக்ஞைக்கு உரிய திரவியங்களை உரிய மந்திரம் அதிதேவதைகளுடன் அர்ச்சித்து பட்டு வஸ்திரத்தால் மூடி தூப தீபங்களுடன் நிவேதனம் செய்து தீபாராதனை காட்டுதல் பாத்திர பூஜை எனப்படும். அதைத் தொடர்ந்து விப்பிரா அநுக்ஞை நிகழும். புண்யாக வாசனம், பஞ்சகவ்யம் செய்து தன பூஜை எனப்படும் திரவிய பூஜைகளும் நிகழும். தேவாநுக்ஞை எனப்படும் மூலவர் சந்நதியில் அநுமதி பெறும் வைபவம் நிகழும். அதற்காக சகல வாத்ய கோஷங்களுடன் ஸ்ரீ விநாயகர் சன்னதியை அடைந்து நுழைவாயிலில் தேவதைகளை வழிபட்டு விநாயகர் பஞ்சாஸன பஞ்சாவரண பூஜைகள் நிகழும். விநாயகருக்கு அருகம்புல்லால் அர்ச்சித்து தேங்காய் உடைத்து மோதகம் நிவேதனம் செய்தபின் இந்த கும்பாபிஷேக விழா இடையூறின்றி நிகழவேண்டும், நல்ல பலன்களையே தரவேண்டும் என பிரார்த்தனை செய்ய அனுமதி பெறல் நிகழும். தொடர்ந்து மூல மூர்த்திகள் சன்னதி அடைந்து விரிவான பூஜைகள் செய்து அனுமதி பெறும் வைபவம் நிகழும். இதனை அநுக்ஞை, விக்னேஸ்வரபூஜை எனக்குறிப்படுவர். கும்பாபிஷேகம் மற்றும் நித்திய பூஜைக்கு தேவையான நிதியை ஸம்ஹிதா மந்திரங்களால் அர்ச்தித்து முறையாக பிரித்து வழிபடும் கிரியை தனபூஜை எனப்படும். கணபதி ஹோமம், நவக்கிரஹ ஹோமம், முதலியன செய்து கொள்வதும் சிறப்பு. கோவில் கும்பாபிஷேக நிதியை அனுசரித்து விரிவாகவும் சுருக்கமாகவும் இக்கிரியைகள் அமையும்.

## வாஸ்து சாந்தி

இது மிகவும் முக்கியமான ஒரு கிரியை.

கிராமசாந்தி, பிரவேசபலி, ரட்ஷோக்ன ஹோமம் முதலியன ஆகமங்களில் குறிப்பிட்டிருந்தாலும் விரிவான கிரியைகள் செய்ய இயலாத இடங்களில் கண்டிப்பாக வாஸ்துசாந்தியை மட்டுமாவது செய்தல் அவசியம். மண்டுக வாஸ்து, பரமசாயி வாஸ்து என இரண்டாக ஆகமங்கள் பிரிக்கும். ஆண் தெய்வங்களுக்கு 64 பதங்களுடன் கூடிய மண்டுக வாஸ்து பதமும், பெண் தெய்வங்களுக்கு 81 பதங்களுடன் கூடிய பரமசாயி வாஸ்து பதமும் வரையப்படும்.

இரண்டிற்குமே 53 தேவதைகள் அர்ச்சிக்கப் பெறும். வாஸ்துபிரம்மாதான் முக்கிய தேவதை. பத பூஜைக்குப்பிறகு வாஸ்து கும்ப பூஜையும், வாஸ்து அக்னிகாரியமும் பூசணிக்காய் வெட்டி அதனை ஹோமம் செய்தலும் நிகழும். பேரீதாடணம் என்ற கிரியையும் ஓலை மோதுகளால் தயாரிக்கப்பெற்ற வாஸ்து பூஜை புருஷ உருவம் திருவீதியில் வலமாக ஜ்வாலையுடன் இழுத்துவரப்பட்டு விஸர்ஜனம் செய்வது வழக்கம். கும்பதீர்த்தம் வீதியில் தெளித்து வரப்படும். இதற்கு வாஸ்து சாந்தி எனப் பெயர். யாகாபகாரி என்ற பெயரும் வாஸ்தபுருஷனுக்கு உண்டு. இடையூறின்றி யாகபூஜைகள் நிகழ இந்த வழிபாடுசெய்தல் அவசியம்.

## மிருத்சங்கிரகணம்

சகலவாத்யம், குடை முதலியவைகளுடன் விக்னேஸ்வரர், சண்டீசர், அஸ்திரதேவர் சகிதம் சுத்தமான தேசத்தை அடைந்து பாலிகைக்கு மண்ணெடுத்து வரும் வைபவத்திற்கு மிருத்சங்கிரகணம் எனப்பெயர்.

வில்வமரம், அரசமரம், நதீதீரம், வயல்வெளி முதலிய சுத்தமான இடங்களில் மண் எடுக்கலாம். வழக்கம்போல் விநாயகர் பூஜை, புண்யாக பஞ்சக் வயம் செய்து கொள்வர். ஏழு சமுத்திர ராஜர்களை ஏழு கும்பங்களில் வழிபட்டு (ஒரு கும்பத்தில் ஏழு சமுத்திரங்களையும் ஆவாஹனம் செய்வதும் உண்டு) பிரார்த்தனை செய்வர். அதனைத் தொடர்ந்து பிரம்ம தேவரையும் அவருடைய அஷ்டவித்யேஸ் வரர்களையும் வழிபடுவர். அவர்களிடமும் பிரார்த்தித்து மண்ணெடுக்க அனுமதி பெறுவர். பூமிதேவியை விரிவாக அர்ச்சித்து இந்திராதி திக் பாலர்களை (காவல் தெய்வங்கள்) வழிபட்டு யாக கார்யத்திற்காக மண் எடுக்கப்போவதாக அனுமதி பெறுவர். பூஸூக்தம் என்ற வேதமந்திரம் ஓதப்பெறும். மண்வெட்டிக்கு உரிய மந்திரங்களால் அர்ச்சித்து பூமிதேவி காயத்திரியுடன் மூன்று முறை மண்ணை வெட்டி எடுத்து நல்ல தாம்பாளத்தில் வைத்து பட்டு வஸ்த்திரங்களால் மூடவேண்டும்.

பூமியை தோண்டியதை சமனம் செய்யும்பொருட்டு பால், தயில், பஞ்சாமிருதம் முதலியவைகளுடன் ஏழு சமுத்திரராஜ கும்பங் களையும் அபிஷேகிப்பர். பூஜித்து எடுக்கப்பெற்ற மணலை திருக்கோவில்யாகசாலையில் உள்ள அங்குரார்ப்பண வேதிகையில் மேள வாத்தியங் களுடன் எடுத்துச்சென்று வைத்துக்கொள்ளும் கிரியை மிருத்ஸங்கிரஹணம் எனப்பெறும்.

## அங்குரார்ப்பணம்

இது பாலிகை இடும் கிரியையாகும். புனித மண் எடுத்த வந்தபின் பயிர்கள் வளர்வதற்கு அதிதேவதையான கிருத்திகாரோகிணி சமேத அம்ருதேஸ்வரரை கும்பங்களில் வழிபடுவர். பாலிகைகளில் மண் நிரப்பி மாவிலை, அரசிலை முதலிய கொண்டு அலங்கரிப்பர். 12 சூரியர்களையும் பாலிகைகளில் அர்ச்சிப்பர். ஏகபாலிகாபிரயோகம் முதல் 24 பாலிகைகள் கொண்ட சதுர்விம்சதி பாலிகைவரை பல்வேறு எண்ணிக்கை மற்றும் அதிதேவதைகள் மாறும் பத்ததிகள் உண்டு. பெரும்பாலும் 12 உள்ள துவாதச பாலிகா பிரயோகமே அதிகம் வழக்கில் உள்ளது. பசும் பாலுடன் கலந்த சுத்தமான தேர்ந்தெடுக்கப்பெற்ற புதிய தான்யங்களை சம்ஹிதாமந்திரங்களால் அர்ச்சித்து ஓஷதிஸூக்தம் எனப்படும் வேதமந்திரம் ஓதப்பெறும். அதன் பின் சகலவாத்ய கோஷங்களுடன் தான்யங்களை பாலிகைகளில் வலமாக இடப்பெறும். சோமகும்ப ஜலத்தால் பாலிகைகளில் தீர்த்தம் தெளிக்கப்பெறும். பாயாசம் முதலியன நிவேதித்து பூஜை நிறைவு பெறும். இது அங்குரார்ப்பணம் ஆகும்.

## ரட்ஷாபந்தனம்

தீட்டு முதலியவைகளில் பாதுகாப்பிற்காக கும்பாபிஷேக விழாவை முன்னிட்டு காப்புக்கட்டும் வைபவத்திற்கு ரட்ஷாபந்தனம் எனப்பெயர்.

ஆண் தெய்வங்களுக்கு வலது கையிலும், பெண் தெவங்களுக்கு இடது கையிலும் ஆசார்யம், ரித் விஜயம் முதலானவர்கள் வலக்கரத்தில் காப்புக்கட்டுதல் ரட்ஷாபந்தனம் ஆகும். இதுவரை பூர்வாங்க கிரியைகள் எனப்பெறும்.

## யாகசாலா லட்சணம்

யாகசாலை அமைக்க தேர்ந்தெடுக்கும் நிலத்தை முதலில் புனிதப்படுத்தி முகூர்த்தக்கால் நடுவர். 33 குண்டங்கள், 25 குண்டங்கள், 17 குண்டங்கள், 9 குண்டங்கள், 5 குண்டங்கள், 1 குண்டம் என பிரதான மூர்த்திகளுக்கு அமைக்கும் முறையும் பல்வேறு யாகசாலைகளின் பெயர், அளவு, வேதிகை விவரங்களும் மூலாகமங்களில், சித்தாந்தசாராவளி போன்ற நூல்களிலும் விரிவாக கூறப்பட்டுள்ளது. மனு சூத்திரகிரமம், ரவி சூத்திரகிரமம், தசசூத்திர கிரமம், கலாசூத்திரகிரமம், விஷ்ணு சூத்திரகிரமம், ருத்ரசூத்திர கிரமம் என பல்வேறு யாகசாலைகளும் அதற்கு உரிய ஸ்தம்பங்கள் அளவுகளும் கூறப்படுகின்றன. ஸ்ரீதரா, பத்மினி, முகபத்திரம் போன்ற வேதிகைகளும் சதுரம், திரிகோணம், அர்த்தசந்திரம், விருத்தம், ஷட்கோணம், பத்மம், அஷ்டகோணம் முதலிய குண்டங்களின் லட்சணங்களும் அவற்றை அமைக்கும் ஸ்தானம் அளவுகளும் நன்கு கூறப்பட்டுள்ளது. விரிவான விளக்கங்களை மூலாகமங்களில் காணலாம்.







## கும்பாலங்காரம்

தங்கம், வெள்ளி, செம்பு, மண்கலசங்களை நூல் சுற்றி கங்கை முதலிய புண்ணியதீர்த்தங்கள், வாசனை திரவியங்கள், பன்னீர் நிறைத்து, சந்தனம், குங்குமம், தேங்காய் மாவிலை, கூர்ச்சம், வஸ்த்திரம், பஷ்ப மாலைகளால் உரிய மந்திரங்களைக் கூறி அலங்கரித்தல் கும்பாலங்காரம் எனப்பெறும்.

## கும்பாகர்ஷணம்

திருஉருவத்தில் எழுந்தருளி அருள் வழங்கும் தெய்வங்களை அன்போடு, உள்ளுணர்வோடு, பக்தி சிரத்தையுடன் வழிபட்டு நாங்கள் கும்பாபிஷேக விழாவிற்காக அமைத்துள்ள புனிதகலசங்களில் எழுந்தருளி அருளவேண்டும் என பணிவுடன் விண்ணப்பித்து உரிய மந்திரங்களால் அர்ச்சித்து அழைப்பதாகும். இதன் பின் யாத்திராதானம், யாத்திராஹோமம் முதலியன நிகழ்ந்து வலமாக சகல வாத்யகோஷம், வேதபாராயணம், திருமுறைகள் முழங்க யாகசாலையை அடைவது யாகசாலா பிரவேசமாகும். யாகசாலைகளில் இரண்டு, நான்கு, ஆறு, எட்டு காலங்களில் பொருளாதாரத்திற்கும் வசதிக்கும் தக்கவாறு பூஜைகள் நிகழும்.

## யாகசாலை பூஜைகள்

விசேஷ சந்தி, சூர்ய பூஜை, விநாயகர் பூஜை, பிரதான பரிவார யாக பூஜைகள் நான்கு வாயில்களில் உள்ள இருபத்தியேழு கும்பங்களுடன் அர்ச்சிக்கப்பெறும். ஒவ்வொர கால பூஜைகளிலும் ரிக், யஜுர், சாம, அதர்வண வேதபாராயணம் மற்றும் திருமுறை பாராயணம், புராண பாராயணம் முதலியன நிகழும். நிறைவில் பூர்ணாகுதி தீபாராதனைகள் நிகழ்ந்து பிரசாதம் வழங்குவர்.

கற்சிலையில் அமைந்த திருவுருவங்களுக்கு எட்டுவிதமான கூட்டுப் பொருள்களால் உருவாக்கப்பட்ட அஷ்டபந்தனம் சிலை அசையாதவண்ணம் சாத்தப்பெறும். மூலவருக்கு வெள்ளி, தங்கத்தில் முறையே ரஜத, ஸ்வர்ணபந்தனம் செய்யலாம். முன்பாக யந்திரஸ்தாபனமும், நவரத்தின ஸ்தாபனமும் பீடத்தில் நிகழும். பின்னர் எண்ணெய் சாத்தும் வைபவமும் உண்டு. கும்பாபிஷேகத்திற்கு முதல் நாள் இரவு மூர்த்திகளுக்கும் ஸ்தூபிகளுக்கும் பிம்பசுத்தி, ரட்ஷாபந்தனம் நிகழும்.

கும்பாபிஷேக தினத்தன்று காலை யாக பூஜையில் நாடீசந்தானம் என்ற ஸ்பர்சாகுதி என்னும் கிரியை உண்டு. மூலபிம்பம், கும்பம், அக்னி, ஆச்சார்யர், ரிக்விஜத்தை ஒன்றாக மன ஒருமைப்பாட்டுடன் இணைத்து தத்வத்ரய மூர்த்திகளை உரிய ஆகுதிகள் கொடுத்து ஸ்ருக்ஸ்ருவசஹிதம் கர்ப்பக்கிரஹத்தை அடைந்து பூஜிப்பர்.

ஆத்மதத்வத்திற்கும், வித்யாதத்வத்திற்கும், சிவதத்வத்திற்கும் என மூன்று முறை மூலவர்சன்னதி சென்று வருவர். பின்னர் மஹா பூர்ணாகுதி நிகழும்.

உரிய நேரத்தில் யாத்ராதானம் செய்து பின் கலசங்கள் புறப்பட்டு கோபுரங்களையும், விமானங்களையும், சன்னதிகளையும் அடையும். கும்பத்தை அடிமேல் அடிவைத்து மெதுவாக உபசாரத்துடன் அழைத்து வருதல் முறை. பூஜித்தபின் சுபமுகூர்த்தத்தில் சகலவாத்ய கோஷங்களுடன் ராஜகோபுரம் மற்றும் விமான கலசங்களில் கும்பாபிஷேகம் நிகழும். தொடர்ந்து பரிவாரங்களுடன் மூலவருக்கும் மஹா கும்பாபிஷேகம் நிகழும். பின்னர் மஹாபிஷேகம், மாலையில் திருக்கல்யாணம், திருவீதி உலா நடைபெறும்.

திரிபக்ஷ்யஜனம் எனப்படும் 45 நாட்களில் மண்டலாபிஷேகம் நிகழும். 45 நாட்கள் முதல் 48 நாட்களுக்கு அமையும் நல்ல நாட்களில் பூர்த்தி செய்வதுடன் இக்கும்பாபிஷேக விழா நிறைவுபெறும்.

கும்பாபிஷேக தினத்தன்று இராஜ கோபுரத்திலும், விமானங்களிலும் தரிசிப்பது அளவற்ற நல்ல பலன்களையும், வளங்களையும் வழங்கும் என சிவாகமங்கள் கூறும். மூலவரை 45 நாட்களுக்குள் மண்டலாபிஷேக விழாவில் தரிசித்தால் கும்பாபிஷேக தரிசன பலன் உண்டு என்றும் பலன் கூறப்பட்டுள்ளது.

மிக விரிவான சிவாகமக்கிரியைகளை ஓரளவாவது விளக்க முயற்சி செய்துள்ளோம். விரிவஞ்சி இத்துடன் நிறைவு செய்கிறோம்.

# கும்பாபிஷேக விளக்கம்

– கே.ஒய். சுந்தரேச குருக்கள்

நமது சமுதாயத்தில் ஹிந்து ஆலய வழிபாடு மிக முக்கியத்துவம் வாய்ந்தது. ஒவ்வொர ஆலயத்திலும் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகள் சாக்ஷாத் இறைவனின் அர்ச்சாவதாரங்களாகவே கருதப்படுகின்றன. இறைவனுக்கு நாமரூபம் இல்லை. ஆயினும் அருவமான ஒன்றை நம் மனதில் அனுஸந்தானம் செய்து வழிபட இயலாத காரணத்தால் உருவ வழிபாடு அவசியமாகின்றது. அதுவும் அவன் இச்சையாலேயே தனது அகண்டிதமான சக்தியை ஓர் விக்ரஹத்தில் தங்கும்படி செய்துகொண்டு அடியார்களுக்கு அருள்பாலிக்கின்றான் என்பதுதான் நம் ஆன்றோர் கண்ட உண்மையாகும்.

கல்லாலும், மண்ணாலும், சுதையாலும் மனிதனால் செய்யப்பட்ட உருவங்களுக்கு இறைவனின் சாந்நித்தியத்தை உண்டு பண்ணுவதற்காகச் செய்யப்படும் கிரியைகளில் **கும்பாபிஷேகம்** என்பதும் ஒன்று. இதைப்பற்றிய முழு விவரங்களும் சைவாகமங்களில் கிரியாபாதத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. பொதுமக்கள் கும்பாபிஷேகத்தின் நோக்கத்தை அறிந்துகொள்வதற்காக, அதற்கான கிரியைகளில் சில கீழே விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## ஆகமப் பிரதிஷ்டா முறைகள் :

**பிரதிஷ்டைகள்** அனாவர்த்தம், ஆவர்த்தம், புனராவர்த்தம், அந்தரிதம் என நான்கு வகைப்படும்.

**1. அனாவர்த்தம் :** தானாக உண்டான சுயம்பு க்ஷேத்திரங்களில் முதன் முதலாக இயல்பாகத் தெய்வ சான்னித்தியம் உள்ளதை மேலும் அதிகப்படுத்துதல்.

**2. ஆவர்த்தம் :** புதிதாக லிங்கம், **பிம்பம்** முதலியன ஆகம நூல்களில் கூறிய முறைப்படி சிலாசங்கிரஹணம் செய்து, உரு அமைத்து, ஆலயம் நிர்மாணம் செய்யும் முறையைப் பரிசீலனை செய்து தேவபூமியில் ஆலயம் அமைத்துப் பிரதிஷ்டை செய்தல்.

**3. புனராவர்த்தம் :** ஏற்கனவே உள்ள ஆலயங்கள், இடிபாடகள், ஜீர்ணம் முதலியன ஏற்பட்டிருந்தால் அவைகளை ஜீர்ணோத் தாரணம் செய்து அஷ்டபந்தனம், சாந்தி **மஹா கும்பாபிஷேகம்** முதலியன செய்தல்.

**4. அந்தரிதம் :** கோயில் நடை முறையில் நடக்கக் கூடாத அனாசாரங்கள் ஏற்பட்டாலும், மிருகங்கள் மனிதர்கள் திருக்கோயிலினுள் மரித்தாலும் அஷ்டபந்தனம் மலினம் அடைந்தாலும் உடனடியாகச் செய்யவேண்டிய சம்புரோக்ஷணம்.

ப்ரதிஷ்டைக்குரிய கிரியைகள் 64 என்று சில ஆகமங்களிலும், 53 என்று சில ஆகமங்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றில் மிக முக்கியத்துவம் வாய்ந்தவை 13 கிரியைகள். இப்பதின்மூன்று கிரியைகளும் இல்லாமல் எந்த கும்பாபிஷேகமும் நடைபெற முடியாது.

### 1. அனுக்ஞை :

ஆலயம் பழுதுபார்க்கப்பட்டபின் ஓர் சுபதினத்திலே கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்தி வைப்பதற்குத் தகுதியுள்ள ஒருவரை பொது ஜனங்கள் தேர்ந்தெடுத்து இறைவனிடம் அனுமதி பெறுவது.

### 2. விக்னேஸ்வர பூஜை :

எடுத்த காரியம் விக்னமின்றி முடியும் பொருட்டுப் பிரணவ விஸ்வரூபரான கணநாதரை வழிபடுவது. இதற்கு கணபதி ஹோமம் செய்வதுண்டு. இக்கிரியையில் அக்னி காரியம் அவசியம் என்று ஆகமங்கள் வலியுறுத்தகின்றன.

### 3. வாஸ்து சாந்தி :

சில மஹா புராணத்திலும், ஆகமங்களிலும் வாஸ்து புருஷனைப்பற்றி கூறப்பட்டிருக்கிறது. சிவபெருமானின் எட்டு வீரச்செயல்களில் அந்தகாசுர வதம் ஒன்றாகும். அந்தகாசுர யுத்தத்தில் கோபித்த சிவ மூர்த்தியின் வியர்வை பூமியில் விழ அதனின்றும் மூவுலகங்களையும் விழுங்கத்தக்க ஓர் பூதம் தோன்றியது. அது சிவாக்ஞையால்

அந்தகாசுரனுடைய உதிரத்தைக் குடித்தது. பின்பு சிவபெருமானைக் குறித்து தவம் இருந்து பல வரங்களைப்பெற்று உலகத்தை வருத்தியது. தேவர்கள் ஸ்ரீ கண்டருத்ரரிடம் முறையிட்டனர். அவர் அதிபலன் என்பவரை ஏவினார். அதிபலன் அந்த பூதத்தை மாயாபாசங்களால் கட்டி கீழேதள்ளி அவ்வுடம்பின்மீது 58 தேவதைகளை வசிக்கச் செய்தார். அப்பூதத்தை கெடுதி செய்யாமல் அவர்கள் பாதுகாத்து வருகின்றனர். தேவர்கள் அவன் மீது வசித்ததால் அவனுக்கு வாஸ்து புருஷன் எனப் பெயராயிற்று. இந்த வாஸ்து புருஷனால் கும்பாபிஷேக கிரியைகளுக்கு ஊறு நேராதபடி 53 தேவதைகளையும் பூஜை, பலி, ஹோமம் இவற்றால் சாந்தி செய்யும் கிரியையே வாஸ்து சாந்தி எனப்படும்.

### 4. மிருத்ஸங்கிரஹணம் :

அதாவது மண் எடுத்தல் என்று பொருள். அங்குரார்ப்பணத்துக்குத் தேவையான மண்ணை குறிப்பிட்ட திக்கு, லக்ஷணமுள்ள இடத்திலிருந்து வெட்டியெடுத்து அப்பள்ளத்தில் ஏழு கடலால் அபிஷேகம் செய்வதாகும். மண் வெட்டுவதற்கு முன் பூமா தேவியையும் அவளுக்கு அதிபர்களான பிரமன், அஷ்டதிக்பாலகர்கள் இவர்களை வழிபட்டுப் பூமியை வெட்ட வேண்டிய அவசியத்துக்கு மன்னிப்புக் கோரி, அவர்களிடம் உத்திரவு பெற்று, பின்பு மண்ணை எடுக்க வேண்டும். ஏழு கடல் அபிஷேகமாவது : பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், உவர்நீர், நன்னீர் என்பவை. உவர் நீருக்குப் பதிலாய் இளநீரை உபயோகிப்பார்கள். இவற்றை வெட்டிய பள்ளத்தில் மந்திரக்கிரியாபூர்வமாய் விட வேண்டும். மண்வெட்டியின் அளவு, அதன்பிடி எந்த மரத்தால் செய்யப்பட்டிருக்க வேண்டும், மண்ணை ஏந்தும் கலன் இவற்றின் லக்ஷணம் இவை யாவும் சாஸ்திரங்களில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

### 5. அங்குரார்ப்பணம் :

இதற்கு முளை இடுதல் என்பது பொருள். எடுத்த மண்ணை உரிய மந்திரத்தோடு பாலிகைகளிலிட்டு நவதான்யங்களைத் தெளித்து முளைப்பாலிகை அமைப்பது. இது செய்ய இருக்கும் கிரியைகளின் சுபாசுபங்களை அறிவதற்காக ஏற்பட்டது. முளை பசுமையால் ஓங்கி வளர்ந்தால் கிரியைகள் சரிவர நடந்தன என்று பொருள். அப்படியில்லையெனில், மந்திரதோஷம், கிரியாலோபம், அசௌசம் இருப்பதாக உணர்ந்த அதற்குரிய பிராயச்சித்தங் களைச் செய்யவேண்டும் என்பது ஆகம விதி.

### 6. ரக்ஷாபந்தனம் :

இதற்கு காப்புக்கட்டுதல் என்று பொருள். கும்பாபிஷேகத்தை முன்னின்று செய்யும் எஜமானன், அத்வாயு, ஏனைய சிவாச்சாரியார்கள் இவர்களுக்கு அபிமந்திரித்த மஞ்சள் கயிற்றை வலதுகை மணிக்கட்டில் அணிவித்தல், கும்பாபிஷேகத்தில்கலந்துகொள்ளும் சிவாச்சாரியர்களுக்கு, தெய்வாதீனமாய் ஆசௌசம் ஏற்பட்டால் காப்பு அவிழ்க்கப்படும் வரையில் அந்த ஆசௌசம் அவர்களை பாதிக்காது.

### 7. கும்பஸ்தாபனம் :

இந்த கிரியைதான் கும்பாபிஷேகத்தில் அதி முக்கியத்துவம் வாய்ந்தது. கலசம் நிறுவுதல் என்பது பொருள். தங்கம், வெள்ளி, தாமிரம், மண் இவற்றில் ஏதாவதொன்றாலானதாயும், குறிப்பிட்ட அளவு உள்ளதாயும், ஒச்சமில்லாததாயும், அழகாக அமைந்ததாயும் இருக்கும் கலசங்களைத் தேவையான எண்ணிக்கைக்குத் தகுந்தபடி தேர்ந்தெடுத்து, அவற்றில் சிற்ப தோஷம் போகும்படி அபிமந்திரித்து அக்கினியில் காட்டி, சிவப்பு மண் மேலே பூசி, நூலால் சுற்றி, பரிசுத்தமான ஆற்று நீர் அல்லது ஊற்று நீரால் நிரப்பி, மாவிலைகளைச் செருகி அதன் மீது நல்லதொரு தேங்காயை வைத்து, கும்பத்துள் நவரத்தினங்களையும், தங்கம், வெள்ளி இவைகளையும் இட்டுவஸ்திரம் அணிவித்து, புஷ்பம், சந்தனம், விபூதி, குங்குமம் முதலியனவை அணிவித்துத் தானியங்களைப் பரப்பி அதன் மீது கலசத்தை அமைக்க வேண்டும். மேலும் தர்ப்பைக் கூர்ச்சம் தேங்காயின் மீத வைக்கவேண்டும். கலசத்தை இறைவனின் வித்யாதேகமாகக் கருதுதல் வேண்டும். எந்த மூர்த்திக்கு கும்பாபிஷேகம் செய்கின்றோமோ, அந்த மூர்த்தியின் வித்யாதேகம் இதுவாகும். எப்படி எனில் தேங்காய் சிரசாகவும், மாவிலை சிகையாகவும், கும்பவஸ்திரம் தோலாகவும், கும்பத்திற்குப் பூசப்படுகின்ற சிவப்பு மண் இரத்தமாகவும், குடத்தின் உலோகம் மாமிசமாகவும், கும்பதீர்த்தம் மேதையாகவும், தர்ப்பைக் கூர்ச்சம் எலும்பாகவும், கும்பத்தில் சுற்றப்பட்ட நூல்

நரம்பாகவும், கும்பத்திலிட்ட நவரத்தினங்கள் சுக்லமாகவும், நியாஸம் செய்யப்பட்ட மந்திரம் உயிராகவும், கும்பத்தடியில் இடப்படும் தானியம் ஆஸனமாகவும் பாவித்தல் வேண்டும்.

### 8. கலாகர்ஷணம் :

கும்பாபிஷேகம் செய்யப்படும் மூர்த்தியின் கலையை அல்லது சக்தியை ஆகர்ஷித்தல் என்று பொருள். அலங்கரித்த கும்பத்தைக் குறிப்பிட்ட இறைவனின் முன்னே வைத்து அந்த தேவதையை வித்யாவேஹமாகிற கும்பத்தில் இறக்கி குறிப்பிட்ட காலம் வரையில் அதில் ஆவிர்பவிக்கும்படி, மந்திரம், கிரியை பாவனைகளால் பிரார்த்தித்து அத்தேவதையின் கலையைக் கும்பத்தில் ஆகர்ஷித்து அக்கலசத்தை சத்பாத்திரமான ஆசாரியன் தலையில் எழுந்தருளப்பண்ணி, சகல உபசாரங்களுடன் ஆலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து யாகசாலைக்குக் கொண்டு வர வேண்டும். உபசாரங்களாவன : சகல விதமான வாத்தய கோஷங்கள், நான்கு வேத பாராயணம், திருமுறை ஓதுதல், சாமரம், குடை, சுருட்டி, கொடி, விமானம், மங்கள தீபம், தீவர்த்தி இவைகளோடு அழைத்து வரும்போது வாசனைப்பொடி, சந்தனம், பன்னீர் இவற்றை தெளித்துக்கொண்டு செல்லவேண்டும். அஷ்டதிக்குகளிலும் தேங்காய் விடலை போட்டு கற்பூரம் காட்டவேண்டும்.

### 9. யாகசாலை :

ஆலயத்தின் வடமேற்கு மூலை தவிர வேறு திக்குகளிலே ஏதாவதொன்றில் யாகசாலை அமைக்கவேண்டும். வடகிழக்கு மூலை உத்தமமாகக் கருதப்படுகிறது. அதன் விஸ்தீரணம் **3** முதல் **13** முழங்களாகவோ, **20** அல்லது **32** முழங்களாகவோ சதுரமாக அமையவேண்டும்.

இந்த யாகசாலையில் இரண்டு காலம் முதல் ஆறு காலம் வரையில் ஹோமம், பலி, தியானம், பூஜை முதலியவற்றால் ஆராதனை நடத்த வேண்டும். தூப தீப ஷோடசோபசாரங்கள், வேதபாராயணம், திருமுறை ஓதுதல் முதலியவற்றோடு ஒரு கால ஆராதனை முடியும். இவ்வாறு 4, 6 அல்லது 8 காலங்கள் சக்திக்குத் தக்கபடி யாகசாலை பூஜைகள் நடத்தலாம். இவ்வாறு பூஜை செய்வதன் மூலம், பிரதான கலசங்களில் ஆகர்ஷணம் செய்யப்பட்ட இறைவன், ஏனைய தேவதைகள் யாவரும் அந்தந்த கலசங்களில் தமது பூர்ண கலைகளோடு சாந்நித்யமாகின்றார்கள். மந்திரங்களோடு செய்யப்படும் கிரியைகளால் ஏற்படும் சூக்ஷ்ம சலனங்களால், குறிப்பிட்ட தேவாம்சம் குறிப்பிட்ட கலசத்தில் ஆவிர்பவிக்கின்றன.

யாகபூஜையானது 6 காலம் செய்தல் உத்தமம்.
4 காலம் செய்தல் மத்திமம்
2 காலம் செய்தல் கடைசிபக்ஷம்

### 10. அஷ்டபந்தனம் :

இது பீடத்தையும் பிம்பத்தையும் சேர்க்கும் ஒரு தெய்வீக மருந்தாகும். சுக்கான், குங்கிலியம், கொம்பரக்கு, காவி, செம்பஞ்சு, லிங்கம், வெள்ளை மெழுகு, வெண்ணை இந்த எட்டு மருந்துகளை அதற்குரிய அளவுகொண்டு சேர்த்து இடித்து சாத்தவேண்டும். பீடம் என்பது ஒரு சக்தி. இம்மருந்து பீட சக்தியையும், இறைவனின் திருவருள் சக்தியையும் தொடர்புடையதாய் ஒன்றுபடுத்தி தரிசிப்பவர்களுக்கு அனுக்ரஹ சக்தியை அளிக்க வல்லதாக இருக்கிறது.

### 11. பிம்பசுத்தி :

கலாகர்ஷணம் செய்த பின் பிம்பத்திற்கு ஏற்பட்ட சிற்பதோஷ நிவர்த்தியின் பொருட்டு செய்யப்படும் சம்ஸ்காரம், ஐந்துவிதமான படை, தளிர், எட்டுவிதமான மண் இவைகளைக்கொண்டு ஸ்தபனம் வைத்து ஜபம் செய்து அபிஷேகம் செய்வதாகும்.

### 12. ஸ்பர்ஸாஹுதி :

ஹோமங்கள் முடிவுற்றதும் இறைவன் கலசத்தில் தனது பூர்ண கலைகளோடு ஆவிர்பவித்து விட்டார். நமது வேண்டுகோளுக் கிணங்கி தன் இச்சையாலே தனது முழுச் சக்தியையும் கலச தீர்த்தத்தில் செலுத்தி யிருக்கிறார். இந்த சக்தியைத் திரும்பவும் விக்ரஹத்தில் சேர்க்கும் கிரியைக்கு ஸ்பர்ஸாஹுதி என்று பெயர். யாகசாலையில் இருக்கும் கலசத்திற்கும் விக்ரஹத்திற்கும் தங்கக்கம்பி, வெள்ளிக்கம்பி அல்லது தர்ப்பைக் கயிறு மூலம் இணைப்பு ஏற்படுத்தி, யாகசாலையில் செய்யப்பட்ட ஹோமங்களையும், தத்துவங்களையும், தத்துவ அதிபர்களையும் விக்ரஹத்தில் சேர்த்தல் 'ஸ்பர்ஸாஹுதி' எனப்படும். இந்த இணைப்புக்கு 'நாடி சந்தானம்' என்றும் பெயர்.



## 13. கும்பாபிஷேகம் :

பிரதான கலசத்தை சாதகாசாரியர் தலையில் எடுத்துக்கொண்டு சகலவிதமான உபசாரங்களுடன் ஆலயத்தை வலம்வந்து கர்ப்பகிருஹத்துக்குள் பிரவேசித்து கலசத்தை மூல விக்ரஹத்தின் முன் வைத்து கலசத்தில் ஆவிர்பவித்திருக்கும் இறைவனை விக்ரஹத்தில் கூடும்படி மந்திர பூர்வமாய் பிரார்த்தித்து அக்கலச நீரை விக்ரஹத்துக்கு அபிஷேகம் செய்யவேண்டும். அதனால் கல்லாலும், மரத்தாலும், சுதையாலும் உலோகத்தாலும் ஆன படிவங்கள், இறைவனின் பூர்ண கலைகளையும் தாங்கும் கேந்திரமாகி விடுகின்றன. இறைவனுடைய சக்தியைக் கிரஹித்திருப்பதால் அவை விக்கிரஹங்கள் எனப்படுகின்றன. அதில் **'வி'** என்ற எழுத்து சிரேஷ்டமானது ; சிறந்தது என்ற பொருளில் வந்தது. இறைவனின் விசேஷமான பிரதிநிதி என்றும் சொல்லலாம். இது போன்றே ஆலயத்திலுள்ள ஏனைய பரிவார தேவதைகளுக்கு, கோபுர ஸ்தூபிகளுக்கும் மந்திர பூர்வமாய் அதற்கு ஏற்பட்ட கலசங்களின் மந்திர தீர்த்தங்களை அபிஷேகம் செய்வதால் ஆலயம் இறைவனின் வீடாகவும் (கோயிலாகவும்) ஆகிவிடுகின்றது.

விக்ரஹத்தை எழுந்தருளப்பண்ணியிருக்கும் பீடத்துக்கும் படிவத்துக்கும் இணைப்பு ஏற்படுத்தும் எட்டுச் சரக்குகளை மந்திர பூர்வமாகச் சேர்க்கப்படும் மருந்துக்கு 'அஷ்ட பந்தனம்' என்று பெயர். 'அஷ்ட பந்தனம்' அல்லது 'மருந்து சாத்துதல்' கிரியை செய்யப்பட்டால் ஸ்பரிசாஹுதிக்கு முன்னும் அஷ்டபந்தனத்துக்குப் பின்னும் 'பிம்ப சுத்தி' என்ற கிரியையும் செய்யவேண்டும். குறிப்பிட்ட சில வேர்களும், மூலிகைகளும் சேர்ந்த ஒர குழம்பால் படிவத்தைச் சுத்தி செய்தல் பிம்பசுத்தி.

## 14. மஹாபிஷேகம் :

கலச நீரால் அபிஷேகம் செய்த பின் விக்ரஹத்துக்கு பூர்ணாபிஷேகம் செய்து பூர்ண நைவேத்யம் செய்து ஷோட சோபசாரம் செய்ய வேண்டும். இதனால் இதுவரை யாகத்தில் பங்குகொண்டிருந்த தேவதைகளும் உயிர்களும் திருப்தியடைகிறார்கள். இது மஹாஹவிர் நிவேதனமாகும்.

## 15. மண்டலாபிஷேகம் :

இதற்கு **த்ரைபக்ஷிகம்** என்று பெயர். மூன்று பக்ஷங்கள் முறைப்படி விசேஷமாய் ஆராதனை நடத்தி முடிவில் பூர்ணாபிஷேகம் செய்து ரக்ஷாபந்தன விஸர்ஜனம் செய்தல் மண்டலாபிஷேகமாகும்.

இவ்வாறு ஆகமங்களில் விதிக்கப்பட்ட முறைப்படி யதோக்தமாய் கும்பாபிஷேகம் செய்தால் இறைவன் தன்பரம கருணையால் குறிப்பிட்ட விக்ரஹத்தில் அவதரித்து பூர்ண கலையுடன் நித்திய வாஸம் செய்கின்றார். அந்த விக்ரஹங்களில் இருந்து வெளிப்படும் சூக்ஷ்ம சலனங்கள் சேவார்த்திகளுக்கு சதுர்வித புருஷார்த்தங்களையும் நல்குகின்றன. இத்தகைய ஆலயம் அமைத்த க்ஷேத்திரத்தில் வசிக்கும் ஸகல மக்களுக்கும் க்ஷேமம் ஏற்படுகிறது. ஒருவன் ஆயுளில் மூன்று கும்பாபிஷேகத்தை தரிசித்தால் அவனுடைய பாபங்கள் நசிந்து விடுகின்றன என்பது ஆகமங்களில் கூறப்படும் பல சுருதியாகும்.

## 16.கும்பாபிஷேக தத்துவம்

அங்கிங்கெனாது எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கும் இறைவனை ஆன்மாக்கள் உணர்வுக்குப் புலனாகும் நிலையில் உணர்த்தப்படும் போது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், ஆன்மா என்ற எட்டு குணங்களை வடிவங்களாய் உணர்கிறான். இவ் எட்டுக்கும் வேறாக உலகில் எதையும் உணரவும், காணவும் முடியாது. இப்படி எண் குணத்தானாகி எங்கும் நீக்கமற நிறைந்த பரம்பொருளை ஓரிடத்தில் பிரகாசிக்கச் செய்யும் பொருட்டு மண்வடிவாகக் குடத்திலும், நீர்வடிவாகக் கும்ப தீர்த்தங்களிலும், தீ வடிவாக ஓம குண்டத்திலும், காற்று வடிவாக மந்திர உச்சரிப்பிலும், ஆகாய வடிவாக ஒலியின் விரிவிலும், ஆதித்ய வடிவமாக ஒளியிலும், இந்துவடிவாக மனத்தின் குழைவாலும், ஆன்ம வடிவாக உயிர்களின் ஏகோபித்த கூட்டுப் பிரார்த்தனையிலும், வழிபாடு செய்து ஓரிடத்தில் (குறிப்பிட்ட மூர்த்தி பிம்பத்தில்) நிலைபெறச் செய்தல் கும்பாபிஷேகத்தின் தத்துவமாகும்.

# கும்பாபிஷேக முறைகள்

– சிவத்திரு. சே. வைத்தியநாத சிவாசாரியர்

கும்பாபிஷேகத்தில் தனபூஜை, ஸ்ரீவிக்னேஸ்வர பூஜை முதல் சகல காரியங்களையும் இங்கு ஓரளவு விளக்குவோம். அதன் தத்துவங்களையும் காண்போம்.

உத்தம புண்ணியச் செயல்களால் சேகரிக்கப்பட்ட திரவியத்தைச் சிவார்ப்பணம் செய்து அதில் ஒரு பாகத்திரவியத்தைச் சுவர்ண பாத்திரத்தில் பட்டு விரித்து அதன் மேல் வைத்துப் பரமசிவார்ப்பணமாக ஆசாரியர் கையில் பிரார்த்தனையுடன் கொடுத்து அவர் மூலமாக முறைப்படி தனபூஜை செய்யவேண்டும்.

**அனுக்ஞை** என்பது செய்யப் போகிற கும்பாபிஷேகத்தை ஆசாரியர் எஜமானராக இருந்து நடத்தத் தகுதியுள்ளவர் எனச் சபையோர்களிடம் அனுமதி பெற்றுப் பின் இறைவனிடமும் இறைவியிடமும் அனுமதி பெறுவதாகும். பசுவாகிய நமக்குப் பதியாக விளங்கும் பசுபதி–பரமேசுவரனிடம் சேகரிக்கப்பட்ட திரவியத்தை மும்மலங்களும் நீக்கக் கோரி அர்ப்பணம் செய்து அவருடைய அனுக்ரஹபூர்வமாகக் கிரஹித்துக் கொண்டு காரியங்களில் வினியோகம் செய்யப்படுவது அஷ்ட ஐஸ்வர்களையும் அளிக்க வல்லது என்பதே இதன் தத்துவமாகும். செய்யப்படும் காரியத்தை இடையூறின்றி முடிக்க வேண்டியதன் பொருட்டு விக்கினத்தைப் போக்க வல்ல விநாயகரை வணங்கிப் பிரார்த்தித்து அனுமதி பெறுவது **விக்னேஸ்வரபூஜை.** இறவாதவரம் வாங்கி வாஸ்துபுருஷன் என்ற அசுரனின் தொந்தரவு இல்லாமலிருக்கப் பிரமன் முதலான தேவர்களை – அவ்வசுரனை காவல் புரியும் ஐம்பத்து மூன்று தேவர்களையும் பூஜை பலி முதலியவை களால் திருப்தி செய்து இடையூற்றை நீக்குவதற்கு **வாஸ்துசாந்தி** செய்யவேண்டும்.

அங்குரார்ப்பணம் எனக்கிரியை செய்வதற்கு மண்ணை மண்ணுக்கு அதிபதியான பூமியையும் காவலர்களான இந்திரன் முதலிய திக்பாலர்களையும் தலைவரான பிரமனையும் பிரார்த்தித்து அவர்களின் அனுமதி பெற்று மண்ணை வெட்டி எடுப்பது **மிருத்ஸங்கிரஹணம்.** வெட்டிய தோஷம் நீங்க ஏழு கடலை வரவழைத்துப் பூஜை செய்து வெட்டிய பள்ளத்தில் அபிஷேகம் செய்யவேண்டும். பாலிகைகளில் பால் கலந்த தானியங்களை மந்திரபூர்வமாகத் தெளித்து முளைக்கச் செய்வது **அங்குரார்ப்பணம்.** தெளிக்கப்பட்ட வித்துகள் முறையாகவும் பசுமையாகவும் முளைத்தால் கிரியை சரியான முறையில் அமைந்தது என்று உணர்ந்து கொள்ள வேண்டும். அது மாறுதலாக இருந்தால் குறைபாடு இருப்பதாக உணர்ந்து அதற்குத்தக்க பிராயச்சித்தம் செய்ய வேண்டும். அங்குரம் இல்லாத கிரியை பயனற்றது.

ஆசாரியருக்குச் செய்யப்படும் ரக்ஷயினால் கிரியை பூர்த்தியாவதற்குள் தெய்வீகமாய் ஆசௌசாதிகள் (தீட்டுகள்) நேர்ந்தாலும் அக்கிரியைக்குக் குந்தகம் ஏற்படாத வகையில் ஆசாரியனை ரக்ஷாபந்தனம் விஸர்ஜனம் செய்யும் வரையில் தீட்டு முதலான தோஷம் அணுகாமல் காப்பது **ரக்ஷாபந்தனம்.** இறைவனை ஆவாஹனம் செய்யும் பொருட்டுக் கடத்தை மந்திரபூர்வமாக அலங்கரித்து வித்யா தேகமாகப் பாவித்துக் குடத்திற்குச் சாத்தப்பட்ட வஸ்திரம் தோலாகவும் மேல் பூசப்பட்ட மண் இரத்தமாகவும் செய் பொருள் மாமிசமாகவும் ஜலம் மேதா தாதுவாகவும் கூர்ச்சம் எலும்பாகவும், சுற்றப்பட்ட நூலை நரம்பாகவும் குடத்தில் போடப்பட்ட இரத்னம் சுவர்ணம் சுக்லமாகவும் நியாஸம் செய்யப்பட்ட

மந்திரம் ஜீவனாகவும் போடப்பட்ட தானியம் ஆஸனமாகவும் உள்ளன. **கும்பஸ்தாபனம்**, மூலஸ்தானத்தில் சுவாமியை அலங்காரம் செய்த வித்யாதேகமாகப் பாவிக்கப்பட்ட இடத்தில் குருபதேச முறைப்படி ஆகர்ஷணம் செய்து குறிப்பிட்ட காலம் வரையில் கடத்தில் இருக்கச் செய்வது **கலாகர்ஷணம்**, சுவாமியை முறைப்படிக் குடத்தில் **ஆகர்ஷணம்** செய்து அக்குடத்தை யாகசாலையில் வைத்து ஒன்பது, ஐந்து, ஏக, குண்ட முறைப்படி தேசகால கிரியை முதலியவைகளை அனுசரித்து ஒவ்வொரு காலமும் பூஜை செய்வது **யாகபூஜை** பீடத்தையும், பிம்பத்தையும் சேர்த்துப் பல வருஷங்கள் மூர்த்தியை அசையாமல் காப்பது அஷ்டபந்தன மருந்தின் அபூர்வ சக்தியாகும். யாகசாலையில் செய்யப்பட்ட ஹோமங்களையும் தத்துவங்களையும் தத்துவத்தில் அதிபர்களையும் (நாடீ சந்தானம்) தங்கக் கம்பி முதலியவைகளின் மூலம் அந்த அந்தமூலஸ்தானத்தில் சேர்ப்பது **ஸ்பர்சாகுதி**.

யாகசாலையில் முறைப்படி கும்பங்களில் சிவலிங்கத்தைப் போலவே ஷடத்வா வடிவாக இருப்பதால் அதன் அடியில் ஆத்ம தத்துவமும், நடுவில் வித்யா தத்துவமும் முடிவில் சிவதத்துவமும் பூஜிக்கப்படுகிறது. கும்பத்தில் ஸர்வ தீர்த்தங்களும் பஞ்சாவரண தேவதைகளும் பிரதிஷ்டை செய்து பூஜை செய்யப்படும். முறையாகப் பூஜித்த மூர்த்திகளை எழுந்தருளச் செய்து அந்தந்த மூலஸ்தானத்திலும் ஸ்தூபியிலும் முன் வைத்துக் குருபதேச முறைப்படி கும்பத்திலிருந்து பிம்பத்திலும், ஸ்தூபியிலும் கூர்ச்சங்களைச் சேர்த்து தியான பூர்வமாகத் தியானம் செய்து அக்கும்ப தீர்த்தங்களை அந்தந்த மூர்த்திகளுக்கு அபிஷேகம் செய்வது **மஹா கும்பாபிஷேகம்**. மூர்த்தி சூக்ஷம ரூபமாகவும் ஸ்தூபி ஸ்தூலவரூபமாகவும் கூறப்பட்டிருக்கிறது. ஸ்தூல ரூபமான ஸ்தூபியின் அபிஷேகத்தைத் தரிசிப்பவர்களும் மூலஸ்தானத்தின் அபிஷேகத்தைத் தரிசிப்பவர்களும் எல்லா நன்மைகளும் பெறுவார்கள். நாடு செழிக்கும். மஹா கும்பாபிஷேக தரிசனத்தால் அன்றுவரை செய்த பாவங்கள் தீரும். சிவாபரதங்களும் தீரும். கும்பாபிஷேகம் பெருஞ் சாந்தி என்று திருஞான சம்பந்தர் அருளினார்.

*உரிஞ்சாய வாழ்கை யமனுடைய போக்கும்*
*இருஞ்சாக் கியர்க ளெடத்துரைப்ப நாட்டில்*
*கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்சர மமர்ந்தான்*
*பெருஞ்சாந்தி காணாதேபோதியோ பூம்பாவாய்.*
*(மயிலாப்பூர் தேவாரம்)*



## நமஸ்காரத்தின் வகைகள்

தலைமட்டும் குனிந்து வணங்கல் - ஏகாங்க நமஸ்காரம்
தலைமேல் இருகரம் கூப்பி வணங்கல் - திரியங்க நமஸ்காரம்
கை இரண்டு, முழந்தாள் இரண்டு, சிரம்
ஆக ஐந்தும் நிலம் பொருந்த வணங்கல் - பஞ்சாங்க நமஸ்காரம்
தலை, கையிரண்டு, இரு செவிகள், இருமுழந்தாள்
மார்பு இவை பூமியில் படும்படி வணங்கல் - அஷ்டாங்க நமஸ்காரம்

## சாஷ்டாங்க நமஸ்காரத்தின் அர்த்தங்கள்

நம் உடலில் உள்ள எட்டு அங்கங்களும் பூமியில் படும்படி வீழ்ந்து வணங்குதல் சாஷ்டாங்க நமஸ்காரம் எனப்படும். இது தமிழில் தண்டனிடுதல் எனப்படும். ஆதரமற்ற ஒரு தண்டம் (கோல்) விழுவதைப் போல இறைவனையே அடைக்கலமாகக் கொண்டு அவனை முழுவதும் சரண் அடைவதன் - உள்ளத்தின் வெளிப்பாடே (சக + அஷ்ட + அங்க) சாஷ்டாங்க நமஸ்காரம் ஆகும்.

# அட்ட பந்தனம்

– கம்பன் அடிப்பொடி

திருக்கோயில்களில் கடவுண் மங்கலம் (பிரதிஷ்டை) செய்யப்பெறும் கல்லால் ஆன தெய்வப் படிமங்கள் ஆடாமல் நிலைபெற, இருப்பிடம் (பீடம்), படிமத்தின் அடிப்பகுதி இரண்டையும் பொருத்திப் படியச் செய்யும் ஒரு கூட்டுக் கட்டுப்பொருளை அட்ட பந்தனம் என்பர். இப்பொருள் ஓர் அருமையான படைப்பு. அற்புதமான கண்டுபிடிப்பு. எட்டுப் பண்டங்களின் கலவையானதாலும், இருப்பிடத்தையும், தெய்வப் படிமத்தையும் இணைத்துப் பிணைப்பதாலும் இது "அட்டபந்தனம்" எனப் பெயர் பெறுவதாயிற்று.

**அட்டபந்தன மருந்தில் கலக்கும் பொருள்கள் :**

1. கொம்பரக்கு
2. சுக்கான் தூள்
3. குங்கிலியம்
4. கற்காவி
5. செம்பஞ்சு
6. சாதிலிங்கம்
7. தேன் மெழுகு
8. எருமை வெண்ணெய்

ஆகிய எட்டுமே.

இவற்றை எல்லாம் கலந்து செய்யும் முறை இருவகையாகும். ஒன்று இடிமுறை ; மற்றது காய்ச்சுமுறை ; காய்ச்சு முறை மிக விரைவாக ஆகிவிடும். ஆனால் காய்ச்சு மருந்து சார்த்தியதை அகற்ற வேண்டிய நிலை ஏற்பட்டால் அகற்றல் கிட்டத்தட்ட இயலாது. வலிந்து செயற்படும் பொழுது சிலை உருவிற்குச் சேதம் விளையவும் கூடும். ஆனதால் மிகப் பெரும்பாலும் இடிமுறையை மேற்கொள்ளலே நன்று.

மேலே சொன்ன பண்டங்களை நன்கு சோதித்து வாங்கவேண்டும். பின்னர், தூசு, துப்பட்டை முதலிய களைந்து தூய்மை செய்ய வேண்டும். அதன் பின்னர் அளவுப்படி கலக்கவேண்டும். கலந்தபின் இடிக்க வேண்டும்.

**1. கொம்பரக்கு :** இது அவலரக்கு அல்ல. மரப்பட்டையுடன் ஒட்டிக்கொண்டிருக்கும். இது தான் தூய்மையானது ; இயற்கையானது ; கலப்பற்றது ; இதை வாங்கிப் பொடித்து மரப்பட்டை முதலியவற்றை நீக்கிச் சுத்தமாக்கி வைத்துக்கொள்ளவேண்டும்.

**2. சுக்கான் தூள் :** சுக்கானில் பல நிறமும் இருவகையும் உண்டு. வெள்ளை நிறம் நன்று; கபில நிறம் கொள்ளலாம் ; கருமை நிறம் கூடாது. இதைக் கொண்டு வந்ததும் முதலில் சிறிது சுக்கானைத் தூளாக்கி, அடுப்பில் காயும் இரும்புச் சட்டியிலிட்டு வறுத்துப் பார்க்கவேண்டும். படபட என்று (உப்பைப் போல) வெடித்தால், அவ்வகைச் சுக்கான் கூடவே கூடாது. ரவை, மணல் போல வெடிக்காமல் இருந்தால் அவ்வகைச் சுக்கான்தான் உகந்தது.

**3. குங்கிலியம் :** துண்டுத்துகள், தூசி இல்லாமல் பொறுக்கி எடுத்துப் பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

**4. கற்காவி :** இஃது அழுக்குச் சிவப்பு நிறமாகக் கட்டியாய் இருக்கும். பூங்காவி என்பதல்ல இது. கடைகளில் காவித்தூள் என்று பலவகைக் கலப்படங்கள் உண்டு. அவற்றை வாங்கக்கூடாது. கட்டிகட்டியாய் இருக்கும். கற்காவியையே வாங்கி, மேலே படிந்துள்ள தூசிகளைப் புடைத்துப் போக்கிவிட்டு, இடித்துப் பொடியாக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

**5. செம்பஞ்சு :** இஃது இயற்கையாகவே வாதாம்கொட்டை நிறமுடையது. பீகார்ப் பக்கத்திலிருந்து வருவது. 'கோத்தி' என்று பெயர். இதுதான் உகந்தது. சிவப்புச் சாயம் ஏற்றி அடை அடையாய்த் தட்டி வைத்துக்கொண்டு அதுதான் செம்பஞ்சு என்று ஏமாற்றுவோரும் ஏமாறுவோரும் மிக அதிகம். கோத்தி', பஞ்சு கதர்க்கடைகளில் சொல்லி வரவழைக்கச் செய்யலாம். இதையும் சருகு, சொத்தை, காம்பு முதலியன இல்லாமல் பழுது நீக்கி வைத்துக்கொள்ள வேண்டும்.

**6. சாதிலிங்கம் :** இதில் பலவகை உண்டு. உலாந்தாவிலிருந்து வருவதுதான் தரத்தால் உயர்ந்தது. கலவைப் பண்டம் எட்டிலும் விலை மிக்கது சாதிலிங்கமே. அட்டபந்தனத்தின் முக்கியமான பொருள் இது. விலை மிகுதியை எண்ணி அளவைக் குறைப்பதும், தரமற்ற மலிவுச் சரக்கை வாங்குவதும் இன்று மலிந்து காணப்படுகின்றன. அப்படிச் செய்வது முறைகேடாகும். இஃது இரும்பைப் போலக் கனமிக்க பண்டமாகும். இதைப்பொடி செய்தல் எளிது. இதையும் நன்கு பொடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.





**7. தேன்மெழுகு :** இதில் இருவகை உண்டு. ஒன்று மஞ்சள் நிறமுள்ளது. அதை மஞ்சண மெழுகு என்பர். மற்றொன்று வெண்மை நிறமாக இருக்கும். மஞ்சண மெழுகில் தேன் கலந்திருக்கும். வெண் மெழுகில் தேன் இல்லை. இதுதான் உகந்தது. வெண் மெழுகு என்று சில இடங்களில் மெழுகுவர்த்திக் குழம்பை ஆறவைத்து ஏமாற்றுவார்கள். வாயில் சிறிது கிள்ளிப் போட்டுச் சுவைத்துப் பார்த்தால் உண்மை புலப்பட்டுவிடும்.

**8. எருமை வெண்ணெய் :** பசுவின் வெண்ணெயில் கொழுப்புச் சத்துக் குறைவு. ஆகவே, அது கூடாது. எருமை வெண்ணெய்தான் உகந்தது. இதிலும் சிறிதும் நீர்ச்சத்தின்றி முழுதும் அகற்றப்பட வேண்டும். நெருப்பு, வெயில், வேறுவகை வெம்மை பயன்படுத்தப்பட முடியாதவை. அவற்றால் வெண்ணெய் உருகிவிடும். ஆனதால் புதிய மண்பானையை எடுத்துப் பானைக்கு ஒரு வீசை வெண்ணெயைப் புறத்தில் கால் அங்குலக் கனமாக அப்பி வெம்மை தாக்காத குளிர்ந்த, இருண்ட அறையில் இரண்டல்லது மூன்று நாட்கள் வாய் கீழாகப் பானையைக் கவிழ்த்து வைத்திருக்க வேண்டும். பானை வெண்ணையில் உள்ள நீர்ச்சத்து முழுவதையும் உறிஞ்சிக்கொள்ள, வெண்ணைய் பக்குவமாய் ஆகிவிடும். தேவைக்கேற்ப பானைகளின் எண்ணிக்கையைக் கூட்டிக்கொள்ள வேண்டும்.

எல்லாப் பண்டங்களும் ஆயத்தமான பிறகு மர உரலில் இடிக்க வேண்டும். கல்லுரல் கூடாது. ஒவ்வோர் உருண்டைக்கும் குறிப்பிட்ட அளவாக ஏழு பண்டங்களையும் உரலில் இட்டுத் தேவைக்கு ஏற்ப வெண்ணெயைச் சிறிது சிறிதாகச் சேர்த்து ஒவ்வோர் உருண்டையையும் சுமார் அரை மணி நேரம் இடித்துப் பின்னர் உரலிலிருந்து எடுத்து உருட்டித் தலையில் ஆணிக் கொண்டையால் ஒரு குத்துக் குத்தி வைத்துக்கொள்ள வேண்டும். முதல் இடி முடிந்ததும் ஒரு குத்து. இரண்டாம் முறை இடித்தபின் இரண்டு குத்து. இப்படி எட்டு முறை இடிக்கவேண்டும். ஓர் இடிக்கும் அடுத்த இடிக்கும் இடையில் குறைந்தது இரண்டு நாள் இடைவெளி இருக்க வேண்டும்.

இனி அளவைப் பார்ப்போம். ஒவ்வோர் உருண்டைக்கும் :

| | | | |
|---|---|---|---|
| சுக்கான் தூள் | : | $25\frac{1}{2}$ | தோலா |
| குங்கிலியம் | : | 9 | தோலா |
| கற்காவி | : | $7\frac{1}{2}$ | தோலா |
| இலிங்கம் | : | $7\frac{1}{2}$ | தோலா |
| அரக்கு | : | $3\frac{1}{4}$ | தோலா |
| மெழுகு | : | $3\frac{1}{4}$ | தோலா |
| செம்பஞ்சு | : | 1 | தோலா |
| எருமை எண்ணெய் | : | $7\frac{1}{2}$ | தோலா |

(இஃது எட்டு இடிக்கும் சேர்ந்துள்ள உத்தேச அளவு. சிறிது கூடவும் ஆகலாம்)

இவற்றை எல்லாம் மர உரலில் ஒவ்வொரு சரக்காக இட்டு ஒன்றோடு ஒன்று கலந்து ஒன்று சேரும்படி இடிக்க வேண்டும். முதல் ஆறு பொருள்களும் செமண்டு, சுண்ணாம்பு, மணல் போன்றவை. ஏழாவதாக உள்ள பஞ்சு கம்பிவலை போன்றது. வெண்ணெய்தான் இந்தக் காங்க்ரீட்டிற்கு நீர் போன்றது.

இந்த மருந்து கலந்து இடிப்பதில் பண்டத்தூய்மை, பண்டங்களின் சேர்மான அளவு, இடிக்கும் கால அளவு மூன்றும் மிக முக்கியம். அத்துடன் இடிக்கின்றவர்களின் உடல் தூய்மை, மனத்தூய்மை முதலியன மிக மிக முக்கியம். இடிக்கும் பொழுது இடிக்கும் ஆட்கள் ஆலயத்திற்கு ஏற்ப, "சிவசிவ" அல்லது "நாராயணா" அல்லது "வேல் வேல் முருகா" என்பன போன்ற இறைவன் திருப்பேர்களை உச்சரித்துக்கொண்டே இடிக்க வேண்டும். இப்படிச் செய்த அட்டபந்தன மருந்து சார்த்திக் குட நீராட்டுச் செய்த திருக்கோயில்களில் அம்மருந்து எவ்விதக் குறைபாடும் நேராது, மிக நீண்ட நாட்களாய் இலங்கி வருதலைக் கண்கூடாகக் காணமுடிகிறது.

எனவே, இடிக்கப் புகுமுன் இடிப்போர்களைக் குளிக்கச் செய்து, திருநீறு முதலானவற்றை அணிந்துகொண்டு விநாயகர் வணக்கம் செய்து கொண்டபின் ஒவ்வொரு குத்துக்கும் "சிவசிவ" போன்ற நாமங்களைச் சொல்லிக்கொண்டே இடிக்கச் செய்ய வேண்டும் என்பது எளியேன் ஏற்பாடு.

இவற்றில் பெரும்பாலோர் போதிய அக்கறை காட்டுவதில்லை. வாணவேடிக்கை, பந்தல் அலங்காரம், யாகசாலைச் சோடனை போன்றவற்றில் ஆயிரம் ஆயிரமாகப் பொருள் விரயம் செய்பவர்கள் இன்றியமையாத அட்டபந்தன மருந்தைப்ப பற்றிக் கவலைப்படுவதே இல்லை. யார் யாரோ செய்யும் செங்கல் தூள் உருண்டைகளை ரூ. 3 அல்லது 4 கொடுத்து வாங்கிவந்து எப்படியோ வெண்ணெய்ப் பலத்தால் குழைத்து அப்பிவிட்டுக் "கும்பாபிஷேகம்" என்ற பெயரில் பல்லாயிரம் ரூபாய்களை விரயம் செய்வதை எண்ணி வருந்தாதிருக்க முடியவில்லை. இதற்குக் காரணம் குடநீராட்டு விழாவின் உண்மைத் தத்துவத்தையும், அதன் இன்றியமையாத துறைகளையும் அறியாமையே எனலாம்.

என்னைக் கேட்டால் அட்டபந்தன மருந்து தான் அனைத்திலும் தலையானதென்பேன். இதில் சிக்கனம் அல்லது அலட்சியம் காட்டுபவர்களை ஆத்திகர் என எங்ஙனம் கூறமுடியும் ?

மேலே கூறிய முறை இருப்பிடத்தையும் படிமத்தையும் இணைத்துப் பிணைப்பதற்குச் செய்வதாகும். இருப்பிடத்தையும், துணை யிருப்பிடத்தையும் (பீடத்தையும், உப பீடத்தையும்) இசைப்பதற்குத் திரிபந்தனம் என்னும் முக்கூட்டுப் பொருளே உகந்தது. இதற்கு வேண்டியவை. சுக்கான் தூள், சுத்தம் செய்த சர்க்கரை, முற்றக் கனிந்த பேயன்பழம் ஆகிய மூன்றுமே. சுக்கானைச் சோதித்து வெடி சுக்கான் அல்லாத நற்சுக்கான் கற்களை நன்கு பொடித்துப் பெருஞ்சல்லடையாகச் சலித்து அதில் வேண்டிய அளவை எடுத்து வாயகன்ற மண் அல்லது களிப்பேறாத ஒரு பாத்திரத்தில் இட்டுச் சிறிது சிறிதாகச் சர்க்கரையும், தோல் கறுத்துக் கிட்டத்தட்ட அழுகியது போலத் தோன்றும் பேயன் வாழைக் கனியையும் சேர்த்துப் பிசைந்துகொண்டே வரும்பொழுது கைதாங்காத அளவு சூடு வந்ததும் கையை எடுத்துவிட்டு மத்து முதலிய மரக்கருவியால் நன்கு குழப்பி மத்திக்க வேண்டும். கூழ்போல ஆனதும் எடுத்து இரு கற்களுக்கும் இடையில் அரைக்கால் அங்குல அளவு வைத்துக் கற்களை முறைப்படி ஒன்றின்மேல் ஒன்றாய்ப் படியவைத்துவிட வேண்டும். கூட்டுமுறை செம்மையாக அமைந்துவிட்டால் பிடிமானம் உறுதியாக இருக்கும்.

மெய்யான ஈடுபாடும் தெய்வ பக்தியும் உள்ளவர்களை எல்லாம் தொழுது வேண்டுகிறேன். நல்ல முறையில் மேலே கண்டவண்ணம் ஆக்கித் தெய்வத் திருப்பமடி மத்திற்கு மருந்து சாத்த வேண்டுமென்று, அன்றேல் கண்டவற்றை 'அட்டபந்தனம்' என்ற பெயரால் சார்த்துவதை விட 'டால்மியாபந்தனம்' செய்துவிடுவது மேலாகும். 'டால்மியா பந்தனம் என்றால் என்ன?' என்றா கேட்கிறீர்கள்? செமெண்டுக் கலவையைத்தான் இப்படிப் பெயரிட்டுக் கூறுகிறேன். சரிதானே ?

*"கொம்பரக்குச் சுக்கான் தூள், குங்கிலியம்,*
*கற்காவி,*
*செம்பஞ்சு, சாதிலிங்கம், தேன்மெழுகு –*
*தம்பழுது*
*நீக்கி எருமைவெண் ணெய்வட்டி, நன்கிடித்து,*
*ஆக்கல்அட்ட பந்தனம் ஆம்."*

*"சுக்கான் தூள், சர்க்கரை, தொல்பேயன்*
*நற்கனியும்*
*ஒக்கக் கலந்தமைத்தல் உற்றதிரி பந்தனம்*
*ஆகும்."*

## மகாபிஷேகம்

இது, கும்பாபிஷேகம், ஆனவுடன் செய்யப்படுவது. இறைவனைப் பிம்பத்திலிருந்து கும்பத்திலும் கும்பத்திலிருந்து பிம்பத்திலும் ஆவாகனம் செய்த முறையால் விளைந்த களைப்பு தீர்வதாகப் பாவித்து, மிகுதியான அபிஷேகத் திரவியங்களால் அபிஷேகித்து, நன்கு பக்குவமான நிவேதனங்களைச் செய்து உபசரிப்பது. இதுவே, மகாஹவிர் நிவேதனம் என்பதும் ஆகும்.

## ஆலய விழாக்களில் முதல் நாளில் கொடியேற்றுவது

கொடியேற்றுவது (துவஜாரோகணம்) ஆகம விதிப்படி நடைபெறுவதாகும். கொடிமரம் – சிவபெருமான். கொடிக்கயிறு – திருவருட்சக்தி. கொடித்துணி – ஆன்மா. தர்ப்பை கயிறு – பாசம். மும்மலவயப்படும் ஆன்மா, திருவருட்சக்தியினாலே பாசம் அற்று, சிவஞான வடிவமாகிய பதியின் திருவடியை அடைதல் என்னும் முறையை இச்சம்பவம் காட்டுகிறது. (த்வஜம் = கொடி ; ஆரோகணம் = மேலே ஏறுதல்)

# அனுக்கன் திருவாயில்

(கோலாலம்பூர் வாழ் வேகுப்பட்டி நகரத்தாரான எஸ்.ஆர்.எம் பழனியப்பர், தாம் அரிதின் முயன்று 1995ல் தொகுத்த "நகரத்தார்களின் குலதெய்வங்கள்" என்று நூலுக்கு எழுதிய முன்னுரையில் ஒரு பகுதி இங்கே..)

நல்வளஞ்சேர் அருட்புலவர் இருசெவிகட்(கு)
அமிர்(து)என, எந் நாளும் ஓங்கச்,
சொல்வளமும் பொருள்வளமும் அளித்(து), இந்நூற்(கு)
இடையுறு தொலைத்(து)ஆள் என்றே,
பல்வளமும் பெரும்புகழும் படைத்(து) இலகும்
மயிலைநகர் பதியாய் வாழும்
வெல்வளஞ்சேர் கூத்தாடும் ஐங்கரக்குஞ்
சரத்(து)இருதாள் வியந்து வாழ்வாம்.

– திருமயிலைத் தலபுராணம்

அரசர்களின் காலம் முடிந்த பிற்பாடு கோயில் திருப்பணி செய்தவர்களைச் சொல்கிறபோது, முதலில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தை மனதார நினைத்து நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடிய' நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள், அந்தத் திரவியத்தைத் தேவாலயத் திருப்பணிகளுக்கு அள்ளி அள்ளித் தந்து, பழைய அரசர்களின் இடத்தைப் பெற்றார்கள். காளஹஸ்தி வரையில் இவர்களது திருப்பணி தர்மம் பரவியிருக்கிறது என்பார் காஞ்சி முனிவர் சந்திரசேகரேந்திர சங்கராச்சாரிய சுவாமிகள்.

தமிழ்நாட்டில் எப்போது கோயில்கள் ஏற்பட்டன என்று குறிப்பிடுவது கடினமாக இருக்கலாம். ஆனால் தமிழகத்தில் உள்ள எல்லாக் கோயில்களிலும் நகரத்தார்களின் பங்கும் சேவையும் இல்லாத கோயில் இல்லை என்று கூறிவிடலாம். பொருளைத் தேடுவது ஒருபுறமிருந்தாலும், தேடிய பொருளைத் தர்ம காரியங்களுக்கும், ஆன்மிகத்தை வளர்ப்பதற்கும் நகரத்தார்கள் மிகவும் செலவு செய்து முன்னணியில் இருந்து பணியாற்றியுள்ளார்கள் என்பார் சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள்.

பண்டைத் தமிழ் மன்னர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட எல்லையில் தான் ஆலயம் அமைத்தார்கள். ஆனால் நகரத்தார்களோ, காசி முதல் கன்னியாகுமரி வரை பரந்துள்ள – ஏன், கடல் கடந்தும் கூட ஆலயங்களைப் புதுக்கி, புதியன தோற்றுவித்துச் சரித்திரம் படைத்த பெருமை பெற்றுள்ளார்கள். அவர்களின் பணியால் மறைகள் வளர்ந்தன; ஆலயங்கள் பொலிவு பெற்றன; சமயம் தழைத்தது என்று புதுக்கோட்டை சத்குரு சாந்தானந்த சுவாமிகளார் போற்றிப் பாராட்டப் பெற்றவர் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள். சிவாலயங்கள், விநாயகர் – முருகன் – அம்பாள் கோயில்கள் ஆகியவற்றை மட்டுமில்லாது, குலதெய்வ (கிராம தேவதை)க் கோயில்களான ஐயனார், கறுப்பர்,[2] துர்க்கை கோயில்களுக்கும் நிறையத் திருப்பணிகள் செய்துள்ளனர்; செய்து வருகின்றனர்.

இருப்பினும், இவ்வாறு நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பெற்ற – செய்யப்பெறுகின்ற, நகரத்தார்களால் வழிபடப் பெறுகின்ற எல்லாக் குலதெய்வக் கோயில்களையும், எல்லா நகரத்தார்களும் அறிந்திருப்பரா என்பது ஐயத்திற்குரியதே.

நகரத்தார்களின் ஒன்பது நகரக் கோயில்களையும் பற்றிய விரிவான – விளக்கமான நூல்களை அறிஞர் பலர் எழுதியுள்ளனர். ஆனால், அதிகம் தெரிந்திராத இந்தக் குலதெய்வக் கோயில்களைப் பற்றிய முழுமையான நூல் ஏதும் இதுவரை வெளிவந்திருப்ப தாகத் தெரியவில்லை.

எனவே, நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் வழிபடப்பெறும் எல்லாக் குலதெய்வக் கோயில்களையும் உள்ளடக்கிய ஒரு நூலை உருவாக்கலாம் என்னும் ஓர் அசட்டுத் துணிச்சலுடன் இம்முயற்சியை எளியேன் மேற்கொண்டேன். பின்னர்தான், ஆழந்தெரியாமல் காலை விட்டுவிட்டோம் என்பது தெரியவந்தது.

காரணம் பெரும்பாலும் செட்டிநாட்டு எல்லைக்குள் தான் இந்தக் கோயில்கள் அமைந்திருக்கின்றன என்றாலும், இவற்றைத் தேடிப்பிடிப்பதும், இக்கோயில் களுக்குச் சென்று வருவதும், அர்ச்சகர்களைத் தேடி அலைவதும் எவ்வளவு சிரமமான செயல்கள் என்பதை முதலில் அறிந்திருக்கவில்லை ;

சில கோயில்களைத் தவிரப் பெரும்பாலான கோயில்களின் அர்ச்சகர்களும், அவற்றுக்கு அடிமைப்பட்ட நகரத்தார் பெருமக்களும் கோயில்கள் பற்றிய விவரங்களைக் கூறத் தயங்கியது ;

முதலில் நினைத்ததைவிடப் பெரும் பொருட்செலவு ஏற்பட்டது. இந்த முயற்சியைத் தொடங்கியபோது இருந்த ஆர்வம், நகரத்தார் பெருமக்களின் ஒத்துழைப்பின்மையால் குறையத் தொடங்கி, முயற்சி வெற்றிபெறுமா என்னும் கவலையும் ஏற்பட்டது.

மனமுடைந்த நிலையில் அறுபது கோயில்களின் பட்டியலை மட்டுமே வைத்துக்கொண்டு, மலையகத்திலிருந்து தமிழகம் வந்தோம். நேரில் கண்டபோது பலர் எளியேனுக்கு வெகுவாக உதவினர் ; ஒத்துழைப்பு நல்கினர். வேறு பல கோயில்கள் இருப்பதையும் விசாரித்துத் தெரிந்து கொண்டோம்.

தமிழகத்தில் ஏறத்தாழ 32 நாட்கள் 2,500 கி.மீ பயணம் செய்து, நகரத்தார்கள் வழிபடும் 108 குலதெய்வக் கோயில்களுக்குச் சென்று தகவல் சேகரித்தோம். அப்பயணத்தில்,

பல வகையான கோயில்கள்
பல வகைப்பட்ட மனிதர்கள்
பல வகை அனுபவங்கள்
பல்வேறு படிப்பினைகள்

எண்ணற்ற இன்ப துன்பங்கள் ஏற்பட்டன. அவற்றின் விளைவால் உருவானதே இந்நூல்.

இருப்பினும் நகரத்தார்கள் வழிபடும் குலதெய்வக் கோயில்கள் அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு நூல் என்று இதனைக் கூற இயலாது.

சி(ப)ல கோயில்கள் விடுபட்டிருக்கலாம்;
சில கோயில்கள், நகரத்தார் வழிபடும் கோயில்களாக இல்லாது இருக்கலாம்;
சில விவரங்கள் தவறாக இருக்கலாம்;
சில மிகைப்படுத்தப் பெற்றவையாக இருக்கலாம்.

முதலில் எளியேன் குறிப்பிட்டது போன்று, இந்த முயற்சிக்கு நகரத்தார் பெருமக்களின் முழுமையான ஒத்துழைப்புக் கிட்டாததே இவற்றுக்குக் காரணம். பெரும்பாலான கோயில்களைப் பொறுத்தவரை, அந்தந்தக் கோயில்களின் அர்ச்சகர்கள் தெரிவித்த (ஒரு சார்பான) தகவல்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன.

சில கோயில்களின் திருக்குட நீராட்டுவிழா மலர்கள், பாமாலைகள் போன்றவை கிடைத்தன ; ஒரு சில நகரத்தார் பெருமக்கள் ஆர்வத்துடன் நிறையத் தகவல்களைத் திரட்டிக் கொடுத்திருந்தனர். அவ்வாறு கிடைத்தவற்றை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டேன். அதனால்தான் சில கோயில்களுக்கு மட்டும் அதிகமான விவரங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

ஒவ்வொரு கோயிலுக்கும் திருப்பணிகள் செய்துள்ள தனிப்பட்ட நகரத்தார் பெயர் ஏதும் இந்நூலில் குறிப்பிடப் பெறவில்லை. மாறாகத் தகவல் கிடைத்தமட்டில், தனிப்பட்டவருக்குத் தனிச் சிறப்புக் கொடுக்காமல், அவர்கள் சார்ந்த ஊர்கள் மட்டுமே குறிப்பிடப் பெற்றுள்ளன. இது யாரையும் புண்படுத்தவோ, குறைவுபடுத்தவோ, யாருடைய கைங்கரியத்தையும் மறைக்கவோ மேற்கொள்ளப்பெற்ற முயற்சியன்று என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

படிப்படியாக மறைந்துவரும் குலதெய்வ வழிபாட்டுக்கு, இந்நூலின் வழி புத்துயிரூட்ட எளியேன் முயல்வதாகச் சிலர் குற்றம் சாட்டினர். இது உண்மையா என்பதை நகரத்தார் சமூகந்தான் முடிவு செய்ய வேண்டும். நாங்கள் கண்டவரை, இடையில் ஏற்பட்ட ஒரு தொய்வுக்குப் பின்னர், நகரத்தார்கள் இப்போதுதான் முழு மூச்சுடன் குலதெய்வக் கோயில்களைப் புதுப்பிப்பதிலும், குடமுழுக்கு நடத்துவதிலும், வழிபடுவதிலும் இறங்கி உள்ளனர் என்று தெரிகிறது.



# குடும்பத்தவர் கோயில் தொண்டு செய்ய முடியுமா ?

– அ.மு.மு.வெ. அருணாசலம்

காலஞ்சென்ற என் மதிப்பிற்குரிய அம்மான் கானாடுகாத்தான் க.வெ.சித.வெ. வெங்கிடாசலம் செட்டியாரவர்கள் பல ஆண்டுகளுக்கு முன்பு தமிழ்க் கடல் ராய.சொ. அவர்களோடு தேவார, பிரபந்தத் தலங்கள் உள்பட 456 கோயில்களுக்குப் பயணம் சென்று வந்த பிறகு ஒரு கணக்கு கொடுத்தார்கள். அதன்படி பாடல் பெற்ற தேவார, பிரபந்தத் தலங்களின் நகரத்தார்கள் செய்த கோயில் திருப்பணிச் செலவு மட்டும் ரூபாய் நாலரைக் கோடியாகும். இதில் கோயில் திருப்பணி தவிர, பாடசாலை, நந்தவனத் திருப்பணிகள், பாடல் பெறாத தலங்களில் செய்தவைகள் சேரவில்லை. மேலும் இத்தொகை செலழித்த காலத்தியதாகும். இன்றையக் கணக்கில் பார்த்தால் இதன் மதிப்பு எத்தனை எத்தனையோ கோடியாகும்.

இன்றைக்கு இது மாதிரியான காரியங்களை ஒரு தனிப்பட்ட குடும்பம் செய்வதென்பது இயலாத காரியம். ஒரு பெரிய அமைப்போ, அரசாங்க இலாக்காக்களோ, மடங்களோ தான் செய்ய முடியும். தமிழ்நாட்டில் எத்தனையோ திருக்கோயில்களைக் கட்டுவித்தும், திருப்பணி செய்வித்தும், மராமத்து செய்வித்தும், நடைமுறைக் காரியங்கள் செய்வித்தும் பாதுகாத்து வந்துள்ளனர் நம் முன்னோர்கள். இப்படிப் பார்க்கும் போது தான் நமக்கு அவர்களைப் பற்றிய ஒரு பேருண்மை புலப்படும்.

அது அவர்களுடைய தரும சிந்தனை, பக்தி நெறி, இறை நம்பிக்கை ஆகும். இவ்வளவு பெரிய காரியங்களை ஒரோரு குடும்பத்தினர் ஒரு கோவிலைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு செய்து வந்திருப்பது அவர்களுடைய அசைக்க முடியாத தெய்வ நம்பிக்கையையும், இறைத் தொண்டில் இருந்த நாட்டத்தையும் தெளிவாகக் காட்டும். இது எப்படிச் சாத்தியமாயிற்று? அதுதான் நம் சமூகத்தினரின் தனிச் சிறப்பான இயற்கையோ டியைந்த வாழ்க்கை முறை.

பொதுவாக ஒரு கருத்து இன்றும் நிலவி வருகிறது. அதாவது இந்த மாதிரியான தெய்வத் தொண்டுக் காரியங்கள், தரும கைங்கர்யங்கள் செய்வது துறவிகளாலும் திருமடங்களாலும் தான் முடியும் என்று. ஆனால் நம்மவர்கள் அந்தக் கருத்தைவிட, இயற்கையோடு இணைந்து இல்லறத்திலிருந்து கொண்டே இறை பணியும் செய்வதையே வாழ்க்கை முறையாகவே மாற்றிக்கொண்டு விட்டவர்கள்.

ஒருவன் ஒரு குடும்பத்தைத் தாங்கி நடத்துகிறான் என்றாலே அது ஒரு பெரிய நிருவாகம் மட்டுமல்ல, அன்பின் பரிபூரண வெளிப்பாடு. தன் மனைவி, மக்கள் என்று தன்னுடன் ஒட்டியவர்களிடத்தே தன்னலம் கருதாத அன்பு வைக்க வேணும். அவர்கள் மகிழ்ச்சியாக வாழவே இவன் உழைக்கிறான். அவர்கள் ஏதாவதொன்றை விரும்பினால் அதனை இவன் வாங்கித் தருகிறான். அவர்களுக்கு ஒரு நோய்நொடி வந்தால் இவன் துடித்துவிடுகிறான். ஓடிப்போய் வைத்தியம் செய்கிறான்.

குடும்பம் என்கிற களத்தில் இவன் பெறுகிற பயிற்சியே இவனை அநுபவஸ்தனாக ஆக்குகிறது. அமைதியும் பொறுமையும் அடைய வீடே நாம் பயிற்சி பெறும் இடமாகிறது. இதுவே தவம் என்று பெரியவர்கள் கருதினார்கள். தான் என்கிற நிலைமையைத் தாண்டி, ஒரு மனிதன் தன் மனைவி, தன் மகன், தன் மகள் என்று அடுத்தவருக்காகத் தொண்டு செய்ய, அன்பு செலுத்தக் கற்றுத் தருகிறதே குடும்பம் தான்.

அப்படிக் குடும்பத்திலிருந்துகொண்டே பற்றுக்களை அளவுபடுத்திக்கொண்டு செய்வ தென்பது இயற்கையான நடைமுறையாகும். தன் உறவு, தன் சுற்றம் என்ற நிலை விரிவடைந்து தன் நண்பர், தான் அறிந்தோர், தன் பேட்டையார், தன் ஊரார் என்று பயன் பெறுகிறவர்கள் பட்டியல் விரிந்துகொண்டே போகும். மகாத்மா காந்தி அவர்கள் நடந்து காட்டிய வழியும் இதுதான்.

உதாரணத்திற்கு ஒன்று பார்க்கலாம். நமக்கு வாழ்க்கைச் சட்டம் எழுதித் தந்துவிட்டுப் போனவர் திருவள்ளுவர். நம்மை வெறுத்தவர்களை நாமும் வெறுக்க வேண்டும். நம்மைப்

புறக்கணித்தவர்களை நாமும் புறக்கணிக்க வேண்டும் என்று பொதுவாக உலகோர் எண்ணுவார்கள். ஆனால் புறக்கணித்த வர்களையே மீண்டும் மீண்டும் விரும்பும் உள்ளத்தால் அன்பு வளரும். இதைக் குடும்ப வாழ்க்கையில் பாடமாக அனுபவிக்கிறோம்.

செற்றார் எனக் கைவிடல் உண்டோ ? நெஞ்சேயாம்
உற்றால் உறஅ தவர் (1245)

இந்தச் சிறந்த பாடத்தைக் குடும்ப வாழ்க்கையின் மூலம் அறிந்தவர்கள் வெளியுலகிலும் வெறுப்புக்கு வெறுப்பு, புறக்கணிப்புக்குப் புறக்கணிப்பு என்று பாராட்டாமல் பிறரிடம் அன்பு செலுத்தி இன்னா செய்தார்க்கும் இனியவே செய்து வாழ்வது எளிது.

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு ? (987)

இந்த மாதிரியான உயர்ந்த பண்புகளை, அமைதியான ஆனந்தமான குடும்ப வாழ்க்கையின் மூலம் கற்ற பாடத்தின், பயிற்சியின் விளைவாகத்தான் எளிதில் கடைப்பிடிக்க முடியும்.

இதைத் தான் நம் முன்னோர்களும் செய்து வந்தார்கள்.

அது தான் அவர்கள் குடும்பத்தையும் கவனித்துக்கொண்டு, 'தொலைக்குப் போய், கொண்டு விற்று வந்ததும்' அதற்கிடையே கோயில் திருப்பணிகள், நந்தவனம், பாடசாலைகள் நடத்தியதும் ஆகும். ஒன்றுக்கொன்று முரண்படாமல், எல்லாவற்றையும் அதற்குத் தேவையான சிரத்தையுடன் கவனித்து நடத்திக்கொண்டு வந்தனர்.

**ஆள் துறவாது அவாத் துறப்பதையே உண்மையான துறவு எனக் கருதினார்கள்.** ஆம் ; ஓரளவுக்கு மேல் தன் குடும்பம் என்ற நிலையைத் தாண்டி தருமம் செய்ய, திருப்பணி செய்ய ஆரம்பித்தனர். மனைவி மக்களைத் துறக்காமலேயே, அவர்களுக்கென ஒரு பகுதியும், மற்றவருக்கென ஒரு பகுதியுமாக தான், தன் குடும்பம் என்ற அவாக்களைத் துறந்து கர்ம யோகிகளைப் போல வாழ்க்கைத் தவம் செய்தனர். வள்ளுவர் சொல்லியபடி "வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த"னர்.

கொண்டு விற்கப்போன இடத்தில் தங்கள் பெட்டியடியை மிக சிக்கனமாகவும் தங்களுடைய முதலீடுகளான ரப்பர் தோட்டம், ஈயலும்பனா ஆகியவைகளை மிகச் சிறந்த, திட்டமிட்ட நிர்வாக திறமையுடன் நடத்தி வந்தனர். இந்தச் சிக்கனமும், திட்டமிடும் திறமையும் எதையும் ஒரு ஒழுங்கு முறையாக செய்யக் கற்றுக்கொண்ட நிர்வாகப் பாங்கும்–அந்த அத்தனையும் கோவில் நிர்வாகத்திலும் அதனை ஒட்டிய திருப்பணி, மற்ற காரியங்களிலும் பயன்படுத்தக் கை கொடுத்து உதவியது. இந்தத் திறமைகள் அவர்களுடைய தனி வாழ்க்கையிலும், பொது வாழ்க்கையிலும் செயல்பட ஒன்றுக்கொன்று உதவின.

அப்படிக் கொண்டு விற்கப்போன இடத்தில் கூட தண்டாயுதபாணிக்குக் கோயில் கட்டித் திருப்பணி செய்தனர். எந்த விதத்திலும் இறை பணிக்கு குடும்ப வாழ்க்கை இடையூறு என்று கருதினார்களில்லை. அதோடு தம் தொழில், வாணிகம் எல்லாவற்றின் வருவாயிலும் ஒரு குறிப்பிட்ட பகுதியை இம்மாதிரிக் காரியங்களுக்கெனவே ஒதுக்கி வந்தனர். இதுவே அவர்களின் உண்மையான மனப்பான்மையைக் காட்ட வல்லது. டாக்டர் நார்மன் வின்செண்ட் பீல் என்ற அமெரிக்க தத்துவ வித்தகர் சொல்லுவாரே,

"Even if we owned the entire United States with a hog - tight fence around it, we could eat only three Square meals a day and sleep in only one bed at a time" என்று, அப்படி தங்கள் தேவையை கட்டுப்படுத்தி, அளவுபடுத்தி, அதனால் மிகுந்த வருமானத்தை உண்மையான துறவு மனப்பான்மையுடன் தர்மம் செய்தனர். இதற்காகப் பயிற்சி அளிக்க திருமணமான ஒவ்வொரு செட்டியாரும், ஆச்சியும் பாதரக்குடி, துலாவூர் மடங்களில் குருமார்களிடத்தில் தீட்சை உபதேசம் பெற வேண்டுமென வகுத்தனர். அதையே துஷ்டி நடந்தால் அந்தந்த குரு மடங்களில் கழித்து விடுதல் என்ற சடங்கின் மூலமும் காட்டினார்கள்.

இன்று மனமார தருமம் செய்ய விரும்பாவிட்டால் கூட, வருமான வரிச் சலுகை கருதியாவது சிலர் தருமம் செய்கின்றனர். ஆனால் நம்மவர்கள் அம்மாதிரியான சலுகையே இல்லாத காலத்திலிருந்து, இதை தரும நாட்டமாகவே, விருப்பமான பணியாகவே, வாழ்க்கை முறையாகவே கைக்கொண்டு செய்து வந்துள்ளனர். இன்றும் நம்மவர்கள் பல நூற்றுக் கணக்கான டிரஸ்ட்கள் அமைத்து, தம் தொழில் வாணிகத்திலிருந்து ஒரு பகுதியை ஒதுக்கி, அதன் மூலம் திருப்பணிகள், தர்ம காரியங்கள், ஸ்காலர்ஷிப்கள், வைத்திய வசதிகள் செய்து வருகின்றனர். இதை இறை பணியாகவே, இல்லற தர்மமாகவே அன்று நம் முன்னோர்கள் செய்து வந்தனர். அவர்களுடைய தீட்சண்யமான அறிவை, தர்ம நாட்டமுள்ள சிந்தனையை நல்ல மனதையெல்லாம் எண்ணி எண்ணி வியக்கத் தோன்றுகிறது.



## ஒன்பது நகரக் கோயில்களின் முகவரி

அருள்மிகு கைலாசநாதர் –
நித்தியகல்யாணி கோயில்,
இளையாற்றங்குடி – 630 205
(வழி) கீழச்சிவல்பட்டி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04577 – 265221

அருள்மிகு வளரொளிநாதர் –
வடிவுடையம்மை கோயில்
வயிரவன்பட்டி – 630 212
(வழி) சிறுகூடல்பட்டி, சிவகங்கை மாவட்டம்
போன் : 04577 – 264237

அருள்மிகு ஐநூற்றீசுவரர் – பெரியநாயகி கோயில்
மாத்தூர் – 630 202,
சிவகங்கை மாவட்டம்,
போன் : 04565 – 231862

அருள்மிகு கற்பக விநாயகர் –
திருவீசர் – சிவகாமவல்லி கோயில்,
பிள்ளையார்பட்டி – 630 207, சிவகங்கை மாவட்டம்
போன் : 04577 – 264240 , 41

அருள்மிகு ஆட்கொண்டநாதசுவாமி
சிவபுரந்தேவி கோயில்,
இரணியூர் – 630 205, (வழி) கீழச்சிவல்பட்டி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04577 – 265645

அருள்மிகு சுயம்பிரகாசேசுவரர் –
சவுந்தரநாயகி கோயில்
இலுப்பக்குடி – 630 202, சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 – 221810 , 230653

அருள்மிகு ஜெயங்கொண்ட சோழீஸ்வரர் –
சவுந்தரநாயகி கோயில்,
நேமம் – 630 206, (வழி) குன்றக்குடி,
சிவகங்கை மாவட்டம்
போன் : 04577 – 264190

அருள்மிகு தேசிகநாதசுவாமி –
ஆவுடையநாயகி கோயில்,
பூவாண்டிப்பட்டி என்ற நகரச் சூரக்குடி –630 102
(வழி) செட்டிநாடு, சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 – 281666–

அருள்மிகு கண்டீசுவரர் –
காமாட்சியம்மை கோயில்
வேலங்குடி – 630 106
(வழி) கோட்டையூர், சிவகங்கை மாவட்டம்.



## காலங்களுக்குரிய சிவதரிசனப் பலன்கள்

| | | |
|---|---|---|
| காலை | – | பிணி போக்கும் |
| நண்பகல் | – | தனம் பெருக்கும் |
| சந்தியாகாலம் | – | பாவம் அகற்றும் (மாலை) |
| அர்த்தசாமம் | – | வீடு பேறு அளிக்கும் |

## செட்டிநாட்டுப் பகுதியில் உள்ள
## நகரத்தார் குலதெய்வக் கோயில்கள்

| | | |
|---|---|---|
| 1. | கண்ணுடையநாயகி அம்மன் திருக்கோயில் | நாட்டரசன்கோட்டை |
| 2. | பெரியகறுப்பணசாமி திருக்கோயில் | நாட்டரசன்கோட்டை |
| 3. | அங்காள பரமேஸ்வரி - குருநாதன் திருக்கோயில் | நாட்டரசன்கோட்டை |
| 4. | அடைக்கலங்காத்த அம்மன் திருக்கோயில் | வாணியங்குடி |
| 5. | வெட்டுடைய ஐயனார் (காளி கொல்லங்குடி) திருக்கோயில் | அரியாக்குறிச்சி |
| 6. | பொய்சொல்லா மெய்ய ஐயனார் திருக்கோயில் | கொல்லங்குடி |
| 7. | பஞ்சாட்சரமுடைய ஐயனார் திருக்கோயில் | சூரக்குளம் |
| 8. | கலியுகமெய்ய ஐயனார் திருக்கோயில் | புதுக்கோட்டை<br>சூரக்குளம் |
| 9. | கக்கூருடைய ஐயனார் திருக்கோயில் | காளையார் மங்களம் |
| 10. | சந்தனக் கறுப்பையா திருக்கோயில் | காளையார் மங்களம் |
| 11. | சேவாத்தாள் ஐயனார் திருக்கோயில் | காளையார் மங்களம் |
| 12. | வல்லடிகாரர் சுவாமி ஐயனார் திருக்கோயில் | நைத்தாம்பட்டி<br>அம்பலகாரன்பட்டி |
| 13. | செவிட்டு ஐயனார் திருக்கோயில் | அலவாக்கோட்டை |
| 14. | அழகிய மெய்ய ஐயனார் திருக்கோயில் | வீழநேரி |
| 15. | கருமுகிலுடைய ஐயனார் திருக்கோயில் | காடனேரி |
| 16. | மருதுடைய ஐயனார் திருக்கோயில் | காடனேரி |
| 17. | புல்வாய்நாயகி அம்மன் திருக்கோயில் | பாகனேரி |
| 18. | சேவகப் பெருமாள் ஐயனார் திருக்கோயில் | செம்பனூர் |
| 19. | ஆதினமிளகி ஐயனார் திருக்கோயில் | கீழக்கோட்டை |
| 20. | பொக்கிஷக்கோட்டைக் காளி திருக்கோயில் | கீழக்கோட்டை |
| 21. | சேவகப்பெருமாள் ஐயனார் திருக்கோயில் | கத்தப்பட்டு |
| 22. | ஆதினமிளகி ஐயனார் திருக்கோயில் | நரியங்குடி |
| 23. | பரநாச்சியம்மன் திருக்கோயில் | கருங்குளம் |
| 24. | ஆலத்தி ஐயனார் என்ற வெள்ளானை ஐயனார் திருக்கோயில் | பட்டமங்கலம் |
| 25. | கரியமலை சாத்தய்யனார் திருக்கோயில் | பட்டமங்கலம் |
| 26. | ஆதினமிளகி ஐயனார் திருக்கோயில் | மேல்குடி |
| 27. | கோட்ட நாச்சியார் திருக்கோயில் | கத்தாளம்பட்டு |
| 28. | சேவகப் பெருமாள் ஐயனார் திருக்கோவில் | கருவேற்குறிச்சி |
| 29. | நயினாத்தான் கறுப்பையா சுவாமி திருக்கோயில் | வடவன்பட்டி |
| 30. | பகச்சாலமூர்த்தி ஐயனார் திருக்கோவில் | இலங்குடி |
| 31. | மஞ்சணத்திக் கறுப்பர் திருக்கோயில் | கொரட்டி |
| 32. | ஆரடி சாத்தையனார் திருக்கோயில் | கொரட்டி |
| 33. | பனக்குடி சாத்தையனார் திருக்கோயில் | தட்டட்டி |
| 34. | அஞ்சாத பெருமாள் ஐயனார் திருக்கோயில் | சாலி |
| 35. | தேனாட்சியம்மன் திருக்கோயில் | சிராவயல் புதூர் |





| | | |
|---|---|---|
| 36. | திருமேனிக் கறுப்பர் திருக்கோயில் | சிராவயல் புதூர் |
| 37. | ஆதினமிளகி ஐயனார் திருக்கோயில் | மருதங்குடி |
| 38. | முப்பலிக் கறுப்பர் திருக்கோயில் | வைரவன்பட்டி |
| 39. | மக்கமடை ஐயனார் திருக்கோயில் | வைரவன்பட்டி |
| 40. | கண்ணப்ப ஐயனார் திருக்கோயில் | மணமேல்பட்டி |
| 41. | கோட்டைக் கறுப்பணசுவாமி திருக்கோயில் | திருப்புத்தூர் |
| 42. | கிணற்றடிக் காளியம்மன் திருக்கோயில் | கண்டவராயன்பட்டி |
| 43. | வையகளத்து ஐயனார் திருக்கோயில் | சுண்டக்காடு |
| 44. | சாம்பிராணிவாசகர் திருக்கோயில் | சுண்டைக்காடு, வேலங்குடி |
| 45. | பதினெட்டாம்படிக் கறுப்பர் திருக்கோயில் | ஐயாபட்டி |
| 46. | சேவகப் பெருமாள் ஐயனார் திருக்கோயில் | சிங்கம்புணரி |
| 47. | பதினெட்டாம்படிக் கறுப்பர் திருக்கோயில் | அழகர்கோயில் |
| 48. | ஓமக்காட்டு ஐயனார் (சோனையன்) திருக்கோயில் | நெற்குப்பை |
| 49. | வள்ளிலிங்க ஐயனார் திருக்கோயில் | துவார் |
| 50. | மங்களக்காட்டு ஐயனார் திருக்கோயில் | ஏனாதி, மேலைச்சிவபுரி |
| 51. | அழகியநாச்சி அம்மன் திருக்கோயில் | பொன்னமராவதி |
| 52. | மாசங்கறுப்பர் திருக்கோயில் | கொப்பனாபட்டி |
| 53. | பொய்சொல்லா மெய்ய ஐயனார் திருக்கோயில் | மூலங்குடி |
| 54. | மதுக்காரை நாச்சியம்மன் திருக்கோயில் | செவலூர் |
| 55. | அடைக்கலங்காத்த அம்பாள் திருக்கோயில் | விரையாச்சிலை |
| 56. | மேலக்காட்டு ஐயனார் திருக்கோயில் | ரெண்டாவயல் விரையாச்சிலை |
| 57. | கரைமேல் அழகர் ஐயனார் திருக்கோயில் | தேக்காட்டூர் |
| 58. | அங்காள பரமேஸ்வரி அம்மன் திருக்கோயில் | தேக்காட்டூர் |
| 59. | பனையுடை ஐயனார் திருக்கோயில் | தேக்காட்டூர் முனைச்சந்தை |
| 60. | சேத்துமேல் செல்ல ஐயனார் திருக்கோயில் | அரிமழம் |
| 61. | தலைக்காவுடை ஐயனார் திருக்கோயில் | செங்கீரை |
| 62. | முன்னோடிக் கறுப்பர் திருக்கோயில் | செங்கீரை |
| 63. | திருப்பேரையூர் நாகலிங்க தர்ம சாஸ்தார் திருக்கோயில் | கண்ணன்கார்குடி |
| 64. | அங்காள பரமேஸ்வரி, உறங்காப்புளிக் கறுப்பணசுவாமி திருக்கோயில் | இராங்கியம் |
| 65. | முத்துமாரியம்மன் திருக்கோயில் | கீரணிப்பட்டி |
| 66. | அங்காள பரமேஸ்வரியம்மன் திருக்கோயில் | இளையாற்றங்குடி |
| 67. | பணிச்சாருடையவர் ஐயனார் திருக்கோயில் | செண்பகம்பேட்டை |
| 68. | பூசாரி உடைய ஐயனார் (எம்மான் கறுப்பர்) திருக்கோயில் | அம்மாபட்டி |
| 69. | பெரியநாயகியம்மன் திருக்கோயில் | அம்மாபட்டி |
| 70. | செட்டிக் கறுப்பர் திருக்கோயில் | அம்மாபட்டி |
| 71. | காட்டுக் கறுப்பர் திருக்கோயில், எண்ணெயாட்டுப்பாறை | கீழச்சிவற்பட்டி |
| 72. | திட்டாணி ஐயனார் திருக்கோயில் | நெய்வாசல் |

| | | |
|---|---|---|
| 73. | கல்லுக்காடு ஐயனார் திருக்கோயில் | கல்லுவயல் தொலையானூர் |
| 74. | முத்துவெள்ளைச் சாத்தையனார் திருக்கோயில் | காரிபட்டி ஊனையூர் |
| 75. | கரைமேல் அழகர் ஐயனார் திருக்கோயில் | கானாடுகாத்தான் |
| 76. | குருந்துடைய ஐயனார் திருக்கோயில் | ஆதனூர் |
| 77. | கள்ளணன்-பிள்ளைப் பெருமாள் திருக்கோயில் | கோனாபட்டு |
| 78. | கருமலை சாஸ்தா (காஞ்சிரங்குடி காளி) திருக்கோயில் | கோனாபட்டு |
| 79. | தர்ம (மகா) சாத்தையனார் திருக்கோயில் | வெழுவூர் ஆ.முத்துப்பட்டணம் |
| 80. | நல்லகாடன் என வழங்கும் காடப்ப ஐயனார் திருக்கோயில் | ஆலத்திப்பட்டி |
| 81. | கட்டுச்சோற்றுக் கறுப்பர் (உளிவீர சுவாமி) திருக்கோயில் | ஆலத்துப்பட்டி |
| 82. | சந்திவீர(ப்ப)ர் திருக்கோயில் | ஆலத்துப்பட்டி |
| 83. | சோலையாண்டவர் திருக்கோயில் | கொத்தரி பள்ளத்தூர் |
| 84. | பா(ை)ல விளத்த ஐயனார் திருக்கோயில் | பள்ளத்தூர் |
| 85. | நெல்லி ஆண்டவர் ஐயனார் திருக்கோயில் | வடகுடி பள்ளத்தூர் |
| 86. | கருவி ஐயனார் திருக்கோயில் | கருவியப்பட்டி |
| 87. | பெத்தபெருமாள், காடேரி அம்பாள் திருக்கோயில்கள் | கோயில்பட்டி |
| 88. | உய்யவந்தாள் (தனியம்மன்) திருக்கோயில் | சாக்கோட்டை |
| 89. | கறுப்பர் திருக்கோயில் | சாக்கோட்டை |
| 90. | புலிக்குட்டி ஐயனார் திருக்கோயில் | சாக்கவயல் |
| 91. | வேங்கை ஐயனார் திருக்கோயில் | சின்ன வேங்காவயல் |
| 92. | கடவுள் ஐயனார் திருக்கோயில் | வளையன்வயல் |
| 93. | வைய(கை)க் கறுப்பர் திருக்கோயில் | கண்டனூர் |
| 94. | வயல்நாச்சியம்மன் திருக்கோயில் | வேலங்குடி |
| 95. | கொத்தங் கறுப்பர் திருக்கோயில் | கோட்டையூர் |
| 96. | பொய்சொல்லா மெய்ய ஐயனார் திருக்கோயில் | காரைக்குடி |
| 97. | ஸ்ரீநிவாசப் பெருமாள் திருக்கோயில் | அரியக்குடி |
| 98. | மகாகாளி திருக்கோயில் | உஞ்சனை |
| 99. | பனந்தமுடை ஐயனார் திருக்கோயில் | செம்பொன்மாரி சண்முகநாதபுரம் |
| 100. | உசிலுடை(ய) ஐயனார்-கூத்தாடி முத்துப் பெரியநாயகி அம்மன் திருக்கோயில் | தாழையூர் |
| 101. | தேரடிக் கறுப்பர் திருக்கோயில் | கண்டதேவி |
| 102. | வடக்குவாசல் செல்லாயி அம்மன் திருக்கோயில் | எழுவன்கோட்டை |
| 103. | மந்திக் கறுப்பர், ஆலடிக் கறுப்பர் திருக்கோயில்கள் | கோட்டூர் |
| 104. | கருங்கமுடைய ஐயனார் திருக்கோயில் | புளியங்குண்டுபட்டி |
| 105. | களத்தீருடைய ஐயனார் என்னும் நல்லுடைய ஐயனார் திருக்கோயில் | களத்திவயல் |
| 106. | மருதூருடைய ஐயனார் திருக்கோயில் | வெற்றியூர் |
| 107. | வெற்றியூர்க் கறுப்பர் திருக்கோயில் | வெற்றியூர் |
| 108. | அன்னபூரணியம்மன் திருக்கோயில் | வெற்றியூர் |



## சித்தர்கள், மகான்களின் ஜீவ சமாதிகள்

1. திருமூலர் - சிதம்பரம்
2. போகர் - பழனி
3. கருவூர்சித்தர் - கருவூர்,
4. புலிப்பாணி - பழனி அருகில் வைகாவூர்
5. கொங்கணர் - திருப்பதி, திருமலை
6. மச்சமுனி - திருப்பரங்குன்றம்,திருவானைக்காவல்
7. வல்லபச் சித்தர் என்னும் சுந்தானந்தர் - மதுரை
8. சட்டைமுனி சித்தர் - திருவரங்கம்
9. அகத்தியர் - திருவனந்தபுரம், கும்பகோணத்திலுள்ள கும்பேஸ்வரர் கோவில்
10. தேரையர் - தோரணமலை (மலையாள நாடு)
11. கோரக்கர் - பேரூர்
12. பாம்பாட்டி சித்தர் - மருதமலை, துவாரகை, விருத்தாசலம்
13. சிவவாக்கியர் - கும்பகோணம்
14. உரோமரிசி - திருக்கயிலை
15. காகபுசுண்டர் - திருச்சி, உறையூர்
16. இடைக்காட்டுச் சித்தர் - திருவண்ணாமலை
17. குதம்பைச் சித்தர் - மயிலாடுதுறை
18. பதஞ்சலிச் சித்தர் - சிதம்பரம், அழகர் கோவில், இராமேஸ்வரம்
19. புலத்தியர் - பாபநாசம், திரு ஆலவுடையார் கோவில்
20. கமல முனி - ஆரூர்
21. சந்திரானந்தர் - திருவாஞ்சியம்
22. அகப்பேய்ச் சித்தர் - திருவையாறு, எட்டுக்குடி
23. பட்டினத்தார் - திருவொற்றியூர்
25. வள்ளலார் - வடலூர்
26. சதாசிவப் பிரம்மேந்திரர்-நெரூர், மானாமதுரை
27. ராமகிருஷ்ணர், சாரதாதேவியார் - பேலூர் மடம்
28. ராகவேந்திரர் - மந்திராலயம்
29. ரமண மகரிஷி - திருவண்ணாமலை, மாத்ருபூதேஸ்வரர் ஆலயம்
30. குமரகுருபரர் - காசி
31. நடன கோபால நாயகி சுவாமிகள்- காதக்கிணறு
32. ராமனுஜர் - ஸ்ரீரங்கம்
33. முத்து வடுகநாதர் - சிங்கம்புணரி
34. இராமதேவர் - நாகப்பட்டிணம்
35. அருணகிரிநாதர் - திருவண்ணாமலை
36. பாடவசேரி தவத்திரு இராமலிங்க சுவாமிகள் தஞ்சை புன்னைநல்லூர் மாரியம்மன் திருக்கோவில்
37. கம்பர் - நாட்டரசன் கோட்டை
38. தகப்பன் மகன் சமாதி - கரிவலம் வந்த நல்லூர் அருகே பனையூர்
39. போதேந்திர சுவாமிகள் - தஞ்சை மாவட்டத்திலுள்ள மருதநல்லூர்
40. குகை நமச்சிவாயர் மகான் - திருவண்ணாமலை
41. பாம்பன் சுவாமிகள் - திருவான்மியூர்



## அஷ்டமா சித்திகள்

1. அனிமா - உடலின் பாரத்தை அறவே குறைத்து ஒரு நுண் அணுவின் அளவாக மாற்றும் சக்தி
2. மஹிமா - உடல் அளவற்ற பேருருவத்தை அடைதல்
3. கரிமா - நினைத்த காரியத்தை அடைய எண்ணங்களை மறந்து செயல்படுதல்
4. லஹிமா - பளுவற்ற உடலைச் சிறகு போல் ஆக்குதல்
5. பிராப்தி - கடந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் உணர்தல்
6. பிரஹாமியம் - இறவா நிலை அடைதல்
7. ஈசத்துவம் - அனைத்துக்கும் தலைமைப் பேறு அடைதல்
8. வசித்துவம் - விரும்பியதை அடைதல்

# உலக மதங்கள்

*- தவத்திரு குன்றக்குடி அடிகளார்*

மனிதகுலம் தோன்றிப் பல நூறாயிரம் ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. மனித குலத்தின் சென்ற கால வரலாற்றில் சாதனைகள் பலப்பல உண்டு. அச்சாதனைகள் புவிக்கோளத்தை வளர்த்தன ; பேணிக் காத்தன ; புவியை நடத்தி வந்துள்ளன. எத்தனை எத்தனையோ கொடிய போர்கள் நடந்த பின்னும் புவியில் பல்லுயிர்கள் – குறிப்பாக மனிதர்கள் – வாழ்ந்து கொண்டிருப்பது வியப்புமட்டுமல்ல ; அபூர்வமான செயல்திறன்.

மனிதர்கள் இந்த உலகைக் கூர்ந்து நோக்கவும் சிந்திக்கவும் தொடங்கிய நாளிலேயே சமயங்கள் தோன்றிவிட்டன. இந்த உலக வரலாற்றில் எண்ணற்ற மதங்கள் தோன்றியிருக்கின்றன. அவற்றுள் சில மதங்கள் வழக்கத்தில் இல்லை. மிகவும் தொன்மையான கிரேக்க மதக் கலாசாரங்கள் இப்போது வழக்கில் இல்லை. ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனித நாகரிகமும் சமயமும் சிறந்த முறையில் இடம் பெற்றிருந்தன.

மதங்கள் மக்களை இணைத்து வைக்கும் சாதனமாக ஒரு காலத்தில் விளங்கின. மதங்கள் தான் முதன்முதலில் மனித நேயத்தைக் கொள்கையாக–கோட்பாடாக – ஏற்றுக்கொண்டு உலகந்தழீஇ வாழும் இலட்சியத்தை அறிமுகப்படுத்தின. மதங்களின் குறிக்கோள் உயிர்க்குல ஒருமைப்பாடே ! அண்ணல் காந்தியடிகள் ‘ஒரு மனிதனை இன்னொருவரிட மிருந்து பிரிப்பதற்காக மதங்கள் ஏற்படவில்லை. மனிதர்களைச் சேர்த்து வைப்பதுதான் அவற்றின் நோக்கம்’ என்று கூறினார். அருட்பிரகாச வள்ளலார்

“எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணியுள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் என நான் தேர்ந்தேன்”

என்று கூறியருளினார்.

இந்தப் பரந்த உலகின் ஜனசமுதாயத்துடன் ஒத்துவாழ நெறிமுறைகளை வகுத்து ஓதும் மதங்களே உண்மையில் சிறந்த மதங்கள். நீண்ட நெடிய வரலாற்றுப் போக்கில் சமூகத்தில் தோன்றும் உளைச்சல்கள், இயலாமை, தேக்கம் ஆகிய காரணங்களால் இந்த மண்ணுலகத்திற்கு ஏற்படும் இழப்பை ஈடுசெய்து நாள்தோறும் உலகத்தைப் புதுப்பித்து இயக்குவது மதத்தின் வேலை. இந்த உலகின் வளர்ச்சியில், மாற்றங்களில் ஆர்வம் காட்டாது போனால் உலகம் தேங்கிப் போகும். நமது உலகம் முன்னேறி வருகிறது; அறிவு விசாலமாகிறது. ஐயாயிரம் வருடங்களுக்கு முன் தோன்றிய மதங்கள்கூட இன்றும் நின்று நிலவுகின்றன. உலகின் பல்வேறு மதங்களைக் கண்ட தீர்க்கதரிசிகள் என்றும் ஏற்றொழுகக்கூடிய அறிவுரைகளை வழங்கியுள்ளனர். இந்தியாவிலும், உலகிலும் நின்று நிலவும் மதங்களைப் போற்றி ஏற்று ஒழுகுவோமாக! இந்த உலகம், போர், கலகங்களால் அழிந்து போகாமல் நிலை பெறச்செய்ய உத்தம தீர்க்கதரிசிகளை ‘மதங்களைக் கண்ட மாமனிதர்களை’ நினைத்துப் போற்றுவோமாக !

இன்று இந்தியாவிலும் சரி, உலகிலும் சரி பலநூறு மதங்கள் நிலவுகின்றன. வரலாற்றுக்கு முந்திய ஷிண்டோ, ஹீப்ரு மதங்களைப்

பின்பற்றுவோரும் உள்ளனர். ஆயினும் உலகில் இந்து மதம், பௌத்த மதம், சமண மதம், கிறிஸ்துவ மதம், இசுலாம் மதம் ஆகியன புகழ்பெற்ற மதங்கள், பலகோடி மக்களால் பின்பற்றப்படுபவை. இந்த மதங்கள் அனைத்தும் ஒரு குரலாக 'மனித நேயம் மனிதகுல ஒருமைப்பாடு' என்றே பேசுகின்றன.

இந்த உலகின் தொன்மையான மதங்களுள் மிகவும் பழைமை வாய்ந்தது இந்து மதமே. இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்தையது; சற்றேறக்குறைய ஐம்பது கோடி மக்கள் பின்பற்றிவரும் மதம். உண்மையைச் சொன்னால் இந்து மதம் ஒரு மதமே அல்ல. இந்து மதம் ஒரு வாழ்க்கை முறை. இந்து மதக் கோட்பாடுகள் கெட்டிதட்டிப் போனவையல்ல; நெகிழ்ந்து கொடுப்பவை. மற்ற மதநெறிகளையும் ஏற்று ஒழுகுவதற்கு அங்கீகரித்தது இந்து மதம் மட்டும்தான்! இந்து மதம் உலகின் எந்த ஒரு சிந்தனையையும் ஏற்கும்; அதுபேல வழிபாட்டு முறைகளையும்கூட ஏற்றுக்கொள்ளும். இந்து சமயம் காலந்தோறும் மாறிமாறி வளர்ந்து வந்திருக்கிறது என்பது மாபெரும் உண்மை. அதனாலேயே இந்தியா பல்வேறு மதங்கள் தோன்றவும் பல மதங்கள் சங்கமமாகவும் இடமளித்து வந்துள்ளது. இனியும் இடம் கொடுக்கும். பாரதிவாக்கில் இந்து மதத்தின் கொள்கை.

"ஒன்று பரம்பொருள் நாம் அதன் மக்கள்
உலகின்பக் கேணி"

என்று ஒலிக்கிறது.

இந்தியாவில் தோன்றிய மதங்களில், ஒன்று பௌத்த மதம். இன்று தென்கிழக்காசிய நாடுகள் முழுவதும் பரவலாகப் பரவியுள்ள மதம் பௌத்தமேயாகும். பௌத்த மதத்தைக் கண்டவர் புத்தர் பிரான். பௌத்த மதம் தோன்றிய காலம் சற்றேறக்குறைய இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பாகும். ஒரு பேரரசராகிய புத்தர், துக்கத்தில்–துயரத்தில் கிடந்துழலும் மக்களைக் கண்டு வருந்தி, முடியைத் துறந்து போதி மரத்தடியில் அமர்ந்து ஞானத்தை உணர்ந்தார்.

இன்று உலகில் நிலவும் மிகப்பெரிய மதம் பௌத்த மதம். தூய துறவில் முகிழ்த்த மதம். சற்றேறக்குறைய எழுத்தைந்து கோடி மக்கள் இதைப் பின்பற்றுகிறார்கள். உலக வரலாற்றில் போரற்ற உலகம், துறவு ஆகிய சிந்தனைகளைத் தோற்றுவித்து வளர்த்த பெருமை பௌத்தத்திற்கு உண்டு. 'பகைமையினால் பகை போகாது. தன் வேரைத் தானே கல்லாதே!' என்று உபதேசிக்கிற பௌத்தம் இந்த உலகிற்கு அணியாகும்.

உயிர்கொண்டு உலாவும் எந்த ஒன்றுக்கும் தீங்கு செய்யாதே என்று அறிவுரை வழங்கியது சமண சமயம். சமண மதத்தைக் கண்டவர் மகாவீரர். சமண மதம் தோன்றி இரண்டாயிரத்து அறுநூறு ஆண்டுகளாயின. சமண மதத்தின் பேரறம் கொல்லாமையேயாகும். 'ஒன்றாக நல்லது கொல்லாமை' என்று திருக்குறள் கூறுகிறது. 'பகைவன் என்பதாக ஒருவரைப் படைத்திலாதவனே வீரன்' என்ற சமணம் மனித குலத்திற்குக் கிடைத்த பெரிய அரண்.

அடுத்து நம்முடைய கவனத்திற்கு வருவது கிறித்தவ மதம். ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு கிறித்தவ மதம் இயேசு பெருமானால் நிறுவப்பெற்றது. இன்று கிறித்தவ சமயம் பெரும்பான்மையான உலக மக்களால் பின்பற்றப்படுகிறது. இன்றைய உலகில் கிறித்தவ மதம் சேவை மதமாகப் புகழ்பெற்று விளங்குகிறது.

ஏசுநாதர், தீமைக்குத் தீமை செய்ய வேண்டாம், ஒரு கன்னத்தில் அறைந்தால் மறகன்னத்தைத் திருப்பிக்காட்டு, பகைவர்பாலும் மெய்யன்பு கொள்ளுங்கள், உங்களைப் பகைப்பவருக்கும் நன்மை செய்யுங்கள் என்று போதித்தார். 'சமாதானம் செய்து வைப்பார்கள் பாக்கியவான்கள்' என்று ஏசுபிரான் அருளிச் செய்துள்ளார். இன்றைய சூழ்நிலைக்கு ஏசுபிரான் அருளிச் செய்துள்ள அறிவுரைகள் மருந்தென விளங்குகின்றன. துன்புறுவோருக்கு உதவுவதைக் கடமை என்று ஏசு அறிவுறுத்தியுள்ளார். இன்றைய சூழ்நிலைக்கு ஏசுமதம் மிகவும் ஏற்புடைய ஒன்றாக விளங்குகிறது.

இன்று உலக நாடுகளின் கவனத்தை ஈர்க்கும் மதம் இஸ்லாம். ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன், நபிகள் நாயகப் பெருமானால் காணப்பெற்றது இஸ்லாம் சமயம். அராபிய சமுதாயத்தில் ஒளி விளக்கேற்றிய பெருமை நபிகள் நாயகத்திற்கே உண்டு. 'ஒரே கடவுள்' என்ற கொள்கை வழி அராபிய சமுதாயத்தை ஒன்றுபடுத்தினார். வாழ்க்கையைத் தழுவி நிற்கும் மதம், செல்வம் புறக்கணிக்கப்படக் கூடியதல்ல என்று துணிந்து சொன்ன மதம் இஸ்லாம் மதமாகும். நபிகள் நாயகம் அவர்கள், அளவற்ற அருளாளனாகிய இறைவன் உணர்த்த, அருளிய திருமறை குர்ஆன்.

இரக்கமில்லாதவர்களிடம் அல்லாவுக்கு இரக்கம் கிடையாது என்ற நபிகள் நாயகத்தின் திருமறை வாக்கு நினைந்து நினைந்து உணரத்தக்கது.

உலக சமயங்கள் என்று நிற்கும் ஐந்து பெரிய சமயங்களைக் கண்டோம் ! சமயங்கள் அனைத்தும் ஒரே ஆதார கருதியில் பேதமின்றிப் பேசுகின்றன. கடவுள் ஒருவரே! 'ஒருவனே தேவன்' என்றார் திருமூலர். 'கடவுளைத் தவிர வேறு கடவுள் இல்லை' என்ற முகம்மது நபியின் வாக்கும் உணர்க. மனிதகுல வாழ்க்கையில் நட்பும் உறவும் முக்கியம். சமுதாய உறவில் நட்பே முதன்மையானது. இதனை உணர்த்தவே நம்பியாரூரருக்குச் சிவபெருமான் நினைவிற்கு வருகிறார். தீமை செய்யாமை ; நன்மை மிகுதியாகச் செய்தல்; அன்பும் அருளும் கொள்ளுதல் ஆகியன பௌத்த நெறிகள்; ஒவ்வொரு மனிதருக்கும் ஒழுக்கக் கோட்பாடுகளாகும். இஸ்லாம் என்ற சொல்லுக்குப் பொருள் சமாதானம், சகோதரத்துவம் என்பதேயாகும். இன்றைய உலகத்திற்கு அமைதி தேவை. மக்களுடைய வாழ்க்கை மேம்பாட்டிற்காகத் தோன்றிய மதங்கள் ஏன் இன்று அதைச் செய்வதில் வெற்றியடையவில்லை? மதங்கள் நிறுவனங்களாகி விட்டதால் 'கெட்டி' தட்டிப் போய்விட்டனவா? இன்று மனித வாழ்க்கை முற்றிலும் மாறுபட்டுவிட்டது. உலகம் விரைந்து மாறி முன்னேறி வருகிறது. மதங்கள் தோன்றிய காலத்திலிருந்த பிரச்சனைகள் வேறு; இன்றைய பிரச்சனைகள் வேறு. புரிந்துகொள்ள மதங்கள் முன்வரவில்லையா? அல்லது முடியவில்லையா? மனித உலகம் புதிய காற்றைச் சுவாசிப்பதில் மதம் தடையாக இருக்க விரும்புகின்றதா? இந்த உலகத்தின் நடப்பியல்புகளைப் புரிந்துகொண்டு உலகம் அழியாமல் – மனிதப் பூண்டு அழிந்து ஒழியாமல் நிலை நிறுத்தக் கூடிய மதமே இன்று வேண்டும்.

இன்று என்ன தேவை? இலட்சிய சமுதாயம் தேவை. மாந்தருக்கு இலட்சியத்தை எடுத்துக் கொடுத்து வழிநடத்திச் செல்லுகின்ற மதமே இன்று தேவை. இன்று மதத் தத்துவங்கள் பற்றி விவாதிக்காதீர்கள். மதங்கள் விவாதங்களைக் கடந்தவை. மதங்கள் அனுபவத்திற்கும் செயலுக்கும் மட்டுமே உரியவை. 'இவர் தேவர் ! அவர் தேவர்' என்று வழக்காடுவதும், மதங்களுக்கிடையில் உயர்வு – தாழ்வு கற்பிப்பதும் ஒன்றுக்கும் உதவாத வேலை; பயனற்றது. அசோகர் ஸ்தூபியில் செதுக்கிவைத்த வாக்கியத்தை நினைவுகூர்க. 'மற்றவர் மதங்களைக் கண்டிக்காதே' என்பது அந்த மகாவாக்கியம்.

மனித குலத்திற்கு அன்பையே போதிக்கும் மதமே நமக்குத் தேவை ; உலகம் ஒரு குடும்பம் என்று அணைக்கும் மதமே இன்று தேவை. கடவுளை நம்புவோம்! மனித குலத்திற்குத் தொழும்பாய்த் தொண்டு செய்வோம் ! எந்த விலை கொடுத்தும் சமாதானத்தையும் சகோதரத் துவத்தையும் காப்போம் !

'எல்லா உலகமும் ஆனாய் நீயே' !



## சின் முத்திரை

சின் + முத்திரை = ஞானத்தைக் காட்டும் அடையாளம். சுட்டு விரலால் பெருவிரலின் அடியை சேர்த்து மற்ற 3 விரல்களையும் ஒதுக்கி காட்டும் முத்திரை. பெருவிரல் இறைவனையும், சுட்டு விரல் ஆன்மாவையும் மற்ற மூன்று விரல்களுள் நடு விரல் ஆணவத்தையும், மோதிரவிரல் கன்மத்தையும், சுண்டு விரல் மாயையும் குறிக்கும். ஆன்மா மும்மலங்களின்றும் நீங்கி இறைவனை அடைந்து இன்புறுவதே இம் முத்திரையின் பொருளாகும்.







# நவபாஷாண ரகசியம்

சிதம்பரத்தில் எழுந்தருளிய நடராஜப் பெருமானின் சிதம்பர சகசியத்தைப் போல், பழனி தண்டாயுதபாணி கோவிலில் உள்ள முருகப்பெருமானின் நவபாஷண உருவச்சிலை பல தத்துவங்களையும், ரகசியங்களையும் கொண்டதாகும்.

இன்றைய உலகில் நவபாஷாணத்தைப் பற்றிப் பலரும் பலவிதமாகச் சொல்லி வருகிறார்கள். சிலர், நவபாஷாணத்தால் தங்கம் செய்யலாம், மாந்திரீகம் செய்யலாம், மற்றும் சில நவபாஷாணத்தால் கண்பார்வை அற்றவர்கள் கண்பார்வையைப் பெறமுடியும் என்றெல்லாம் சொல்கிறார்கள். இது முற்றிலும் தவறானது.

ஏனென்றால், நவபாஷாணத்திற்கு இத்தகைய ஆற்றல் கிடையாது. அந்த ஆற்றலை அது பெற்றிருந்தால், தெய்வத்திற்கு இடம் ஏது? விதியின் விளையாட்டுக்குத்தான் இடம் ஏது? பாவ புண்ணியங்களுக்கு விலை பேச ஆரம்பித்து விடுவார்கள்.

நவபாஷணம் என்ற சொல்லுக்கு 'நஞ்சு' என்பது பொருள். இது மனிதனைக் கொல்லக்கூடிய தன்மையுடையது. இத்தகைய கொடிய நஞ்சினை அமிர்தமாக மாற்றுகிற ரகசியத்தை நம் சித்தர்கள் அறிந்திருந்தனர்.

பாஷாணங்களின் மொத்த எண்ணிக்கை அறுபத்து நான்கு. அவற்றில் இயற்கையில் கிடைக்கக்கூடியவை முப்பத்திரண்டும் செயற்கையில் கிடைக்கக்கூடியவை முப்பத்திரண்டும் ஆகும். இவற்றில் ஒன்பது பாஷாணங்களைக் கொண்டு போகர் முருகன் சிலையை வடிவமைத்தார்.

பழனியில் உள்ள நவபாஷாணத்தால் செய்யப்பட்ட முருகர் சிலை போகர் என்ற சித்தரால் செய்யப்பட்டது. போகர் ஏன் பாஷாணங்களைக் கொண்டு முருகர் சிலையைச் செய்தார் என்ற கேள்வி எழலாம். போகர் எழுதிவைத்த பல சுவடிகளைப் படிக்கும்பொழுது அவர் இதனை ஆன்மிக நோக்கத்துடனும், மக்களுக்கு இதனால் கிடைக்கக்கூடிய மருத்துவப் பயனைக் கருத்தில் கொண்டும் செயல்பட்டுள்ளார்.

அண்ட சராசரங்களைத் தனக்குள் அடக்கிய ஈஸ்வரன் பஞ்சபூதங்களுக்குக்குள் அடங்கி யிருக்கிறார். அவ்வாறே எல்லா பாஷாணங்களும் பஞ்சபூதங்களுக்குள் அடங்கியவையாகும். சில உதாரணங்கள் :

பஞ்சபூதங்கள் : மண், நீர், தீ, வாயு, ஆகாயம்

உலோகங்கள் : தங்கம், நாகம், செம்பு, இரும்பு, துத்தநாகம்

பாஷாணங்கள் : மிருதாருசிங்கி, சங்குபாஷாணம், கந்தகம், லிங்கம், இரசம்

வீரம் : வீரம் என்ற பாஷாணம் இமயமலையிலும் அதனைச் சார்ந்த பிரதேசத்திலும் இயற்கையில் கிடைக்கக்கூடியது. இவ்வீரம் உண்டானதைப் பற்றி ஒரு வரலாறு உள்ளது. சிவனை நாடிச் சென்ற மன்மதன் மேல் சீற்றம் கொண்ட சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணைத் திறக்க, அதிலிருந்து பெரும் தீ ஜுவாலை பெருகி, மன்மதன் இருந்த இடத்தைத் தாக்க அதிலிருந்து வீரம் உண்டாயிற்று. இது புராணக் கதையாகும்.

பாதரசம் : பாதரசம் இயற்கையில் கிடைக்கும் பொருள். பாதரசத்தைச் சித்த மருத்துவத்தில் அதிகமாகப் பயன்படுத்துவதுண்டு. இரசத்திற்கு சித்த நூல்களில் பல பெயர்கள் சொல்லுவதுண்டு.

சாதிலிங்கம் : இதனை ஆண்குறி என்றும், வன்னியென்றும், சண்டகமென்றும் அழைப்பதுண்டு.

கந்தகம் : இதற்கு பீஜம், செல்விந்து, சக்தி சுரோனிதம் என்று சொல்வார்கள்

கௌரி : கௌரி பாஷாணத்துக்கு ஈஸ்வரி, சிவகாமியென்றும் கூறுவதுண்டு.

தாளகம் : அரிதாரம், மால்தேவி என்ற பெயர்களும் உண்டு

மனோசிலை : சிலை, வில், நான்முகன், தாமரை வாசினி என்றும் சொல்வார்கள்.

மிருதாருசிங்கி : சிங்கி, போகர்

வெள்ளை பாஷாணம் : சங்கு, வெள்ளை என்றும் சொல்லுவதுண்டு.

மேற்கண்ட விபரங்களைக்கொண்டும், கிரகங்களின் வரலாறுகளை மனதில் கொண்டும் நமக்கு எந்தக் கிரகத்துக்கு எந்த பாஷாணம் பொருந்தும் என்றும் எளிதில் முடிவு செய்ய முடியும். அவைகளின் விபரங்களைப் பார்க்கலாம்.

சனீஸ்வரர் : சனீஸ்வரர் சூரிய பகவானின் புத்திரர். இருப்பினும் சனி, சூரியனுக்குப் பகைவன் என்றும் புராணங்கள் சொல்கின்றன. இக்கோணத் திலிருந்து பார்க்கும்போது பாதரசம் சூரியனின் பகைவன் என்றும் பல நூல்களில் காணப்படுகிறது. பாதரசம் சிவனின் விந்து என்றும் புராணங்களிலிருந்து அறிகிறோம். இவையெல்லாம் வைத்து ஒப்பிட்டுப் பார்க்கும்போது இரசம் என்ற பாஷாணம் சனீஸ்வரனைக் குறிக்கும் என்றும் திட்டவட்டமாகச் சொல்லலாம்.

அதாவது, சனீஸ்வரனின் நிறம் கருப்பு. அவ்வாறு இருக்கையில், எவ்வாறு இரசம் சனியைப் பொருந்தும் என்று கேட்கலாம். நாம் பார்க்கும் இரசம் சுத்திகரித்த இரசமாகும். இயற்கையில் உள்ள அசுத்த திராவகப் பொருள்களுடன் கலந்துதான் இரசம் பூமியிலிருந்து தோண்டப்பட்டு எடுக்கப்படுகிறது. அப்போது அதன் நிறம் வெள்ளி நிறம் அல்ல. அதனுடன் கலந்துள்ள திராவகத்தின் நிறம் தான் தெரியும். அது சற்று கருமை நிறம் கொண்டதாகத்தான் இருக்கும். பிறகு நாம் இரசத்துடன் கூடியிருக்கும் அசுத்தப் பொருட்களை நீக்கிவிட்ட பின் அதன் வெள்ளி நிறம்தான் நமக்குத் தென்படும்.

சூரியன் : உஷ்ணத்தைத் தரும் சூரியன் எல்லா ஜுவராசிகளுக்கும் அதிபதி. மேலும் சூரியன் ஆத்மகாரனும் ஆவான். சித்த மருத்துவ நூல்களில் ஆண்குறியென்றும் சொல்லப்படும் சாதிலிங்கம் என்ற பாஷாணம் இயற்கையில் கிடைக்கக் கூடியது. இது கருஞ்சிவப்பு நிறத்தையுடையது. இதிலிருந்து கிடைக்கக்கூடிய இரசம் உயர்தரமாக் கருதப்படுகிறது. எனவே, சாதிலிங்கத்தை தந்தை சூரிய பகவானாகவும் அதிலிருந்து தோன்றும் ரசம் மகன் சனீஸ்வரனாகவும் சொல்லலாம்.

பூசம் : இருபத்தேழு நட்சத்திரங்களில் ஒன்று பூச நட்சத்திரம். பூசம் முருகனுக்குப் பிரீதியான நட்சத்திரம். செவ்வாய் கிரகத்தைக் குறிக்கும்.

வீரம் : வீரம் என்ற பாஷாணத்துக்கு மறுபெயர் சந்திரு. சிவபெருமானின் சடையில் மறைந்துள்ள சந்திரன் இப்பாஷாணத்துக்கு அதிதேவதையாகும்.

சங்கு பாஷாணம் : சங்கு பாஷாணத்துக்கு வெள்ளைப் பாஷாணம் என்றும் பெயருண்டு. பாற்கடலிலிருந்த எழுந்த அமிர்தத்துடன் சங்கும் எழுந்தது என்ற புராணக் கதையைக் கேட்டிருக்கின்றோம். அமிர்தத்தை உண்ட அசுரனை இரண்டு துண்டாக வெட்ட ஒரு துண்டு ராகு என்ற கிரகமாகவும், மற்றொரு துண்டு கேதுவாகவும் மாறிவிட்டதாகப் புராணம் சொல்கிறது. ஆகையால் வெள்ளை பாஷாணம் ராகு என்ற கிரகத்தின் அம்சம் என்று திட்டவட்டமாகச் சொல்லலாம்.

மிருதாருசிங்கி : இப்பாஷாணம் கேது என்ற கிரகத்தைக் குறிக்கும்.

கௌரி : இந்தப்பாஷாணம் சுக்கிரன் என்ற கிரகத்தைக் குறிக்கும்.

தாளகம் : இப்பாஷாணத்தில் பல வகைகள் உண்டு. உதாரணமாக அரிதாரம், பொன் அரிதாரம் என்ற இருவகைகள் உண்டு. சில சித்த வைத்திய நூல்களில் அரிதாரத்துக்கு ஹரி என்றும் பொன்னரிதாரத்துக்கு மால்தேவி என்றும் பெயருண்டு. இது திருமாலையும், லட்சுமியையும் குறிப்பதேயாகும். இப்பாஷாணம் மஞ்சள் நிறத்தைக்கொண்டது. தெய்வங்களுக்குக் குருவாகிய, குரு என்ற கிரகத்தைக் குறிக்கும்.

மனோசிலை : இப்பாஷாணம் நான்முகனையும் சரஸ்வதியையும் குறிக்கும். புதன் என்ற கிரகத்தின் ஆட்சியில் அடங்கும்.

அடுத்ததாக நாம் சிந்திக்க வேண்டியது. போகர் ஏன் நவபாஷணம் கொண்டு முருகருடைய சிலையைச் செய்தார் என்பது. இதற்கு எந்த நூலிலும் எந்தவிதமான ஆதாரமும் இல்லை. இந்நிலையில், மேலே கூறப்பட்ட விபரங்களை மனதில் கொண்டும், சித்தர்களின் பரந்த மனப்பான்மையை அறிந்தும், நாம் சிந்தித்துப் பார்த்தால்தான் நமக்குச் சில விளக்கங்கள் மனதில் தோன்றும்.

ஆன்மீகக் கோணத்திலிருந்து நாம் பார்க்கும் போது நவபாஷாண உருவச் சிலை மற்ற பஞ்சலோகச் சிலைகளையும், கருங்கல் சிலைகளையும்விட மிகச் சிறந்தது. இதைக் கருத்தில் கொண்டு பழனி முருகனுடைய சிலையை நவபாஷாணத்தால் செய்தார் என்ற முடிவை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற நிர்ப்பந்தம் உண்டாகிறது.

மருத்துவ விஞ்ஞான நோக்கத்திலிருந்து பார்க்கும்போது இவ்வுருவச் சிலைக்கு அபிஷேகம் செய்து அந்தத் தீர்த்தத்தை உட்கொள்ளும் போது அத்தீர்த்தத்தில் கரைந்துள்ள நவபாஷாணங்களும் மருந்தாகப் பயன்படுகிறது. இதனால் பல நோய்களும் குணமாகிறது. பொதுவாக நோயாளிகளிடம் மருந்தை உட்கொள்ளச் சொன்னால் அவர்கள் அவ்வாறு செய்வதில்லை. இதை எல்லா டாக்டர்களும் ஒப்புக்கொள்வார்கள். ஆனால், புண்ணிய தீர்த்தத்தை உட்கொள்ள ஒருவரிடம் நாம் சொன்னால், அதை அவன் உடனே செய்வான். இதனைக் கருத்தில் கொண்டுதான் போகர் பழனி முருகனுடைய சிலையை நவபாஷாணத்தால் அமைத்திருக்க வேண்டும்.



## சிவராத்திரி காலங்களில் இறைவனுக்கு செய்ய வேண்டிய அபிஷேக ஆராதனைகள்

முதல் யாமம் : பஞ்சகவ்ய அபிஷேகம், சந்தனப் பூச்சு, வில்வம், தாமரை அலங்காரம், அர்ச்சனை, பச்சை பயற்றுப் பொங்கல் நிவேதனம், ருக் வேத பாராயணம்

இரண்டாம் யாமம் : சர்க்கரை, பால், தயிர், நெய்கலந்த ரஸ பஞ்சாமிர்தம் அபிஷேகம், பச்சை கற்பூரம் பன்னீர் சேர்த்து அரைத்து சார்த்துதல், துளசி அலங்காரம், வில்வம் அர்ச்சனை, பாயசம் நிவேதனம், யஜுர்வேத பாராயணம்.

மூன்றாம் யாமம் : தேன் அபிஷேகம், பச்சை கற்பூரம் சார்த்துதல், மல்லிகை அலங்காரம், வில்வம் அர்ச்சனை, எள், அன்னம் நிவேதனம், சாமவேத பாராயணம்.

நான்காம் யாமம் : கருப்பஞ்சாறு அபிஷேகம், நந்தியாவட்டை மலர் சார்த்துதல், அல்லி, நீலோற்பலம், நந்தியாவட்டை அலங்காரம், அர்ச்சனை, சுத்தான்ன நிவேதனம், அதர்வண வேத பாராயணம்.

## நடராஜர் அபிஷேகத்திற்குரிய சிறப்பு நாட்கள்

சித்திரை – திருவோண நட்சத்திரம் – உச்சிக்காலம்
ஆனி – உத்திர நட்சத்திரம் – விடியற்காலை
ஆவணி – வளர்பிறை சதுர்த்தசி – மாலை இரண்டாம் காலம்
புரட்டாசி – வளர்பிறை சதுர்த்தசி – அர்த்த ஜாமம்
மார்கழி – திருவாதிரை – விடியற்காலை
மாசி – வளர்பிறை சதுர்த்தசி – மாலை இரண்டாம் காலம்
ஆனி, மார்கழி மாதச்சிறப்பு நாட்களில் காலை அபிஷேகம் – தரிசனம்; மற்ற 4 மாதங்களிலும் மாலை அபிஷேகம் – தரிசனம்.

# அஷ்டமி, நவமி ஒதுக்கப்பட்ட நாட்களாக கருதப்படுவது ஏன்?

நமது முன்னோர்கள் சொல்லிவிட்டு சென்ற காரியங்கள் ஒவ்வொன்றுக்கும் நிச்சயமாக ஒரு காரணம் இருக்கிறது. இது மறுக்கமுடியாத உண்மை. கால் அலம்பிவிட்டு வீட்டிற்குள் வருவது முதல் கல்யாணத்தின் போது தாலி கட்டுவது வரை அவர்கள் செய்யச்சொல்லிய விஷயங்கள் நம் நலத்திற்காகவே உள்ளன. மறைந்த ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் சொல்லியதுபோல, விஞ்ஞானம் என்பது ஏற்கனவே உள்ளதை ஆராய்ச்சியின் மூலம் கண்டுபிடிப்பதே ஆகும். யோகா, சூரிய நமஸ்காரம் போன்ற நம் முன்னோர்களின் புத்திமதிகள் தற்போது மேல்நாட்டவர் மூலமாக இறக்குமதியாகி நாம் அதை கடைபிடிக்க ஆரம்பித்திருக்கிறோம்.

இதுபோலவே அமாவாசை, அஷ்டமி, நவமி பார்ப்பது பழைய பஞ்சாங்கமாக தோன்றினாலும், விஞ்ஞான ரீதியான உண்மைகள் அவற்றில் புதைந்து கிடக்கின்றன.

நம் பூமியானது 24 மணி நேரத்தில் தன்னைத்தானே சுற்றுகிறது. மற்றும் அது சூரியனை ஒரு வருடத்தில் சுற்றிவருகிறது. பூமிக்கு உள்ளதுபோலவே சூரியன். சந்திரன் ஆகிய வற்றிற்கும் ஈர்ப்பு சக்தியும், எதிர்மறையான விலகு விசையும் உள்ளது. இவை அனைவருமே அறிந்த விஞ்ஞானத்தின் அடிப்படை உண்மைகளாகும்.

பூமி, சூரியன், சந்திரன் ஆகிய மூன்று கோள்களின் நிலை இடத்திற்கு இடம், நேரத்திற்கு நேரம் மாறுபடுகிறது. சூரியனும் சந்திரனும் பூமியை ஈர்க்கும்போது, நீர்மட்டம் எளிதாக மேலேவரும். அதனால்தான் சமுத்திரத்தில் அலைகள் ஏற்படுகின்றன. அமாவாசை, பவுர்ணமி நாட்களில் அலைகள் உயரமாக எழுகின்றன. மருத்துவ சாஸ்திரத்தின்படி, நம் உடலில் உள்ள உறுப்புகள் மற்றும் மனமானது நம் மூளையில் உள்ள ஒருவித திரவத்தினால் இயக்கப்படுகிறது. பூமி, சூரியன், சந்திரன் இவற்றின் நிலைகளால் நம் மனதில் ஏற்படும் எண்ண அலைகள் மாறுபடுகின்றன. இந்த விஞ்ஞான உண்மைகளையும். நாம் மனதில் நிலைநிறுத்திக்கொள்ள வேண்டும்.

**அமாவாசை :** அமாவாசை அன்று சூரியன், சந்திரன், பூமி ஆகிய மூன்றும் ஒரே நேர்கோட்டில் வருகிறது. பூமிக்கு ஒரே பக்கத்தில் சூரியனும், சந்திரனும் இருப்பதால் பூமி ஒரேவிதமான ஈர்ப்புவிசையில் உள்ளது. அதனால் நம் மூளையும், அதனுள் உள்ள திரவமும் சமநிலையில் இருக்கும். எனவே நம் எண்ண அலைகள் சீராக இயங்க முடிகிறது. நம்மால் சரியான முறையில் சிந்தித்து செயல்பட முடிகிறது. அதனால் அமாவாசை அன்று நாம் செய்யும் முயற்சிகள் வெற்றிபெற வாய்ப்பு உள்ளது. எனவே இதை நல்ல நாளாக நம் முன்னோர்கள் கருதினார்கள்.

**பவுர்ணமி :** பவுர்ணமி அன்ற இந்த மூன்று கோள்களும் ஒரே கோட்டில் வந்தாலும், பூமிக்கு இருபுறமும் சூரியனும் சந்திரனும் உள்ளது. அதனால் பூமியின் ஈர்ப்பு விசையின் தன்மை மாறுபட்டு விலகுவிசையாக ஆகிறது. அதனால் நம் மூளை சமநிலையில் இருப்பதற்கும், மனநிலை சரியானபடி இயங்குவதற்கும் வாய்ப்பில்லை. அதனால் பவுர்ணமியை நல்லநாள் என்று கூறுவதற்கு இல்லை.

**அஷ்டமி, நவமி :** இந்த நாட்களில் பூமியை சூரியன் ஒரு பக்கமும், சந்திரன் ஒருபக்கமும் இயக்கும் நிலை வருவதால், நம் மூளையும் இதே போன்று இரண்டுவிதமான ஈர்ப்புகளுக்கு உள்ளாகும். நம்மால் தெளிவாக சிந்திக்க முடியவில்லை. நம் எண்ண அலைகள் சரியாக இல்லாததால் நாம் செய்யும் காரியங்களும் வெற்றிபெற வாய்ப்புகள் மிக குறைவு. அதனால் இந்த இரண்டு நாட்களும் நல்லநாட்களாக கருதப்படுவதில்லை. எனவே இந்த நாட்களில் முக்கியமான செயல்களைச் செய்யவோ, முடிவெடுக்கவோ வேண்டாம் என்று அறிவுறுத்தினார்கள்.

நம் முன்னோர்கள் செய்யச்சொல்லிய காரணங்களை ஆராய்ந்து பார்த்தால் அவைகளில் நல்லதொரு தத்துவம் இருப்பதையும் அறிந்துகொள்ளலாம். இதை அறிந்து நாம் செயல்பட்டால் வாழ்க்கையில் நலம் உண்டாகும்.



## கோயில்களில் யானையை வைத்துப் பராமரிப்பதன் தத்துவம் என்ன?

யானையின் மத்தகம் மகாலட்சுமியின் வாசஸ்தானமாக இருப்பது. தாமரைப் பூவின் உள்பக்கம், வில்வ இலையின் பின்பக்கம், சுமங்கலிகளின் வகிடு, பசுமாட்டின் பின்பக்கம், யானையின் மத்தகம் ஆகிய ஐந்தும் லக்ஷ்மி நித்யவாஸம் செய்வதால் நித்யஸ்ரீயுடன் கூடிய மங்களமான இடங்கள்.

முன்னந்தலைக்கு இப்படிப் பெருமை இருக்கிறதென்றால், யானையின் பின்னால் தொங்கும் வாலின் மயிருக்கும் பெருமை உண்டு. அந்த ரோமம் ஆவி சேஷ்டைகளுக்குப் பெரிய ரட்சை. அது ஆரோக்கியம் அளிப்பதும்கூட. அதனால் அந்த மயிரை நறுக்கி மணி மாதிரி வைத்து யானைக் கண்ணி மோதிரம் முதலிய நகைகள் செய்து போட்டுக் கொள்வதுண்டு. சாதாரணமாக உடம்பில் இருந்து உதிர்ந்த மயிரும், வெட்டிய நகமும் தோஷம் உள்ளவை. ஆனால், விதிவிலக்காக யானையின் ரோமம் துர்மந்திரங்களால் ஏற்படும் தீங்கிற்குப் பரிகாரமாக இருக்கின்றது.

மடத்தில் இரண்டு மிருகங்களின் பெயரில் நித்ய பூஜை நடக்கிறது. அவை கோபூஜை, கஜபூஜை ஆகிய இரண்டு. இவற்றில் பசுவை மிருகத்தோடு சேர்க்காமல் மாதா என்றே வைத்திருக்கின்றனர். அப்படிப் பார்த்தால் மிருக வர்க்கம் என்று இருப்பதில் யானைக்கு மட்டுமே பூஜை செய்யப்படுகிறது. வேறு எந்த மிருகத்துக்கும் இந்தப் பூஜை விசேஷம் இல்லை. நாளைத் தொடங்கும் போது நடப்பது கோபூஜை. கோபூஜையில் கோவுக்குப் பூஜை நடக்கிறது. நாள் – அதாவது Day Time, பகல் முடிகிற சமயத்தில் நடப்பது கஜபூஜை, கஜ பூஜையில் கஜத்தை மரியாதை பண்ணிப் பழங்களைக் கொடுப்பதுடன், அதைக் கொண்டு ஆசாரியனுக்கு (ஆசாரியப்பாதுகைகளுக்கு) சாமரம் போட்டுப் பூஜையும் பண்ண வைக்கிறோம். தினப்படி வரவு செலவு கணக்குகளை அப்போது அவர்முன் ஒப்பிக்கிறோம். அதை முடித்து நாம் நமஸ்காரம் பண்ணும் போது, யானையும் தும்பிக்கையைத் தூக்கி அவருக்குச் சலாம் போட்டுவிட்டு, ஜய கோஷமாகப் பிளிறுகிறது. இந்தப் பூஜைக்கே "தீவட்டி சலாம்" என்றுதான் பெயர் சொல்லுவது. கோபூஜையில் கோவுக்குப் பூஜை பண்ணுவதோடு சரி. ஆனால், கஜ பூஜையில் அதற்கும் பூஜை – அதுவும் பூஜை பண்ணுகிறது.

எல்லாப் பெரிய கோயில்களிலும் யானை வைத்து இருக்கிறார்கள். மலையாளத்தில், அதுவும் திருச்சூர் மாதிரி இடத்தில், யானைகள்தாம் சுவாமியை விடவும் கூட உற்சவங்களில் பிரதானமாக இருப்பது. அவ்வளவு தெய்வீகம் பொருந்திய, தெய்வ சம்பந்தம் உள்ள மிருகம் அது. "ஆதிமூலமே !" என்று அழைத்துப் பகவானையே வைகுண்டத்திலிருந்து இறங்கி வரப் பண்ணியிருக்கிறதல்லவா ?

மிருகங்களுக்குள் உருவத்தில் ரொம்பவும் பெரியது என்பதோடு, யானைக்கே இப்படி ஏகப்பட்ட சிறப்புகளும் இருப்பதால்தான், எல்லா ஜீவ வர்க்கமும் சேர்ந்ததாக, விக்னேசுவரர் என்ற ரூபம் பரமாத்மா தேர்ந்தெடுத்த போது, மிருக வர்க்கத்தில் யானையையே ஏற்றுக் கொண்டார்.



## அரசு, வேம்பு ஆகிய மரங்களை வழிபடுவது ஏன்?

புத்தாண்டு பிறக்கப் போவதற்கு அறிகுறியாக இயற்கை அன்னை தனது மர வர்க்கங்களில் அரசிளங் குழந்தைகளான அரசையும், வேம்பையும் முதலில் அடியோடு இலை உதிரச் செய்கிறாள். பிறகு பச்சைத் துளிர்களைத் தழைக்கச் செய்கிறாள். அரசுக்கும் வேம்புக்கும் கல்யாணம் செய்து அதன் அடியில் விநாயகரையும், நாகராஜனையும் பிரதிஷ்டை செய்வது தொன்றுதொட்ட வழக்கு. பனிக்காலத்துக்குப் பிறகு இலை உதிரும்போது இந்த மரங்களைப் பார்த்தால் இலையே இராது. பிள்ளையாரும், நாகராஜனும் மரத்தின் நிழற்குடையே இல்லாமல், சூரிய வெளிச்சம் தங்கள் மேல் படுகிற மாதிரி இருப்பார்கள். இது இம்மாதிரி இளம் சூடான வானத்தைப் பார்த்து அனுபவிக்க வேண்டிய பருவமாகவே இருக்கிறது. மழையிலே குடை வேண்டும். கொளுத்துகிற வெயிலில் குடை வேண்டும். கடும் பனிக்காலத்தில் இரவு வேளையில் சூரியன் இல்லாதபோது, ஆகாசத்தைப் பார்த்து உட்கார்ந்திருக்க முடியாது. ஆனால் அத்தனை பனி இல்லாத இலை உதிர்காலத்தில் சிவராத்திரியுடன் குளிர்விட்டுப் போய்விடும்போது, சூரியனின் வெப்பம் இதமாக இருக்கும் பருவத்தில், பகல் - இரவு இரண்டிலும் ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கலாம் இதை, உணர்த்துவது போலவே இயற்கை அன்னை, இந்தப் பருவத்தில் விக்னேசுவரருக்கும், நாகராஜனுக்கும் சூரிய பூஜை செய்வதைப் போல, மேலே உள்ள அரசு - வேம்பு மரங்களின் இலைகளை உதிர்த்து விடுகிறாள். நாகராஜனை முருகனாகவே சொல்லலாம். தெலுங்கர்கள் சுப்பிரமணியர், நாகதேவன் இருவரையும் "சுப்புராயுடு" என்றே சொல்வார்கள். சுப்ப என்பதே சுப்பு என்றும் தமிழ்நாட்டில் வழங்குகிறது. ஷஷ்டியின்போது நாகபூஜை செய்யும் வழக்கம் தமிழ்நாட்டிலும் பரவலாக இருக்கிறது. ஆதி தம்பதியரின் முதற் குழந்தைகளான பிள்ளையார், குமாரசுவாமி இருவருக்கும் இயற்கை அன்னை காட்டும் பரிவு, பார்வதி, பரமேசுவரரின் குழந்தைகளான நம் அத்தனை பேரிடமும் காட்டும் அன்புக்கு அடையாளமாக இருக்கிறது.

வசந்தம் வந்ததும், சூரியனின் வெப்பம் கொஞ்சம் அதிகமாகி விடுகிறது. அது குழந்தைகளை உபத்திரவம் செய்யக்கூடாது என்று இயற்கை அன்னையும் மரங்களைத் துளிர்விடச் செய்து விடுகிறாள். இலைகள் செழிக்கின்றன. இப்படி தனது குழந்தைகளை அன்புடன் ஈசன் அரவணைக்கும் பண்பு இங்கே காணப்படுவதால் இங்கே வலம் வருவது குழந்தை பிறக்கும் பேற்றை உண்டாக்கும் என்று நம்புகிறார்கள்.




### துளசியின் மகிமை

காடு மேடுகளில் எல்லாம் வளரும் தன்மை கொண்டது துளசி. இது நல்ல ஒரு கிருமி நாசினியாக செயல்படுவதோடு மட்டுமில்லாமல் ஆன்மீக வழிபாட்டிற்கு உகந்ததாகவும் கருதப்படுகிறது.

துளசி தேவியை தினமும் யார் பூஜை செய்கிறார்களோ அவர்கள் இந்த உலகில் விரும்பிய சுகங்களை அனுபவித்து முடிவில் மோட்சத்தை அடைகிறார்கள். எந்த இடத்தில் துளசி செடி பிடி அளவேனும் இருக்கிறதோ, அந்த இடத்தில் நாராயணன் போன்ற தேவர்கள் நித்தியவாசம் செய்கிறார்கள்.

யாருடைய உடலானது துளசியினால் கொளுத்தப்படுகின்றதோ அவனுடைய உடலானது சகல பாவங்களையும் நீக்கிக் கொள்கிறது. துளசி மாலையை அணிவித்துக்கொண்டு யார் பிராணனை விடுகின்றரோ, அவனுடைய உடல் தொடர்பான பல பாவங்களும் போய் விடுகின்றன. அக்கினியில் துளசி இலையினால் ஹோமம் செய்கிறவர்களுக்கு அந்த யாகத்தினுடைய முழுமையான பலன் கிடைக்கும்.

# அரச மரத்தின் சிறப்புக்கு என்ன காரணம்?

அரச மரத்தில் மும்மூர்த்திகளும் வாசம் செய்வதாகப் புராணங்கள் சொல்கின்றன.

மூலதோ ப்ரம்ம ரூபாய
மத்யதோ விஷ்ணு ரூபிணே
அக்ரத: சிவ ரூபாய
வ்ருக்ஷ ராஜாயதேநம :

கடவுளின் அம்சம் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறது. ஒரு பொருள் செயல்படுகிறது என்று சொன்னால் செயல்படத் தூண்டுவது கடவுளின் அம்சம். அதனால் செடி கொடிகளிலும் கடவுள் உண்டு.

அரச மரத்துக்குப் பூணூல் போட்டுக் கல்யாணம் செய்துவைக்கச் சொல்கிறது தர்மசாஸ்திரம். பிறகு அதை வலம் வந்து வழிபடச் சொல்கிறது.

வேதம் சொன்ன மரம் அது. வேதம் சொன்ன சம்ஸ்காரத்தை அதற்குச் செய்கிறோம். சம்ஸ்காரம் செய்யப்பட்ட மரத்துக்கு மற்ற மரங்களைவிடத் தனியான தகுதி ஏற்பட்டுவிடுகிறது. ஒன்றும் தெரியாத பாமரனாக இருந்தாலும் மும்மூர்த்திகளும் உறையும் அரச மரத்தை வலம் வருவது வரப்பிரசாதமாக அமைகிறது.

அடுத்து, ஆயுர்வேதத்தில் விருக்ஷாயுர்வேதம் என்று ஒரு பகுதி உண்டு. என்ன மரங்களை எல்லாம் நாம் வளர்க்க வேண்டும். அவற்றால் நமக்கு என்னென்ன நன்மை எல்லாம் கிடைக்கும். வீட்டில் என்ன மரம் வைக்கலாம், கிராமத்தில் என்ன மரம் வைக்கலாம் என்பது குறித்தெல்லாம் அதில் விளக்கம் இருக்கிறது. இது அரச மரத்தை மிகவும் உயர்வாகக் குறிப்பிடுகிறது.

அரச மரம் நிறையப் பறவைகளுக்கு வாழ்விடம் கொடுக்கிறது. வழிப்போக்கனுக்கும் நிழல் கொடுக்கிறது. சரீரத்துக்கு சுகம் கொடுக்கிறது. இந்த மரத்தின் அத்தனை உறுப்புகளும் பயன் தருபவை. அந்தக் காலத்தில் ஊர் ஊராகச் சென்று மக்களுக்கு நல்வழி குறித்து உபதேசம் செய்வார்கள். இது அரச மரத்தடி திண்டில்தான் நடக்கும்.

அரச மரத்தின் கீழ் நாகத்தை பிரதிஷ்டை செய்தார்கள். நாமெல்லாம் சோம்பேறிகள் என்று நினைத்தோ என்னவோ... குளத்திலோ ஆற்றங்கரையிலோ குளித்துவிட்டுக் கரையேறிய உடனே வலம்வந்து வணங்க வசதியாக கரையிலேயே அரச மரத்தையும் பிள்ளையாரையும் உண்டாக்கினர் நம் முன்னோர்கள்.

யாகத்துக்குப் பயன்படும் சமித்து அரச மரத்திலிருந்துதான் வருகிறது. அதாவது அரச மரத்தின் குச்சியை யாக அக்னியில் இட வேண்டும். எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் நம் நன்மைக்கான பொருளை அரசு கொடுக்கிறது. இதற்கு போதி மரம் என்றும் ஒரு பெயர். இதன் கீழ்தான் புத்தர் ஞானம் பெற்றார். அரச மரம் நியாயத்துக்கு சாட்சியாக இருக்கிறது. அதனாலேயே இதன் கீழ் விசாரணை நடத்தி தீர்ப்பு சொல்லும் வழக்கம் உண்டாயிற்று.

இப்படி தர்ம சாஸ்திரம், சுகாதாரம், விஞ்ஞானம் புராணம் என்று எல்லாக் கோணத்திலும் சிறந்த அரச மரத்துக்குச் சிறப்பு ஏற்பட்டதில் வியப்பென்ன?

## விசேஷமான பிரசாதங்கள்

பழனி – பஞ்சாமிர்தம்
சிதம்பரம் – கற்கண்டுப் பொங்கல்
பிள்ளையார்பட்டி – மோதகம்
திருச்செந்தூர் – அரிசி புட்டு
திருவல்லிக்கேணி – திருக்கண்ணமுது
திருப்பதி – லட்டு
ஆழ்வார்திருநகர் – வங்காரதோசை
காஞ்சி – இட்லி
ஸ்ரீ ரங்கம் – திருப்பாவாடை
சுசீந்தரம் – வடை
குருவாயூர் – திருமதுரம்
சோற்றாணிக்கரை – பால்பாயாசம்

# காலக்கணக்கு

**1. பஞ்சாங்கம் என்று சொல்லப்படுவதிலுள்ள ஐந்து அங்கங்கள் :**

திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் என்ற ஐந்தும் பஞ்சாங்கத்திலுள்ள ஐந்து அங்கங்களாகும்.

**2. "வாக்கியப் பஞ்சாங்கம்" :**

வான சாஸ்திரத்தில் திறமைமிக்க நமது பாரதீய ரிஷிகள், கணிதத்தில் வாய்பாட்டைப் போன்று சில எழுத்துக்கோர்வைகளை சந்திரனின் கதியைக் கணக்கிடும் வாக்கியங்களாக அமைத்துத் தந்துள்ளனர். இவைகளைச் சூத்திரங்களாகப் பயன்படுத்திக் கணக்கிட்டு நிர்ணயிக்கப்படும் பஞ்சாங்கம் வாக்கியப் பஞ்சாங்கம் எனப்படும்.

**3. பாரதீய வழக்குப்படி ஒருநாள்**

சூரிய உதயத்திலிருந்து மறுநாள் சூரியோதயம் வரை ஒரு நாளாகும்.

**4. சுக்லபக்ஷம், கிருஷ்ணபக்ஷம்:**

பௌர்ணமி முதல் அமாவாசை வரை தேய்பிறை நாட்கள் பதினைந்தும் கிருஷ்ணபக்ஷம் (இருண்ட பதினைந்து நாட்கள்) எனவும் அமாவாசை முதல் பௌர்ணமிவரை வளர்பிறை பதினைந்து நாட்கள் சுக்ல பக்ஷம் (ஒளியுள்ள பதினைந்து நாட்கள்) எனவும் கூறப்படும்.

**5. சௌரமானம், சாந்திரமானம்:**

சந்திரனின் கதியை அடிப்படையாகக் கொண்டு கணக்கிடப்படும் வருடம் சாந்திரமானம் எனப்படும். சூரியன் ராசிகளில் சஞ்சரிப்பதைக்கொண்டு கணக்கிடப்படுவது சௌரமானம். தமிழ்மாதம் சௌரமான முறையில் கணக்கிடப்பட்டது.

**6. தக்ஷிணாயனம், உத்தராயனம்:**

ஒரு வருஷத்திற்கு இரு அயனங்கள் ; தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி ஆகிய ஆறு மாதங்களை உத்தர அயனம் என்றும் ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ஆகிய ஆறு மாதங்களை தக்ஷிண அயனம் எனவும் கூறுவர்.

**7. திதி :**

திதி என்பது பௌர்ணமி அல்லது அமாவாசையை அடுத்து வரும் நாட்கள். பிரதமை, த்விதியை, திருதியை என்று இவ்வாறு பதினான்கு திதிகள் கணக்கிடப்படுகின்றன. சூரியன் சந்திரன் இருவருக்கும் உள்ள தூரமே திதி எனப்படும்.

**8. ஒரு முகூர்த்தம் என்ற அளவு :**

ஒன்றரை மணி நேரம்.

**9. ஒரு நாழிகை:**

ஒரு நாள் அதாவது 24 மணி நேரம் கொண்டது 60 நாழிகையாகும். இது சூரிய உதயத்திலிருந்து கணக்கிடப்படுகிறது. பழைய காலத்தில் ஒரு குறிப்பிட்ட அளவுள்ள பாத்திரத்தை தண்ணீரில் இட்டு அதிலுள்ள துவாரத்தின் வழியாகத் தண்ணீர் நிரப்பி பாத்திரம் முழுகும் நேரத்தை நாழிகையாகக் கணக்கிட்டார்கள். இது நாழிகை வட்டில் எனப்பட்டது.

60 தத்பரைகள் – 1 பரை
60 பரை – 1 விலிந்தம்
60 விலிந்தம் – 1 லிப்தம்
60 லிப்தம் – 1 வினாழிகை
60 வினாழிகை – 1 நாழிகை
60 நாழிகை – 1 நாள் எனக் கணக்கிடப்படுகிறது.

**10. காலக்கணக்கில் மிகச்சிறய அளவு :**

காலக்கணக்கில் மிகச்சிறய அளவு ஒரு துடி' அதாவது கண் இமைக்கும் நேரம்.

**11. ஜாமம் :**

ஒரு ஜாமம் என்பது 3 மணி நேரமாகும்.

**12. கலியுகம் :**

கலியுகம் மொத்தம் 4,32,000 வருடங்கள். தற்பொழுது கர வருஷம் கலியுகம் 5102 ஆம் ஆண்டு.

**13. சதுர் யுகங்கள் :**

கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்.

**14. மன்வந்திரம் என்பது :**

நான்கு யுகங்களும் 71 தடவை வருமானல் அது மன்வந்திரம் ஆகும். மொத்தம் 14 மன்வந்திரங்கள் சேர்ந்து ஒரு 'கல்பம்' எனப்படும். பிரம்மதேவனின் ஒரு பகல் காலம் ஒரு கல்பம் ஆகும்.

**15. வருடங்கள் 60 என்பதற்கான அடிப்படை:**

குரு ஒரு தடவை வான வட்டத்தைச் சுற்றிவர 12 வருடங்கள் ஆகிறது. சனி ஒரு தடவை வான வட்டத்தைச் சுற்றி வர 30 வருஷங்களாகின்றன. சனியும், குருவும் சேர்ந்து அசுவதி நட்சத்திரத்தில் அறுபது ஆண்டுகளுக்கு ஒரு முறை காணப் படுகிறது. அதுவே பிரபவ வருடம் முதல் வருடம் ஆகிறது அதிலிருந்து 60 வருடங்கள் கணக்கிடப்படுகின்றன.

## விசேஷமான தேவி சந்நிதித் தலங்களுள் சில

திருவானைக்கா – அகிலாண்டேஸ்வரி
காஞ்சிபுரம் – காமாட்சி
திருவண்ணாமலை – உண்ணாமுலையம்மை
அவிநாசி – கருணாம்பிகை
திரு ஆமாத்தூர் – முத்தாம்பிகை
திரு ஆரூர் – கமலாம்பிகை
திரு ஆலவாய் – மீனாக்ஷியம்மை
திருவையாறு – அறம்வளர்த்த நாயகி
திருவொற்றியூர் – வடிவுடையம்மை
திருக்கழுக்குன்றம் – திருபுரசுந்தரி
திருக்காளத்தி – ஞானப்பூங்கோதை
கும்பகோணம் – மங்களநாயகி
குற்றாலம் – குழல்வாய்மொழி
திருச்சிராப்பள்ளி – மட்டுவார் குழலி
திருநள்ளாறு – போகமார்த்த பூண்முலையம்மை
நாகை – நீலாயதாக்ஷியம்மை
திருநெல்வேலி – காந்திமதியம்மை
திருப்பாதிரிப்புலியூர் – பெரியநாயகி
வைஸ்தீஸ்வரன் கோயில் – தையல்நாயகி
திருவேற்காடு – கருமாரி



## லட்சுமி கடாக்ஷம் தங்க

வீட்டில் ஒரு நாளைக்கு இரண்டு முறை, காலையிலும், மாலையிலும் விளக்கேற்ற வேண்டும். சுவாமி மாடத்துக்கு முன்பும், வாசல் மாடத்திலும் விளக்கேற்றுவது நல்லது. காலையில் விளக்கேற்ற முடியாதவர்கள் மாலையில் ஐந்தரை மணியிலிருந்து மணிக்குள்ளாக சுவாமி படத்துக்கு விளக்கேற்ற வேண்டும்.

அதிகாலையில் வீட்டின் முன்புறம், பின்புறம் சாணம் தெளிக்க வேண்டும். பின்புறமாக மூதேவி வெளியேறவும், முன்புறமாக லட்சுமி (ஸ்ரீதேவி) வீட்டுக்குள் வரவும் இப்படிச் சாணம் தெளிக்க வேண்டும். தெளிப்பதற்கு பசுஞ்சாணத்தையே உபயோகிக்க வேண்டும். கன்றுக் குட்டி போட்டுள்ள பசுவின் சாணத்தையே தெளிக்க உபயோகிக்க வேண்டும். அந்தப் பசு சாணம் போடும் போது சாணம் பூமியில் விழுவதற்கு முன் ஒரு பாத்திரத்தில் பிடித்து அதைக் கொண்டே சாணம் தெளிக்க வேண்டும். அல்லது சாணம் கிடைக்காவிட்டால் பூமியில் சாணம் விழுந்து விட்டால் அதன் மேற்புறத்தை ஒதுக்கிவிட்டு, நடுப்பக்கத்தில் இறுகாமலிருக்கும் சாணத்தை மட்டும் கொண்டு வந்து கரைத்துத் தெளிக்க வேண்டும்.

# அரிய ஆன்மிகத் தகவல்கள்

### பஞ்ச பூதத்தலங்கள்

1. திரு ஆரூர் அல்லது காஞ்சிபுரம் – மண்
2. திரு ஆனைக்கா – நீர்
3. திரு அண்ணாமலை – தீ
4. திருக்காளத்தி – காற்று
5. சிதம்பரம் – வான்

### பஞ்ச சபைகள்

1. திருவாலங்காடு – இரத்னசபை
2. சிதம்பரம் – பொற்சபை
3. மதுரை – வெள்ளியம்பலம்
4. திருநெல்வேலி – தாமிரசபை
5. திருக்குற்றாலம் – சித்திரசபை

### பூலோக கைலாசம்

1. திருவையாறு
2. திருக்குற்றாலம்
3. சிதம்பரம்
4. திருவரங்கம்

### காசிக்கு நேர் தலங்கள்

1. திருவெண்காடு
2. திருவையாறு
3. மயிலாடுதுறை
4. திருவிடைமருதூர்
5. திருச்சாய்க்காடு
6. திருவாஞ்சியம்

### தெட்சண கைலாசம்'

1. திருக்காளத்தி
2. திருச்சிராப்பள்ளி
3. திருகோணமலை (இலங்கை)

### அட்ட வீரட்ட தலங்கள்

1. திருக்கண்டியூர் – சிரம் கொய்தது
2. திருக்கோவலூர் – அந்தகாசுரனை அழித்தது
3. திருஅதிகை – திரிபுத்தை எரித்தது
4. திருப்பரியலூர் – தக்கன் சிரம் கொய்தது
5. திருவிற்குடி – கவந்தராசுரனை வதைத்தது
6. வழுவூர் – யானையை உரித்தது
7. திருக்குறுக்கை – காமனை அழித்தது
8. திருக்கடையூர் – எமனை உதைத்தது

### அழகிற் சிறந்த கோயில்கள்

1. தேரழகு – திரு ஆரூர்
2. வீதி அழகு – திருவிடைமருதூர்
3. மதிலழகு – திருவிரிஞ்சை
4. விளக்கழகு – வேதாரண்யம்

### ஆறுபடை வீடுகள்

1. திருப்பரங்குன்றம்
2. திருச்செந்தூர்
3. பழனி
4. சுவாமிமலை
5. திருத்தணிகை
6. பழமுதிர்ச்சோலை

### கருவறையில் அம்மையப்பர் திருவுருவம் கொண்ட தலங்கள்

1. திருநெல்வாயில்
2. திரு அம்பர்ப் பெருந்திருக்கோயில்
3. திரு இடும்பாவனம்
4. திருக்கச்சி ஏகம்பம்
5. திருவேற்காடு
6. திருமழிசை

## ஒற்றைக்கால் கொண்ட சிவன்

எல்லா கோயில்களிலும் சுவாமிக்கு இரண்டு பாதங்கள் இருக்கும். ஆனால் ஒற்றைக்காலைக்கொண்ட ஏகபாதமூர்த்தி சிலை சென்னை திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயிலிலும், திருவானைக்கா கோயிலிலும் உள்ளது.

## வீட்டு பூஜையறையில் தெய்வப் படங்களுடன் நவக்கிரகங்களின் படங்களையும் வைத்து வழிபடலாமா?

பூஜையறை எந்த அளவுக்குப் பெரிதாக இருக்கிறதோ, எந்த தெய்வ உருவங்களையெல்லாம் வைக்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களோ, அவற்றை வைத்து பூஜையறையை நீங்கள் நிரப்பிக்கொள்ளலாம். பூஜை யறையில் இந்த தெய்வத்தை வைக்கலாம். இந்த தெய்வத்தை வைக்கக் கூடாது என்றெல்லாம் எங்கேயும் சொல்லப்படவில்லை.

இன்னொன்று, இப்போது நிறைய ஸ்வாமி படங்கள் நமக்குக் கிடைக்க ஏதுவாக இருக்கிறது. புத்தகங்களில் எல்லாம் இதழ்தோறும் நிறைய படங்கள் வருகின்றன. இவற்றையெல்லாம் எடுத்து ஃப்ரேம் போட்டு ஃப்ரேம் போட்டு பூஜை அறையை நிரப்பிக்கொண்டே போக வேண்டுமா? தேவையில்லை. எந்த தெய்வத்தை வழிபட வேண்டும் என்பதை உங்களுக்கு நீங்களே தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். ஆயிரம் தெய்வங்களை வழிபட வேண்டும் என்பதில்லை. உங்களுக்கு நிரந்தரமாக ஒரு தெய்வத்தின்மீது ஈடுபாடு வருமில்லையா... அந்த தெய்வத்தை மட்டும் வைத்து தொடர்ந்து வழிபட்டு வந்தாலே போதும். அது தான் உங்கள் வழிபடு தெய்வம் (இஷ்ட தெய்வம்) என்னும் தொல்காப்பியம். அவ்வப்போது வரும் தெய்வங்களை வணங்குவது என்பது உங்கள் அலைபாயும் மனதைக் காட்டுமே அல்லாமல், நிரந்தரமான ஈடுபாட்டைக் காட்டாது.

அதிக அளவில் படங்கள் இருந்தால் அதிக பக்தி என்பதோ குறைந்த படம் இருந்தால் குறைந்த பக்தி என்பதோ இல்லை.

படங்களால் பூஜையறையை அடைக்காதீர்கள். விஸ்தாரமான அந்த அறையில் ஒரே படத்தை வைத்து, தியானம் செய்ய ஏதுவான சூழலை உருவாக்கிக்கொள்ளுங்கள். அந்தக் கடவுள் உங்களுக்கு எல்லா நன்மைகளையும் நிச்சயம் தருவார்!



## கோபுர தரிசனம் கோடி புண்ணியம் எனக் கூறப்படுவது பற்றி...

தினம் காலையில் எழுந்ததும் ஸ்நானம் எல்லாம் செய்து கோயிலுக்குச் சென்று பகவானை வழிபடுவது என்று வைத்திருக்கிறோம். வயோதிகத்தாலோ, வியாதியாலோ அப்படி கோயிலுக்குச் சென்று பகவானைத் தரிசனம் செய்ய முடியாதவர்கள், கோயிலிலேயே உயரமான கோபுரத்தைப் பார்த்து 'என்னால் கோயிலுக்கு வர இயலவில்லை. நான் ஏற்கெனவே இந்த கோபுரத்தின் கீழ் இருக்கும் பகவானைத் தரிசனம் செய்திருக்கிறேன். கோபுரம் பார்க்கும்போதே எனக்கு பகவானின் நினைவு வருகிறது' என்று கோபுர தரிசனத்தோடு பகவானின் ஞாபகத்தைச் சிந்தைக்குள் வைப்பவர்களுக்கு, கோயிலுக்குச் சென்று பகவானை வழிபட்ட பலன் கிடைக்கும்.

எல்லா வசதிகளும் இருந்தாலும் 'மொட்டை மாடியிலிருந்து பார்த்தாலே கோபுரம் தெரிகிறதே... எனக்கு கோடி புண்ணியம்' என்று எண்ணிக் கொண்டால் அது கோபுர தரிசனம் ஆகாது. கோடி புண்ணிய அல்ல, ஒரு கோடியில் கொஞ்சம் புண்ணியம் கூடக் கிடைக்காது.

கோபுரத்தைத் தரிசிப்பதே கோடி புண்ணியம் என்றால், உள்ளே இருக்கும் சுவாமியைத் தரிசித்தால் எவ்வளவு புண்ணியம் கிடைக்கும் என்று எண்ணி நாம் கோயிலுக்குப் போகவேண்டும் என்பதற்காக எழுதப்பட்ட பழமொழி அது.

– சேஷாத்திரிநாதசுவாமி

## கடவுளை வீட்டில் வழிபடும் முறை சிறந்ததா, ஆலயம் சென்று வழிபடுவது சிறந்ததா?

எல்லா இடத்திலும் வியாபித்து இருக்கிற கடவுளை, எங்கே சிறந்தது என்று எப்படிச் சொல்வது? ஒவ்வொரு கட்டமாக வளர்ந்து கடைசியில் மனதில் இறைவனை இருத்தி வழிபடுவதே சிறந்தது என்பதில் போய் முடியும். அதுவும் அப்படி வழிபடுவது சிறந்தது என்று அர்த்தமில்லை. அந்த அளவுக்கு நீங்கள் வளர்ந்துவிட்டீர்கள் என்பதுதான் சிறப்பு. மனதுக்குள்ளேயே பகவானை இருத்த முடிகிற சக்தி உங்களுக்கு வந்துவிட்டது என்று அர்த்தம். மற்றபடி அது சிறந்ததா, இது சிறந்ததா என்கிற பட்டிமன்றத்துக்குப் போகாதீர்கள். சிறப்பாக இல்லாத ஒன்று, சாஸ்திரத்தில் வராது. சிறப்பு சிறப்பின்மை முதலிடம் இரண்டாம் இடம் இவை எல்லாவற்றையும் சாஸ்திரத்தில் எதிர்பார்க்காதீர்கள். ஏன் கோயில் வந்ததென்றால், வீட்டில் இருந்தபடியே இறைவனை வழிபடும் பக்குவம் இல்லாதவர்களுக்கும், நேரம் கிடைக்கவில்லை என்பவர்களுக்கும், வறியவர்களுக்கும் இறைவனை நினைவுபடுத்தவே கோயில். மற்றபடி வீடு இருக்கிறது. இடம் இருக்கிறது என்றால் வீட்டிலேயே வழிபடலாம். மற்றவர்களைக் கோயிலுக்குப் போகவைக்க முன் உதாரணமாக கோயில் சென்று கும்பிட வேண்டும்.

கோயிலுக்குப் போய் வந்துவிட்டேன். அதனால், வீட்டில் வேண்டாம் என்பதோ, வீட்டிலேயே கும்பிட்டாச்சு.... கோயில் வேண்டாம் என்பதோ சரியாகாது. இரண்டும் தேவை.

## பூஜையும், புஷ்பமும்

| | | |
|---|---|---|
| விஷ்ணுவை | – | அக்ஷதையாலும் |
| கணபதியை | – | துளசியாலும் |
| சூரியனை | – | வில்வத்தாலும் |
| சிவனை | – | தாழம்பூவாலும் |
| துர்க்கையை | – | அருகு பில்லாலும் |
| லக்ஷ்மியை | – | தும்பை புஷ்பத்தாலும் |
| சரஸ்வதியை | – | பவழ புஷ்பத்தாலும் |
| வைரவரை | – | மல்லிகைப் பூவாலும் |

அர்ச்சிக்கக் கூடாது. அந்தந்த தேவதைக்கு ஆகாத புஷ்பங்களை பூஜைக்கு சேர்க்க வேண்டாம்.

அருந்தப்பட்ட பின் பாக்கி உள்ள பொருள்களையோ, அனாசாரத்துடன் தயாரிக்கப்பட்ட பதார்த்தங்களையோ நிவேதிக்கக் கூடாது. ஒருமுறை சாத்தியோ, அர்ச்சிக்கப்பட்ட புஷ்பங்கள், நிர்மால்யம் ஆகும். இதனை நாம் அணிந்து கொள்ளலாமே தவிர மறு தேவதா பூஜைக்கு உபயோகிக்கக் கூடாது. துவளம் வில்வம் தவிர மற்றவை நிர்மால்ய தோஷம் அடையக் கூடியது.



## செப முறை

இறைவனின் திருமேனியாக விளங்கும் பஞ்சாக்கரத்தை (சிவாய நம) செபிக்கும் முறை மூன்று வகைப்படும் :– அவை,

1. உரை : இம்முறை மற்றவர்களும் கேட்கும்படிப் பஞ்சாக்கரத்தை செபித்தலாகும்.
2. மந்தம் : தன் செவிக்கு மட்டும் கேட்கும்படி ஓதும் முறை மந்தம் எனப்படும். இது பிறர் கேட்கும்படி ஓதும் முறையாகிய உரையை'விட நூறு மடங்கு பலனைத் தருவதாகும்.
3. மானதம் : இம்முறை மனத்தால் சிந்திக்கும் முறையாகும். 'மந்த' முறையை விட மானத முறை நூறு மடங்கு பலனைத் தருவதாகும்.

எனவே திருவைந்தெழுத்தை நாம் மானதமாக (மனதிலேயே) செபித்து அவனருளால் மறைப்பையும் மலத்தையும் அறுத்தெறிந்து சிவகதி அடைவோமாக.







## திருவண்ணாமலை

திருவண்ணாமலையை ஒரு முறை வலம் வருவதற்கே பக்தர்கள் சிரமப்படுகிறார்கள். இதன் சுற்றளவு 16 கி.மீ. என்பதால் நடப்பதற்கு சிரமப்பட வேண்டி உள்ளது. ஆனால் ஒரு காலத்தில் இம்மலையை 5 முறை வலம் வந்தார்களாம். காரணம் இவ்வாறு வலம் வந்தால் மறுபிறவியற்ற நிலை ஏற்படும் என்பது நம்பிக்கையாக இருந்தது.

திருவண்ணாமலையை இரவு ஏழு மணிக்குப் பிறகுதான் சுற்ற ஆரம்பிக்க வேண்டும். அப்பபோதுதான் சந்திரனின் பதினாறு கலைகளிலும் இருந்துவரும் கதிர்கள் உடலில்படும். இது மன தைரியத்தைக் கொடுக்கும்.

திருவண்ணாமலையை வலம் வரும்போது மற்ற பக்தர்களுக்கு இடையூறு செய்யாமல், யார் மீதும் மோதாமலும் செல்ல வேண்டும்.

நமசிவாய வாழ்க, அண்ணாமலைக்கு அரோகரா, அருணாசலமே போற்றி என்ற மந்திரங்களை மட்டும் உச்சரித்துக்கொண்டே செல்ல வேண்டும். இதைத்தவிர மற்ற கதைகளை பேச்கொண்டு மலை சுற்றக்கூடாது. இதனால் எவ்வித பலனும் இல்லை.

திருவண்ணாமலையின் உயரம் 2,668 அடி, இதன் சுற்றளவு 16 கி.மீ. இந்த மலைப்பகுதி திருவண்ணாமலை நகராட்சி மற்றும் 6 ஊராட்சிகளின் எல்லைக்குள் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கி அமைந்துள்ள மலையின் முகப்பு பகுதி மட்டும் 718 ஏக்கர் அளவு கொண்டுள்ளது. எண்கோண அமைப்பில் மலையிருக்கிறது. மலையைச்சுற்றி எட்டு லிங்கங்கள் உள்ளன.

திருவண்ணாமலையை வலம் வந்த ஒருவர் இறந்து போனால் அவர் கைலாயத்திற்குள் நுழையும்போது சந்திரன் வெள்ளைக்குடை பிடிப்பான் என்றும், சூரியன் கையில் விளக்கேந்தி வருவான் என்றும், இந்திரன் மலர் தூவுவான் என்றும், குபேரன் தண்டனிட்டு (பணிந்து) வரவேற்பான் என்றும், அருணாசல ஸ்தல புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

## சுப்ரபாதம் பாடியவர்கள்

பொதுவாக நல்லதை பிரார்த்தனை செய்வது சுப்ரபாதம் எனப்படும். இவ்வாறு செய்யும் வழக்கம் கடவுளுக்கு உள்ளது போல நமக்கு நாமே சொல்லிக்கொள்ளும் வழக்கம் உண்டு.

வைஷ்ணவத்தில் சுப்ரபாதம் ஆதிநாளில் மூவரால் பாடப்பட்டது. அவை 1. விசுவாமித்திரர் இராமருக்கு பாடியது 2. பெரியாழ்வார் கண்ணபிரானுக்குப் பாடியது 3. தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்க பெருமானுக்கு பாடியது.

நாம் இன்று பக்தியுடன் பாடும் ஸ்ரீ வெங்கடேச சுப்ரபாதம், பிற்காலத்தில் ஸ்ரீ மணவாள மாமுனியின் வேண்டுகோளுக்கிணங்க அவருடைய சீடர் பிரதிவாதி பயங்கரம் அண்ணன் என்பவர் பாடியதாகு

## அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

பெற்றோரை ஒருமுறை வணங்கினால்

1. ஆறுமுறை உலகை வலம்வந்த புண்ணியமும்.
2. பத்தாயிரம் முறை கங்கையில் குளித்த புண்ணியமும்
3. நூறுமுறை இராமேஸ்வரத்தில் குளித்த புண்ணியமும்
4. நூறு அசுவமேதயாகம் செய்த புண்ணியமும் கிடைக்கும்
   என்பது ஞானிகள் கண்ட உண்மையாகும்.



